# கலைமகள்
# பொன்விழாக் கதம்பம்

(1932—1981)

பொன்விழா வெளியீடு






கலைமகள் காரியாலயம்
மயிலாப்பூர், சென்னை-4.

# பொருளடக்கம்

## கதைகள்



8

## நாடகம்



## கவிதை



## கட்டுரை

# பொன் மாலை

மனிதர்களின் ருசியும் மனோபாவமும் காலத்துக்குக் காலம் மாறிக்கொண்டே வருகின்றன. இந்த நிலையில் 'கலைமகள்' தான் கொண்ட கொள்கையினின்றும் மாறாமல், காலத்தையும் அநுசரித்துக்கொண்டு தமிழ் மக்களின் அபிமான பத்திரிகையாக வளர்ந்து வந்திருப்பதே, அதன் குறிக்கோளின் உயர்வைக் காட்டுகிறது. கலைமகளின் இந்தத் தனிச் சிறப்புக்குப் பல பெருமக்கள் காரணமாவார்கள்.

தமிழ்ப் பெருமக்களின் அன்புக்கும் மதிப்புக்கும் உரிய 'கலைமகள்' பத்திரிகை தொடங்கி ஐம்பது ஆண்டுகள் ஆகின்றன; இப்போது பொன் விழாவைக் கொண்டாடியிருக்கிறது. இந்த ஐம்பது ஆண்டுகளில், கலைமகள் பல அரிய கட்டுரைகளையும் சிறுகதைகளையும் வெளியிட்டு வாசகர்களின் அபிமானத்தைப் பெற்றிருக்கிறது. பலவிதப் போட்டிகளை நடத்திச் சிறந்த நாவல்களையும் சிறுகதைகளையும் அளித்திருக்கிறது. அவ்வப்போது அதை வாசகர்கள் படித்து மகிழ்ந்திருப்பார்கள்.

பொன் விழா நினைவாக எல்லா வாசக அன்பர்களும் போற்றிப் பாதுகாக்கும் முறையில் ஒரு நூலை வெளியிடவேண்டும் என்று விரும்பினோம். அதன் விளைவாக இந்தப் பொன்விழாக் கதம்பத்தைத் தயாரித்து அளித்திருக்கிறோம். இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்பு வெள்ளி விழாச் சமயத்தில் இப்படி ஒரு கதம்பம் வெளிவந்து, அன்பர்களின் பாராட்டைப் பெற்றது.

இந்த ஐம்பது ஆண்டுகளில் கலைமகளில் வெளிவந்த சிறுகதைகள் கட்டுரைகள், கவிதைகள் முதலியவற்றிலிருந்து தேர்ந்தெடுத்து இந்தக் கதம்பத்தைத் தயாரித்திருக்கிறோம். கதம்ப மாலையைப் போல் இதுவும் மணமிகுந்து கலைமகள் வாசகர்களுக்கு விருந்தாக அமைந்திருக்கும் முறையில் தொடுத்திருக்கிறோம். இந்தக் கதம்பத்தில் வெளிவந்துள்ள கதைகள், கட்டுரைகள்தாம் சிறந்தவை என்பதில்லை. 600 இதழ்களில் வெளிவந்த, தரம் வாய்ந்த இலக்கிய, கலைப் படைப்புகளின் 'ஸாம்பிள்கள்' இவை என்று சொல்லலாம்.

சிற்பம், நுண்கலை, இலக்கியம், சரித்திரம், மாதர்பகுதி, விஞ்ஞானம், அறிவியல் போன்ற துறைகளில் அந்த அந்தத் துறையைச் சார்ந்த அறிஞர்கள் தொடக்கத்திலிருந்தே கலைமகளில் எழுதியுதவி யிருக்கிறார்கள். ஆண்டுக்கொன்றாக ஒன்றைத் தேர்ந்தெடுத்து, 'ஐம்பது ஆண்டுகளுக்கு, ஐம்பது' என்ற முறையில் இந்தப் பொன் விழாக் கதம்பத்தில் கொடுத்திருக்கிறோம். சிறுகதைகளை இந்த நாளில் மக்கள் ஆவலுடன் படிக்கிறார்கள். சிறுகதைகளை வெளியிடாத பத்திரிகைகளே இன்று இல்லை. அதனால் இந்தக் கதம்பத்தில்

சிறுகதைகளை அதிகம் சேர்த்திருக்கிறோம். சுவைக்கொன்றாகப் பல தரப்பட்ட கதைகளை இதில் படித்து மகிழலாம். நன்றாக முறுகிக் காய்ந்த பால் சுவை மிகுந்து திரட்டுப் பாலாக இனிப்பதுபோல் இந்தக் கதம்பமும் இனிமையும் மணமும் வீசும் என்று நம்புகிறோம்.

தமிழ்த் தாத்தா என்று அருமைபெருமையாக அழைக்கும் டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்கள், கலைமகளில் சுமார் பத்தாண்டுக் காலம் பல கட்டுரைகளை எழுதியுதவியிருக்கிறார்கள். தாம் ஏடு தேடி நாடு சுற்றிய அநுபவங்களையும் புலவர்களைக் காத்த வள்ளல்களின் சரித்திரத்தையும், சங்கீத மகான்களின் வரலாறுகளையும், சிறுசிறு பிரபந்தங்களையும் கலைமகளின் தொடக்கத்திலிருந்து எழுதி நலம் செய்திருக்கிறார்கள். 1932-இல் அவர்கள் எழுதிய கட்டுரை ஒன்றும் இதில் மணத்துக்கொண்டிருக்கிறது. அமரர்களாகிவிட்ட பல பெரியோர்களின் எழுத்துக்களை இதில் காணலாம்.

ராஜாஜி, ராவ் ஸாஹேப் எஸ். வையாபுரிப் பிள்ளை, டாக்டர் மு. வரதராசன், பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார், ஸர். ஸி. வி. ராமன் போன்ற பெருமக்களின் எழுத்துக்களை எல்லாம் இந்தக் கதம்பத்தில் காணலாம்.

இன்று சிறந்து விளங்கும் பெண் எழுத்தாளர்களின் படைப்புகளில் சில இதில் இடம் பெற்றிருக்கின்றன. சிறுகதை மன்னர்களாக விளங்கிய கு. ப. ரா., புதுமைப்பித்தன், ஜெகசிற்பியன் ஆகியோரின் சிறுகதைகளை இதில் படித்து ரசிக்கலாம். திரு. வி. க., கவிமணி போன்ற கலைஞர்களின் பாடல்களைப் பாடிச் சுவைக்கலாம்.

'கலைமகள்' வாசக அன்பர்களைக் கவர்ந்த படைப்புக்களின் தொகுப்பு மாலையாக இந்தப் பொன்விழாக் கதம்பம் விளங்குகிறது என்பதில் சந்தேகம் இல்லை. தனி மலர் மாலையைவிடக் கதம்ப மாலைகளுக்கு மணமும் வண்ணப் பொலிவும் கவர்ச்சியும் அதிகம். மணமும் சுவையும் மிகுந்த இந்தப் பொன்விழாக் கதம்ப மாலையை, பொன்விழா நினைவாகத் தமிழன்னையின் திருவடிகளில் சமர்ப்பிக்கிறோம். வெள்ளைக் கலையுடுத்திய கலைமகளுக்கு மேலும் ஒரு புத்தாபரணம் சூடி மகிழக் கிடைத்த வாய்ப்பை எண்ணி இறையருளை வழுத்துகிறோம்.

—பதிப்பாசிரியர்.

* * * * * * * * * *



# பொன்விழாக் கதம்பம்

சிறுகதை

**1932—1981**

* * * * * * * * * *

# ஓர் அரிசி

கிருபானந்த வாரியார்

ஆண்டவனை வழிபடுவதைக் காட்டிலும் அடியாரை வழிபடுவது சிறந்தது. ஆண்டவனை வழிபடுவோர்க்கு ஒரு பலன். அடியாரை வழிபடுவோர்க்கு இரட்டைப் பலன். ஏன்? அடியார்கள் உள்ளக் கோயிலில் ஆண்டவன் உறைகின்றான் ஆதலின் அடியார் வழிபாடு உயர்ந்தது என்றுணர்க.

ஆண்டவனுக்குத் தந்த ஒன்று அடியார்க்குச் சேராது. அடியார்க்குத் தந்தது ஆண்டவனைச் சேரும். அஞ்சல் தலைமையகத்தில் இட்ட அஞ்சல் அஞ்சல் பெட்டிக்கு வராது; அஞ்சல் பெட்டியில் இட்ட அஞ்சல் தலைமைநிலையத்துக்குச் சேர்ந்துவிடும். அஞ்சல் தலைமை நிலையம் இறைவன்; அஞ்சல் பெட்டி அடியார்கள் என்றுணர்க.

''படமாடக் கோயில் பரமர்க்கொன் றீயின்
நடமாடக் கோயில் நம்பர்க்கங் காகா
நடமாடக் கோயில் நம்பர்க் கொன்றீயின்
படமாடக் கோயில் பரமர்க்கங் காமே''

என்பார் திருமூலர்.

ஆண்டவனுக்குச் செய்கிற வழிபாடு ஆராதனை எனப்படும். அடியார்க்குச் செய்கிற வழிபாடு சமாராதனை எனப்படும். சம் ஆராதனை - சமாராதனை. சம்-நன்றாக; ஆராதனை - வழிபாடு. நன்றாக வழிபட்டது சமாராதனை.

ஆதலால் காதலால் அடியார்க்குச் செய்யும் வழிபாடு மிகமிகச் சிறந்த பயனை நல்கும்.

ஒரு சமயம் நான் பெருந் தனவந்தர் ஒருவரைச் சந்தித்தேன். அவர் மிகவும் இனிமையாகப் பேசி மிகவும் உபசரித்தார். ''ஐயா, உமக்கு இத்துணைப் பெருஞ் செல்வம் எவ்வாறு வந்தது?' என்று கேட்டேன். அத்தனவந்தர் செல்வ நலத்தால் சிறந்தவர் மட்டுமன்று; கல்வி நலத்தாலும் சிறந்தவர். உடனே இரு வெண்பாக்களினால் எனக்கு விடையிறுத்தார்.

கட்டத் துணியற்றுக் காந்துபசிக் கன்னமற்
றெட்டி மரமொத் திருந்தயான்—ஒட்ட
எறும்பிற்கு நொய்யரிசி யிட்டேன்; அதனால்
சிறிதுபொருள் ஈந்தான் சிவன்.

அப்பொருள்கொண் டீசன் அடியார்க் கன்னமிட்டேன்
ஒப்புவமை யில்லான் உளமுவந்தே – இப்பார்
அளகேசன் என்றே அதிசயிக்கச் செல்வம்
அளவிலா தீந்தான் அவன்.

''உடுக்கத் துணியும் உண்ணச் சோறும் இன்றி எட்டிமரம் போல் வாழ்ந்து கசந்து இருந்த நான், வேறு ஒரு நற்பணியும் செய்ய இயலாது திகைத்து, எறும்பு வளைக்கு நொய்யரிசியிட்டு வந்தேன். அதனால் சிவபெருமான் சிறிது செல்வத்தை வழங்கியருளினார். சிவன் தந்த செல்வத்தைப் பாங்கியில் போடாமல் அப் பரமனுடைய அடியார்க்கு அன்னம் இட்டு வந்தேன். அதனால் அகம் மகிழ்ந்து அரனார் குபேரன் என்று என்னை எல்லோரும் மதிக்குமாறு அளவிறந்த செல்வத்தை வழங்கியருளினார்.'' இது அவர் கூறிய விடை.

ஒரு கிராமத்தில் ஒரு கிழவி இருந்தாள். சூது வாது வஞ்சனை பொய் களவு முதலிய தீக்குணங்கள் அத்தனைக்கும் அவள் உறைவிடமாக இருந்தாள். தரும குணம் ஒரு சிறிதும் இல்லாத பொல்லாத கிழவி. அவள் வீட்டில் வாழ்கின்ற எறும்புகளுக்கு நித்திய ஏகாதசி. ஒன்றையும் சிந்தமாட்டாள். எறும்பின் வாயில் ஒரு நொய்யைப் பார்த்தால் உடனே ஓடி அதைப் பிடுங்கிப் பானையில் போட்டுக் கொள்வாள். அவள் வீட்டில் சாப்பிட்ட இலை வெளியில் விழுந்தால் சாப்பிடாத இலை மாதிரி சுத்தமாக விழும். அதில் ஒரு துளிப் பசைகூட இராது. நாய்கள் வந்து பார்த்து ஏமாந்து போகும். நாம் செய்கின்ற வேலைகள் யாவும் இந்தக் கிழவியே செய்துவிட்டாள் போலும் என்று பேசிக்கொள்ளும்.

பழைய சோற்றைப் பிசைந்து வடகம்[1] போட்டுத் தின்பாள். கந்தல்களையெல்லாம் மடித்து மடித்துத் தலையணையாக்கிப் போட்டுக் கொள்வாள். கோயிலுக்குப் போவாள். சுவாமி கும்பிடுவதற்கு அன்று; அங்கு யாராவது விட்டிருந்த பாதரட்சைகளைக் கவர்ந்து வரும் பொருட்டே. யாராவது பிச்சைக்காரர் அவளுடைய வீட்டுக்குச் சென்றால் சீறி விழுந்து கடிக்க வருவாள். அவர்கள் அப்படியே நடுங்கி ஒடுங்கி ஓடிவிடுவார்கள்.

அவள் வாயில் மறந்தும் தெய்வத் திருநாமம் வராது. அவள் சிந்தையில் கருணைக்கு இடமே இல்லை. கருணைக் கிழங்காகத்தான் மாறிப் போயிற்று. அவளை அந்த ஊரில் அனைவரும் வெறுத்து ஒறுத்தார்கள்.

ஒரு நாள் காலை, கிழவி நடையில் அரிசி தீட்டிக்கொண்டிருந்தாள். ஒரு சிறந்த சிவனடியார் வந்து,

''அரஹர சிவசிவ அம்பலவாணா பரம தயாபர வரத குணாளா'' என்று பாடிக்கொண்டு நின்றார். ''பாட்டி! ஒரு பிடி அரிசி போடு'' என்றார்.

கிழவி, ''ஏய்! உனக்கென்ன மமதை? எனக்கு என்ன வயது? எண்பதுதானே ஆயிற்று? பாட்டி என்கின்றாய். பச்சை வெட்டு மருந்து சாப்பிட்டுப் பல் போய்விட்டது. தேன் பட்டு மயிர் நரைத்துவிட்டது. இது என்ன தரும சத்திரமா? உனக்கென்ன கேடு? செக்குலக்கை மாதிரி இருக்கின்றாய். போ போ!'' என்று விரட்டினாள்.

''பெரியம்மா, காதில் தங்கத்தால் செய்த பாம்புவடம் போட்டிருக்கின்றாயே! கழுத்து நிறையத் தங்கச் சங்கிலி. இவையெல்லாம் ஏது? சிவன் தந்ததுதானே? நான் பொன்னையும் பொருளையும் கேட்கவில்லையே! ஒரு பிடி அரிசிதானே யாசிக்கின்றேன்? அண்டாத்

தொண்டையால், தகர டின் தட்டியதுபோல் கர்ஜித்துப் பேசுகின்றனையே!

பிறக்கும் பொழுது கொடுவந்த தில்லை; பிறந்துமண்மேல்
இறக்கும் பொழுதும் கொடுபோவ தில்லை இடைநடுவில்
குறிக்கும்இச் செல்வம் சிவன் தந்தது என்று
கொடுக்கறியாது
இறக்கும் குலாமருக் கென்சொல்லு வேன்கச்சி
ஏகம்பனே.''

அவ்வளவுதான் கிழவிக்குப் பொங்கி எழுந்தது சீற்றம். ஆலகால விஷம்போல் கொதித்தாள். ''பிச்சைக்காரப் பயலே! என் வீட்டிலே வந்து இந்தத் தரித்திரம் பிடித்த மரணத்தைக் குறிக்கின்ற பாட்டைப் பாடுகின்றாயே?'' என்று வைது, அரிசி தீட்டுகின்ற உலக்கையால் பத்திரகாளிபோல் அந்தச் சிவனடியாரை அடிக்க ஓங்கினாள்.

உலக்கையில் ஒட்டியிருந்த ஓர் அரிசி அவருடைய அட்சய பாத்திரத்தில் வீழ்ந்தது. அதனைக் கிழவி பார்க்கவில்லை. பார்த்திருந்தால் எல்லா அரிசியும் என்னுடையது என்று எடுத்துக்கொண்டிருப்பாள். அடியார் பிடித்தார் ஓட்டம்.

மற்ற வீடுகளுக்குச் சென்றார். சிறிது அரிசி கிடைத்தது. ஒரு மண்டபத்தில் அதைப் பொங்கி, தாம் வழிபடும் சிவலிங்கத்துக்கு நிவேதித்தார். பசியாறினார். சிவயோகத்தில் அமர்ந்தார். சிவஞானிகள் இன்றிருந்த ஊரில் நாளை இரார். அவர் தலயாத்திரைக்குச் சென்றுவிட்டார்.

நாளடைவில் கிழவி கண்ணை மூடிவிட்டாள். காலதூதர்கள் அவளைக் கட்டிப் பிடித்து யாதனா சரீரத்துடன் கொண்டுபோய் அறக்கடவுளுக்கு முன்னே நிறுத்தினார்கள்.

அறக்கடவுள் கடுகடுத்த முகத்துடன், ''சித்திரகுப்தா, இவள் கணக்கை எடுத்துப் படி'' என்று கட்டளையிட்டார்.

சித்திரகுப்தன் கிழவியின் கணக்கை எடுத்துப் படித்தான்; ''எல்லாம் பாவந்தான். புண்ணியமே இல்லை. எறும்பு வளையில் நெருப்பை இட்டாள். பெரியோரை நிந்தித்தாள். கோயில் உடைமைகளைக் கவர்ந்தாள். கண்ணில்லாதவர்களுக்குக் காலணா போட்டு நாலணா எடுத்துக்கொண்டாள். சிவராத்திரி சஷ்டி ஏகாதசி முதலிய விரத நாள்களில்கூடத் தலையணைக்குப் பஞ்சடைக்கின்ற மாதிரி வயிறு புடைக்கத் தின்றாள். பேசிய யாவும் பொய். ஒரு நாள் ஒரு மகானை உலக்கையால் இடிக்கச் சென்றாள். உலக்கையில் ஒட்டிய ஓர் அரிசி அவருடைய கரத்தில் இருந்த அட்சய பாத்திரத்தில் வீழ்ந்தது; அந்த ஓர் அரிசி சிவநிவேதனமாகி அச் சிவனடியார் திருவயிற்றில் சேர்ந்தது. இந்த ஒன்றுதான் இவள் வாழ்நாளில் செய்த புண்ணியம்; இதுவும் அபுத்தி பூர்வமாகச் செய்தது'' என்றான்.

அறக்கடவுள், ''நல்வினை, அபுத்தி பூர்வமாகச் செய்தாலும் நன்மை பயக்கும். 'தான் சிறிதே யாயிடினும் தக்கார்கைப் பட்டக்கால், வான் சிறிதாப் போர்த்து விடும்.' நெருப்பைத் தெரியாமல் மிதித்தாலும் சுடுந்தானே? ஆதலால் இந்த ஓர் அரிசிக்கு என்ன நலத்தை நுகர வேண்டும்? பார்த்துச் சொல்'' என்றார்.

சித்திரகுப்தன், ''அண்ணலே, அந்த ஓர் அரிசி அடியாரின் திருவுதரத்தில் வீழ்ந்தபடியால் திருக்கயிலாய மலையிற் சென்று சிவபெருமானைத் தரிசிக்க வேண்டும்'' என்றான்.

அறக்கடவுள், "புண்ணியம் கடுகளவு: பாவம் மலையளவு. சூசிகடாக நியாயப்படி புண்ணியத்தை நுகரட்டும். பிறகு பாவங்களை நுகரச் செய்யுங்கள். கிழவியின் பாவங்களுக்காக நரகில் இட்டு வாட்டி வருத்துங்கள்; கிழவியின் வாயிலே தீயை வைத்துச் சுடுங்கள். கொதிக்கும் எண்ணெயில் இட்டுப் பொரியுங்கள்!" என்றார்.

நமனுடைய தமர்கள் கிழவியைப் பாசக் கயிற்றால் நன்றாகப் பிணித்துக்கொண்டு போய்த் திருக்கயிலாயத்தில் சிவ சந்நிதியில் நெடுந் தொலைவில் நிறுத்தினார்கள்.

"கிழவி, அதோ பார், சிவபெருமான்!"

பவளக் குன்று போன்று கோடி சந்திரப் பிரகாசமாய் வேத மந்திர பீடத்தில் வீற்றிருக்கும் சிவ மூர்த்தியையும், இடப் பாகத்தில் மரகதக் கொடிபோல் வீற்றிருக்கின்ற இமயவல்லி அம்மையையும், இடையில் கனகச் சிறு குன்றுபோல் களிநடம் புரியும் கந்தவேளையும் கண்டாள் கிழவி. அவள் கண்களில் ஆனந்தக் கண்ணீர் சிந்தியது.

"அப்பா எமதூதர்களே, உங்களுக்கு ஒரு கோடி வணக்கங்கள். ஓர் அரிசிக்கு இத்துணைப் புண்ணியம் வரும் என்று பாவியாகிய எனக்குத் தெரியாமல் போய்விட்டது. அந்தோ! என் வீட்டில் குதிர் நிறைய நெல்லும் பல மூட்டைகள் அரிசியும் நெய்யும் பாலும் முந்திரிப் பருப்பும் பாதாம் பருப்பும் டப்பா டப்பாவாக இருந்தன. அத்தனையும் இப்போது எனக்கு உதவவில்லை. பெட்டி நிறையப் பணமும் வைத்திருந்தேன். வட்டிமேல் வட்டி வாங்கினேன். பெட்டி மேல் பெட்டி அடுக்கினேன். எல்லாம் அங்கேயே நின்றுவிட்டன. அடியாரிடம் சேர்ந்த ஓர் அரிசிதான் இங்கு உதவுகின்றது. இத்துணைப் புண்ணியம் வரும் என்று யாரும் எனக்கு விவரமாகச் சொல்லவில்லை. சொல்லியிருந்தால் என் வீடு தேடி வந்த அடியார்க்கு இரட்டையிலையிட்டுப் பாலும் நெய்யும் அன்னமும் சொர்ணமும் அள்ளி வழங்கியிருப்பேன். சண்டாளியாகிய நான் கிள்ளிக்கூடத் தந்ததில்லை. வாழ்நாள் முழுவதும் வீழ்நாளாகக் கழித்தேனே! போற்றாதே ஆற்ற நாள் போக்கினேனே! அப்பா; நீங்கள் நல்ல உத்தமர்கள். தேவருக்கும் மூவருக்கும் காணக் கிடைக்காத கண்ணுதற் கடவுளைக் கண்ணாரக் கண்டேன். ஆனந்தம் கொண்டேன். கடவுளைக் கண்டு கைகூப்பித் தொழவில்லையானால் மேலும் பாவந்தானே? உங்களைத் தலையினால் வணங்குகின்றேன். சிறிது கட்டை அவிழ்த்து விடுங்கள். கைகூப்பிக் கும்பிடுகின்றேன். பிறகு என்னைக் கட்டிக்கொண்டு போய் எரிவாய் நரகில் இட்டு வருத்துங்கள்" என்று மிக மிக நடுங்கிய குரலுடன் இனிமையாகக் கெஞ்சிக் கேட்டுக் கொண்டாள்.

இரக்கமே அறியாத எமதூதர்களின் உள்ளம் சிறிது உருகிற்று. 'குடலறுந்த குறுநரி எங்கே போகும்?' என்று கருதிச் சிறிது கட்டை அவிழ்த்து விட்டார்கள்.

கிழவி ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து திருக்கோயிலுக்குள் சென்று, கருணைக் கடலாகிய சிவபெருமான் திருவடியைச் சிக்கெனப் பிடித்துக் கொண்டாள்.

"தேவதேவா! மஹாதேவா! தீன ரட்சகா! கருணைக் கடலே! ஏழை பங்காளா! அருட் பெருஞ்சோதி! அப்பனே! சிறியேன் அறியாமையால் வல்வினைகளைச் செய்து விட்டேன். அத்தனையும் பொறுத்து ஏழையைக் காத்தருள். காலதூதர்கள் இரும்புச் சம்மட்டியால் அடிப்பார்களாமே! கும்பிபாக நரகில் தள்ளிச் சித்திரவதை செய்வார்களாமே! தாண்டவம் புரியும் ஆண்டவனே! வேண்டியவர்களுக்கு அருளும் தயாநிதியே!' என்னை விரட்டியடிக்காமல் காத்தருள்.

குழந்தைகள் செய்த குற்றங்களுக்கு அம்மையும் அப்பனும் தண்டிக்கலாம். தெருவில் போகும் பயில்வானை விட்டுத் தண்டிக்கமாட்டார்களே! எமனிடம் கொடுத்து என்னைத் தண்டிக்காதே!'' என்று கூறி அழுதாள்; தொழுதாள்.

கருணாநிதியாகிய கண்ணுதற் பெருமான் அவள்மீது கருணை மழை பொழிந்தார். ''அஞ்சேல்'' என்று அபயம் அளித்தார்.

கிழவி சிவபெருமான் திருவடியின் அருகில் நிமிர்ந்து அமர்ந்தாள்.

இத்தனையும் கண்ட காலதூதர்கள் ஆச்சரியம் அடைந்தார்கள். ''கிழவி, வெளியே வா!'' என்று அழைத்தார்கள். கிழவி, ''வர முடியாது, போங்கள்!'' என்றாள்.

காலதூதர்கள், ''எம்பெருமானே! கிழவியைத் துரத்தி அனுப்புங்கள். இவள் கொடிய பாவி. நரகில் தள்ளி இவளைத் தண்டிக்க வேண்டும்'' என்றார்கள்.

சிவபெருமான், ''காலதூதர்களே, விண்ணளவு அடுக்கிய பஞ்சுப் பொதி நெருப்பினால் எரிந்து கரிந்து சாம்பரானாற்போல இவளுடைய பாவங்கள் யாவும் என்னைத் தீண்டியவுடனே நீறுகிவிட்டன. இவளை நாம் மன்னித்து அருள் புரிந்தோம். நீங்கள் உங்கள் உலகுக்குச் செல்லுங்கள்'' என்று அருளிச் செய்தார்.

காலதூதர்கள், ''ஐயனே, எங்கள் தலைவனுக்கு என்ன சொல்வது?'' என்றார்கள்.

சிவபெருமான், ''மார்க்கண்டேயர் வரலாற்றை நினைவுபடுத்துங்கள்'' என்றார்.

காலதூதர்கள் மறைந்து நமனுலகம் போய் நடுங்கி அறக்கடவுளுக்கு முன் நின்றார்கள்.

அறக்கடவுள், ''எங்கே கிழவி?'' என்று கேட்டார். அவர்கள் நிகழ்ந்ததைக் கூறினார்கள்.

அறக்கடவுள் இறைவனுடைய கருணைத் திறத்தையும், அடியார் குட்சியில் வீழ்ந்த ஓர் அரிசி செய்த விந்தையையும் நினைந்து அதிசயம் அடைந்தார்.

—அக்டோபர், 1966

# நினைப்பு

அகிலன்

பிற்பகல் மூன்று மணி.

சமஸ்தானத்துப் பெரிய ஆஸ்பத்திரிக்கு அப்போது சோம்பல் முறிக்கும் நேரம். தூங்குகிற நோயாளிகள் தூங்குவார்கள்; தூக்கம் வராதவர்கள் ஏங்குவார்கள்; அல்லது, அடுத்தவர் தூக்கத்தைக் கெடுப்பார்கள்.

ஆஸ்பத்திரிக்கே உரிய அபூர்வமான மணம் மின்விசிறிக் காற்றில் சோம்பலுடன் சுழன்றுகொண்டிருந்தது.

ஏழாம் நம்பர் வார்டில், பன்னிரண்டாம் நம்பர் படுக்கைக்கார ரத்தினம் பிள்ளை, ஆஸ்பத்திரி வேலைக்காரி வெள்ளையம்மாளிடம் ஏதோ ரகசியம் பேசிக்கொண்டிருந்தார். வெள்ளையம்மாள் நல்ல அழகி; வயசு முப்பது.

ரத்தினம் பிள்ளைக்கு அவளைவிட இருபது இருபத்தைந்து வயசு அதிகம் இருக்கும். வாட்ட சாட்டமாக இருந்த உடம்பின் அடையாளங்கள் இப்போது அவரிடம் வற்றியிருந்தன. வழுக்கைத் தலையைச் சுற்றிலும் கறுப்பும் வெள்ளையும் கலந்து ஒட்டிக்கொண்டிருந்தன.

அவர்கள் ஏதோ கசமுசவென்று ஒருவர் காதை ஒருவர் கடித்துக்கொண்டார்கள். இப்படி அவர்கள் ரகசியம் பேசுவது முப்பதாவது தடவையாக இருக்கலாம்.

பத்தாம் நம்பர் படுக்கையும் பதினோராம் நம்பர் படுக்கையும் அந்தக் காட்சியைச் சிறிது பொறாமையுடன் உற்றுப் பார்த்தன. அடுத்தாற்போல் தமக்குள் ஒன்றை ஒன்று உற்றுப் பார்த்துக் கொண்டன.

பத்து இளம் வட்டம்; பதினொன்று நடுவட்டம். ஒன்றுக்கு வயசு இருபத்தைந்து; மற்றொன்றுக்கு முப்பத்தைந்து. இரண்டுமே இளமையைப் பறிகொடுத்த எலும்புக்கூடுகள்.

படுக்கையில் கிடந்தபடியே, பத்து, பதினொன்றின் தோளில் ஒரு குத்துக் குத்தி, ''அதைக் கொஞ்சம் பாரு, பக்கிரி'' என்று பல்லைக் காட்டியது.

''டே மாணிக்கம்! பிள்ளைவாளுக்கு இப்பத்தான் வாலிபம் திரும்பியிருக்கு! காடு வான்னு கூப்பிடுது; இவரோ வெள்ளையம்மாளைக் கூப்பிடுறார்.''

''போப்பா! நம்ப கூப்பிட்டா ஏன்னுகூடக் கேக்கமாட்டேங்கிரு!'' என்று தன் ஏக்கத்தைக் கொட்டிக் கவிழ்த்தது பத்து.

இதை யெல்லாம் நம்பர் பன்னிரண்டும் காதில் போட்டுக் கொள்ளவில்லை; சிவப்புச் சேலைக்கார வெள்ளையம்மாளும் காதில் போட்டுக்கொள்ளவில்லை.

''பன்னிரண்டுக்குப் படுக்கை வசதியா அமைஞ்சு போச்சு. கடைசிப் படுக்கையாவும் இருக்கு; அப்பாலே அதை மறைச்சுக்கிட்டுச் சுவரும் நிக்குது.''

''கிழட்டுப்பய அவளுக்குச் சொக்குப்பொடி போட்டுட்டான்'பா!''

''கிழவன் போடற மூக்குப் பொடியிலே மயங்கியிருப்பா!'' பதினொன்று சிரித்தது.

பழுத்த பழமான பன்னிரண்டு இப்போது சுவர்ப் பக்கமாக மெல்லக் கீழே இறங்கியது. இடுப்பைப் பிடித்துக்கொண்டே தரையில் உட்கார்ந்து இரும்பு அலமாரிக்குள் கையை விட்டது. வெள்ளையம்மாளும் கீழே குந்திக்கொண்டு தன் சிவப்புச் சேலையின் முன்றானையை விரித்தாள். அலமாரிக்குள் இருந்த பொருள்கள் முன்றானைக்குள் மறைந்தன.

அதை இழுத்துச் செருகிக்கொண்டு பன்னிரண்டுக்குக் கை கொடுத்தாள். தூக்கி விட்டாள். முக்கி முனகிக்கொண்டே அது திரும்பவும் படுக்கையில் உட்கார்ந்தது.

''வரட்டுமா?''-செல்லமாய்க் கேட்டாள் வெள்ளையம்மாள்.

'போய் வா!' என்பதுபோல் புன்னகை செய்தார் ரத்தினம் பிள்ளை. அவள் மறைந்தவுடன் புன்னகை மறைந்தது. பிறகு அவர் இரும்பு உத்திரங்களை அண்ணாந்து பார்த்தார். நெற்றியை அழுத்தித் தேய்த்துக்கொண்டார். தேய்த்துக்கொண்ட இடக் கரம் நெற்றியை விட்டுக் கீழே இறங்கியபோது அதில் கண்ணீர்ப் பசை ஒட்டியிருந்தது.

''ஏம்பா, வீடுவாசல் ஒண்ணும் கிடையாது போலிருக்கு. யாரும் வந்து, எதையும் கொண்டாந்து கொடுக்கிறதுமில்லை. அப்படியிருக்கிறப்போ, ஆஸ்பத்திரியிலே கொடுக்கிற ரொட்டியையும் சக்கரைத் துளையும் அவகிட்ட தானம் பண்ணிட்டா, வயிறு என்ன செய்யும்?''-பதினொன்று பத்திடம் கேட்டது.

''வயிறு என்ன செய்யும்? காயும்! அது சுத்தமாய்க் காஞ்சு உசிரைக் குடிக்காம இருக்கறதுக்குத்தான், அந்தக் கிழம் பாலைக் குடிக்குது. பசும் பால் வேறே கொடுக்கிறாங்களே!''

''அதையும் அவகிட்ட கொடுத்திட்டா?''

''அவளோட முகத்தைப் பார்க்கறதுக்கு உசிரு நிலைக்க வேண்டாமா? ஆமா, இது பழைய கேஸா?''

''வந்து ரெண்டு மூணு மாசம் ஆச்சாம். இனிமே இது எங்கே திரும்பப் போவுது? ரொட்டியும் சக்கரையும் கொடுத்தது போதாதுன்னு, ஆஸ்பத்திரியிலே தர்ர எல்லாத்தையுமே அவகிட்டக் கொட்டி அழுதுட்டு, பட்டினி கிடந்தே சாகப் போகுது.''

''வெள்ளையம்மா ரொம்பப் பொல்லாதவ!'' என்றான் பக்கிரி, ''அவளோட மூஞ்சியும், முகறையும், திமிரும்....''

''எட்டாத பழம் புளிக்கும்னு ஒரு குள்ளநரி சொல்லுச்சாம். அதைப் போல...'' - மாணிக்கம் சிரித்தான்.

ரத்தினம் பிள்ளையின் காதில் இந்தப் பேச்செல்லாம் அரை குறையாய் விழுந்துகொண் டிருந்தன. அவர் அவர்களைப் பார்த்து முறைத்தார்.

''என்ன தாத்தா முறைக்கிறிங்க?'' - மாணிக்கம் கேட்டான்.

''ஏண்டா, தம்பிகளா? உங்க நாற வாயை வச்சுக்கிட்டுக் கொஞ்சம் சும்மா இருக்கமாட்டிங்க?'' - காரசாரமாகவே பேசினார் ரத்தினம் பிள்ளை.

''தாத்தா! உங்களுக்கும் வெள்ளையம்மாளுக்கும் என்ன உறவு?'' இது பக்கிரி.

''பார்த்தாத் தெரியலியா?'' என்று பதிலளித்தான் மாணிக்கம்.

''பெரிய டாக்டர்கிட்டே சொல்லி, உங்க வாயை ஊசி போட்டுத் தைக்கச் சொல்லப்போறேன்'' என்றார் ரத்தினம் பிள்ளை.

''ஓஹோ! 'ரிப்போர்ட்' பண்ணப் போறிங்களா? பண்ணுங்க, பண்ணுங்க!'' என்றான் பக்கிரி; ''நாங்க பண்ணினா என்ன நடக்கும் தெரியுமா? உங்க வெள்ளையம்மாளோட கள்ளத்தனம் வெளிப்படும். அவளுக்குச் சீட்டுக் கிழியும்; உங்களுக்கும் முதுகு கிழியும்!''

அவர்களுடைய வாயைத் தைக்கச் சொல்வதாகப் பயமுறுத்திய ரத்தினம் பிள்ளை, தம்முடைய வாய்க்குத் தாமே தையல் போட்டுக் கொண்டார். பக்கத்தில் கிடந்த பஞ்சை எடுத்துத் தம் காதுகளில் அடைத்துக்கொண்டு திரும்பிப் பார்த்தார்.

## 2

ரத்தினம் பிள்ளைக்கு முதலில் கை கால் வீக்கம். பிறகு அது வடிந்தவுடன் வேறொரு வியாதி. அடுத்தாற்போல் இன்னொன்று. இப்படி ஒன்று போக ஒன்று.

அவருடைய உண்மையான நோய்க்கு அந்த ஆஸ்பத்திரியில் மருந்து கிடையாது. பரந்த உலகமான பெரிய ஆஸ்பத்திரியில் அவர் தேடிக் களைத்துப் போன மருந்து அது. பணமே அவருடைய மருந்து.

கடுமையான உழைப்பால் ஏற்பட்ட உடல் தளர்ச்சி, அதனால் ஏற்பட்ட மனத் தளர்ச்சி, மனைவி, மக்கள், அவர்களுடைய வாய்கள், வயிறுகள், ஆசைகள், ஆத்திரங்கள் இவையே அவருடைய வியாதிகள். பணக் கவலையே அவர் மனக் கவலை.

நன்றாக இருந்த காலத்தில் நன்றாக உழைத்தார்; நன்றாகச் சம்பாதித்தார்; நன்றாகச் சாப்பிட்டார். சாகும் வரையில் இப்படியே உழைத்துச் சம்பாதித்துச் சாப்பிட முடியுமென்று நம்பினார்.

வெகு நாட்கள் குழந்தை இல்லாமலிருந்து பிறகு நாற்பது வயசுக்கு மேல் குழந்தை பிறந்தது. முதற் குழந்தை செல்லக் குழந்தை; செல்வக் குழந்தை. அடுத்தாற்போல் தொடர்ந்து பிறந்து கொண்டே இருந்தன. சவலைக் குழந்தைகள். ஒவ்வொன்றையும் பத்து மாதம் சுமந்து பெற்ற பெருமை அவர் மனைவிக்கு. அவள் தன் வயிற்றில் சுமந்து பெற்ற குழந்தைகளை அவர் தம் நெஞ்சில் சுமக்கலானார்.

பாசம் வளர்ந்தது; அந்த அளவுக்குப் பணம் வளரவில்லை. அதனால் வீட்டில் சண்டை சச்சரவுகள் வளர்ந்தன. அவர் மனைவிக்குப் பாசத்தின் அருமை தெரிந்ததே தவிர, பணத்தின் அருமை தெரியவில்லை.

உழைப்புச் சக்தி குறைந்தது; ஊதியமும் குறைந்தது; குழந்தைகள் விவரம் தெரிந்த குழந்தைகளாகிவிட்டார்கள். இதைக் கொடுத்தால் அதைக் கேட்டார்கள். மனைவி எதற்கும் குறைப்பட்டுக் கொண்டாள்.

பிள்ளைவாள் பார்த்தார். உள்ளூரில் காலந்தள்ள முடியாது போல் தோன்றியது. குடும்பத்தை மனைவியின் பெற்ற வீட்டில் விட்டு, வெளியூருக்குக் கிளம்பினார்.

பல ஊர், பல தண்ணீர், பற்பல முயற்சி, பற்பல தொல்லை, பல நாள் பட்டினி; பலன்-வியாதியும் படுக்கையும். நோய்க்கு மருந்து கொடுத்தார்கள்; வயிற்றுக்கு ரொட்டியும் பாலும் கொடுத்தார்கள்.

அந்த ரொட்டியின் சிறு அளவை மென்றுவிட்டு, மற்றதை வெள்ளையம்மாளிடம் கொடுத்தார். கிழவருக்கு ஏற்பட்ட திமிர்தானா இது? அல்லது மனக் கவலைக்கு மருந்தை அவள் முகத்தில் தேடினாரா?

ஆஸ்பத்திரிக்குள்ளே கசமுசவென்று பேசிக்கொண்டார்கள். வாய்க்கு வாய் ரகசியம் பரவியது. கிழவருக்கும் குமாரிக்கும் சேர்த்து முடிச்சுப் போட்டார்கள். அவர் ஆண்; அவள் பெண். வேறு என்ன வேண்டும்?

ஆவணிக் கடைசியில் வந்தவருக்கு ஐப்பசி பிறந்த பிறகும் நோய் தீரவில்லை. ஒரு வேளை, அவர் தம்முடைய ரொட்டியைத் தாமே சாப்பிட்டிருந்தால் நோய் தீர்ந்திருக்குமோ என்னவோ?

## 3

தீபாவளி நெருங்கிக்கொண்டிருந்தது.

மாலை நாலரை மணியிலிருந்து ஆறு வரையில் நோயாளிகளை வெளியில் உள்ளவர்கள் பார்க்க வரும் நேரம். அந்த ஏழாம் நம்பர் வார்டுக்கு எத்தனையோ பேர் வந்தார்கள். சாத்துக்குடி, கமலா ஆரஞ்சு, திராட்சைப்பழம் இப்படிப் பல வகைகள் வந்தன.

பன்னிரண்டாம் நம்பர் படுக்கைக்கு யாரும் வரவில்லை; வருவதும் இல்லை.

மூன்று மணிக்கே வரக்கூடிய வெள்ளையம்மாள், மணி ஆறு ஆகியும் வரக் காணவில்லையே என்று பிள்ளை கவலைப் பட்டுக்கொண்டிருந்தார். நோயாளிகளைப் பார்க்க வந்தவர்கள் திரும்பிப் போய் விட்டார்கள்.

''பெரியவரே!'' என்று ரத்தினம் பிள்ளையைக் கூப்பிட்டான் மாணிக்கம்; ''நான் சொல்றனேன்னு வருத்தப்படாதீங்க. அந்தக் குட்டி உங்களை நல்லா ஏமாத்துரு. வீணா நீங்க ஏமாந்து போகப் போறிங்க.''

'அட, அயோக்கியப் பயலே, சும்மா இருடா!' என்று கத்தத் தோன்றியது அவருக்கு. ஆனால் அதே சமயம் அவள் தன்னை ஏமாற்றுகிறாளோ என்ற எண்ணமும் எழுந்தது. மூன்று மணிக்கே வருகிறவள் இன்னும் வரவில்லையே!

வராமல் இருந்து விடுவாளோ? - நெஞ்சு வலித்தது பிள்ளையவர்களுக்கு. இளம் பெண்ணை நம்பி மோசம் போய்விட்டோமோ?

அவள் வந்துவிட்டாள், கலகலத்த சிரிப்புடன். அவள் கண்கள் சிரித்தன, உதடுகள் சிரித்தன, முகம் சிரித்தது, ரத்தினம் பிள்ளையும் நம்பிக்கையோடு சிரித்தார்.

பக்கத்தில் வந்து, ஒரு காகிதப் பைக்குள்ளிருந்து, இரண்டு சீட்டித் துணிகளை எடுத்து அவரிடம் காண்பித்தாள் வெள்ளையம்மாள். ''கடைக்குப் போய் வாங்கிட்டு வந்தேன். உங்களுக்குப் பிடிச்சிருக்கா, பாருங்க.''

கிழவரின் வாயெல்லாம் பல்லாகியது. ''வெள்ளையம்மா, உனக்குப் பிடிச்சிருந்தாச் சரி.''

அதைத் தம் கையால் வாங்கிப் பார்த்து மகிழ்ந்தார். விலை குறைந்த இரண்டு சீட்டித் துணிகள் உறுதியாக இருந்தன. சாயம் போகாத ரகம். விலையைச் சொன்னாள்.

''நீ கெட்டிக்காரப் பொண்ணு. நல்லதாப் பார்த்து எடுத்திருக்கே.''

''சரி, நீங்கள் சொன்னபடியே செய்திடட்டுமா?''

''மறந்திடாமல் நாளைக்கே செய்திடு.''

பத்தாம் நம்பர் பக்கிரியும் பதினோராம் நம்பர் மாணிக்கமும் கண்களால் சாடைக் காட்டிக் கொண்டார்கள். ''கிழவன் தீபாவளிக்கு ரவிக்கைச் சீட்டி எடுத்துக் கொடுக்கிறாண்டா!''

''கையிலே காசு வேறே கொடுப்பான் போலே இருக்கு.''

அந்த வழியாக எதேச்சையாகப் போய்க்கொண் டிருந்த நர்ஸ் ரஞ்சிதம், கையில் சீட்டித் துணிகளுடன் பிள்ளையவர்களிடம் நின்று கொண்டிருந்த வெள்ளையம்மாளைக் கண்டுவிட்டாள். கால்கள் வேகமாக நடை போட்டு, மற்றொரு நர்ஸ் காந்தாமணியுடன் திரும்பி வந்தாள். ரவிக்கைச் சீட்டியைக் கண்ட அவர்கள் கண்கள் கொப்புளித்துப் பொங்கின.

''இப்பவே நான் கேக்கப் போறேன்'' என்றாள் காந்தாமணி.

''பொறுத்துக்க! தீபாவளி அன்னிக்கு, தச்சுப் போட்டுக்கிட்டு 'ஜம்'முன்னு வருவா. அப்போ பார்த்துக்கலாம்.''

''கண்றாவி, கண்றாவி, காலம் ரொம்பக் கெட்டுப் போச்சு!''

## 4

ஊரெல்லாம் தீபாவளி ஒரே அமர்க்களமாக இருந்தது. அடிமடியில் சில தின்பண்டங்களை வைத்துக் கட்டிக்கொண்டு பகல் பதினொரு மணிக்கு ஆஸ்பத்திரிக்கு வந்தாள் வெள்ளையம்மாள். அன்றைக்கு அவளுக்கு விடுமுறை நாள். என்றாலும் அவரைப் பார்க்க வேண்டியிருந்தது. நோயாளிக்குத் தின்பண்டம் கொடுக்கக் கூடாது என்பது சட்டம். 'தீபாவளியும் அதுவுமாய்க் கொஞ்சம் சாப்பிட்டால் என்ன வந்துவிடும்?' என்று நினைத்தாள் அவள்.

நர்ஸ் ரஞ்சிதமும் காந்தாமணியும் அவளை வழி மறித்துக் கொண்டார்கள். ''வெள்ளையம்மா, மடியிலே என்ன வச்சிருக்கே? யாருக்குக் கொண்டு போறே?''

வெள்ளையம்மாள் விழித்தாள்.

''என்னடி, திருட்டு முழி முழிக்கிறே?'' என்றாள் காந்தாமணி; ''உன்னோட வீட்டுக்காரர் வாங்கிக் கொடுத்தாரே ரவிக்கைத் துணி, அதைச் தச்சுப் போட்டுக்கலே?''

''நீங்க என்னம்மா சொல்றிங்க?''

''பாவம்! ஒண்ணுந் தெரியாதவ!'' என்று சிரித்தாள் ரஞ்சிதம்: ''போ! போ! புருஷன் தீபாவளிப் பலகாரம் வரலேன்னு காத்துக் கிடப் பாரு. கொண்டுபோய்க் கொடு.''

''அம்மா, உங்க நாக்கு அழுகிப் போகும்!'' என்று அலறினாள் வெள்ளையம்மாள். கண்ணீர் வெடித்துக்கொண்டு கிளம்பியது.

''அந்தக் கிழட்டுப் 'பேஷண்டு' உனக்கு என்ன சொந்தம்?''

''உங்களுக்கு அவர் என்ன சொந்தமோ அதே சொந்தம்.''

''என்ன சொன்னே?'' - ரஞ்சிதம் அவளைப் பிடித்துக்கொண்டு, சொற்களால் குதறிப் பிடுங்கினாள்: ''என்ன துணிச்சல் உனக்கு? கிழவனுக்கு வைப்பாட்டியா இருக்கிறவளுக்கு, வாய் வேறேயா, வாய்?''

''அம்மா, கொஞ்சம் நான் சொல்றதைக் கேளுங்க'' என்று மன்றாடினாள் வெள்ளையம்மாள்: ''அவர் யாரோ, நான் யாரோ? எனக்கு அவர் ஒண்ணும் சொந்தமில்லே. அவர் தன்னோட கதையை எங்கிட்ட சொன்னாரு. புள்ளை குட்டியுள்ள பெரிய குடும்பம் இருக்குதாம் அவருக்கு. வெளியூருக்குப் போய்ப் பணம் சம்பாதிச்சு அனுப்பறதாச் சொல்லிட்டு வந்தாராம். சம்பாதிக்க வழியில்லே; நோயிலே படுத்திட்டார். வீட்டுக்கு இதைச் சொன்னா வருத்தப்படுவாங்கன்னு, வேலை தேடிக் கிட்டிருக்கறதாக் கடுதாசி எழுதினாராம்....''

அவள் குரலும் கண்ணீரும் அவர்களை நம்ப வைத்தன. இருவரும் உற்றுக் கேட்டனர்.

''ஆஸ்பத்திரி ரொட்டியை எங்கிட்டக் கொடுத்து வெளியிலே விற்கச் சொன்னாரு. மாட்டேன்னு சொன்னேன்; கெஞ்சினார்; அழுதார்; குடும்பக் கஷ்டத்தை எடுத்துச் சொன்னார்; மனசு கேக்கலே. அவரோட ரொட்டியை வித்துச் சேர்த்த காசிலே அவர் சம்சாரத்துக்கு ஒரு ரவிக்கைத் துணியும், பெண் குழந்தைக்கு ஒரு சட்டைத் துணியும் வாங்கினேன். அவரோட ஊருக்கு அதைப் பார்சல் பண்ணி அனுப்பியிருக்கு.''

''வெள்ளையம்மா, நாங்க தப்பா நினைச்சிட்டோம், வெள்ளையம்மா!'' என்று தடுமாறினாள் ரஞ்சிதம்.

''நினைப்பீங்கம்மா!'' என்றாள் வெள்ளையம்மாள் ஆத்திரத்துடன்; ''எலும்பிலே ஒட்டியிருக்கிற சதையைப் பார்த்திட்டு ஆம்பிளைங்க நம்மைச் சுத்தி அலையற காலம் இது. கையிலே சிக்கினாக் கடிச்சுக் குதறிப் போட்டுட்டுக் கண்காணாமப் போயிடுவானுங்க.'' வெள்ளையம்மாளின் குரல் தன் கசப்பான பழைய அநுபவம் எதையோ நினைத்துக்கொண்டு தழுதழுத்தது. ''அப்படி ஆம்பிளைங்க இருக்கிற உலகத்திலே, தன் குடலைப் பிடுங்கி வேகவச்சுக் குடும்பத்துக்குக் கொடுக்கிற உத்தமரும் இருக்காரு. பெத்த தகப்பன்மாதிரி நினைச்சு அவரை நான் சுத்திக்கிட்டு அலையறேன்.''

கண்களைத் துடைத்துக்கொண்டு, வெகு வேகமாக ரத்தினம் பிள்ளையிடம் ஓடிவந்தாள் வெள்ளையம்மாள்.

''இந்தாங்க, இதைச் சாப்பிடுங்க!''

''வேண்டாம்'' என்று தலையாட்டினார் பிள்ளை; ''குழந்தைங்க அங்கே என்ன சாப்பிட்டாங்களோ, தெரியாது.''

வற்புறுத்தியதன் பேரில், வெள்ளையம்மாளின் மனம் நோக வேண்டாம் என்பதற்காக, ஒன்றை வாங்கிக் கடித்தார். அது தொண்டையில் அடைத்து விக்கிக்கொண்டது. புரை ஏறியது.

''வீட்டிலே நினைச்சுக்கிறுங்க'' என்றாள் வெள்ளையம்மாள்.

''அப்படியா?'' என்று விக்கலோடு விக்கலாகக் கேட்டார் பிள்ளை.

ஆமாம்; வீட்டில் அப்போது அவரை நினைத்துத்தான் கொண்டார்கள்:—''எங்க வீட்டுக்காரருக்குப் புத்தி கெட்டுப் போச்சு. ரெண்டு சல்லாத் துணியையும், ரொட்டியையும், சக்கரைத் தூளையும் மூட்டை கட்டி அனுப்பிச்சிருக்காரு. மேலே போட்டுக்கறதுக்கு லாயக்கான துணியா இது?''

''ஏம்மா, அப்பா முந்தியெல்லாம் கோதுமை அல்வா வாங்கித் தருவாங்காளே; இப்ப ஏன் ரொட்டி அனுப்பிச்சிருக்காங்க?'' என்று கேட்டான் பிள்ளைகளில் ஒருவன்.

''வயசானுப் புத்தி கெட்டுப் போகும். உங்கப்பாவுக்கு வயசாயிடுச்சு.''

அவளைச் சொல்லிக் குற்றம் இல்லை. அவர்கள் நன்ருயிருந்தபோதே அவர் வாங்கி வந்த பொருளில் எல்லாம் குறைகண்டவள் அவள். பணக்குறை தெரியாத மனக்குறைக்காரி அவள்.

ஆஸ்பத்திரியில் கிடந்த பிள்ளை மறுபடியும் விக்கினுர். பயந்து போய் அவர் முகத்தில் தண்ணீரைத் தெளித்து அவர் வாயிலும் ஊற்றினுள் வெள்ளையம்மாள்.

சற்று நேரம் திக்குமுக்காடித் திணறிவிட்டு, ''வேண்டாம் வெள்ளையம்மா! அரை மனசோட இதை நான் சாப்பிட வேண்டாம்'' என்றுர். பிறகு, ''அவங்க என்னை நினைச்சுக்குவாங்கன்னு சொல்றியா?'' என்று குழந்தைபோல் கேட்டார்; ''உண்மையா நினைச்சுக்குவாங்களா?''

''கட்டாயம் நினைச்சுக்குவாங்க!''

எந்த விதமாக நினைத்துக்கொண்டார்கள் என்பது அவருக்குத் தெரியவில்லை. அவர் அனுப்பிய துணிகளை அவர் மனைவி கசக்கி எறிந்தாள் என்பதும் அவருக்குத் தெரியாது.

—நவம்பர், 1959

# அழகிலும் அழகு

கி. சந்திரசேகரன்

அன்று பொழுது புலர்ந்து வானமும் வையமும் தனிச் சோபையுடன் தோற்றம் அளித்தன. வானம் முழுவதும் பட்சிகளின் பல விதக் கீதங்களும், காற்றின் மெல்லிய வீச்சில் கலந்து மணக்கும் மலர்ப் பரிமளமும் நிறைவின் பொலிவை விளம்பரமாக்கின.

குடிலில் மகரிஷி அத்திரி அநுஷ்டானங்களை முடித்துக் கொண்டு அரைக் கண்ணால் எதையோ எதிர்பார்க்கும் குறிப்புடன் இங்கும் அங்குமாய்க் கவனித்துக்கொண் டிருந்தார். உள்ளே அனசூயை நரைத்த கூந்தலை வாரி அள்ளிச் செருகியபடியே மகரிஷியின் தினசரி பிற்பகல் ஓமங்களை வளர்ப்பதற்கான சடங்குகளில் ஈடுபட்டிருந்தாள்.

இரண்டொரு சீடர்கள் ஓமத்துக்கு வேண்டிய நெய் சமித்து முதலிய பண்டங்களை நெருப்புக் குண்டத்தின் அருகில் ஒழுங்காக வைத்துக்கொண் டிருந்தார்கள். அமைதி நிலவிய ஆசிரமத்தில் துளியும் தூய்மையைக் குறைக்கும் பொருள் ஏதும் காணப்படவில்லை. சாணம் போட்டு மெழுகிய இடங்களில் எங்கும் அழகழகான வெள்ளிய கோலங்கள் கண்ணைப் பறிக்கும் பாங்குடன் மங்கலத்தையே நினைப் பூட்டின.

எதையோ யோசித்தவராய் மகரிஷி உள்ளே எட்டிப் பார்த்துப் புன்னகை பூத்தார். கிழவி முதிர்ந்த வயசிலும் சிரமத்தைப் பாராது தன் பதிக்குப் பணியாற்றும் பொறுப்பில் கண்ணும் கருத்துமாக இருந்தாள். ஆனால் மகரிஷியின் வதனத்தில் நெளிந்த சிரிப்புக்குக் காரணம் கிழவியின் தோற்றம் அல்ல. அவருடைய மனம் பழைய சம்பவங்களைப் புரட்டிக் கொண்டும், புதிய தொன்றை எதிர்பார்த்தும் நின்றதுதான்.

பழைய நினைவுகள் கண்முன்னே நாடக மேடையில் காணப்படும் காட்சிக்கு ஒப்ப ஓடி மறைந்தன. அனசூயையின் தந்தையார் உயர்ந்த வம்சத்தைச் சேர்ந்த தனவந்தர். அவள் தாய் அரிய வித்தைகள் பயின்று சாஸ்திரம் கற்றவரின் மகள். இவ்விருவருக்கும் ஒரே புதல்வியாய் அனசூயை பிறந்து வளர்ந்தாள்.

ஒரு நாள், அவள் தந்தையிடம், ரிஷிகுமாரன் ஒருவன் குருவின் உத்தரவை மேற்கொண்டு, யாகங்களுக்கெனச் சுவர்ணம் யாசனை செய்ய வந்தான். முகத்தில் நல்ல தேசு ஒளிர்ந்தது. அவனுடைய

குணமோ உடலமைப்பின் ஒழுங்கைவிட இன்னும் அதிகமாய்ப் பாராட்டும்படி தோன்றியது.

அனசூயையை யாருக்குப் பாணிக்கிரகணம் செய்து கொடுப்பது என்பதில் தாய் தந்தையர் இருவருக்கும் ஒரே கவலை. ஏனெனில் அவள் பருவ வயசு கிட்டுவதற்குள்ளாகவே எல்லையற்ற வைராக்கிய மனப்பாங்கைப் பெற்றிருந்தாள்; அதுவே அவர்கள் கவலைக்குக் காரணம். ரிஷிகுமாரனைப் பார்த்தது முதல் அனசூயையின் தந்தைக்கு, 'இவனை ஏன் மாப்பிள்ளை ஆக்கிக்கொண்டு உயர்ந்த சம்ரட்சணையை மகளுக்குச் செய்யலாகாது?' என்று ஓர் எண்ணம் உள்ளே எழும்பி எழும்பிச் சிதறியது. எண்ணம் வலிமை பெறுததற்குக் காரணம், அவள் தாய்க்கு ரிஷியின் மனைவியாய்த் தன் ஒரே மகள் ஆவதில் விருப்பமில்லாததே. ஆனால் கடவுளின் திருவுள்ளத்தை விலக்குவார் யார்?

அதிகாலையில் அனசூயை தந்தையின் பூஜைக்காக மலர் கொய்யத் தோட்டத்தில் நுழைந்தாள். அச்சமயம் ரிஷிகுமாரன், முழுவதும் சேகரிக்க வேண்டிய வேள்விக்கான சுவர்ணத்தை இன்னும் திரட்டவில்லையாகையால், ஒரு மூலையில் ஒதுங்கிப் படுத்து உறங்கிக் கொண்டிருந்தான். அனசூயை அவனது தெளிவான வதனத்தை நின்று கவனித்தாள். அவள் தன் வயசுக்குள்ள மனக்கிளர்ச்சி ஏற்பட்டதை அறியலானாள். 'ஆம், இவரே எனக்கு மாலையிட வேண்டியவர்' என்று தனக்குள் தீர்மானித்துக் கொண்டவள், தந்தையின் கருத்தும் அவ்விதம் இருக்கவே, மனவெழுச்சியுடன் பொழுது போக்கலானாள். ஆனால் அத்திரி என்ற அந்த இளைஞன், "கல்யாணமா? எனக்கா? கிடையாது? நான் நித்தியப் பிரம்மசாரியாகவே இருக்கப் போகிறேன்" என்றான். அவனுடைய குருவை அணுகி அனசூயையின் தந்தை விண்ணப்பிக்க, அவர், "அப்பனே! உன் குருகுலவாசம் முடிந்து விட்டது. உன் பிரயத்தனத்தினால் வேண்டிய சுவர்ணமும் திரட்டித் தந்து வேள்வியும் முடிந்துவிட்டது. என் ஆசிகளுடன் அனசூயையை நீ ஏற்பதுதான் உனது வருங்கால வாழ்க்கைக்கு நல்லது. என் விருப்பத்தைத் தட்டாதே. அனசூயை மனத்தினால் உன்னை வரித்தபின் வேறு ஒருவனையும் அவள் விரும்பாள். அவ்விதம் இருப்பதுதான் இந்நாட்டுப் பெண்களின் பண்பாட்டின் உயர்வுக்குக் காரணமாகும். இனித் தாமதியாதே" என்றார்.

என்ன செய்வான் இளைஞன்? தனக்கு மனைவியாகப் போகிறவளை மணப்பதற்கு முன் ஒரு தடவை சந்திப்பதில் தீவிர வேகம் கொண்டான். தனிமையில் அவளிடம், "பெண்ணே, உன் இதயம் தேடுவதற்குரியவன் என்னைப் போன்றவன் அல்ல. நான் வனவாசி. மேலும் என்னுடன் இல்லறம் நடத்துவதில் கஷ்டமுண்டு; என்னிடம் நீ உறவு வைத்துக் கொள்வதில் சங்கடம் இருக்கலாம். நான் கடவுளிடம் இனிப் பிறவாமையை வேண்டுகிறேன். என்னோடு நீ வாழ்வது உன் இன்பங்களுக்கு இடைஞ்சலையே உண்டாக்கிக் கொள்வதாகும்" என்றான்.

அனசூயை யோசிக்கவே இல்லை; "தங்களை நான் வரித்து விட்டேன். இனித் தங்கள் உத்தரவுப்படி நடப்பது ஒன்றே என் குறிக்கோள். என்றைக்காவது தாங்கள் இல்லறம் வேண்டுமென்று விரும்பினால் அன்று நான் தடை செய்யேன். ஆயினும் என் முழு நேரத்தையும் உங்கள் தொண்டில் கழிப்பேன். தாங்கள் தவம் கிடைக்கையில் நானும் கடவுளை வழிபடுவேன். இது நிச்சயம்" என்று வாக்குறுதி கொடுத்தாள்.

இவர்கள் இருவருக்கும் நடந்த சம்பாஷணையை வேறு எவரும் அறியாததனால், கல்யாணமானபின் எல்லா விதச் சௌகரிங்களையும்

செய்ய அவள் பெற்றோர் முனைந்தனர். ஆயினும், அனசூயை அவர்களைத் தடுத்துவிட்டாள். மணக்கோலம் புனையும்போது ஆபரணங்களைத் தன் தாய் அணிவதற்கு நெருங்கி வந்ததும், ''அம்மா, இவற்றை அவர் வெறுப்பார். வேண்டுமானால் இவற்றைப் பேழையில் பத்திரப்படுத்தி வைத்துச் சீதனமாய்க் கொடுத்துவிடு. அவர் விரும்பும்பொழுது அவற்றை அணிவேன். இல்லையேல் என்னை ஆட்கொண்ட தெய்வம் என்றைக்கு என்னிடம் வருமோ அன்று அதற்கு அவற்றை அணிவித்துப் பார்த்துக் களிப்பேன்'' என்று கூறி, தாய் தன்னிடம் தந்த பேழையை இரு கரங்களாலும் பெற்றுக்கொண்டாள். அவ்விருவரும் உல்லாசமாகவே தங்கள் இருப்பிடத்துக்குப் போயினர். ஆனால் அத்திரி தனிமையில் அவளிடம் ஒன்று கேட்டுக்கொண்டார்: ''பிரியே, மற்ற எல்லாரையும் போல நாமும் இருப்போமா, அல்லது சரீர சுகத்தை நாடாது உள்ளத்து உவகையைப் பெரிய லட்சியமாக்கிக் கொண்டு தவ வாழ்க்கையில் ஈடுபடுவோமா? துளியும் சந்தேகமின்றி உன் உள்ள நோக்கை என்னிடம் வெளியிட வேண்டும்'' என்றார்.

அனசூயை பதில் சொல்லும்பொழுது முகத்தில் ஒருவிதமான சந்தேகத்தின் நிழலே விழாமல்தான் இருந்தது. ''ஆம், சுவாமி, இல்லற வாழ்க்கை எவ்வளவோ உயர்ந்ததாயினும் உள்ளத்துள்ளே இருப்பதைத் தேடி அடைவதற்கு இல்லறமும்' தடையாகலாம். நாம் இருவரும் விரத வாழ்க்கையையே மேற்கொள்வோம். ஆனால் ஒன்று மட்டும் தாங்கள் எனக்கு அருள வேண்டும். என் அழகு அழிவுடையது. என்றென்றும் அழிவற்ற அழகு என்னை அணுகினாலன்றி என் ஆசை பூர்த்தியாகாது. உருவற்ற பரப்பிரம்மம் உருக்கொள்ளும்பொழுது நாம் இருவரும் அதை வணங்குவோம். அறிவு நிரம்பியதே அழகு என்று எண்ணும் ஆற்றலை எனக்குத் தாங்கள் முதலில் அருள வேண்டும். நான் அந்த நாளையே எண்ணிக் காத்திருப்பேன். சதை சுருங்கி, தலை நரைத்து, உடல் ஒடுங்கிவிட்டாலும் என் கரங்களால் அழகுத் தெய்வத்தை நானே அணிகளால் அலங்கரிக்கும் பேரின்பம் கிட்டுமாறு எனக்கு அருள வேண்டும்.''

அத்திரி மகரிஷி தம் கைப்பிடித்தவளின் ஆர்வம் தம் ஆர்வத்தை விடவும் மேலோங்கி விளங்குவதைக் காணும்போது பிரமித்து விட்டார். ஆனால் அன்று தொடங்கி அவள் வரத்தை வழங்குவதற்குரிய காலத்தை எப்போதும் எதிர்நோக்கி இருந்தார்.

''அனசூயே!''

''சுவாமி!''

''இன்று விடியும் நேரத்தில் என் கண்முன் உருவங்கள் தெரிந்தன. அவர்களில் இருவர் முனிவர் கோலம் பூண்டிருந்தனர். அவ்விருவருடன் மிகவும் ஆயாசமே தெரியாமல் துள்ளி ஓடிவந்த பெண்ணின் அங்கங்களில் அலங்காரங்களே அதிகம் காணவில்லை. அவளை அழகுபடுத்தியவை அவளது புன்னகையும், மனத்தில் எழுந்த களிப்புமே. இவ்விதம் வந்தவர்கள் வேஷம் தரித்தவர்களா அல்லது உண்மையிலே அவர்களும் நம்மைப் போன்ற தவ வாழ்க்கையில் ஈடுபட்டவர்களா என்று நான் நிர்ணயிப்பதற்குமுன் அம்மூன்று உருவங்களும் மறைந்தன. உனக்கு என்ன தோன்றுகிறது, சொல்!''

''சுவாமி, நான் எதைச் சொல்ல? தாங்கள் தெரிந்துகொள்ளாததா? ஆனால் ஒரு கணம் என் மனம் இன்புறுகிறது. கூட வந்த பெண்ணின் அலங்காரங்களற்ற தோற்றம் எப்படி இருந்தது? சொன்னால் நானும் தெளிவை எய்துவேன்.''

''சொல்லுகிறேன்'' என்று ஆரம்பித்தவர் ஒரு கணம் நிதானித்துக்கொண்டு இரு கண்களையும் உள்நோக்கில் செலுத்தினார். பிறகு சொல்லுவார்:

''ஆம், அவளுக்கு அணிகளே இல்லை. ஒன்றிரண்டு மட்டும் காதுகளில் இருந்தன. கால்களிலும் பாதசரம் ஒலித்தது. மற்ற அலங்காரங்கள் இல்லை. ஆனால் நீ சொன்ன பின்பே அவை இல்லை என்ற ஞாபகம் வருகிறது. ஏனெனில், அவளுடைய அழகெல்லாம் அவளுடைய உள்ளப் பெருக்கில்தான் மண்டிக் கிடந்தது. அவ்வளவு சந்தோஷம் தாண்டவமாடியது அவளிடம். அவள் யாரோ, தெரியவில்லையே?''

அனசூயை இப்பொழுது கலகலவென்று நகை செய்தாள். அத்திரி மகரிஷி திடுக்கிட்டு அவளைக் கவனித்தார். ''சுவாமி, தாங்கள் எவ்வளவு சரியாய்க் கவனித்திருக்கிறீர்கள்? கனவுதானா அல்லது நனவில் கற்பனைதானா, தெரியவில்லை. இருப்பினும் என் உள்ளத்தில் ஏதோ கூறுகிறது, இன்று நமக்கு ஒரு பெருவாழ்வின் திவலை அநுபவத்துக்கு வரும் என்று. எல்லாம் சீக்கிரத்திலேயே தெரியும். ஆயினும் ஒன்றுதான் இன்னும் எனக்கு விளங்கவில்லை. என்னிடம் என் பெற்றோர்கள் ஒப்படைத்த பேழையைத் திறந்துகூடப் பார்க்க இடம் தராத என் மனம் ஏன் இன்னும் அதை வைத்திருக்க வேண்டும்? சரியான பாத்திரத்தினிடம் அதைக் கொடுத்துவிட்டால் ஒரு பொறுப்பு என்னை விட்டு நீங்கும். பளு ஒன்று சில வேளைகளில் என் மனத்தை அழுத்துகிறது. ஒருவித ஆசையையும் வளர்க்காத என் உள்ளம் இந்தப் பேழையைச் சரியான இடத்தில் சேர்க்க வேண்டுமே என்று ஏன் உந்துகிறது? சுவாமி, இதனைத் தீர்த்து வையுங்கள்.''

''எல்லாம் அவனுடைய திருவிளையாடல். நமக்குக் காத்திருப்பதைத் தவிர, வேறு ஒன்றும் செய்வதற்கு உரிமை கிடையாது.''

சீடர்களில் ஒருவன் ஓடி வந்தான்; ''குருநாதா, மூவர் எதிரே வந்துள்ளனர், அரண்யத்தின் எல்லையில். நம் குடிலின் பாதையிலேயும் வருவதற்குத் திரும்பினார்கள். ஓடோடியும் வந்தேன். தங்களை அவர்கள் பார்க்க வருவார்களென்றே எண்ணுகிறேன். என்ன பொலிவு அவர்களிடம் காண்கிறது, தெரியுமா? மேனியின் வடிவமும், ஏறு போன்ற நடையின் காம்பீர்யமும் அவர்களை ரிஷிகள் மட்டுமல்ல, வேறு உலகில் வசிப்பவர்களாகவே தோன்றவைக்கின்றன. கூட வருகிறாள் ஒரு பெண். அவளை அவர்கள் பின்னும் முன்னுமாய்க் காத்து வருகிறார்கள். அவள் இடையே இருப்பதால் அவர்களும் தம்மிடையே புதையலொன்றைக் காத்துவருவதைப் போலக் கவனித்து வருகிறார்கள். குருநாதா! இங்கேதான் வருகிறார்களா என்று திரும்பவும் பார்த்து வரட்டுமா? உத்தரவு கொடுங்கள். நன்றாய் அவர்களைப் பார்த்து வந்து சரியாகக் கூறுகிறேன்'' என்றான். அவனிடம் பரபரப்பு மட்டுமல்ல; காணாததைக் கண்டது போன்ற பிரமையும் கலந்திருந்தது.

அத்திரி மகரிஷி நின்றபடியே யோசித்தார். ஒரு முறை இமைகளை இறுக மூடினார். கண்ணுள்ளே முன் கண்ட அதே காட்சியைத் திரும்பவும் காணப் பெற்றார். சிந்தை தெளிந்தவராய்ப் பகருவார்: ''குழந்தாய், போய்வா. அவர்கள் உன் வருகையை நினைந்து காத்திருக்க மாட்டார்கள். நான் அறிவேன்; இங்கேதான் நிச்சயம் வருவார்கள்.'' இவ்வாறு சொல்லிவிட்டு, ''அனசூயே!'' என்று மூதாட்டியின் பக்கம் திரும்பினார். ஆனால் அனசூயையை அங்கே காணவில்லை. அவள் தன் கரங்களில் தட்டேந்தி வாயிலில் நிற்பதைப் பார்த்தார்.

''சுவாமி, அவர்களோடு வரும் பெண்தெய்வம் நான் காண விரும்பும் அழகின் உருவமாய்த்தான் இருக்க வேண்டும் என்று என் மனம் கூறுகிறது. நான் பேழையைத் திறக்காமல் பாதுகாத்திருந்ததும் வீண் போகவில்லை'' என்றாள்.

சக்கரவர்த்தி திருமகன் ராமன் முன்னும், இடையே சீதையும், லட்சுமணன் பின்னேயும் ஒருவர் பின் ஒருவராய் வாசலில் வருவதைக் கண்கொள்ளாச் சேவையாய் மகரிஷியும் அவர் பத்தினியான மனைவியும் பார்த்துக் கண்களால் உண்டனர்.

ராமன் சிரசைத் தாழ்த்திக் கரம் குவித்துப் பணிந்து வணங்கினான். சீதை கீழே விழுந்து பெரியவர்களின் பாதங்களைத் தொட்டுக் கண்களில் ஒற்றிக்கொண்டாள். லட்சுமணன் ராமனைப் போலவே செய்துவிட்டு மிகவும் அடக்க ஒடுக்கமாய்த் தூரத்தில் நின்று கொண்டான்.

''தசரதருடைய அருமைக் குமாரர்களா நீங்கள்? எனக்கு நீங்கள் கானகம் வந்த விவரம் தெரியவந்தது. அதோ என் மனைவி அனசூயை நிற்கிறாள். அவளை முதலில் நீங்கள் நன்கு அறியவேண்டும். பல காலம் செய்த தவங்களெல்லாம் உருக்கொண்டவள் அவள். அவளை நன்கு அறிவீர்களானால் உங்கள் வனவாசமும் பயனுடையதாகும். உன் தேவியை, ராமா, முதலில் அந்த மூதாட்டியிடம் நெருங்கிப் பழகச் சொல்லு'' என்றார், கனிவும் களிப்பும் ததும்பும் மொழிகளில்.

''தேவி, உன் செவிகளில் விழுந்தனவா? உனது பாக்கியமெல்லாம் இன்றே முழுவதும் வந்து கூடும். உடனே மூதாட்டியை அணுகி உன் உபசாரங்களை யெல்லாம் அவரிடம் தெரிவி; அவர் சொற்படியும் நட'' என்றான்.

சீதை தாவி அனசூயையை வணங்கி நின்றாள். கிழவி வாய் திறவாமலே அசையாமல் சீதையைத் தலையிலிருந்து கால்வரையில் கூர்ந்து கவனித்தாள். தன்னை ஆழ்ந்து கவனிக்கும் பார்வையைக் கண்ட தேவி முகம் சிவந்து, வெட்கி, கால்கள் கீழே பாவாமல் இங்கும் அங்குமாய்த் தடுமாறி நின்றாள். அனசூயை வாய் திறந்தாள்; முத்துக்களைச் சொரிந்தாள்; உவமைகளைக் கொட்டினாள்; உலகையும் தன்னையும் மறந்தாள்.

''அடி என் கண்ணே, உனக்கு இத்தனை அழகைக் கொடுத்த தெய்வம் என்னிடம் அல்லவா உன் அங்கங்களுக்கென்று ஆபரணங்களை வைத்துப் பத்திரப்படுத்தியிருக்கிறது? உன் உள்ளழகைக் கண்டேன், அம்மா! எந்தப் பெண்ணும் செய்ய இயலாத காரியத்தை அல்லவா நீ சாதித்திருக்கிறாய்? கணவன் பெருமையும் புகழும் பணமும் உடையவனானால் எல்லாப் பெண்களும் கூடத்தான் இருப்பார்கள். ஆனால் அவனுக்கு முன் அவற்றைத் தானும் துறக்கும் மனைவியை எவனும் அடைந்ததில்லை, அம்மா. என் கணவர் என்னை வரித்தபொழுது, நாங்கள் இருவரும் ஓர் உடன்பாடு செய்துகொண்டோம். ஒருவரை ஒருவர் அவரவர் தவங்களிலிருந்து வழுவாது பார்த்துகொள்ள வேண்டுமென்று. ஆனால் உன்னைப் போல், இடுக்கண் எது வரினும் சரி, காடும் வீடும் ஒன்றென்று நினைக்கும் தீர்மானத்தை மேற்கொள்வதை யார் இது வரையும் கண்டிருக்கிறார்கள்? அரசன் மகள் நீ. உன் பாதம் நோக நீ நடந்து வந்திருக்கிறாய். ஆனால் உன் கால் விரல்களில் துளியும் புண்ணோ, காயமோ காணவில்லையே! மனத்தில் இல்லாதது உடலில் மட்டும் சம்பவிக்குமா? அம்மா, உன் பேற்றை என்னவென்று சொல்லுவேன்?''

சீதையின் அங்கமெல்லாம் வேர்த்தது. எதனால் பெரிய கிழவி, மகாபதிவிரதையான அனசூயை, இவ்விதமெல்லாம் தன்னைப் பாராட்டு கிருள் என்று தீராத யோசனையும் வேதனையும் உண்டாயின அவளுக்கு.

''உன் கதையைச் சொல்லு; கேட்க என் காதுகளை நான் தீட்டிக்கொள்கிறேன்'' என்றாள் கிழவி.

''என் பாக்கியமெல்லாம் என் கணவரைப் பெற்ற மகானின் அருளினால்தான். என் தந்தை வைத்துப் பூசித்த சிவதனுசை ஒருவரும் வளைக்கக்கூட இயலாதபொழுது, என் பதி அதை வளைத்து ஒடித்து விட்டார். உடனே தாம் சொன்னதை மெய்யாக்க என் பெற்றோர் முன்வந்தனர். கையில் தங்கப் பாத்திரத்தில் தீர்த்தத்துடன் கன்னிகா தானம் செய்ய நின்ற என் தந்தையை என் கணவர் கவனித்துவிட்டு, 'ஐய, என் தந்தையார் உத்தரவின்றி உம் மகளை மணக்க என்னால் இயலாது. அவரிடம் தெரிவித்து, அவர் சம்மதித்தால்தான் நான் இவளை ஏற்பேன்' என்றார். தந்தையினிடம் கௌரவமுள்ளவர் என் பதைக் கண்டு மனம் ஒரு பக்கம் பூரித்தாலும், என் விதி காரணமாக என்னை அவர் தீண்டாதபடி அவர் தந்தையின் தீர்மானம் ஒரு சமயம் இருந்துவிட்டால் என்ன செய்வது என்றே கதிகலங்கினேன். என்னை வளர்த்தவர்களும் கலங்கிவிட்டனர். எங்களையெல்லாம் பெரும் கவலையிலிருந்து காப்பாற்றியவர் என் கணவரின் தந்தையான பெருந் தகையே!''

சீதை இதைச் சொல்கையில், ராமனால் தான் நிராகரிக்கப்பட்ட கட்டாயமாகிய முதல் சோதனையை நினைத்துப் பெருமூச்செறிந்தாள். ஆனால் அனசூயை சீதையை இறுகத் தழுவிக்கொண்டு, ''என் ராஜாத்தி, உன்னை மனைவியாய்ப் பெற்ற கணவன் தெய்வமாகத்தான் இருக்க வேண்டும். இல்லாவிட்டால் உன்னை அவன் கரம் தீண்ட முடியாது. ஆம், எனக்குச் சட்டென்று ஞாபகம் வந்துவிட்டது. இதோ வருகிறேன்'' என்று, அனசூயை தள்ளாடிக்கொண்டே உள்ளே சென்று, ஒரு சிறு பேழையை இரு கரங்களாலும் ஏந்திக்கொண்டு வந்து நின்றாள். சீதைக்கு ஒன்றுமே விளங்கவில்லை.

திறவுகோல் துரு ஏறிக் கிடந்தது. வெகு நாட்களாய் அதை உபயோகிக்காததால் அது பூட்டைச் சட்டென்று திறக்கவில்லை. பெட்டியைத் திறந்து பார்த்தால், அவ்வளவும் நகைகள்! கண்ணையே கூசச் செய்யும் தன்மை உடையவை! ஒவ்வொன்றாய் மூதாட்டி எடுத்துப் பார்த்துவிட்டு, ''என் பெற்றோர் இந்தப் பேழையை எனக்கு விருப்பமானபொழுது திறக்கச் சொன்னார்கள். அந்த வேளையும் இன்றுதான் வந்தது. எங்கே என் கண்மணி, உன் அங்கங்களில் இவற்றை என் கையாலேயே நான் பூட்டுகிறேன். சற்று என் வேண்டுகோளை மறுக்காதே'' என்றாள்.

சீதை வெறித்து அவற்றையே கவனித்துக்கொண் டிருந்தாள்.

கிழவியின் ஆர்வத்தைப் பார்த்தால் அவள் சிறுமியாகிவிட்டவளாய்த் தோன்றியது. இவ்வளவு நகைகளின் பெயர்கள்கூட அந்தக் கிழவிக்குத் தெரியுமோ என்று ஐயப்படும்படி அவ்வளவு ஆபரணங்கள் விதவிதங்களாக இருந்தன.

''இதோ காசுமாலை; உன் கழுத்தில்தான் காசுகள் கனமின்றி மிளிர்கின்றன. இதோ வங்கி; உன் இடக் கைக்குத்தான் பொருத்தம். வங்கி வெட்கப்படட்டும், தன் சிறுமையைக் கண்டு. இதோ பாவிலி, இதோ ஜிமிக்கி. இதோ உன் இடையைத் தன் அழுத்தமான அளவில் அடக்கிக்கொள்ளக் காத்திருக்கும் ஒட்டியாணம். இதோ, உன் பிற அங்கங்களில் ஒளியிட, விண்ணில் ஏறும் இளம் சந்திரன் போன்ற,

திருப்பூ? உன் கரங்களைத் தீண்ட யாருக்கும் பாத்தியம் இல்லை, உன் கணவனைத் தவிர. ஆனால் இந்த முத்து வளையல்களால் காத்திருக்கவே முடியாது. அவை இரண்டும் போட்டி இடுகின்றன, வட்ட அளவில் உன் கரங்களைவிடத் தாங்களே ஒருகால் அதிகமாய் இருப்போமோ என்று அறிய. இந்தா வாசனைப் பூச்சு. உன்னிடம் சுபாவமாய் எழும் சுவாசனையை விடவா இதன் பரிமளம் இருக்க முடியும்? ஏதோ வீண் செருக்கு இதற்கு!''

அனசூயை தான் பேசுவதும் செய்வதும் சீதைக்கு மேலும் மேலும் வெட்கத்தையே உண்டாக்கும் என்பதை மறந்துதான் விட்டாள். ஆபரணங்கள் எல்லாவற்றையும் அவற்றுக்கு உரிய இடங்களில் உள்ளவைபோல் பார்த்துப் பார்த்துச் சேர்த்தபின், ஒரு கணம் நின்று அழகு பார்த்துவிட்டுப் பின்வருமாறு சொல்லலானாள்:

''என் அழகுத் தெய்வமே, உன் அழிவற்ற அழகுக்கு ஆபரணமும் தேவையா? இருப்பினும் உன்னிடம் சேருவதற்கே இத்தனை காலமும் காத்திருந்தவை போல, இவையும் தாமாக ஆங்காங்கே தக்க இடங்களில் பொருந்திக்கொண்டு விட்டன. இனி நீ உன் கணவனை இந்தக் கோலத்தோடுதான் காணவேண்டும். போ. அவன் காத்திருப்பான்'' என்றாள். இவ்வாறு சொல்லித் தனது கரத்திஞல் ஒரு தடவை சீதையைத் தடவிக் கொடுத்து, மெதுவாய் ராமன் இருக்குமிடம் உந்திவிட்டாள்.

ராமன் எதைக் கண்டான்? திருவின் திருவே கண்ணைக் கவர்வது போல் நினைத்தான். மனம் சிறிது நெகிழ்ந்தான். ''கானகமும் கல்லும் முள்ளும் திருவை இன்று சேவிக்கின்றனவே!'' என்றுதான் எண்ணிக் கலங்கியிருப்பானே? இல்லை; ''அனசூயையும் பெண்தானே? அவளும் இளமையில் அழகாய்த்தானே இருந்திருப்பாள்? ஆயினும் துளி அசூயைகூட இல்லாமல் சீதையைத் தன் கரங்களாலேயே அவள் அழகுபடுத்தினளே! அவள் அல்லவா உலகிற்கு ஓர் அணி!'' என்று எண்ணி மனம் பூரித்திருக்க வேண்டும்.

—நவம்பர், 1963

# உள்ளத்தில் முள்

கி. வா. ஜகந்நாதன்

நவராத்திரி அணுகிக்கொண் டிருந்தது. அவரவர்கள் வீட்டில் புதிய பொம்மைகளை வாங்கி வாங்கிச் சேர்த்தார்கள் பெண்மணிகள். குழந்தைகளுக்குத்தான் எத்தனை குதூகலம்! நாளுக்கு ஒரு கோலம் புனைந்துகொண்டு வீடு வீடாகப் புகுந்து அழைத்து வருவதற்கு அவர்கள் தயாராஞர்கள்.

இந்த ஆண்டு விசுவநாத ஆசாரியாருக்கு வியாபாரம் அதிகம். அவர் முன்பே பல மூர்த்திகளைச் செய்து வைத்திருக்கிருர். வெறும் மண் பொம்மையா அவை? கருங்காலியிலும் சந்தன மரத்திலும் செய்த தெய்வங்கள்! அவரிடம் வாங்கின உருவங்களிற் பல, அஷ்டோத்தரமும் சகஸ்நாமங்களுமாகப் பெற்றுக் கர்ப்பூர ஆரத்தி வாங்கிக்கொண்டு தெய்வமாக விளங்குகின்றன. எத்தனையோ காட்சிகளில் அவருக்குப் பரிசும் பாராட்டும் கிடைத்திருக்கின்றன.

அவ்வளவுக்கும் காரணம்? நன்றியறிவோடு அந்தப் பெரியவரை நினைந்து பெருமூச்சு விட்டார் ஆசாரியார். அவர் கை வேலை செய்து கொண்டிருந்தது. எதிரே மிக மிக வியத்தற்குரிய ராஜராஜேசுவரியின் பிம்பம். அதைப் பார்த்துப் பார்த்து வேலை செய்துகொண் டிருக்கிருர். சிற்றுளி கொண்டு செதுக்குகிருர்; இழைக்கிருர். முன்னுலே இருக் கிறதைப் போலவே செய்ய வேண்டும் என்பது அவருடைய ஆசை. அப்படியானுல் முன் உள்ளது வேறு யாரேனும் செய்ததோ?

இல்லை, இல்லை, அதுவும் அவர் செய்ததுதான். அதை எதற்காக அவர் அடிக்கடி பார்க்கிருர்? அதே அச்சாக அமைய வேண்டும் என்பது அவர் எண்ணம். கலைஞனுக்குத் தான் படைக்கும் ஒவ்வொன் றிலும் ஒவ்வொரு தனியழகு பொலியும். தொழிலாளியோ எல்லா வற்றையும் ஒன்று போலவே செய்வான். தான் செய்ததையே பார்த்து மறுபடியும் அதே அச்சாகச் செய்யும்போது கலைஞனுக்கு அலுப்புத் தட்டிவிடும். வெறும் கைவேலை மட்டுந்தானே? புதிய கற்பனைக்கு இடம் இல்லாமற் போய்விடுகிறதல்லவா?

விசுவநாத ஆசாரியார் நிலையும் அப்படித்தான் இருந்தது. புதியதாக மற்ருெரு மூர்த்தியைச் செய் என்ருல் மிகவும் எளிதில் மகிழ்ச்சியோடு செய்துவிடுவார். இப்போது ஒரு நிர்ப்பந்தத்தில் அகப்பட்டுக்கொண் டிருக்கிருர். இம்மி பிசகாமல் அதேமாதிரி அமையவேண்டும்! ஏன்? அவராக வருவித்துக் கொண்ட சங்கடம் அது.

விசுவநாத ஆசாரியாருக்குத் தச்சு வேலைதான் இளமையில் அவர் தகப்பனர் சொல்லித் தந்தார். ஆனால் அவர் கையில் வெறும் தச்சுத் தொழிலாளியின் நரம்பு ஓடவில்லை. சிற்பக் கலைஞனுடைய ஆற்றல் அதற்கு இருந்தது. நாய், யானை, மனிதன் என்று உருவங்களை இளம்பிராயத்தில் செதுக்கத் தொடங்கினர். பிறகு தேரில் பதிக்க வேண்டிய உருவங்களை இளம்பிராயத்தில் உருவாக்கத் தொடங்கினர். பிறகு தேரில் பதிக்க வேண்டிய உருவங்களில் பெரும்படியான வேலைகளைச் செய்தார். அப்பால் நுட்பமான வேலைகளையும் செய்யத் தெரிந்துகொண்டார்.

அவருடைய பால்ய சிநேகிதர் பரமசிவ சாஸ்திரியார். ஒரே பள்ளிக்கூடத்தில் நாலு வகுப்புவரை ஒன்றாகப் படித்தார்கள். அதற்கு மேல் அந்தப் படிப்புக்கு முற்றுப்புள்ளி வைத்துவிட்டார்கள். சாஸ்திரியாருடைய தகப்பனர் பெரிய ஜோஸியர்; வடமொழியிலும் மந்திர சாஸ்திரங்களிலும் வல்லவர். அவர் தம்முடைய பிள்ளைக்கு மிலேச்ச பாஷை வேண்டாமென்று நிறுத்திக்கொண்டு தம்முடைய வித்தைகளைச் சொல்லிக் கொடுத்தார். பரம்பரை வித்தை எளிதிலே பரமசிவ சாஸ்திரியாருக்கு வந்துவிட்டது. பையன் எப்படியாகிலும் பிழைத்துக் கொள்வான் என்ற நம்பிக்கையுடன் அவருடைய தந்தையார் கண் மூடினர்.

இப்போது பரமசிவ சாஸ்திரியார் மந்திர சாஸ்திரத்தில் வல்லவர் என்று பெயர் எடுத்தார். என்ன எடுத்து என்ன பிரயோஜனம்? ஜோஸியத்தையும் மந்திரத்தையும் கட்டி அழுகிறவர்களைத்தான் சனி பகவான் அடைக்கலம் புகுந்து நிரந்தரமாக அவர்களிடம் இருந்துவிடுகிறனே! சாஸ்திரியார் குழந்தை குட்டிகளோடு வறுமையையும் வளர்த்து வந்தார்.

தம்முடைய நண்பர் விசுவநாத ஆசாரியார் இப்போது ஓரளவு செயலாக இருப்பது தெரிந்து அவருக்கு மகிழ்ச்சி உண்டாயிற்று. இரண்டு நண்பர்களும் அடிக்கடி கலந்து பேசுவார்கள். ஆசாரியார் ஏதோ தம்மாலான உபகாரத்தைச் சாஸ்திரியாருக்குச் செய்வதுண்டு. நேரே கொடுத்தால் அவர் வாங்கிக்கொள்ளமாட்டார் என்று, ஏதோ தகடென்றும் தாயத்தென்றும் பேர் சொல்லி வாங்கிக்கொண்டு பொருள் கொடுப்பார்.

ஒரு நாள் சாஸ்திரியார் தம் நண்பருக்கு ஒரு யோசனை கூறினர். "நீ இந்த மாட்டையும் குதிரையையும் யானையையும் செய்து விற்கிறயே! உனக்கோ திறமை இருக்கிறது. உன் உளி நீ நினைக்கிறதையெல்லாம் உருவாக்கி விடுகிறது. நல்ல தெய்வ பிம்பங்களாகச் செய்தாயானல் உனக்குப் புண்ணியமும் உண்டு; லாபமும் அதிகம் கிடைக்கும்" என்றார்.

"என்ன செய்ய வேண்டும்? அதைச் சொல்லுங்கள். செய்து பார்க்கிறேன்."

"ராமன், கிருஷ்ணன், முருகன் என்று பல மூர்த்திகளைச் செய்யலாம்; எவ்வளவோ அருமையான மூர்த்திகளின் தியான சுலோகங்கள் இருக்கின்றன. அவற்றில் உள்ளபடி நீ மூர்த்திகளைச் செய்தாயானல் பலர் விரும்பி வாங்கிக் கொள்வார்கள்."

"எனக்கு அந்த மூர்த்திகளின் லட்சணங்கள் தெரிய வகை இல்லையே!" என்று அங்கலாய்ப்புடன் சொன்னர் ஆசாரியார்.

"அதைப் பற்றி நீ ஏன் கவலைப்படுகிறய்? நான் அந்தத் தியான சுலோகங்களின் பொருளை விளக்கமாகச் சொல்கிறேன். நீ அதன் படியே விக்கிரகங்களைச் செய்யலாம்" என்று சாஸ்திரியார் கூறினர்.

அது முதல் விசுவநாத ஆசாரியார் முழுக்கத் முழுக்கத் தெய்வத் திருவுருவங்களையே சமைத்து வந்தார். பலர் அவருடைய பிரதிமைகளை வாங்கத் தொடங்கினர்கள். சந்தனத்தாலே செய்த திருவுருவங்களை வாங்கிப் பூஜை செய்தார்கள். இதனுல் ஆசாரியருடைய வருவாய் மிகுதியாயிற்று. தமக்கு இந்த வருவாய் வருவதற்குக் காரணம் சாஸ்திரியார் என்பதை அவர் மறக்கவில்லை.

சாஸ்திரியார் நவராத்திரியில் சிறப்பாகப் பூஜை செய்வார். அவருக்கு நல்ல சந்தன மரத்தில் ஸ்ரீ ராஜராஜேசுவரியின் உருவத்தைச் செய்து கொடுத்துப் பூஜை செய்யச் சொல்லவேண்டும் என்பது விசுவநாதருக்கு ஆசை. அவர்கள் ஊராகிய துத்திகுளம், கொல்லிமலை அடிவாரத்தைச் சார்ந்திருந்தது. கொல்லிமலையில் காட்டினிடையே சந்தன மரங்கள் வளர்ந்திருக்கும். அரசாங்கத்தாரின் கட்டுக் காவலுக்கு உட்பட்டிருந்தாலும் விறகு வெட்டி வருகிறவர்கள் சந்தனக் கட்டையையும் யாருக்கும் தெரியாமல் வெட்டிக்கொண்டு வந்து விற்றுவிடுவார்கள். விசுவநாத ஆசாரியார் நியாயமான முறையில் சந்தனக் கட்டைகளைக் கடைகளில் வாங்கி வேலை செய்தாலும் விறகு வெட்டிகளிடம் சில சமயம் மிக அருமையான வைரம் ஏறின கட்டை கிடைக்கும். அதனுல் அவர்களிடமும் வாங்குவார்; தவறுதான். ஆனுலும் வேறு வழி இல்லாமல் வாங்குவார். அதிகாரிகள் அவரைப் பொறுத்தமட்டில் ஒன்றும் செய்யாமல் இருந்தார்கள்.

ஒரு சமயம் ஒரு விறகுவெட்டி மிகவும் பெரிதாக வைரம் பாய்ந்ததாக ஒரு சந்தனக் கட்டையைக் கொண்டுவந்து கொடுத்தான். நல்ல பவுன் நிறம் என்று சொல்லவேண்டும். அதைக் கண்டவுடன் அவருக்கு ஆனந்தம் தாங்க முடியவில்லை. அவனிடம் ஒன்றும் கேட்காமலே ஐம்பது ரூபாயைத் தூக்கிக்கொண்டு வந்து கொடுத்துவிட்டார். அவன் பிரமித்துப் போனுன்.

நெடு நாட்களாகத் தாம் பட்ட கடனைத் தீர்த்துவிடலாம் என்ற ஆர்வம் அவருக்கு. இந்த நவராத்திரி வருவதற்குள் மிகவும் அழகாக, பூஜைக்குரியதாக ஸ்ரீ ராஜராஜேசுவரியின் திருவுருவத்தைச் செய்துவிட வேண்டும் என்ற ஆசை. அவர் தம் அகக் கண்ணில் அம்பிகையை உருவாக்கிவிட்டார். முன்பே சாஸ்திரியாரிடம் அம்பிகையின் திருக்கோலத்தைப்பற்றித் தெளிவாகக் கேட்டு அறிந்திருக்கிருர் அல்லவா?

"உன்னுடைய மற்ற வேலைகளையெல்லாம் கெடுத்துக்கொண்டு இதை ஏன் செய்கிருய்? ஒழிந்தபோது செய்து தரலாமே!" என்று சாஸ்திரியார் சொன்னபோது விசுவநாதர் கேட்கவில்லை.

"முன்பே செய்து தந்திருக்க வேண்டியது. இவ்வளவு நாள் நல்ல கட்டையாகக் கிடைக்கவில்லை. இப்போதுதான் கிடைத்தது. இந்தச் சமயத்தை விடலாமா? எப்படியும் இந்த நவராத்திரிக்கு அம்பாள் உங்கள் கையில் பூஜையை ஏற்றுக்கொள்ள எழுந்தருள்வாள்" என்று சொன்னுர்.

சாஸ்திரியார், "எல்லாம் அம்பிகையின் கிருபை" என்று பேசாமல் இருந்துவிட்டார்.

புரட்டாசி மாதம் பிறந்துவிட்டது. விசுவநாதர் ஒருவாறு உருவத்துக்கு எல்லை கோலி வேலை செய்து வந்தார். அவயவம் அவயவமாக நுட்பமாக வடித்தெடுத்தார். சாஸ்திரியார் ஒவ்வொரு நாளும் தம் நண்பர் வீடு வந்து பார்த்துப் போவார். அவருக்கும் அது நன்ருக நிறைவேறவேண்டும் என்ற ஆசை. அம்பிகை உருவாகி வந்தாள். "உன் கை விசுவகர்மனுடைய கை, அப்பா. இந்த விக்கிரகத்துக்கு ஒரு லட்சார்ச்சனை பண்ணிவிட்டேனுனல் இந்தச்

சந்நிதானத்தில் பேய்கள் கூத்தாடும்; எத்தனை கச்சிதமாக இருக்கிறது உன் வேலை!'' என்று சாஸ்திரியார் பாராட்டுவார்.

''எல்லாம் நீங்கள் காட்டும் வழிதான்'' என்பார் நண்பர்.

ஒருவாறு திருவுருவம் பூர்த்தியாயிற்று. சாஸ்திரியார் அதைப் பார்த்துப் பார்த்துப் பூரித்துப் போனார். நவராத்திரிக்கு இன்னும் எட்டே நாட்கள் இருந்தன. இடையில் சாஸ்திரியாக வெளியூர் செல்ல வேண்டி நேர்ந்தது. ''அந்த விக்கிரகத்தை இப்போதே கொடுத்துவிடு. நான் வீட்டில் வைத்திருக்கிறேன். நவராத்திரி ஆரம்பத்தில் ஆவாகனம் முதலியவை செய்யலாம்'' என்றார்.

''இல்லை, இல்லை. சில சில்லறை நகாசு வேலைகள் இருக்கின்றன. அவற்றைச் செய்துவிட்டு நீங்கள் ஊரிலிருந்து வந்தவுடன் தந்துவிடுகிறேன்'' என்றார் விசுவநாதர்.

''என்னவோ அம்பாள்தான் உனக்கு மேன்மேலும் நன்மையை உண்டுபண்ண வேணும். எவ்வளவோ வேலைகளைக் கெடுத்துக்கொண்டு வரும்படியை விட்டுவிட்டு எனக்காக இதைச் செய்ய ஆரம்பித்தாய். இவ்வளவு நாளும் மெனக்கெட்டது போதாதென்று இன்னமும் வேலை இருக்கிறதென்கிறாய். உனக்கு நான் என்ன செய்யப் போகிறேன்?''

''அந்தக் கேள்வியை நான் கேட்க வேண்டும். நீங்கள் அல்லவா இந்தப் புதிய வழியை எனக்குக் காட்டிக் கொடுத்து முன்னுக்கு வரச் செய்தீர்கள்? அதற்கு என் உடம்பைச் செருப்பாகத் தைத்துப் போட்டாலும் போதாதே!''

''சரி, சரி, போதும் உன் பேச்சு! நான் ஊருக்குப் போய்விட்டு வருகிறேன்.''

அவர் ஊருக்குப் போயிருந்தபோதுதான் விசுவநாதருக்கு அந்தச் சோதனை நேர்ந்தது. ஒரு நண்பர் அவர் வீட்டுக்கு வந்திருந்தார். அவர் தம்முடன் ஒரு செல்வரையும் அழைத்து வந்தார். அவர் வீட்டில் அம்பிகை பூஜை செய்கிறவராம். அப்போது ராஜராஜேசுவரி முழுப் பொலிவோடு உருவாகி விட்டாள். அந்தத் தெய்வ உருவைத் தம் நண்பருக்கும் அவருடன் வந்த செல்வருக்கும் காட்டினார் மரச் சிற்பி. அதைக் கண்டவுடன் செல்வர் வியப்பே வடிவமானார். அதைப் பார்க்கப் பார்க்கத் தம் கண்ணை வாங்க முடியவில்லை. ''இது என்ன விலையாகும்?'' என்று கேட்டார்.

''விற்பதற்குச் செய்தது அல்ல இது'' என்றார் ஆசாரியார்.

''ஏன் விற்கக்கூடாது?'' என்று செல்வர் கேட்டார்.

ஆசாரியாருக்கு என்னவோ தோன்றியது: ''இதற்குப் பணம் கொடுக்கிறவர் யாரும் இல்லை'' என்று கூறினார்.

''என்ன அப்படிச் சொல்கிறீர்கள்? அப்படி என்ன விலை ஆகப்போகிறது? எவ்வளவு விலையானாலும் நான் கொடுத்துவிடுகிறேன்.''

ஆசாரியார் உடனே, ''ஆயிர ரூபாய்'' என்றார். அந்தத் தொகையை அவர் கொடுப்பதாவது என்று எண்ணினார். ஆனால் செல்வரோ சளைக்கவில்லை. ''இவ்வளவுதானா? இந்தாருங்கள், இருநூறு ரூபாய் முன்பணம். பாக்கியை ஊருக்குப் போய் அனுப்பி இந்த மூர்த்தியை வாங்கிக் கொள்கிறேன்'' என்று சொல்லி இரண்டு நோட்டை நீட்டினார்.

விசுவநாதருக்கு இப்போது திகைப்பு உண்டாகிவிட்டது. ஆயிர ரூபாய்! விட மனசு வரவில்லை. இதைக் கொடுத்துவிட்டு, இதேமாதிரி வேறு ஒன்று செய்துவிட்டால் போகிறது!

'நவராத்திரிக்கு இன்னும் மூன்றே நாட்கள் இருக்கின்றன. அதற்குள் எப்படிச் செய்வது? ஏதோ பைத்தியக்காரத்தனமாகப் பேசி அகப்பட்டுக்கொண்டோமே!' என்று ஓர் எண்ணம் அவருக்குத் தோன்றியது. ஆயிர ரூபாய் என்ற நினைவு அவரைச் சற்றே சபலத்துக்கு உள்ளாக்கியது.

''என்ன யோசிக்கிறீர்கள்?'' என்று செல்வர் கேட்டார். அதற்குள் கலைஞர் ஒருவிதமாக முடிவுக்கு வந்து விட்டார். ''இந்த ரூபாயை நீங்களே வைத்துக் கொள்ளுங்கள். நவராத்திரி இன்னும் மூன்று நாட்கள் இருக்கின்றன. நவராத்திரியன்று காலையில் பணத்துடன் ஆளை அனுப்புங்கள். விக்கிரகத்தைக் கொடுத்தனுப்புகிறேன். அதற்குள் உங்கள் மனசு மாறினால் நீங்கள் இதை வாங்கிக்கொள்ள வேண்டாம்'' என்று சிற்பி சொன்னபோது, ''இல்லை, இல்லை; இப்போதே எடுத்துக்கொண்டு போகிறேன். இந்த நண்பர் எனக்குப் பிணையாக இருப்பார். ஊர் போனவுடன் பணத்தை அனுப்பிவிடுகிறேன்'' என்று பரபரப்பாகப் பேசினார் செல்வர்.

''இன்னும் சில சில்லறை வேலைகள் இருக்கின்றன; அவற்றையும் செய்து அனுப்புகிறேன். நீங்கள் கவலையில்லாமல் ஊருக்குப் போங்கள்'' என்று சொல்லி அவரை அனுப்பினார் கலைஞர்.

அவருக்கு இந்த மூன்று நாட்களில் அதே போன்று வேறு ஒன்றைச் செய்துவிடலாம் என்ற தைரியம். சாஸ்திரியார் நவராத்திரி ஆரம்ப நாள் காலையில்தான் வரப்போகிறார் என்று தெரிந்திருந்தமையால் அதற்குள் செய்துவிடலாம் என்ற துணிவு ஏற்பட்டது. செய்யத் தொடங்கிவிட்டார். இரவும் பகலும் விடாமல் செய்தார். ஒன்று போலவே ஒன்று செய்வது எளிதென்று நினைத்தார். ஆனால் அது எவ்வளவு கடினமானது என்று அந்தக் கலைஞருக்கு அப்போது தெரிந்தது. அது உயிர் இல்லாத யந்திரத்தின் வேலையல்லவா?

நடுநடுவே, தர முடியாது என்று செல்வருக்குச் சொல்லி அனுப்பிவிடலாமா என்று தோன்றியது. ஆயிர ரூபாய் நினைவு அதை மாற்றியது. ''நான் அதை விற்று விட்டேன். அடுத்த நவராத்திரிக்கு வேறு செய்து தருகிறேன்'' என்று தம் நண்பரிடம் சொல்லலாமே என்று நினைத்தார். அப்படிச் சொன்னால் சாஸ்திரியார் சிறிதும் வருத்தப்படமாட்டார். நல்ல விலைக்கு விற்றது பற்றி மகிழ்ச்சியே அடைவார். ஆனால்—அந்த மகோபகாரியை ஏமாற்றலாமா? அது தருமமாகுமா? அதைவிட ஆயிர ரூபாய் பெரிதா? அவருடைய சகாயம் இல்லாவிட்டால் இந்தப் பொருள் ஏது? புகழ் ஏது? அலைமோதும் உள்ளத்தோடு அவர் வேலை செய்து வந்தார். கடுமையான வேலை, வேலை. அதைவிட அவர் உள்ளத்தில் உண்டான போராட்டம் பின்னும் கடுமையாக இருந்தது. எப்படியாவது மற்றொரு திருவுருவத்தைச் செய்து அந்தத் தர்மசங்கடத்தினின்றும் விடுதலை பெற வேண்டும் என்று தீவிரமாக உழைத்துவந்தார்.

## 2

அவர் கை வலித்தது, கண் வலித்தது, எல்லாவற்றுக்கும் மேலாக நெஞ்சு வலித்தது; மார்பு அன்று; அவர் உள்ளந்தான் வலித்தது. 'பணப் பேயின் வலைப்பட்ட பாவி!' என்று தம்மையே திட்டிக்கொண்டார். இரண்டு நாட்கள் ஆயின. இன்னும் இருபத்துநான்கு

மணி நேரத்தில் இரண்டாவது ராஜராஜேசுவரி உருவாக வேண்டும். வெறி பிடித்தவரைப் போல் வேலை செய்தார்.

வீட்டில் உள்ளவர்கள் எல்லாம் அவர் நிலையைக் கண்டு அஞ்சினார்கள். ''என்ன இது? சரியாகச் சோறு தின்னாமல் கண்ணை மூடாமல் வேலை செய்தால் உடம்பு எதற்காகும்?'' என்றார்கள். அவர் ஒன்றையும் காதில் வாங்கிக் கொள்ளவில்லை. மூர்த்தண்யமாக அவர் ராஜராஜேசுவரியை உருவாக்கிக்கொண்டிருந்தார். ஒவ்வொரு மணியாகக் காலம் கழிந்துகொண்டிருந்தது. அவர் வேலையின் வேகம் அதிகமாயிற்று.

அன்றைக்கு மறுநாள் நவராத்திரி. மாலை ஆறு மணி ஆயிற்று. ஒருவிதமாக உருவம் வந்துவிட்டது. கொஞ்சம் நுட்பவேலைகள் பாக்கி. அவற்றைச் செய்ய மூன்று மணி நேரம் பிடித்தது. எல்லாம் ஆனபிறகு இரண்டு திருவுருவங்களையும் அருகருகே வைத்துப் பார்த்தார் கலைஞர். இரண்டும் ஒன்றாக இல்லை. மற்றவர்களின் கண்ணுக்கு வேறுபாடு தோன்றாது. ஆனால் அவர் கண்ணுக்கு - நுட்பமான கலைக் கண்ணுக்கு - வேறுபாடு தோன்றியது. ஒன்று அசல்; மற்றொன்று நகல். ஒன்று உயிரின் படைப்பு; மற்றொன்று கையின் படைப்பு. ஒன்றுக்கு அன்பு விலை; மற்றொன்றுக்கு அழியும் பணம் விலை.

இதுவரையில் அவர் எதை யாருக்கு அளிப்பது என்பதைச் சிந்திக்கவே இல்லை. பணம் கொடுக்க முன்வந்தவர் பார்த்தது முதல் திருவுருவத்தை. அதையே கொடுத்துவிடுவதாகத்தான் அப்போது எண்ணியிருந்தார். ஆனால் இப்போது - இதை ஒப்புக்கொண்ட பாவத்தைவிட மகாபாவம் மூலத்தைக் கொடுப்பது!

மறுநாள் நவராத்திரி ஆரம்பம். கலைஞர் இரண்டையும் தனித் தனியே மறைத்து வைத்தார். செல்வருடைய ஆள் ஆயிர ரூபாயுடன் வந்தார். இரண்டாவது செய்த உருவை அவனிடம் அனுப்பினார். அதுவரையில் அவருக்கு ஒன்றும் ஓடவில்லை. அவன் கையில் அதை கொடுத்தபிறகு பெருமூச்சு விட்டார்.

அவன் கொடுத்துச் சென்ற ஆயிர ரூபாய் அவர்முன் கிடந்தது. அவருக்கு இப்போது அதைத் தொடவும் அருவருப்பாக இருந்தது. எப்படியோ அதை எடுத்து வைத்தார் பெட்டியில். சாஸ்திரியார் வீட்டுக்கு ஆள் அனுப்பி வந்துவிட்டாரா என்று விசாரித்தார். வந்தது தெரிந்து தம்முடைய அன்புக் காணிக்கையை எடுத்துக்கொண்டு அவர் வீட்டை நோக்கிப் புறப்பட்டார்.

சாஸ்திரியார் வீட்டுக்குப் போய் அட்டைப் பெட்டியிலிருந்து அம்பிகையை ஒரு பீடத்தில் எடுத்து வைத்தார் கலைஞர். அதைக் கண்டவுடன் சாஸ்திரியாருக்கு உடம்பு புல்லரித்தது. சாஷ்டாங்கமாக விழுந்து அதை நமஸ்கரித்தார். எழுந்தவர், என்ன தோன்றிற்றோ, கலைஞர் காலில் விழப்போனார். ''என்ன சாமி இது! நான் பாவி! எனக்கா நமஸ்காரம்?'' என்று சொல்லிக்கொண்டே அவர் காலில் விழுந்தார் கலைஞர்.

''நீ தெய்வாம்சம் பெற்றவன், அப்பா. அம்பிகையை உன் அகக்கண் தரிசித்திருக்க வேண்டும். இல்லாவிட்டால் இப்படி அமையாது'' என்று சொல்லும்போதே அவர் கண்ணில் நீர் மல்கியது.

எழுந்த கலைஞருக்கு ஏதோ படபடவென்று வந்தது. விடை பெற்றுக்கொண்டு வீடு சென்றார். சென்று படுத்துவிட்டார். ஜுரம் வந்துவிட்டது. மூன்று நாள் அகாத ஜுரம். அப்போது, ''ரூபாய், பாவி; பணப் பேய்!'' என்று என்ன என்னவோ பிதற்றினார். சாஸ்திரியார் அவரை வந்து பார்த்துப் போனார். வீட்டில் உள்ளவர்கள்,

''அப்போதே சொன்னேமே! கேட்டீர்களா?'' என்று அங்கலாய்த்தார்கள். நான்காவது நாள் அவருக்குச் சிறிதே குணமாயிற்று. எழுந்தார். சாஸ்திரியார் வீடு சென்று பார்த்தார். அங்கே அம்பிகை, உலகமாதா, சாஸ்திரியாருடைய பூஜையில் கொஞ்சி விளையாடிக் கொண்டிருந்தாள். ''உன் படைப்பைப் பார்த்தாயா?'' என்று கேட்டார் அந்தப் பெரியவர்.

''அப்படிச் சொல்லாதீர்கள். நீங்கள் இதற்குத் தெய்வக் கலையை ஊட்டிய மகாமுனிவர். நான் ஆசாபாசத்தில் அகப்பட்டு உழலுபவன்.''

''அப்படிச் சொல்லாதே, அப்பா, நீ அவதார புருஷன்.''

மேலே அவர் புகழுரையைக் கேளாமல் புறப்பட்டுவிட்டார் கலைஞர். அன்றே அவசரமாக வெளியூர் புறப்பட்டுப் போனார்.

## 3

அன்று வெள்ளிக்கிழமை; நவமி. சரஸ்வதி பூஜை. வழக்கம் போல் பூஜைக்கு ஏற்பாடு செய்துகொண்டிருந்தார் சாஸ்திரியார். அவருடைய மனைவி அருகில் இருந்து புத்தகங்களை அடுக்கினாள்.

''அம்பிகை எவ்வளவு மூர்த்திகரத்துடன் இருக்கிறாள்! லட்ச ரூபாய் கொடுத்தாலும் இப்படிக் கிடைக்குமா? அரண்மனையில் ராஜ ராஜாக்களிடம் இருக்க வேண்டியவள் இந்த ராஜராஜேசுவரி. இந்த ஏழையிடம் அகப்பட்டுக்கொண்டிருக்கிறாள். அங்கே இருந்தால் அழகான மண்டபம் ஒன்று செய்து அதில் எழுந்தருளச் செய்து பூஜிப்பார்கள். பரமதரித்திரனாகிய நான் எங்கே போவேன்!'' என்று சொல்லி வாய் மூடவில்லை. ''சாமி!'' என்ற குரல் கேட்டது. ஆவலோடு விசுவநாத ஆசாரியார் ஓர் ஆளின் தலையில் ஒரு பெரிய அட்டைப் பெட்டியை வைத்துக்கொண்டு வந்தார்.

''என்ன அப்பா, புதிய சீர்?'' கேட்டார் சாஸ்திரியார்.

''அம்பாள் உத்தரவு பண்ணினாள்'' என்று சொல்லிக் கொண்டே அட்டைப் பெட்டியைக் கீழே வைக்கச் செய்து பிரித்து உள்ளே இருப்பதை எடுத்து வைத்தார்.

என்ன ஆச்சரியம், இது! வெள்ளியும் தங்கமும் இழைத்துச் செய்த அற்புத மணிமண்டபம்! அம்பிகை எழுந்தருள்வதற்கு இல்லையே என்று ஏங்கினாரே அந்த மண்டபம்.

''அம்பிகை இந்த மண்டபத்தில் எழுந்தருளி இருக்கட்டும்'' என்று சொல்லும்போது கலைஞர் தொண்டை கரகரத்தது.

''இது கனவா?'' என்றார் சாஸ்திரியார்.

''இல்லை, நனவுதான். இதை ஏற்றுக்கொண்டு என்னை மன்னித்து விடுங்கள்.''

''மன்னிப்பா?''

சாஸ்திரியார் விழித்தார்.

தம் உள்ளத்தில் முள்ளாகக் குத்திய ஆயிர ரூபாயைக் கொண்டு இந்த மணிமண்டபத்தை வாங்கி வந்து கொடுத்த பிறகே இலை போட்டுச் சோறு சாப்பிடுவது என்ற விரதத்தை அந்தக் கலைஞர் மேற்கொண்டிருந்தார் என்பதை அவர் உணர்ந்தால் மேலும் எப்படி விழிப்பாரோ!

—அக்டோபர், 1957

# மலர்க் காட்சி

நா. பார்த்தசாரதி

திருமணத்துக்குப் பின்பு உதவியாசிரியர் சந்திரசேகரனை அப்போது தான் கவி கமலக்கண்ணன் முதல் தடவையாகச் சந்திக்கிறார்.

''உன் திருமணத்துக்கு வர முடியவில்லை, அப்பா. என்னை மன்னித்துவிடு. வாழ்த்து அனுப்பியிருந்தேனே; வந்ததோ?'' என்று விசாரித்தார் கமலக்கண்ணன்.

''அதனால் பரவாயில்லை, ஸார். உங்கள் அற்புதமான வாழ்த்துப் பாடல் கிடைத்தது. இப்போது நான் வந்த காரியம்....'' என்று பேச்சை இழுத்து நிறுத்தினார் உதவியாசிரியர்.

கவி கமலக்கண்ணன் புன்னகை பூத்தார்.

''புரிகிறது சந்துரு. ஆண்டுமலருக்கு ஏதோ கவிதை வேண்டுமென்று எழுதியிருக்கிறாய். நீ என்னப்பா இன்னும் பழைய மாதிரியே ஆண்டுமலர் என்று ஊர் சுற்றிக்கொண்டிருக்கிறாயே! புதிதாக இப்போதுதான் கல்யாணமாகி யிருக்கிறது. எங்கேயாவது ஒரு மாதம் 'ஹனி மூன்' போய்வரக் கூடாதோ?''

''எங்கே ஸார் நமக்கு அதற்கெல்லாம் ஒழிகிறது? மலரை நன்றாகக் கொண்டு வந்தாலே பெரிய நிம்மதிதான். இந்தத் தடவை மலருக்கு எப்படியும் உங்கள் கவிதை கிடைத்தாக வேண்டும்.''

கவிஞர் பெருமூச்சு விட்டார். சிறிது நேரம் அமைதியாக மோட்டு வளையை வெறித்துப் பார்த்தபடி இருந்தார். உதவியாசிரியருக்கு ஒரு பதிலும் கிடைக்கவில்லை.

கவி கமலக்கண்ணனுக்கு வயசு ஐம்பத்திரண்டு இருக்கும். அவர் நைட்டிகப் பிரம்மசாரி. நீல அங்கியும் தாடி வளர்ந்த முகமுமாகத் தாகூர் மாதிரி காட்சி அளித்தார். நாற்பது வயசுக்குள் உலக நாடுகளெல்லாம் சுற்றிப் புகழ் பரப்பி வந்திருந்தார்.

கமலக்கண்ணன் கவிஞர் மட்டுமல்ல; தத்துவ ஞானி; நல்ல அழகர்; கம்பீரமான தோற்றம் உடையவர்.

''சந்துரு, இந்தக் கோடையில் உதகமண்டலம் போய்விட்டு வந்தபின் இரண்டு மூன்று மாதமாக நான் எழுதுகோலையே தொடவில்லை. உதகமண்டலத்தில் இருக்கும்போது கடைசியாக நான் எழுதிய கவிதையை உனக்குத் தரலாம். ஆனால் அது அரைகுறையாக இருக்கிறது. மீண்டும் அதை நிறைவாக்க என்னால் இயலாதே!''

''எப்படியாவது அதை நிறைவு செய்து கொடுங்களேன்'' என்று சந்துரு வேண்டுகோளுக்குக் கவியிடமிருந்து பதில் இல்லை.

கவிஞர் விழிகளிலும் முகத்திலும் ஏக்கம் தேங்கி நிற்க மோட்டு வளையை மீண்டும் பார்த்தார். அங்கில்லாததும், எங்கிருப்பதென்று தெரியாததும், ஆனால் எங்கோ நிச்சயமாக இருப்பதுமான ஏதோ ஒன்றைத் தேடித் துழாவுகிற பார்வையாக இருந்தது அது. அப்படிப் பார்த்துக்கொண் டிருந்த கவிஞர் தொடர்ந்து அடுத்தடுத்து நெட்டுயிர்த்தார். உதவியாசிரியர் மறுபடியும் தூண்டிக் கேட்கலானார்: ''ஒரு வாரம், பத்து நாள் ஆனாலும் பரவாயில்லை. நீங்கள் அந்தக் கவிதையை முடித்துக் கொடுப்பதாக இருந்தால் நான் காத்திருந்து வாங்கிக் கொள்கிறேன்.''

''அந்தக் கவிதையை முடிக்க இப்போது என்னால் முடியுமா என்று எனக்கே சந்தேகமாக இருக்கிறது. சந்துரு, அந்தக் கவிதை எழுதத் தூண்டுதல் தந்த சூழ்நிலையை நான் மறுபடியும் அடைந்தால் ஒருவேளை என்னால் அதை முடிக்க இயலும். சில அழகான கண்கள், சில அற்புதமான புன்னகைகள், சில எழில் வாய்ந்த முகங்கள், சில உள்ளம் உருகும் காட்சிகள் இவற்றைப் பார்த்துத் தூண்டுதல் பிறக்கும்போது தான் என் மனத்தில் கவிதைக்குரிய சொற்கள் விளைகின்றன. அல்லாத நேரங்களில் என் மனநிலம் தரிசாக வறண்டுவிடுகிறது.''

நாடெல்லாம் தெய்வமெனக் கொண்டாடும் கவி, சிறு குழந்தை போல் வெள்ளைத்தனமாகத் தம் சொந்த ஆற்றாமையை வெளியிடுவதைக் கேட்டு மனம் உருகினார் உதவியாசிரியர். கவிஞரின் அழகிய கண்களில் எதையோ - கண், வாய், சிரிப்பு, மூக்கு, முகம் என்று ஒவ்வொன்றாக நினைத்து ஒன்று சேர்த்து யாரையோ - நினைவுபடுத்திக் கொள்ளத் தவிக்கும் துடிப்புத் தெரிந்தது. ''என்னால் முடியாது, சந்துரு. நினைப்புக்குள் அநுமானம் பண்ணிக் கொணர முடியாத அழகு அது. பார்க்கும்போது என் மனம் துள்ளியது. நினைக்கும்போது வர மாட்டேனென்கிறது.''

கவிஞரின் கண்களில் நீர் மல்கிற்று. நாத் தழுதழுத்தது.

''சந்துரு!''

''உங்கள் மனம் ஏதோ கஷ்டப்படுகிறது.''

''அப்படி ஒன்றும் இல்லை, சந்துரு. ஆனால் உன்னை ஒரு கேள்வி கேட்கிறேன். கூசாமல் பதில் சொல்வாயா?''

''என்ன? கேளுங்களேன்.''

''இந்த ஐம்பத்திரண்டு வயசுக் காலத்தில் எப்போதாவது ஒரு பெண்ணைப் பார்த்ததும் மனம் பித்தாகிக் கல்யாணம் பண்ணிக் கொண்டு விடவேண்டுமென்ற துடிப்பு எனக்கு உண்டாகி யிருக்குமா? உண்டாயிற்று என்றால் நம்புவார்களா?''

''நீங்கள் கல்யாணம் பண்ணிக்கொள்ளக் கூடாது என்று யாரும் சட்டம் போடவில்லையே! நீங்களாகத்தானே ஏதோ கொள்கை வகுத்துக்கொண்டு துறவி மாதிரி வாழ்ந்து வருகிறீர்கள்?''

''தவறு.. சந்துரு. அன்று உதகமண்டலத்தில் அந்தப் பெண்ணைப் பார்க்கிறவரைதான் என் மனமும் எண்ணங்களும் துறவி போல் இருந்தன. இப்போது அப்படி இல்லையப்பா: நான் என் மனத்தில் அவளை நினைவுகளாகவும் கனவுகளாகவும் சுமந்து ஏங்கிக் கொண்டிருக்கிறேன். வெட்கத்தை விட்டு இதை உன்னிடம் சொல்லத்தான் வேண்டியிருக்கிறது: இதோ இந்த டைரியில் மே மாதம் பதினைந்தாம் தேதியிலிருந்து இருபதாம் தேதி வரையில்

உள்ளவற்றைப் படித்துப் பார்; சொல்கிறேன்!'' என்று மேசை இழுப்பறையைத் திறந்து ஒரு டைரியைச் சந்திரசேகரனிடம் நீட்டினார், கவி கமலக்கண்ணன். சந்திரசேகரன் அதை வாங்கி விரித்துப் படிக்கத் தொடங்கினார். அவருக்கு வியப்புத் தாங்கவில்லை.

உதகமண்டலம்—மே மாதம்—15-ஆம் தேதி—இரவு எழுதியது:

இன்று என் மனம் எல்லையற்ற உற்சாகத்தை அடைந்திருக்கிறது. மாலையில் இவ்வூர் 'பொடானிகல் கார்டனில்' நடைபெற்ற மலர்க் காட்சிக்குப் போயிருந்தேன். 'ஃபிளவர் ஷோ'வைப் பற்றி நண்பர்கள் வானளாவப் புகழ்ந்து பெருமை பேசிய அருமை இன்று இங்கு அதைப் பார்த்த பின்பல்லவா தெரிகிறது? அடடா! உலகத்தில் இத்தனை விதமான நிறமும், இத்தனை வகைப் பூக்களும் இருக்கின்றன என்று இன்று மொத்தமாகத் தெரிந்துவிட்டது. வண்ணக் களஞ்சியம் என்பதா? இயற்கையின் பலவேறு நிறப் புன்னகைகள் என்பதா? என்ன அழகு! என்ன அழகு! இன்றைப் பூக் காட்சியில் என் மனத்தைத் துள்ளச் செய்து பெருமித மூட்டும் வேறொரு நிகழ்ச்சியும் நடந்ததே!

வகை வகையான பூக்காட்சி முழுவதும் சுற்றிப் பார்த்த வியப்பில் மனம் லயித்து அந்தப் பூங்காவின் புல்வெளியில் உட்கார்ந்தேன். சுற்றிலும் நீலமலைகளின் முடிகளில் மேகம் நகரும் அழகு தெரிந்தது; நிறங்களின் கொள்ளையாய், எழில்களின் வகைகளாய் அந்த மலர்க் காட்சிகளையும் மரங்களையும் காணும்போது என்னுடைய கவிதைகள் இவற்றை எல்லாம்விட அப்படி ஒன்றும் பெரியன அல்ல என்பதுபோல் சிறுமைப்பட்டு ஏங்கினேன். மனத்தில் ஒரு வறட்சி. 'நான் பெரிதாக எதையுமே செய்துவிடவில்லை' என்கிற மாதிரி மூளித்தன்மை குடைகிறது.

'இயற்கை, பொருள்களைப் படைத்து அவற்றுக்கு விதவிதமான அழகுகளைத் தந்தது. அந்தப் பொருள்களைக் கொண்டுதான் மொழிக்குச் சொற்கள் கிடைத்தன. அந்தப் பொருள்களின் அழகுகளைக் கொண்டு தான் சொற்களின் அர்த்தங்களுக்கு அழகு ஏற்பட்டது. சொற்களும் அர்த்தங்களும் அவற்றுக்கு அழகுகளும் ஏற்பட்டிருக்காவிட்டால் நீ பாடியிருக்க முடியுமா? நீ சொற்களின் தரகன். சொற்கள் இயற்கையின் நாமங்கள். உன்னால் முடிந்தது அவற்றை இணைத்ததுதான்' என்று உள்ளத்தில் ஏதோ குத்திக் காட்டுகிறது. தாங்கிக் கொள்ள முடியாத ஏக்கத்தினால் தகிக்கிறேன். தாழ்வு மனப்பான்மையினால் சுருங்கிச் சிறுத்து ஒடுங்குகிறேன்.

ஒவ்வொன்றாக நினைத்துப் பார்க்கும்போது அந்தத் தாழ்வு மனப்பான்மை அதிகமாகிறது. மேலும் நினைக்கிறேன்: 'இந்த மலைகளின் சூழலில் இப்போது இங்கே யாரும் என்னுடைய கவிதைகளின் புகழில் ஏங்குவதாகத் தெரியவில்லையே! அவ்வளவு ஏன்? நினைப்பதாகவோ, பேசுவதாகவோகூடத் தெரியவில்லையே! கமலக்கண்ணன் உலகம் போற்றும் கவிதைகளைப் பாடி என்ன பயன்? அப்படி ஒரு கவி இந்தத் தமிழ்நாட்டில் இருப்பதையே மறந்துவிட்டுப் பூக்காட்சியின் விந்தைகளைப் பார்த்து இந்தத் தலைநகரம் முழுவதும் புகழ்கிறது; மயங்குகிறது. இவ்வளவு பெரிய பூங்காவில், இவ்வளவு பெரிய மலர்க் காட்சியில் இத்தனை மனிதர்களுக்கு நடுவே இவ்வளவு நேரம் சுற்றினேனே! 'கவி கமலக்கண்ணன் தமது 'வேனில் மலர்கள்' என்ற பாடல் தொகுதியில் பாடியிருப்பதெல்லாம் இந்தப் பூக்காட்சியைப் பார்த்ததும் நினைவு வருகிறதே!' என்று எவனாவது ஒருவன்கூட இன்னொருவனிடம் வாய் தவறியும் பேசினதாகக் காதில் விழவில்லையே! கடந்த ஒரு வாரமாக இந்த நீலகிரியின் எழில் வாய்ந்த பகுதிகளில் சுற்றித்

திரிகிறேனே! தொட்டபெட்ட சிகரத்தில் நின்றபோது, குதிரைப் பந்தய மைதானத்தில் கும்பலிடையே நின்றிருந்தபோது, கடை வீதிகளில், பூங்காக்களில் எங்காவது எவனாவது ஒருவன்கூடக் கவி கமலக்கண்ணனைப் பற்றி ஒரு வார்த்தை பேசவில்லையே! கவிகளின் நினைவே வேண்டியிராத இடமா இது? மலைகளைப்பற்றி, மேகங்களைப் பற்றி, பூக்களையும் மரங்களையும்பற்றிக் கமலக்கண்ணன் விதவிதமாகப் பாடிப் புகழ்பெற்றும் என்ன பயன்? இயற்கையின் அழகுகளுக்கும் வார்த்தைகளின் பொருளுக்கும் நடுவேயுள்ள சொற்களின் தரகன்தானா நான்? எனக்கென்று வேறு தனிப் பெருமையே இல்லையா? ஒரு வாரமாக இருந்த ஏக்கம் மேலும் இருக்கிறது.

இவ்வாறு எண்ணிப் புண்பட்டுப்போன மனத்துடன் பூக்காட்சி நடக்கிற பூங்காவின் புல்வெளியில் அயர்ந்து சாய்கிறேன். அந்தச் சோர்வான சமயத்தில் பின்புறம் புல்வெளியின் மூலையில் கும்பலாக அமர்ந்திருந்த பெண்களில் யாரோ ஒருத்தியிடமிருந்து என் பெயர் அமுதஒலியாய்க் கேட்கிறது. பிள்ளைப் பருவத்துச் சிறு கிள்ளைபோல் மிழற்றுகிறாள் ஒரு பெண்.

''போடி, நீ என்னவோ கவிதை எழுதுவதாகப் பிரமாதமாகப் பீற்றிக்கொள்கிறாயே! மலைகளையும் மேகங்களையும் பூக்களையும் பற்றித் தம் 'வேனில் மலர்கள்' என்ற கவிதைத் தொகுதியில் பாடியிருப்பதைப் போல் இனி யாருமே பாட முடியாது.''

ஆர்வத்தோடு இவ்வாறு கூறிய இனிய குரலுக்கு உரியவளை நான் திரும்பிப் பார்க்கிறேன். முகம் தாமரையாய், கண் கருங்குவளையாய், வாய் செங்குமுதமாய், நாசி எள்ளுப் பூவாய்ப் பூக்காட்சியில் மற்றொரு பூக்காட்சியென அந்த இளம் பெண் மண்டியிட்டு உட்கார்ந்திருக்கிறாள்; இவ்வளவு அழகுகளுக்கு இருப்பிடமாய் ஒரு பெண் இருக்க முடியும் என்ற உண்மையையே இன்றுதான் புரிந்துகொண்டவன் போல் அவளைப் பார்க்கிறேன். பச்சைப் புல் தரையில் மஞ்சள் வாயில் புடைவை அணிந்து சற்று நளினமுறச் சாய்ந்து மண்டியிட்ட கோலத்தில் மண்ணில் விளையாட வந்த கந்தர்வப் பெண் போல் வீற்றிருக்கிறாள். நல்ல உயரம். நல்ல சிவப்பு. அவள் சிரிக்கும்போது முகம் முழுவதும், மூக்கிலுள்ள வைர பேஸரி, காதிலுள்ள வைரத் தோடுகள், எல்லாமே சேர்ந்து அழகாய்ச் சிரிப்பதுபோல் ஒரு பிரமை உண்டாகிறது.

'கவி கமலக்கண்ணனுக்கு இத்தனை அழகாக ஒரு ரசிகையா?' என் மனம் பொங்குகிறது; பூரிக்கிறது. இப்படி ஒரு பெண்ணை மணம் செய்துகொண்டால் என்ன? என் மனத்தில் கவிச் சொற்கள் கனிந்து துடிக்கின்றன. நான் ஐம்பத்திரண்டு வயசிலிருந்து இருபத்திரண்டு வயசு இளைஞனாகிவிடுகிறேன்.

கண்பூவாய்க் கைபூவாய்க் கமலச்செவ் வாய்பூவாய்ச்
செம்பவழ இதழ்நடுவிற் சிரிக்கின்ற நகைபூவாய்ப்
பெண்பூத்துப் பொலிகின்றாள் பிறழ்மீன்போல் நெளிகின்றாள்

என்று அங்கேயே அரை குறையாகத் - தப்போ, சரியோ - தோன்றிய வரிகளைக் குறித்துக் கொள்கிறேன். தத்துவஞானியும், அப்பழுக்குச் சொல்ல முடியாத துறவியுமான கவி கமலக்கண்ணனுடைய மனம் ஒரு பெண்ணின் அழகில் நெகிழ்கிறது.

உதகமண்டலம், மே மாதம், 16-ஆம் தேதி இரவு:—

இது என்ன ஆச்சரியம்! நேற்று 'பொடானிகல் கார்டனி'ல் பார்த்த பெண் எங்கே இருக்கிறாளோ, யாரோ என்று நான் தவித்த தவிப்பைத் தீர்ப்பவள் போல் எதிர்த்த அறையிலிருந்து வெளிவருகிறாளே! நான் தங்கியிருக்கும் இதே விடுதியில் எதிர் அறையில்தானா

அந்தப் பெண்கள் கூட்டமும் தங்கியிருக்கிறது? ஏதோ கல்லூரி மாணவிகள் சேர்ந்து உல்லாசப் பயணம் வந்திருக்கிறார்கள்போல் இருக்கிறது.

எதிர் அறையில் அவளுடைய குரல் ஒலிக்கும் போதெல்லாம் கமலக்கண்ணனின் புகழ் பேசுவதாகவே ஒலிக்கிறது. கமலக்கண்ணனுக்கு எத்தனை அழகான ரசிகை!

என் மனம் மலையத்தனை உற்சாக உயரத்தில் ஏறி நிற்கிறது. நேற்றும் இன்றும் உதகமண்டலம் மிக அழகாக மாறிவிட்டது. இந்த இயற்கையழகுக்கு நடுவில் கவிஞனாகிய என்னைப்பற்றியும் நினைப்பவர்கள் இருக்கிறார்கள். நான் சொற்களின் தரகன் அல்ல; கவிகளின் நாயகன். இதோ இந்த இரவின் அமைதியில் எதிர்த்த அறையில் அந்தப் பெண் தன் தோழிகளுக்கு என் 'வேனில் மலர்களை' இசை வெள்ளமாய்ப் பாடிக்கொண்டிருக்கிறாள். நான் எத்தனை பாக்கியசாலி! மாதுளை மொட்டுப் போன்ற அவள் உதடுகளில் எழும் இசையின் சொற்கள் என்னுடையவை அல்லவா? அந்தச் சொற்களை அப்படிக் கவிதையாய் இணைத்தவன் நான் அல்லவா? இப்படி ஒரு பெண்ணை மணந்துகொண்டு அவள் பாடிக் காட்ட வேண்டுமென்ற ஒரே நோக்கத்துக்காகவே லட்சோபலட்சம் கவிதைகளை நான் எழுதலாமே! உம்.. இந்த வயசுக்குமேல் அது சாத்தியமாகுமா?

உதகமண்டலம், மே மாதம், 17-ஆம் தேதி இரவு:—

நான் மகா யோகக்காரனாகி விட்டேன். இன்று அந்தப் பெண் தயங்கித் தயங்கி என் அறைக்குள் நுழைந்து கமலப் பூக்கரங்களைக் கூப்பி வணங்கினாள்; பேசினாள்: "முதலில் நேற்று உங்களைப் பார்த்த போதே நீங்கள்தாம் கவி கமலக்கண்ணனாக இருக்க வேண்டுமென்று சந்தேகமுற்றேன். இன்று விடுதி மானேஜரிடம் விசாரித்தபோது என் சந்தேகம் தீர்ந்தது. எனக்கு உங்கள் கவிதை மிகவும் பிடிக்கும்."

"உட்கார், அம்மா. நீ நேற்றிரவு என் 'வேனில் மலர்'களை நன்றாகப் பாடினாய். நானும் கேட்டேன்."

நீண்ட நேரம் உட்கார்ந்து பேசிவிட்டுப் போனாள் அந்தப் பெண். என் மனத்தில் உல்லாசத்தை நிரப்பிவிட்டுப் போனாள் என்பதுதான் பொருத்தமான வாக்கியம். நாளைக்காவது அன்று மலர்க்காட்சியில் கிறுக்கின அவளைப் பற்றிய கவிதையை நிறைவேற்றி முடித்துவிடவேண்டும். தத்துவம், தெய்விகம், இயற்கை நீக்கிப் பெண்ணழகைப் பற்றிக் கமலக்கண்ணன் பாடும் முதற் கவிதை இதுவாகத்தான் இருக்கும்.

உதகமண்டலம், மே மாதம், 18-ஆம் தேதி இரவு:—

இன்று பேசிக்கொண்டிருந்தபோது அந்தப் பெண் ஒரு கேள்வி கேட்டாள்: "கவிதைகளை எழுதும் அநுபவங்கள் உங்களுக்கு எப்படிக் கிடைக்கின்றன?"

நான் வழக்கமாக எல்லாருக்கும் கூறுகிற பதிலைச் சொன்னேன். அவள் குறும்புச் சிரிப்பும், குறும்புப் பார்வையுமாக என்னை நோக்கி, "என்னைப்பற்றி ஒரு பாட்டு எழுதிக் கொடுங்களேன், பார்க்கலாம்" என்று வெள்ளைத்தனமாகக் கேட்டுவிட்டாள்.

"உன்னைப் பற்றி நேற்றே பாடியிருக்கிறேன்" என்று பதிலுக்குச் சொன்னதும் அவளுக்கு வியப்பாகிவிட்டது. அவளைப்பற்றி நான் பாடிய சில வரிகளைச் சொல்லி அந்த வியப்பைப் பின்னும் அதிகமாக்கினேன். அப்போது அவள் முகம் இணையிலா நாண அழகு சுரந்து நகைத்தது. என் மனம் பூரித்தது.

உதகமண்டலம், மே மாதம், 19-ஆம் தேதி இரவு:—

இன்று காலை அந்தப் பெண்கள் குழு ஊருக்குப் புறப்பட்டு விட்டது.

புறப்படுமுன் அவள் என் அறைக்கு வந்தாள். அவளுடைய கைகளில் என் 'வேனில் மலர்கள்' என்ற கவிதைப் புத்தகம் இருந்தது.

''நாங்கள் இன்று ஊர் புறப்படுகிறோம். உங்கள் நினைவுக்கு அறிகுறியாக இந்தப் புத்தகத்தின் முதற் பக்கத்தில் நீங்கள் என்னைப் பற்றிப் பாடிய அந்தப் பாட்டை மட்டும் எழுதிக் கையெழுத்திட்டுத் தருவீர்களா?''

அவள் விருப்பப்படியே 'கண்பூவாய்' அன்ற அந்தப் பாட்டை அப்படியே அரை குறையாக எழுதிக் கையெழுத்திட்டுத் தந்தேன். வணங்கி நன்றி சொல்லிவிட்டுப் போனாள். இதுவரை எங்குமே என்றுமே கண்டிராத அந்த எழில் முகத்தைக் கூடியவரை மனத்தில் பதித்துக்கொள்ள முயன்றேன். மனம் எதற்கோ ஏங்குகிறது.

உதகமண்டலம், மே மாதம், 20-ஆம் தேதி இரவு:—

போயும் போயும் இது என்ன ஊர்? இங்கே குதிரைப் பந்தயத்தைப் பற்றிக் கவலைப்படுகிற மனிதர்கள் இருக்கிறார்கள். தொட்டபெட்டா சிகரத்தையும், 'பொடானிகல் கார்ட'னின் பூ வகைகளைப் பார்த்து வாய் அங்காந்து ரசிக்கிறவர்கள் இருக்கிறார்கள்.

ஆனால் கமலக்கண்ணன் எங்கிற கவியைப் பற்றி நினைக்கிறவர்கள்கூட இந்த ஊரில் இருப்பதாகத் தெரியவில்லை. மனமே வறண்டு விட்டது. நாளைக் காலையில் இங்கிருந்து ஊருக்குப் புறப்பட்டுவிட வேண்டியதுதான்.

உதவியாசிரியர் சந்திரசேகரன் டைரியின் பக்கங்களை மூடிவிட்டு நிமிர்ந்தார். கவிஞரை நோக்கிக் கூறினார்: ''ஸார், உங்களிடம் பாட்டு எழுதிக் கையெழுத்து வாங்கிக் கொண்டுபோன இந்தப் பெண்ணை எனக்கு நன்றாகத் தெரியும். அவள் இப்போது இந்த ஊரில் தான் இருக்கிறாள். அவளைப் பார்த்து நீங்கள் இந்த அரைகுறைப் பாடலை நிறைவு செய்ய முடியுமானால் இன்று மாலையே அவளிடம் உங்களை அழைத்துப் போகிறேன்.''

இதைக் கேட்டுக் கவிஞரின் முகம் மலர்கிறது; கண்ணில் ஒளி பாய்கிறது.

''நிஜமாகவா, சந்துரு?''

''சத்தியமாக. நீங்கள் சாயங்காலம் பாருங்களேன்.''

''அந்தக் கந்தர்வ சுந்தரி எனக்குக் கவிதை தந்தவள். அவளை நான் மறுபடி காண முடிந்தால் ஒரு கவிதை என்ன? உன் ஆண்டு மலருக்கு ஒரு காவியமே எழுதித் தருகிறேன், அப்பா.''

''மாலையில் தயாராக இருங்கள். வந்து அழைத்துப் போகிறேன்'' என்று கூறி, சந்திரசேகரன் போய்விட்டார்.

கவிஞர் மகிழ்ச்சி பொங்கும் மனநிலையோடு காத்திருந்தார். ஆறு மணிக்குச் சந்திரசேகரன் வந்து அழைத்துப் போனார். அந்த வீட்டுக் கூடத்தில் கவிஞரை உட்கார்த்திவிட்டு உள்ளே போய் அவளை அழைத்து வந்தார் உதவியாசிரியர். அதே மஞ்சள் வாயில் புடைவை. வைர பேஸரியும் தோடுகளும் சேர்ந்து சிரிப்பது போல் இதழ்களில் சுரந்த நகை. மெட்டியும் கொலுசும் தாளமிட அன்ன நடை நடந்து கவிஞருக்கு முன் வந்து கைகூப்பி வணங்கினாள் அந்தப்

பெண். வணங்குமுன் கையில் இருந்த 'வேனில் மலர்கள்' புத்தகத்தைக் கவிஞருக்கு முன்பிருந்த மேஜையில் வைத்தாள்.

வியப்போடு கவிஞர் அதன் முதல் பக்கத்தைப் பிரித்தார். அவருடைய கையெழுத்து அன்று எழுதிக் கொடுத்தபடியே முத்து முத்தாக இருந்தது. அவள் இனிய குரலில் அவரை நலம் விசாரித்தாள்.

''பேசிக்கொண் டிருங்கள். காபி கலந்து கொண்டு வருகிறேன்'' என்று கூறி அவரையும் உதவியாசிரியரையும் விட்டுவிட்டு உள்ளே மறைந்தாள். கையில் 'வேனில் மலர்க'ளைப் புரட்டிக்கொண்டே சந்துருவிடம் கேள்விகள் கேட்கலானார் கவிஞர். அவர் குரலில் உல்லாச வெள்ளம்.

''சந்துரு, இந்தப் பெண் கல்லூரியில் படிக்கிறாளா?''

''படித்து முடித்துவிட்டாள்.''

''இவள் மாதிரி அழகியை நீ எங்காவது பார்த்திருக்கிறாயா, சந்துரு?''

''இல்லை.''

''இந்தப் பெண் உனக்கு உறவோ?''

''உறவுதான்; மிகவும் நெருங்கிய உறவு.''

சிறிது நேரம் இருவரிடையேயும் மௌனம் நிலவுகிறது. கவிஞர் கண்களில் ஒரே தாகம். அழகின் வெள்ளத்தையே கண்டு விட்டதுபோல் முகம் மலர்ந்திருக்கிறது அவருக்கு. சந்துரு அவரிடம் மீண்டும் கேட்கிறார்; ''பாட்டை நாளைக்கே முடித்துக் கொடுத்து விடுவீர்களா, ஸார்?''

''ஆகா! கட்டாயமாக. அதிருக்கட்டும். இந்தப் பெண் உனக்கு நெருங்கிய உறவு என்றாயே; என்ன உறவு?''

சந்துரு அவருடைய இந்தக் கேள்விக்குப் பதில் கூறாமல் அவர் முகத்தையே பார்த்தார்.

''என்ன அப்படிப் பார்க்கிறாய் சந்துரு? உறவைச் சொல்வது சாத்தியமில்லையானால் வேண்டாம்.''

''சொல்வது சாத்தியந்தான், ஸார்.''

''பின் ஏன் தயங்குகிறாய்?''

''இவள் என்னுடைய மனைவி!''

கவிஞரின் முகம் பேயறை வாங்கியதுபோல் வெளிறுகிறது. அவர் கையில் இருந்த 'வேனில் மலர்கள்' நழுவிக் கீழே விழுகிறது. உடம்பே கூசிக் கூனிக் குறுகி, அணுவாய்த் தேய்ந்துவிட்டதுபோல் சிறுத்துக் குன்றிவிடுகிறது. நிமிர்ந்து சந்துருவைப் பார்க்கிறார். ஒரு புகழும் இல்லாத அந்தச் சாதாரண உதவியாசிரியர் நிஷ்களங்கமாகச் சிரிக்கிறார்.

(நவம்பர், 1960)

# நீண்ட நகங்கள்

**ஆர். சூடாமணி**

திலகமிட்டுத் திருத்திய முகத்தைக் கண்ணாடியில் பார்த்துக்கொண்டபோது அது கனவு உருவமாக மங்கியிருந்தது. அலங்காரம் செய்துகொள்ளும் லயிப்பில் பொழுது இருட்டிக்கொண்டு வந்ததைக் கூடவா உணரவில்லை? அவளுக்கே சட்டென்று வெட்கமாகிவிட்டது. கூடவே, ஒரு சுகமான பெருமிதம். லயிக்கத் தக்க அழகு அல்லவா அவளுடையது?

எழுந்து விளக்கை ஏற்றினாள். நீண்ட குழல் விளக்கு இரண்டு தரம் கண் சிமிட்டிவிட்டுப் பொருந்தி ஒளிரலாயிற்று. வெளிச்சத்தில் அறை முழுவதும் உருவம் பெற்றுவிட்டது.

மஞ்சு மீண்டும் கண்ணாடியின்முன் அமர்ந்து கூந்தலின் பூப்பிறையைக் கைகளால் தொட்டுக்கொண்டு தலையை இலேசாக இருபுறமும் திருப்பி எல்லாம் சரியாக இருக்கிறதா என்று பார்த்துக்கொண்டாள். நீளமாக வளர்ந்திருந்த விரல் நகங்கள் 'பாலிஷ்' கொண்டு பளபளத்தன.

கண்ணாடி தேர்வு கொடுத்துவிட்டது.

எழுந்தபோதுதான் ஜன்னலைக் கவனித்தாள். முன்மாலைப் பொழுதில் காற்றுக்காகச் சீலையை ஒருபுறமாய்த் தள்ளியிருந்தது இன்னமும் அப்படியே இருக்கிறதே! இப்போது, இருட்டியபின் வெளிச்சம் போட்ட அறை இருட்கடலிடையே ஒரு தீவாக, அருகிலுள்ள வீடுகளிலிருந்தும் மேன்மாடங்களிலிருந்தும் தெரிந்துவிடுமே! சீலையை அவள் இழுத்து மூடினாள். விரல்கள் கம்பிகளில் உராய்ந்தபோது ஆள்காட்டி விரலின் நகம் நுனியில் லேசாகப் பிளந்துகொண்டது. விரல்களில் புழுதி ஒட்டியது.

புழுதி! ஜன்னல் கம்பிகளைத் துடைத்து நாலைந்து நாள் ஆகவில்லையா? வேலைக்காரி இரண்டு வாரம் முன்பு திடீரென்று நின்றுவிட்டாள். வீடு பெருக்கிப் பாத்திரங்கள் துலக்குவதுபோன்ற மற்றப் பணிகளும் அவளைச் சேர்ந்துகொண்ட மும்முரத்தில் சில சமயம் ஜன்னலைத் துடைக்க நேரம் இல்லாமல்தான் போய்விடுகிறது.

ஆனால் இனிக் கவலை இல்லை; நாளைக் காலையிலிருந்து புதிய வேலைக்காரி வந்துவிடுவாள். நான்கு நாள் முன்னதாக நிச்சயமாயிற்று. அவள் தோழி சுமி அனுப்பிவைக்கிறாள். சுமியின் வீட்டில் பணிபுரியும் ஆயாவின் மகள். காளியாத்தா என்று பெயர். இளம் பெண். ஓடியாடிச் சுறுசுறுப்பாக வேலை செய்வாள்.

மஞ்சு விரல்களைப் பழைய துண்டில் துடைத்துக்கொண்டு விளக்கை அணைத்துவிட்டு வெளியே வந்தாள். ஹாலில் இருந்த அண்ணாமலை அவளைக் கண்டதும் தன் வலது மணிக்கட்டில் இருந்த கடிகாரத்தைக் குறும்பாகக் குனிந்து பார்த்தான்.

''இன்னும் ரெண்டரை நிமிஷம் கழிச்சு வந்திருந்தாயானால் அலங்காரத்துக்குச் சரியாய் முக்கால் மணியாகியிருக்கும்.''

''இந்தக் கணக்கைப் பண்ணிக்கிட்டிருந்த நேரத்தில் நீங்க ஏதாவது புஸ்தகம் படிச்சிருந்தாலும் உருப்பட்டிருக்கலாமே!''

''நவீன சிந்தாமணியா?''

அவள் சிரித்துக்கொண்டே வாசலுக்கு வந்தாள். அங்கே—

இளமை விஞ்சும் ஒயில்மிக்க மாநிற மேனி. சீராக உடுத்திய சுத்தமான நூல் சேலை, ரவிக்கை. பின்னிய சடையின் முடியில் ஒற்றைச் செவ்வந்தி. முகத்தில் மென்னகையின் அளவுக்கான காந்தம். ஒருகணம் மஞ்சுவுக்கு அடையாளமே புரியவில்லை. கூர்ந்து வினவிய கண்கள் பிறகு அகன்றன.

''அட! காளியாத்தாவா?''

''கும்பிடறேம்மா.''

''எங்கே வந்தே?''

''நாளைக் காலையிலேருந்துதானே வேலைக்கு வரணும்? அதை இன்னொருவாட்டி கேட்டு நிச்சயப்படுத்திக்கலாம்னுதான் வந்தேன்.''

அழகு கண்முன் இளநகை புரிந்தபோது மஞ்சுவின் குரல் அவசியமில்லாமலே கடுகடுத்தது.

''இதிலே நிச்சயப்படுத்திக்க என்ன இருக்கிறது? அன்னிக்கே தீர்மானமாய்ச் சொல்லிட்டு வந்தேனில்ல? ரெண்டு வாரமாய் ஆள் இல்லாமல் திண்டாடறப்ப வேலைக்கு வான்னு உன்னை விளையாட்டுக்காக் கூப்பிடறேன்?''

''அப்ப நாளைக்குக் கருக்கலோடு வந்திடறேம்மா.''

''உம். அப்புறம் இன்னொரு விஷயம் காளியாத்தா. சம்பளத்தை உன்கிட்டயே கொடுக்கவா, இல்லே உன் ஆயாகிட்டே தரணுமா?''

''யார்கிட்டே வேணும்னாலும் கொடுங்கம்மா. என்னை எல்லாரும் காளின்னுதான் கூப்பிடறாங்க. நீங்களும் அப்படியே கூப்பிடுங்க.''

அவள் போனபின் மஞ்சு காரில் ஏறிக்கொள்ள இருந்தவள் பின்னால் கணவன் வராமையைக் கண்டு மறுபடியும் ஹாலுக்குள் நுழைந்தாள். அங்கும் அண்ணாமலையைக் காணவில்லை. பிறகு உள் அறையில் அவனைக் கண்டுபிடித்தாள்.

''எங்கே, உள்ளே வந்துவிட்டீங்க? கச்சேரிக்குக் கிளம்ப நேரமாகலே?''

''உன்னைப் பார்க்க யாரோ சிநேகிதி வந்திருக்கவே நான் இந்தப் பக்கம் வந்துட்டேன். அதுக்குள் போய்ட்டாளா?''

''சிநேகிதியாவது! ரொம்ப அழகுதான். அவள்தான் நாளையிலேருந்து நம்ம வீட்டில் வேலை செய்யப் போகிற வேலைக்காரி.''

''என்ன, வேலைக்காரியா? அவளா?''

அந்த நேர்த்தியான ஆடைகள், அந்தச் சீரான தோற்றம்; அவள் உதட்டை மடித்தாள். ''ஏன், அவளைப் பார்த்தால் வேலைக்காரி மாதிரி தெரியாம மகாராணி போலவா இருக்குது?''

''அதுக்குச் சொல்லலே மஞ்சு; சாதாரணமாய் வேலைக்காரின்னு.. நம்ம பழைய வீராயி இல்லையா? கொஞ்சம் வயசு சென்றவ, அந்த வர்க்கக் கட்டாய் உடுத்திய அழுக்குச் சேலை. எண்ணெய்ச் சிக்குப் பிடிச்ச சொக்காய். பறட்டைத் தலை....''

''நீங்க பெரிய 'ஸ்னுப்.'' அவனை அப்படி ஏதோ ஒரு காரணம் பற்றிக் கண்டிப்பதில் இது என்ன திடீர் வேகம்? ''என் சிநேகிதியாம்! நல்லாச் சொன்னீங்க ஒரு பேச்சு.''

''இப்ப ஸ்னுப் நீயா, நானு?''

''சரி சரி, வாங்க. இப்படியே தாமதிச்சுக்கிட்டிருந்தால் நாம் சரியாய், பாகவதர் மங்களம் பாடற நேரத்துக்குத்தான் போக முடியும்.''

அவள் வேகமாக நடந்தாள். அவனும் தொடர்ந்தான்;

''ஒரு விஷயம் மஞ்சு. மூணும் வீட்டு நடேசனில்லே? அவனும் இதே கச்சேரிக்குத்தான் போறதாச் சொன்னுன். அவனையும் நம்மோடு காரில் கூட்டிக்கிட்டுப் போறேன்னு சொல்லியிருந்தேன்; உனக்கு ஒண்ணும் தடை இல்லையே?''

''எப்படியும் அந்தக் கேள்விக்கு இப்போ காலம் கடந்துபோச்சு, இல்லையா?''

நடேசன் வந்தான். அண்ணுமலை அவனுக்காக மோட்டாரின் முன்புறக் கதவைத் திறந்து ஒதுங்கி நின்றுகொண்டான்.

ஏதோ அசைந்தது. பட்டாடையும் பிறை மலரும் சீற்றிட மஞ்சு முன்புற இருக்கையில் அமர்ந்தாள்.

நடேசனுக்கு அசடு தட்டிவிட்டது. கையைக் கடித்துக்கொண்டு பின்னுக்கு நகர்ந்தபோது அவனுல் நிமிர்ந்து அண்ணுமலையைப் பார்க்க இயலவில்லை.

அலையாக எழுந்த எரிச்சலை அண்ணுமலை உதடுகளுள் அடக்கிக் கொண்டான். கதவை அறைந்து மூடிய வேகத்தில்மட்டுமே அந்த எரிச்சலின் சாயை. எதற்கோ ஈடு செய்வதுபோல் அதிக அக்கறை யுடன் பின்புறக் கதவைத் திறந்து பிடித்துக்கொண்டான், நடேசன் ஏறி உட்கார.

இயக்கச் சக்கரத்தைப் பற்றி அவன் காரோட்டத் தொடங்கிய போது மஞ்சு எவ்விதச் சங்கடமுமின்றிச் சாய்ந்து உட்கார்ந்து தலையைப் பின்புறம் திருப்பிப் புன்னகையுடன், ''என்ன நடேசன், இந்தப் பாடகரைப்பற்றி உங்க கருத்து என்ன?'' என்றுள். நட்போ சுற்றமோ, உடன் வருவது யாராக இருப்பினும் சரி, அண்ணுமலையின் பக்கத்திலுள்ள அந்த இருக்கையில் எப்போதும் அவள்தான் அமர்வாள்; அது அவள் இடம்.

காளி வளைந்து நின்று தரையைப் பெருக்கிக்கொண் டிருந்தாள்.

குனிந்த நிலையினுல் பின்னே மேலேறியிருந்த சேலை விளிம்பின் கீழே வடிவாய் அமைந்த மெல்லிய கணுக்கால்கள் தெரிந்தன. அதில் லேசான பழுப்பு நிற ரோமங்கள் சூரிய ஒளிப் பதிவில் பொற் கோடாக மின்னி அந்த இளங்கால்களின் பொலிவுக்கு மெருகு பூசின

மஞ்சு பார்த்துக்கொண்டே இருந்தாள். இப்படியும் ஒருவனப்பா? கணுக்கால்கள்மட்டுமா? அவை ஒரு சிறிய அளவுகோல். வடிவத்தில் ஒவ்வொரு பகுதியுமே எழிலின் ஆதார சுருதியினின்றும் எழும் சுரத் தெறிப்புகள்.

அழகு மட்டுந்தானா? அவள் வேலை? அதுவும் நேர்த்திதான். தரையில் முகம் பார்த்துக்கொள்ளலாமே! வீராயி இருந்தபோது பீரோ அடியிலும் மேஜைக் கால்களிடையேயும், சுவர் மூலைகளிலும் தேளும் பாம்பும் இருந்தால்கூட ஆச்சரியப்பட முடியாது. இப்போதோ? முனங்கில் ஒரே சுத்தம், ஒரே அழகு. வயது இருபது இருக்கலாம் அவளுக்கு. இன்னும் மணமாகாத பெண்.

''அடி காளியாத்தா, எத்தனை நல்லா இருக்குதடி உன் வேலை!'' பொய்யற்ற ரசனையில் ஒருகணம் பாராட்டுத் ததும்பிவிட்டது.

காளி அதை ஏற்கும் பாவனையில் நிமிர்ந்து நின்று புன்முறுவல் பூத்தாள். அழகின் செந்தளிர்போல, நாணத்தில் சிவந்த முறுவல்.

சட்டென்று மஞ்சுவினுள் ஏதோ எரிச்சல். அந்த அழகு, பார்வையில் இடறியது. அவள் கண்களை விலக்கிக்கொண்டாள்.

''உங்களுக்கு ஆபீசுக்கு நேரமாகலையா?'' வேலைக்குக் கிளம்பிக் கொண்டிருந்த கணவனைக் கவனிக்க அவள் சென்றாள்.

''எல்லாம் ரெடிதான். கைக்குட்டையைத்தான் எங்கேயோ வச்சிட்டுத் தேடறேன். உள்ளேயிருந்து ஒண்ணு எடுத்துக் கொடு மஞ்சு. எனக்கு நேரமாகுது.''

''எங்கே தேடறீங்க நீங்க? ஆகாசத்திலேயா? இடுப்பு வளையாதாக்கும்! இதோ இங்கே மூலையில் விழுந்து கிடக்குது பாருங்க.'' கலகலத்த சிரிப்புடன் அவள் அந்தக் கைச்சீலையை எடுத்துச் சொடுக்கி மடித்து அவன் சட்டைப் பையில் செருகினாள்.

''தாங்க்ஸ் மஞ்சு: பழைய வேலைக்காரி இருந்திருந்தால் இப்படிக் கீழே விழுந்த குட்டையை நேரடியாய் உபயோகத்துக்கு எடுத்துக்க முடியுமா? இதுக்குள் கசமாகியிருக்குமே! இந்தப் பொண் சுத்தமாய்ப் பெருக்கறு? தரையில் அழுக்கு இல்லே!''

அவன் சென்றபின் அவள் சிறிது நேரம் அப்படியே தலை குனிந்து நின்றிருந்தாள். வெறித்த பார்வை விரிந்தது. மூலையில் கிடந்த சின்னஞ் சிறு பொருள். அதற்காகவே தேடினால்கூடக் கிடைத்திருக்காது. அக்கறையாய்ச் சென்று அதைப் பொறுக்கி எடுத்தாள்.

''காளியாத்தா!''

''வந்தேம்மா.''

ஓடிவந்து நின்றவளை அவள் விழித்து நோக்கினாள்:

''இதோ பாத்தியா? ஊகா முள். வீடெல்லாம் இறைஞ்சு கிடக்குது? புதுத் துடைப்பம் வாங்கினால் முதல்லே நல்லாத் தட்டி உதறுகிறதில்லையா? இப்படி ஒரு சுத்தமில்லாத வேலையா? சே! சே!'' அவள் கோபமாக அங்கிருந்து சென்றாள்.

அவள் முகம் கழுவிக்கொண்டிருந்தாள். அண்டாவில் சேமித்து வைத்திருந்த நீரைக் கைகளினால் அள்ளி முகத்தில் அறைந்துகொண்டபோது நிலத்தில் தெறித்து விழுந்த நீர்த்துளிகள் உடைந்த கண்ணாடித் துண்டுகள்போல மின்னின.

அறைக்குத் திரும்பியபோது அங்கு அண்ணாமலை தன் நிஜார்ப் பையிலிருந்து பர்சை எடுத்துக்கொண்டிருந்ததைப் பார்த்தாள்.

''எதுக்கு இப்போ பர்ஸ்?''

''வாசலில் ஏழெட்டுப் பேர் வந்து நிக்கறுங்க, மஞ்சு. ஏதோ நெசவாலையிலே வேலை பார்த்தவங்களாம்; லாக் அவுட் ஆகி இப்ப வேலை இல்லாமல் சோத்துக்குத் திண்டாடறுங்களாம். மொத்தம் பதினெரு குடும்பமாம். இப்படி வீடு வீடாய்க் கையேந்தி நிக்கற நிலைமை இப்போ, பாவம்!''

''எத்தனை தரப்போறீங்க?''

''ஏதோ முடிஞ்சது.''

''நான் தெரிஞ்சுக்கக்கூடாதா?'' குரலில் கத்தி முனை.

''பத்து ரூபாய்.''

''அதிகந்தான்; பரவாயில்லை, கொடுங்க.''

அநுமதியா? தன் உரிமையை நினைவுறுத்தினற்போன்ற ஒரு மனத் தோற்றமா?

பூத்துவாலையால் முகத்தையும் பின்கழுத்தில் நனைந்திருந்த கூந்தல் கொக்கிகளையும் ஒற்றி ஒற்றித் துடைத்துக்கொண்டவாறே சாளரத்தின் அருகில் சென்று நின்றபோது வீட்டிலிருந்து அந்த ஏழெட்டுப் பேர் திரும்பிச் சென்றது தெரிந்தது. வேட்டிகளின் இடையே மின்னலிட்டுக்கொண்டு போகும் இரண்டு சேலைகள்.

''ஓ! இப்போ புரியறது எனக்கு உங்க தாராளம்?'' என்று கோணலாகச் சிரித்தாள்.

அவனுக்குத்தான், பாவம், புரியவில்லை!

வேறொரு நாள்: இருவருமாகத் திருமண வரவேற்புக்குச் சென்று மீளும்போது வாடகைக் கார் கிடைக்கவில்லை. மௌண்ட் ரோடில் சாலையைக் கடக்க ஒரு முனையின் நிலவறைப் பாதை வழியே இறங்கினர்கள். உடன் வந்துகொண்டிருந்தவர்களில் ஓர் இளமங்கை. அக்குளின்கீழே நீண்ட கட்டைகள். படி இறங்கும்போது கட்டை தடுக்கிவிட்டதா? அல்லது தவருகக் காலை எட்டி வைத்துவிட்டாளா? கணநேரம் கடந்திருந்தால் படிகளில் உருண்டிருப்பாள். அண்ணுமலை சட்டென்று பிடித்துக்கொண்டான். பெண் என்றும் இடை என்றும் பார்க்கிற நேரமா அது? கருணையின் நேரம். கருணைக்குப் பால்பிரிவு ஏது? மெய்ப்பொருளைப்போல் அது ஆணுமல்ல, பெண்ணுமல்ல, அலியுமல்ல.

ஆனல் மஞ்சுவின் முகம்? அது பெண் முகம்.

''தாங்க்ஸ், ஸார்!''

''பரவாயில்லை.''

மேல்பாதைக்கு இருவருமாக வந்துவிட்ட பிறகுகூட அவள் கண்களில் வேண்டுமென்றே மிகைப்படுத்திக்கொண்ட ஒரு கலகலப்பு:

''பாவம் அந்தப் பொண்ணு! இல்லே?''

''ஆமாம்; விழுந்திருப்பா.''

''நீங்கதான் விழவிடாமப் பிடிச்சுட்டீங்களே!''

''நல்ல வேளை, இல்லே மஞ்சு?''

''இல்லாமே பின்ன என்ன? நீங்க அப்படி ஆபத்பாந்தவராய்ப் பக்கத்திலே வந்துக்கிட்டிருந்தது எத்தனை நல்லதாய்ப் போச்சு!''

''பாவம், உலகத்திலே என்னவெல்லாம் இருக்குது பார்.''

''கூடவே உங்கள்மாதிரி கருணை வள்ளல்களும் இருக்கிறுங்க ளில்ல? பின்னே என்ன கவலே? சட்டுனு லாகவமாய்த் தாவிப் பிடிச் சீங்களே, ரொம்ப அநுபவப்பட்டாப்பலே!''

''இல்லேன்னு விழுந்து மண்டையை உடைச்சுக்கிட்டிருப்பாள்.''

''பாவம்! அதுவும் அவ்வளவு அழகான மண்டை! இல்லேங்க? இளம் பெண்ணு, சும்மாவா? எத்தனை நாசுக்காய் நன்றி சொன்னுள் உங்களுக்கு?''

''ரொம்ப அலண்டுபோயிட்டாள்.''

''அட! அதையெல்லாங்கூடக் கவனிச்சீங்களா? தேவலேயே! ரொம்ப அழகான பொண்ணு இல்லே? ஏங்க என்னைவிட இன்னும் அழகுதானே அவள்?''

அவனுக்கூடப் புரிந்துவிட்டதா? ஒரு தரம் மனைவியைக் கூர்ந்து பார்த்துவிட்டு அவன் மௌனமாக மேலே நோக்கினுன். உயரத்தில் ஒளி எழுத்துக்களில் செய்திகள் ஓடிக்கொண் டிருந்தன.

''என்ன பேசாம இருக்கீங்க?''

''நியூஸ் ப்ளாஷ் பார்க்கறேன், தெரியலே?''

''ஒருவேளை அந்த வெளிச்சத்தில் வேறே ஏதானும் அழகான காட்சி கூடத் தெரியுதோ?''

இதுபோல் எத்தனையோ நிகழ்ச்சிகள்.

காலையில் காபியுடன் அவள் கணவனின் அறையை நெருங்கிய போது உள்ளே அவன் குரல் கேட்டது.

''இந்தா காளி, ஜன்னலின் நீளப் படுதாவை ஒதுக்கி வளையத்தில் மாட்டி வை; நேத்து அனல் தாங்காம இழுத்து மூடினேன். அப்படியே இருக்கு இன்னும்.''

அவள் நுழைந்தபோது அண்ணுமலே மேஜையருகில் உட்கார்ந்து செய்தித்தாள் படித்துக்கொண் டிருந்தான். அவள் காபியை மேஜைமேல் வைத்தாள். காளி ஜன்னலோரம் நின்று, விலக்கிச் சுருக்கிய படுதாக் கொசுவங்களை ஒரு கையில் பற்றி இன்னொரு கையால் அவற்றுக்கு வளையமாக ஒரு கண்ணுடி வளையை ஏற்றிக்கொண் டிருந்தாள்.

காலேயொளி கடலாகப் பெருகி வந்த ஜன்னலின் அருகில் அந்தக் கடலில் எழும் அமுத கலசம்போல் அந்தப் பெண் நின்றிருந்த தோற் றம்! சீராக அணிந்த உடைகளிலும், சீவிப் பளபளக்கும் முடியிலும், ஏன், திரும்பியிருந்த சதைப்பற்றுன முதுகுப் பகுதிக்கு மேலாகப் பச்சை ரவிக்கையின் சிறு கிழிசலில்கூட....எதிலும் தனிக் கவர்ச்சிதான். அந்த முகத்திலும் முறுவலிலும் ஆயிரம் கவிதைகளைப் படித்துக்கொள்ள லாமே! அழகின் வயது இருபதா?

அந்த முதல் நாள் அவன் சொன்னது மஞ்சுவுக்கு நினைவு வந்தது: வேலேக்காரி என்றுல் பறட்டைத் தலே, அந்த வர்க்கக் கட்டு, எண்ணெய்ச் சிக்கு இறங்கிய சொக்காய், கொஞ்சம் வயது சென்றவளாக..வயது சென்றவளாக...

அப்படியே ஏன் இருக்கவில்லே புது வேலேக்காரியும்?

''டீ காளியாத்தா, வீட்டு வேலேயெல்லாம் அப்படியே கிடக்குது: இன்னும் பெருக்கணும், மெழுகணும். இன்னிக்கு வெள்ளிக்கிழமை

இல்லே? எல்லாத்தையும் விட்டுட்டு இந்த ரூம்லே என்ன வேலே உனக்கு? இந்தப் படுதாவுக்கு வளையம் மாட்டத்தானு இப்பத் தலே போகிற அவசரம்?''

காளி திரும்பி முகத்தை உயர்த்தினுள். கண்களை அப்படி அகற்றிப் பார்க்கும் சைகையில்தான் என்ன காந்தம்! குழந்தைத்தனமான விழிப்பு! குழந்தைத்தனமாவது? எல்லாம் வேண்டுமென்றே செய்கிறதுதான்.

'அவளை முந்திக்கொண்டு அவன் தலே நிமிர்த்திப் பேசினுன்: ''இல்லே மஞ்சு, நான்தான் காளிகிட்டச் சொன்னேன். அறை ரொம்ப இருட்டாப் போயிடறது பார், ஸ்க்ரீனை ஒதுக்கலேன்னு.''

''எல்லாம் தெரியும் எனக்கு. நீங்க பரிஞ்சுக்கிட்டு வரவே ணும். உள்ளே அவளுக்குக் கொள்ளை வேலே குவிஞ்சிருக்கு. அதுக்குத்தான் சொல்றேன். காளியாத்தா, ஐயா சொன்னுர் பாரு, நேத்து மூடிவச்ச படுதா இன்னும் அப்படியே இருக்குன்னு. நீ வேலே செய்யறது அத்தனே லட்சணமாய் இருக்கு. அப்படி ஒரு அலட்சியமா? முன்னுலேயே ஸ்க்ரீனைச் சரியாய்த் தள்ளி வைக்கிறதுக்கென்ன?''

''அடடா, மஞ்சு, நான் அந்த அர்த்தத்தில் சொல்லல்லே.''

''சரி சரி, போதும் காளியாத்தா, நீ போய் மத்த வேலேகளைப் பார்.''

காளி தலே குனிந்து சென்றுள். அவள் விட்ட வேலேயை மஞ்சு தொடர்ந்து செய்யலானுள்.

''இந்த ஸ்க்ரீனைத் தள்ளி வளையத்தை மாட்ட அவள்தான் வரணுமா? நான் செய்யமாட்டேனுக்கும்!''

கண்ணுடி வளையல் பட்டென்று உடைந்தது. அவள் சிரித்தாள்.

''பார்த்தியா? நீ முரட்டுத்தனமாய் வளையை அமுக்கினே; விட்டுப் போச்சு. காளி நாசுக்காய்ச் செய்யறு.''

''ஆமாம்; அவள் செய்தால் எது ஒண்ணும் நாசுக்காய்த்தான் தெரியும்.''

அந்த நொடிப்பை அறியாமல் அவன் பேசிக்கொண்டிருந்தான்.

''இவ்வளவு நாசுக்கான பொண்ணுக்குக் காளி என்ற பயங்கரமான பெயர் கொஞ்சங்கூடப் பொருந்தலே.''

''மாத்திச் சுகுமாரின்னு வச்சிடலாமா? நீங்க ஒண்ணு. அது போகட்டும். காளி என்ன காளி, பெத்துப் பெயர் வச்சமாதிரி? நானே காளியாத்தான்னுதான் கூப்பிடறேன்.''

அவன் பதில் பேசாமல் காபித் தம்ளரை எடுத்துக்கொண்டான். அவள் வெளியே வந்தாள். நடையில் உள்ளம் அழுத்தியது.

எதிரே நெருங்கி வரும் அந்த உருவம். உருண்டு நீண்ட கரங்கள் ஒன்றில் முறமும் வாருகோலும். மற்றதில் மருந்து நீர் நெடி வீசும் வாளி.

''சுருணே எங்கே? இல்லேன்னு சேலேத் தலேப்பாலேயா மெழுகப் போறே?''

''இல்லேம்மா. சுருணே வாளியிலேயே இருக்குது. இதோ பாருங்க.''

''சரி சரி, எனக்கு ஒண்ணும் பார்க்கவேணும். நீ பொய் சொல்றேன்னு நான் சொன்னேன்? அப்படியெல்லாம் எனக்குப் பேர் கட்டிடாதேடியம்மா! இந்த வீட்டிலே எனக்குப் பரிஞ்சுக்கிட்டு வரவங்கதான் யாரும் இல்லேயே!''

காளி ஒன்றும் புரியாமல் ஏறிட்டுப் பார்த்தாள்.

''என்னம்மா சொல்றீங்க?''

''பச்சைக் குழந்தைதான். பல்லைத் தட்டித் தொட்டிலில்தான் போடணும். மினுக்கல் குலுக்கலிலே மட்டும் குறைச்சல் இல்லே. உடம்பில் துளிக் கூச்சம் இருக்காதோ, பொண்ணாகப் பிறந்தவளுக்கு? எஜமானன் என்ற மரியாதையும் இல்லை. ஆம்புளைன்னு பயமும் இல்லை. அங்கே என்ன வேலை? என்ன பேச்சு?''

''எங்கேம்மா?''

''சரி சரி, நீ போ.''

''இப்ப இந்த ரூமையெல்லாம் பெருக்கி மெழுகணுமே, அம்மா?''

''அதுக்கு இப்ப என்ன முகூர்த்தம்? எல்லாம் அப்புறம் செய்யலாம். பின்கட்டுக்குப் போய் ஏதானும் வேலை இருந்தால் பார்.''

''நீங்கதானம்மா பெருக்கச் சொன்னீங்க?''

''தெரியும்டி. மார்க்கெட்டுக்குப் போய் முதல்லே கறிகாய் வாங்கி வா. வீட்டு வேலை ஓடியா போயிடுது?''

''நேத்துச் சாயங்காலமே பதார்த்தம் வாங்கியாத்துட்டேனம்மா?''

''மத்ததெல்லாம் வாங்கி என்ன உபயோகம்? உருளைக்கிழங்கில்லே வேணும் அவசரமாய், மத்தியான்னம் டிபனுக்கு? வா, சில்லறை தர்றேன்.''

கறிகாய்க் கடை. மாவு அரைக்கும் மில். வாசகசாலையிலிருந்து வந்த புத்தகங்கள் தூசுருவண்ணம் அட்டை போடக் கண்ணாடிக் காகிதம் வாங்கிவரும் பொருட்டு இன்னொரு நடை. காளியை ஏவி அனுப்ப வெளி வேலைகள் நிறைய இருந்தன.

அண்ணாமலை அலுவலகம் சென்றுவிட்டான்,

''அடி காளியாத்தா, இப்ப வந்து ஐயா ரூம், மத்த இடங்கள், எல்லாம் பெருக்கி மெழுகு, வா.''

மாலை நேரம்; மேற்குக் கரையில் வெயில் ஒதுங்கியது.

''சினிமாவுக்குப் போவோமா?'' என்றான் அவன்.

''என்ன திடீர்னு?''

''ப்ளூடயமண்டில் ஒரு படம் இன்னிக்கு ரிலீஸாயிருக்கு. பிரமாதமா இருக்கும்னு தோணுது; வா போகலாம்.''

அவனறியாமல் செய்தித்தாளைப் புரட்டிப் பார்த்தாள்: 'ப்ளூடயமண்'டில் என்ன படம்? யார் யார் நடிக்கிறார்கள்? அப்பாடா? கவர்ச்சி மங்கை என்று புகழ் பெற்ற எந்த நடிகையும் இல்லை.

''போகலாம். எனக்கும் ஆசையாய்த்தான் இருக்கு. சினிமாப் பார்த்து ரொம்ப நாளாயிடுச்சு, இல்லேங்க?''

கண்ணாடியின் பாராட்டுக்காக மோடாவில் அமர்ந்து அணி செய்து கொண்ட நேரம் இனிமையில் இழைந்தது.

''தயாரா மஞ்சு?''

அவள் முகத்தைப் பார்த்து அவன் சிரித்துவிட்டான்;

''என்ன வேடிக்கையைக் கண்டுட்டீங்க?'' அவள் சிணுங்கிய பான்மையில் கோபமே பூவாகி உதிர்ந்தது.

''பவுடர் போட்டுக்கிட்டால் முகத்துக்கு மட்டுந்தானு போடணும்? அந்தக் கழுத்தும் உன்னுதுதானே?''

அவனே வந்து டப்பாவின் நறுமண வெண்தூற்றலில் அவள் கழுத்தை நனைத்தபோது அவள் சிரித்தவாறே கைக்குட்டையால் சரியாகத் துடைத்துக்கொண்டாள். கண்ணாடி இரண்டு முகங்களின் இன்பத்தைச் சட்டமிட்டுக் காட்டியது. எதிர்ப் பிம்பத்தில் அவள் கை விரல்களை அவன் கவனித்தான்.

''எத்தனை நீளமாய் நகம் வளர்த்துக்கிட்டிருக்கே, மஞ்சு?''

''நல்லாயில்லையா?''

''நீ எதைச் செய்துக்கிட்டால்தான் நல்லாயிருக்காது? ஆனால் இந்த நகங்களைப் பார்த்தால் எனக்கு என்ன தோணுது தெரியுமா?''

''என்னவாம்?''

கடிகாரம் ஒரு முறை அடித்தது.

''அடடே! மணி ஆறரை. உடனே கிளம்பு. அப்புறம் லேட்டாயிடும்.''

''ப்ளூ டயமண்ட்தானே? திருப்பித் திருப்பிப் படத்தைத் தொடர்ந்து காட்டிக்கிட்டே இருப்பாங்களே! பாதியில் நுழைஞ்சால் கூட நேரத்தை வீணாக்காமல் முதல் பாதியை அடுத்த காட்சியில் பார்த்துடலாம். என்ன?'' அவள் பூஞ்சிதறலாய்ச் சிரித்தாள்.

''பெண்கள் டிரெஸ் செய்துக்க மணிக்கணக்காய்ச் செலவழிச்சிட்டுப் படத்துக்கு லேட்டாய் வருவாங்களேன்னுதான் இப்படி ஒரு ஏற்பாடு செய்திருக்காங்க போலிருக்கு!''

''பெண்களைப்பத்தி அவ்வளவு நல்லாத் தெரியுமா உங்களுக்கு?'' புகையும் சிரிப்புடன் அவள் காரில் சாரதியின் இடத்துக்கு அடுத்துள்ள முன்பக்க இருக்கையில் தன் உரிமைப் பீடத்தில் அமர்ந்துகொண்டாள்.

இரவு வீடு திரும்பியபோது இனிய தென்றல், இன்ப உரையாடல், சினிமாப் பார்த்த சுவட்டில் தொடர்ந்த உல்லாசக் கிளர்ச்சி.

வாசலில் நின்றிருந்த காளி கைவளையல்கள் குலுங்க வண்டிக் கதவைத் திறக்க ஓடிவந்தாள். சிவப்புச் சேலை, கண்ணைப் பறிக்கும் மஞ்சளில் ரவிக்கை. சிற்ப வடிவழகும் செவ்விய மலர்முகமும் பிழிந்து தந்த சாரமாக அந்தப் புன்முறுவல். தலை நிறையப் பூ. பளிச்சென்று துலங்கிய முகத்தில் அந்தச் சாந்துப் பொட்டு, எழிற் காவியத்தின் தலைப்பு.

மஞ்சுவின் பார்வை பிடி நழுவி ஒருதரம் கணவனின் பக்கம் தாவி மீண்டது. காளிக்கு முன்பாகத் தானே கதவைத் திறந்துகொண்டு இறங்கியவாறே, ''உள்ளே போ, காளியாத்தா. எப்பப் பார்த்தாலும் வாசலில் என்ன வேலை?'' என்றாள்.

''தெருப்பக்கம் யாரும் இல்லையேன்னு காவலுக்காக இருந்தேம்மா.''

''சரி சரி, நாங்க வந்தாயிட்டுதில்ல? நீ போ.''

மெல்லடிகள் மிதந்து மறைந்தன. மஞ்சுவுக்கு ஏதோ சொல்லொணுத் தவிப்பு. சினிமாப் பார்த்துவந்த மகிழ்ச்சியெல்லாம் போன இடம் தெரியவில்லை.

''சே சே சே! ஆனாலும் இப்படியா ஒரு பொண்ணு? அவ நிக்கறதும் நடக்கறதும் பார்க்கறதும் சிங்காரிச்சுக்கறதும்.....நம்முடையது மாதிரி வீடுகளில் வேலை செஞ்சா அவளுக்கு ஒண்ணும் சுவாரஸ்யப் படாதுங்க? அவ ஏதானும் ஒரு சினிமா நடிகை வீட்டில் இருக்கணும்.''

அண்ணாமலை சிரித்தான்: ''எந்தச் சினிமா நடிகை நம்ம காளியைத் தன் வீட்டில் சேர்ப்பாளாம்? இவளுக்கு முன்னாலே அவள் மவுசு அப்புறம் எடுபடுமா?'' அடுத்த கணமே தான் சொன்னதை மறந்து அவன் சாவதானமாக வண்டியை அதன் கொட்டகைக்கு ஓட்டிச் சென்றான்.

மஞ்சு நெடுநேரம் அசையவில்லை. பிறகு அவள் கொல்லைப்புறம் சென்றாள்.

''காளியாத்தா!''

''அம்மா!'' காளி ஓடிவந்தாள்.

''நீ...நீ வர முதல் தேதியோடு வேலையை விட்டு நின்னுக்க.''

''அம்மா!'' அதிர்ச்சி நீங்கியபின் கேள்வி வந்தது. ''ஏம்மா? ஏன்?''

''நான் அப்பவே சொல்லலே? ஐயாவுக்கு உன் வேலை திருப்தியாய் இல்லையாம். நான் என்ன செய்யலாம், சொல்லு.''

இரவு கணவனிடம் அவள் கூறினாள். ''என்னங்க, விஷயம் தெரியுமா? நம்ம காளியாத்தா வர முதல் தேதியோடு வேலையை விட்டு நின்னுடறாளாம்.''

''அப்படியா? ஏன்?''

''அடேயப்பா! அக்கறையைப் பார்க்கல்லே!'' சிரிப்பின் வடிவத்தில் வேறென்னவோதான் பீறி வந்தது. ''அவளுக்கு உங்களைக் கண்டால் பயமாயிருக்காம்; அதுதான் காரணம்.''

''இது என்ன அபாண்டம்?''

அவள் கூந்தலில் சூடியிருந்த மலரைக் கலைத்து மேஜைமேல் வைத்தாள். விரல்களில் பார்வை விழுந்தது. நீண்ட நகங்கள். சட்டென்று திரும்பி அவன் தோள்மீது கைகளைக் கோத்தவாறு, ''ஏங்க, அப்போ சொல்ல ஆரம்பிச்சீங்களே, என் நகங்களைப் பார்த்தால் என்னமோ தோணுதுன்னு. என்ன தோணுது?'' என்றாள். கைப்பிடி தோளில் விலங்காக அழுந்தியது.

''ஒண்ணுமில்லே, இவ்வளவு நீளமான நகங்களைப் பார்க்கிற போது, மிருகங்களின் நகம் இருக்குது பாரு, அது நினைவுக்கு வருதுன்னு சொல்லவந்தேன்.'' அவன் அந்தக் கைகளின் அழகை ரசிப்பதில் ஈடுபட்டான்.

—ஆகஸ்ட், 1969

# இழந்தது யார்?

'லக்ஷ்மி'

வண்டி புறப்படச் சில நிமிஷங்கள்தாம் இருந்தன. கௌசல்யா தன் கடிகாரத்தை உற்றுப் பார்த்துவிட்டு அருகில் நின்ற தன் சிநேகிதி பக்கம் திரும்பினாள். "தேவகி, என்னால் நம்பவே முடியவில்லை. கலாசாலையில் படிக்கும்பொழுது நீ கொண்டிருந்த லட்சியங்கள் எவ்வளவு! வாழ்க்கையைப்பற்றி இருந்த ஆசைகள் எத்தனை! அவை அனைத்தும் இப்படி உருக்குலைந்து போயிருப்பதைக் காண என் மனம் மிகவும் வேதனைப்படுகிறது" என்றாள்.

அந்த வார்த்தைகள் தேவகியைத் திடுக்கிடச் செய்தன. "நீ சொல்வது ஒன்றும் எனக்கு விளங்கவில்லையே! ஏன்? என் வாழ்க்கையில் என்ன குறை இருக்கிறது? அன்பான கணவர், நல்ல குழந்தைகள், இன்பமான குடும்பநிலை - இதைவிட நான் வாழ்க்கையில் அதிகம் என்ன எதிர்பார்க்க முடியும்? என்னைப் பொறுத்தவரை நான் சந்தோஷமாகத்தான் இருக்கிறேன். இப்படியே இருந்தால் போதும்" என்றாள், எரிச்சலும் படபடப்பும் நிறைந்த குரலில்.

"குடும்பம்! செக்கிலே கட்டிய மாடுகள்போல் குடும்பத்தில் உழன்று வாழ இந்த நாட்டில் கோடானுகோடிப் பெண்கள் இருக்கிறார்களே! ஆனால் தேவகி, நீயும் அந்தக் கோடிக்கணக்கான பெண்களில் ஒருத்தியாகி விட்டதைக் காண என் மனம் என்ன பாடு படுகிறது தெரியுமா? உனக்குக் கிட்டிய அரிய சந்தர்ப்பத்தைப் பாழ்படுத்திக் கொண்டுவிட்டாய். அன்று கலாசாலையில் நீ எண்ணியிருந்த லட்சியங்களை உறுதியாகப் பற்றிக்கொண்டிருந்தால், இந்தக் கௌசல்யாவின் பதவியிலே தேவகியல்லவா இருந்திருக்கவேண்டும்?" என்று அவள் மேலே பேசி முடிவதற்குள் முதல் மணி அடித்துவிடவே பரபரப்புடன் சிநேகிதியிடம் விடை பெற்றுக்கொண்டு இரண்டாவது வகுப்புப் பெட்டிக்குள் பாய்ந்து ஏறிக்கொண்டாள்.

வண்டி புறப்பட்டுச் சென்ற பின்பு தேவகி ஸ்டேஷனை விட்டு வெளியே வந்தாள். திடீரென்று தன் உடல் சக்தியை இழந்துவிட்டது போல் அவளுக்கு ஒரு விதமான சோர்வு உணர்ச்சி ஏற்பட்டது.

"ஜவுளிக் கடைக்குத்தானே?" என்று டிரைவர் கந்தசாமி எஜமானியைக் குறிப்பாகக் கேட்டான். கௌசல்யா கூறிய அந்த வார்த்தைகள் காதிலே இன்னமும் ரீங்காரம் செய்துகொண்டிருந்ததனால், டிரைவரின் கேள்வி அவள் காதுகளில் படவில்லை.

''அம்மா, ஜவுளிக் கடைக்குத்தானே?'' என்று மீண்டும் உரத்த குரலில் அவன் கேட்டான். கனவினின்று விழித்துக் கொண்டவள்போல், ''ஆமாம்!'' என்றாள் அவள்.

குழந்தை சித்திராவுக்கு என்ன விதமான உடைகள் வாங்குவது, தனக்கு என்ன தினுசுப் புடைவை எடுப்பது என்றெல்லாம் பத்துத் தினங்களுக்கு முன்பு பலவாறு கற்பனை செய்துகொண் டிருந்தாள். அந்த உற்சாகமும் ஆவலும் அன்றைத் தினம் அவளிடம் காணப்பட வில்லை. மனத்திலே கசப்பும் சோர்வும் நிறைந்திருந்தன.

பண்டிகைக்கு இரண்டு தினங்களே இருந்ததால் ஜவுளிக் கடையில் பெண்களின் கூட்டம் மிகவும் அதிகமாக இருந்தது. கடையி லிருந்து ஜவுளி தினுசுகளைப் பெரிய பொட்டலமாகச் சுமந்துகொண்டு இறங்கி வந்தாள், என்ஜினீயர் சதாசிவம் அவர்களின் மனைவி.

''இந்தக் கூட்டத்திலே நிதானமாக எதுவும் பார்த்து வாங்க முடியாது போலிருக்கிறது. என்னவோ கண்ணுக்குப் பிடித்த இரண்டு புடைவையை எடுத்துக்கொண்டேன். நீ இந்த வருஷம் என்ன தினுசு வாங்கப் போகிறாய்? கொள்ளேகாலமா? மைசூரா?'' என்று வினவினாள்.

தேவகி, அசட்டுப் புன்னகை செய்தாள். ''இன்னமும் ஒன்றும் தீர்மானிக்கவில்லை. ஏதாவது வாங்கினால் போச்சு'' என்றாள், விரக்தியாக.

''தேவகி, உன்னைப் போன வெள்ளிக்கிழமையே பார்த்துப் பேசணும்னு ஆசைப்பட்டுக்கொண் டிருந்தேன். இந்த வருஷம் நம் கிளப் விழா ரொம்ப அற்புதமாக நடந்துவிட்டது. அந்தக் கௌசல்யா இவ்வளவு அழகாகப் பேசுவாள் என்று நான் நினைக்கவே இல்லை. ரொம்பப் பிரமாதம். ஆமாம்! கௌசல்யா உன்னுடைய அந்தரங்கத் தோழியாமே? இப்படிப்பட்ட பிரபலமான பெண்மணியைத் தோழி என்று சொல்லிக்கொள்ள உனக்கு ரொம்பப் பெருமையா இருக்கணும். என் சிறிய பெண் ரகுஜா, கௌசல்யா, கௌசல்யான்னு அந்தம்மா மேலே ஒரே பைத்தியமா ஆய்விட்டாள். அவளுடைய காலேஜ் தினத்திற்குக் கௌசல்யாவைக் கூப்பிட்டுப் பேசச் சொல்லப் போகிறாளாம். அதற்கு நீதான் உதவி செய்யணும்'' என்றாள்.

''காலேஜ் மாணவிகளுக்குப் பேசுவதென்றால் கௌசல்யாவுக்குப் பிடித்தமான விஷயம். கூப்பிட்டால் வந்து பேசுவாளே. அதற்கு என் உதவியே தேவையில்லை'' என்றாள் தேவகி.

கடைக்காரன் நானாவிதமான பட்டுச் சேலைகளை எடுத்துப் பாயின்மீது விசிறிப் போட்டுக்கொண் டிருந்தான். பாயின்மீது ஒன்றின் பின் ஒன்றாக அடுக்கிக் கிடந்த பல வர்ணச் சேலைகளில் தேவகியின் கண்கள் லயிக்கவே இல்லை.

குழந்தை சித்திராவுக்கு நீல நிறத்திலே ஒரு பாவாடையை அவசரமாக எடுத்துக்கொண்டு எழுந்தாள்.

''அம்மாவுக்கு ஜவுளி?'' என்று கடைக்காரன் குசலம் விசாரித் தான்.

''பிறகு வருகிறேன். குழந்தை பாவாடைதான் முக்கியம். தீபாவளிக்குள் தையல்காரன் கொடுக்க வேண்டுமே! அதனால்....'' என்று மென்று விழுங்கிவிட்டு வெளியே வந்தாள்.

வழியில் தையற்கடையிலே பாவாடையைத் தைக்கக் கொடுத்து விட்டு வீட்டுக்குள்ளே நுழைந்தாள். எப்பொழுது வருவாள் என்று காத்திருப்பவன்போல் வேலைக்கார முத்து வாயிலில் நின்றிருந்தான்.

''ஹால் விளக்கை ஏத்தினேன். போட்டுனு அவிஞ்சு போச்சு. வீடு முழுக்க ஒரு விளக்குக்கூட எரிமாட்டேங்குது. கரண்டுலே ஏதோ மிஷ்டேக் ஏற்பட்டாப் போல இருக்குது'' என்றான்.

''நாசமாப் போச்சு! கரண்டிலே கோளாறு ஏற்பட்டிருந்தா யாராவது எலக்ட்ரீஷியனைக் கூப்பிட்டுக்கொண்டு வந்து ரிப்பேர் செய்கிறதுதானே? விளக்கில்லாமல் ராத்திரிப் போது எப்படிப் போகும்?'' என்றாள் தேவகி, எரிச்சலுடன்.

அதற்குள் குழந்தை சித்திரா உள்ளேயிருந்து ஓடி வந்தாள். ''அம்மா! ரகுவுக்கு அப்பா நல்ல பூசை கொடுத்தார். அவன் கோவிச்சுண்டு, மேஜை மேலே இருந்த அலாரம் கடியாரத்தை வீசி எறிந்து உடைச்சுட்டான். உன்கிட்டச் சொல்வேன்னு, சொல்லிக்கோ பயமில்லேன்னு கத்தறான்'' என்று புகார் செய்தாள்.

தேவகிக்கு ஆத்திரத்தில் நெஞ்சுப் படபடப்பு அதிகரித்தது. தலையைப் பிடித்துக்கொண்டு சோபாவிலே தொப்பென உட்கார்ந்தாள். ''சித்த வெளியிலே போய்விட்டு வருவதற்குள் இத்தனை அமர்க்களமா? ரகுவை அப்பா எதற்காக அடித்தாராம்?'' என்று எரிச்சலுடன் கேட்டாள்.

''ராமேசம் மாமா பங்களாவுக்குப் போய்ச் சண்பக மரத்திலே ஏறித் திருட்டுத்தனமாப் பூப் பறிச்சிண்டிருந்தானும். ராமேசம் மாமா மாடியிலிருந்து பார்த்துட்டாராம். இவன் பயந்துகொண்டு தொப்புனு குதிச்சு ஓடி வந்துட்டானும்'' என்று சித்திரா தட்டுத் தடுமாறி விவரிப்பதற்குள் முத்து குறுக்கிட்டான்.

''மரத்திலே ஒரு பெரிய கிளை அப்படியே முறிஞ்சு போயிடுச்சு. ராமேசம் ஐயாவுக்குத் தோட்டம்னு உயிர் இல்லீங்களா? விடுவிடுன்னு ரகு பின்னலேயே இங்கே வந்துட்டார். ஐயா ஆபீஸிலிருந்து அப்பத் தான் வந்தார். ராமேசம் ஐயா சொன்னதும், மாடியிலே ஒளிஞ்சுக் கிட்டிருந்த ரகுவைப் பிடிச்சு இழுத்துவந்து அந்த ஐயாவுக்கு முன்னடியே செம்மையா உதைச்சுட்டார்'' என்றான்.

ஆத்திரம், கோபம், துக்கம் எல்லா உணர்ச்சிகளும் ஏக காலத்தில் தேவகியின் உள்ளத்திலே கொந்தளித்தன. ரகுவின் விஷமத்தைப் பற்றி மேலே பேசாமல், ''ஆமாம்! அப்பா எங்கே?'' என்று மட்டும் கேட்டாள்.

''அப்பா டிபன்கூடச் சாப்பிடலே. கோபமா இருந்தார். நீ எங்கே போயிருக்கேன்னு கேட்டார். கடைக்குப் போயிருக்கேன்னு சொன்னேன். வேறே வேலையென்ன உங்கம்மாவுக்கு என்று கத்தினார். அப்புறம் எங்கேயோ வெளியே போயிருக்கார்'' என்று திக்கிக் கொண்டு முடிந்தாள் குழந்தை சித்திரா.

விஷயத்தைக் கேட்ட தேவகிக்கு ஆத்திரம் தாள முடியவில்லை. ''லைட்டுக்கு ஏதாவது ஏற்பாடு பண்ணேன்! இங்கே வாயைப் பார்த்துக் கொண்டு ஏன் நிற்கிறாய்?'' என்று முத்துவின்மேல் எரிந்து விழுந்தாள்.

சமையலறையினின்று எட்டிப் பார்த்த சமையற்கார அம்மாவின் முகம் அவளது வரவை ஆவலுடன் எதிர்பார்த்திருந்ததுபோல் காணப் பட்டது. 'நீ என்ன புகார் சொல்லப் போகிறாய்? சொல்லித் தொலை!' என்று தேவகியின் உள்ளம் அதைக் கண்டு குமுறியது.

''ரகு சாயங்காலம் டிபன்கூடச் சாப்பிடல்லேயம்மா. காபி டம்ளரை என் மூஞ்சியிலே விழறாப்பலே விட்டெறிஞ்சுட்டான். எஜமானும் ஒண்ணும் சாப்பிடலே. சாயங்காலம் சிரமப்பட்டுப் பண்ணின டிபன் முழுதும் அப்படியே ஆறிக் கிடக்கிறது'' என்றாள், கீச்சுக்குரலில்.

''டிபனைக் கொண்டு குப்பைத் தொட்டியிலே போடுங்கோ. பண்டம் பாழ்! இந்த வீட்டை விட்டுச் சித்தெ வெளியிலே போயிட்டா இத்தனை அல்லோலகல்லோலமா? செக்கு மாடுபோலத்தான் இருக்கு என் பொழைப்பும்'' என்று கூச்சலிட்ட தேவகி மாடிப்பக்கம் விரைந்தாள்.

காலடிச் சப்தம் கேட்டதும் தொட்டிலில் படுத்திருந்த அவளது கைக்குழந்தை மது விழித்துக்கொண்டுவிட்டான். தாயைக் கண்டதும் தன்னை எடுத்துக்கொள்ளச் சொல்லி ஆர்ப்பாட்டம் செய்து அழத் துவங்கினான். ''நீ ஒருவன்தான் பாக்கி என்று நினைத்தேன். நீயும் சமயத்துக்குத் தொல்லை கொடு'' என்று முணுமுணுத்த தேவகி குழந்தையை எடுத்துக்கொண்டு அங்கிருந்த ஆசனமொன்றில் அமர்ந்தாள்.

அறையிலே பரவி நின்ற இருள், அவளது உள்ளத்திலே கொந்தளித்துக்கொண்டிருந்த ஏக்கத்தை இன்னும் அதிகப்படுத்தியது. எவ்வளவோ கட்டுப்படுத்தியும் அவளையும் மீறிக் கண்ணீர்த் துளிகள் அவள் கன்னங்களின் மீது உருண்டோடின.

கௌசல்யா கூறியது எவ்வளவு பொருத்தம்! இப்படிச் செக்கு மாடு போல வாழும் வாழ்வு யாருக்குத்தான் கிட்டாது? ஆனால் கௌசல்யாவைப் போன்ற புகழ்பெற்ற மேதையாக வரும் பாக்கியம் எல்லாப் பெண்களுக்கும் கிட்டிவிடுமா? கௌசல்யா அசோகா பெண்கள் கலாசாலையில் ரசாயனப் பேராசிரியராக இருந்தாள். கல்வித் துறையிலே புகழ் பெற்ற பெண்மணி. ரசாயனப் பகுதியைப் பிரத்தியேகமாக அமெரிக்காவுக்குச் சென்று படித்திருந்தாள். தனது ஆராய்ச்சி ஒன்றிற்காகச் சமீபத்தில் அவள் டாக்டர் பட்டமும் பெற்றாள். ரசாயனத்தைப்பற்றிப் புத்தகம் ஒன்றை வெளியிட்டு மிகவும் புகழ் அடைந்திருந்தாள். பெண்கள் முன்னேற்றத்துக்கு அரும்பாடுபட்டுக்கொண்டிருந்த தன் தோழியை அந்த வருஷம் ரத்னகிரி மாதர் சங்க ஸ்தாபன தினத்துக்குத் தலைமை வகிக்க அழைக்கலாம் என்று தேவகிதான் ஏற்பாடு செய்தாள். ஊரில் பல பெரிய மனிதர்கள் வீட்டுப் பெண்மணிகள் கௌசல்யாவை விருந்தாளியாக ஏற்றுக்கொள்ள ஆவலாக இருந்தும், புகழ்பெற்ற மேதை கௌசல்யா தன் அந்தரங்கத் தோழி என்று உரிமை பாராட்டிக்கொள்ளவேண்டும் என்ற போலிச் சௌரவம் காரணமாகத் தேவகி அந்தப் பொறுப்பைத் தானே ஏற்றுக்கொண்டாள்.

தன் சிநேகிதியை வரவேற்க அவள் ஸ்டேஷனுக்குச் சென்றிருந்தாள். இரண்டாவது வகுப்புப் பெட்டி ஒன்றிலிருந்து, முகத்தில் பாதியை வெள்ளைப் பிரேம் இட்ட கறுப்புக் கண்ணாடி மறைக்க, வெண்ணிற ஜார்ஜெட் சேலைத் தலைப்பு தரையைப் பெருக்கியபடி பின்னால் நீண்டு தொங்க, உயர்ந்த பாதம் வைத்த குதிகால் பாதரட்சையில் நடனம் ஆடுகிறவள் போல் தத்திக்கொண்டு மெலிந்த தோற்றமுடைய ஒரு பெண்மணி வந்து இறங்கினாள்; பூமாலை அவள் கழுத்தில் தொப்பென வந்து விழுந்தது. ''தேவகி! நீ எவ்வளவு மாறிவிட்டாய்!'' என்று கேட்ட சிநேகிதி அவள் கரத்தைப் பற்றிக் குலுக்கினாள்.

வருடங்கள் ஒருவருடைய தோற்றத்துக்கு மாறுதல் விளைவிப்பது போல் மனத்திலும் செயலிலும் எவ்வளவு மாறுதலை உண்டாக்கக்கூடும் என்பதைத் தேவகி தோழியிடம் கண்டாள். வாழ்விலே வேறு கோணங்களைப்பற்றிச் சிந்திக்காமல் ஒரே திக்கிலே தன் அறிவாற்றலைச் செலுத்திக் கொண்டிருந்ததாலோ என்னவோ, கௌசல்யாவிடம் சில குறைகள் நன்கு புலப்படக்கூடிய வகையில் தெரிந்தன. தன் படிப்பிலும் புகழிலும் அவளுக்குக் கர்வம் ஏற்பட்டிருந்தது. தன் குறைகள் பிறருக்கு இடைஞ்சலாக இருக்கும் என அவள் சிறிதும் நினைக்கவே இல்லை.

தன் சிநேகிதி புதிதாகத் தன் வீட்டுக்கு வந்திருக்கிறளே என்று அன்றிரவு பலமான விருந்துக்கு ஏற்பாடு செய்தாள் தேவகி. "பாதாம் கீரா? ஐயோ, எனக்கு வேண்டாம். நான் கையால்கூடத் தொடுவதில்லை. எதற்கு இதெல்லாம்? ஆமாம்! ஒரு ஜிலேபியை அப்படியே சாப்பிட்டுவிட்டாயே! நாக்கைக் கட்டாது இப்படி மித மிஞ்சிச் சாப்பிடுவதால்தான் நீ பஹுன்மாதிரி ஊதிக் கிழவிபோல் தளர்ந்துவிட்டாய்" என்றாள், வெடுக்கென்று. தேவகிக்குச் சுருக் கென்றது.

"என்னைப் போல் மூன்று குழந்தைகளுக்குத் தாயானல் அதற்குப் பிறகு நீ தேகக்கட்டையும் இளமையையும்பற்றிப் பேசமாட்டாய்!" என்று சுடச்சுடப் பதில் அளிக்கவேணுமென்று தேவகிக்குத் தோன்றியது. மேலே விவாதிக்க விருப்பமில்லாது பேசாமல் இருந்துவிட்டாள்.

மறுதினம் ஊரைச் சுற்றிப் பார்க்கத் தோழியை அழைத்துக் கொண்டு வெளியே கிளம்பினுள் தேவகி. ஏற இறங்க அவளை ஒருமுறை உற்றுப் பார்த்த கௌசல்யா ஆச்சரியத்துடன், "இது என்ன புடைவை? இது என்ன ஜாக்கெட்? பொருத்தம் ஏதாவது இருக்கிறதா பார்! தலையை இப்படியா வாரிக்கொள்வது? போய் நல்லதாக உடுத்திக் கொண்டுவா. உன்னோடு வெளியே வரக்கூட எனக்கு வெட்கமாக இருக் கிறது" என்றாள், அதட்டலாக.

தேவகியின் உடல் அவமானத்தால் குன்றியது. "குடும்பத் தொல்லை யில் இதையெல்லாம் கவனிக்கப் பொழுது எங்கே இருக்கிறது?" என்றாள், மென்று விழுங்கியவண்ணம்.

"பூ! குடும்பம்! என்னைப் போல மூச்சு விட முடியாத வேலைகள் பல இருந்தால் நீ என்ன செய்வாயோ? அப்படி அலுவல்கள் பல இருந்தும், என்னைப்பற்றி ஒரு நாள்கூட நான் அசட்டையாக இருந்ததில்லை" என்று ஒரு பெரிய பிரசங்கம் செய்தாள் கௌசல்யா. முடிவில் தோழியின் இஷ்டப்படி ஆடை அலங்காரம் செய்துகொண்ட பிறகே தேவகி வெளியே செல்ல முடிந்தது.

கொண்டாட்டம் முடிந்த மறுதினம் கௌசல்யாவுக்குத் தொண்டை கட்டிக்கொண்டு லேசாகக் காய்ச்சல் வந்துவிட்டது. அவ்வளவுதான்! முகம் கழுவ வெந்நீர், கைகழுவ வெந்நீர் என்று அண்டா நிறைய வெந்நீர் போடத்தான் சமையற்காரிக்குச் சரியாக இருந்தது. எட்டு மணிக்கு மருந்து, ஒன்பது மணிக்கு ஆகாரம், பத்து மணி சுமாருக்குப் பழரசம் என்று நோயாளி போட்ட திட்டப்படி மருந்து எடுத்துக் கொடுத்துத் தேவகிக்கு இடுப்பு முறிந்துவிட்டது. அன்று காலை கௌசல்யா தான் ஊருக்குப் புறப்படுவதாகக் கூறியபோதே தேவகிக்கு அப்பாடா என்று நிம்மதியான மூச்சு வெளிவந்தது.

தோழி விவேகமின்றி நடந்துகொண்ட முறைகளைப்பற்றி அவள் தற்சமயம் பொருட்படுத்தவில்லை. அவள் கடைசியாகக் கூறிய வார்த்தை களின் கடுமையை நினைத்தே மனம் வருந்தினுள். ஆனல் அவள் கூறியது எப்படிப்பட்ட கசப்பான உண்மை? தேவகிமட்டும் குடும்பச் சகதியிலே உழலாமல் இருந்திருந்தால் கௌசல்யாவைக் காட்டிலும் பன்மடங்கு புகழை அடைந்திருப்பாள் என்பது முற்றும் உண்மை. தேவகி உண்மையில் எவ்வளவு பெரிய பாக்கியத்தை இழந்துவிட்டாள்!

காலடிச் சப்தம் கேட்டதும் கண்ணீரைத் துடைத்துக்கொண்டு தேவகி நிமிர்ந்து பார்த்தாள். சீதாராமன் அறைக்குள் வந்து விளக்கைப் போட்டார். "லேட் ரிப்பேர் செய்து வெகு நேரமாகிறது. இன்னும் ஏன் இருட்டில் உட்கார்ந்திருக்கிறாய்?" என்று வினவினர்.

அவரைப் பார்க்கவோ பேசவோ விரும்பாத தேவகி, "அப்படியா? குழந்தையைத் தூங்கச் செய்துகொண்டிருந்தேன்" என்று முணுமுணுத்தவண்ணம், தன் அணைப்பிலே மீண்டும் துயிலில் ஆழ்ந்த மகனை எடுத்துத் தொட்டிலில் விட்டுப் பின்தொடர்ந்தாள்.

தந்தையின் அருகில் சித்ராமட்டும் உட்கார்ந்திருந்தாள். ரகுவைக் காணவில்லை. "ரகு சாப்பிட வராமல் பிடிவாதம் செய்கிறான்" என்று உட்கார்ந்த இடத்திலிருந்து சீதாராமன் கர்ஜித்தார்.

பின்கட்டு ஊஞ்சற் பலகைமீது குப்புறப் படுத்திருந்தான் ரகு. விளக்கொளியில் அவன் முதுகிலே படிந்திருந்த சிவந்த கோடுகளைக் கண்ட தேவகியின் நெஞ்சு பதறியது. மற்ற நாட்களாக இருந்தால் மகனை ஓடிப் போய் அணைத்துக் கண்ணீர் வடித்திருப்பாள். ஆனால் இன்று அவள் மனத்திலே இருந்த வெறுப்பும் ஏக்கமும் அவளது ஆத்திரத்தைத்தான் தூண்டிவிட்டன.

"என்னடா அழுச்சாட்டியம் பண்றே? எழுந்திரு" என்று அவனைப் பிடித்து உலுக்கினாள். "என்னை விடு. எனக்குச் சோறு வேண்டியதில்லை. போ நீ!" என்று கோபத்துடன் உறுமிய சிறுவனை, "நன்கருப் பட்டினி கிடந்து சா!" என்று அதட்டிய தேவகி, மேலே வற்புறுத்தாமல் சமையற்கட்டுக்குச் சென்றுவிட்டாள்.

"ரகு சாப்பிட வரமாட்டேன் என்கிறானா?" என்று சீதாராமன் கோபத்துடன் கேட்டார்.

அதற்கு நேரிடையாகப் பதிலளிக்காமல், "ஆமாம், அப்படித்தான் குழந்தையைப் போட்டு அடிப்பார்களா? சித்த வெளியிலே போய்விட்டு வரதுக்குள்ளே திமிலோகப்படுத்திவிட்டேளே?" என்று கேட்டாள்.

"துஷ்டப் பயல்; அவமானம்! பிறத்தியார் வீட்டு மரத்திலே ஏறி பூவைத் திருடி..சே !சே! என்ன பிள்ளை! குடும்பத்திலே இல்லாத பழக்கம்!" என்றார் சீதாராமன், வெறுப்பாக.

"ஏதோ வேடிக்கையாகச் செய்துவிட்டான். உங்களுக்கு மனத் தத்துவம் ஏதாவது தெரிந்தால்தானே? துஷ்டத்தனமாக ஏதாவது செய்துவிட்டால் அதைத் திருட்டுத்தனம் என்று கூறிவிடுவது மடமை. புத்தி சொல்கிறதை விட்டு முதுகை இரண்டாகப் பிளந்துவிட்டிருக்கிறீர்களே; எப்படித்தான் மனசு வந்ததோ?" என்று படபடவெனப் பொரிந்து கொட்டினாள் தேவகி.

அதற்குமேல் பேசமுடியாமல் துக்கம் தொண்டையை அடைத்துக் கொண்டது; கண்களில் நீர் முட்ட, மாடியறையை நோக்கி விரைந்தாள்; சோபா ஒன்றிலே சாய்ந்துகொண்டு முகத்தைக் கைகளால் மூடிக்கொண்டு இருதயமே வெடித்துவிடும்போல் விம்மியழத் தொடங்கினாள். எவ்வளவு நேரம் அவ்வாறு அழுதாளோ அவளுக்குத் தெரியாது; சீதாராமன் அருகில் வந்து உட்கார்ந்துகொண்டு தொண்டையைக் கனைத்துக் கொண்டார். "தேவகி, நீ வருத்தப்படாதே. ராமேசம் வந்து புகார் சொன்னதும் கோபம் தாங்கவில்லை. நீ அருகில் இருந்திருந்தால் என் கோபம் இப்படி அத்துமீறிப் போயிருக்காது. ரகுமேலே எனக்குமட்டும் பிரியம் இல்லையா?" என்று உணர்ச்சி பொங்கும் குரலில் கேட்டார்.

தேவகி பதில் பேசவில்லை; "அம்மா?" என்று அழைத்தபடி முத்து வராந்தாவில் வந்து நின்றான்; சீதாராமன் எழுந்து சென்று அவன் அளித்த ஒரு கடிதத்தையும் பொட்டலத்தையும் வாங்கிக்கொண்டு வந்து தேவகியிடம் நீட்டினார்; தேவகி பொட்டலத்தைப் பிரித்தாள். நெருக்கமாகக் கட்டியிருந்த சண்பக மலர்ச் சரத்தினின்று மணம் குப்பென முகத்தில் வீசியது; கடிதத்தைப் பிரித்துப் படித்தாள் தேவகி.

அன்புள்ள தேவகிக்கு,

இத்துடன் கொஞ்சம் சண்பகப் பூ அனுப்பியிருக்கிறேன்: பகலில் நடந்த சங்கதியைக் கேள்விப்பட்டேன். நான் அப்போது வீட்டில் இல்லையே என்று வருத்தப்பட்டேன். குழந்தை விளையாட்டாக ஏதோ தவறு செய்துவிட்டான். அதற்காக உன் கணவர் குழந்தையைப் போட்டு அடித்துவிட்டார் என்று கேள்விப்பட்டு எனக்கு மிகவும் வருத்தமாக இருந்தது. ஏதோ தெரியாது செய்துவிட்ட துஷ்டத்தனத்தைப் பெரிதுபண்ணி விட்டோமே என்று இவரும் ரொம்ப மனசு கஷ்டப்பட்டார். மன்னித்துக்கொள். உனக்கு என் அன்பான வாழ்த்துக்கள். தீபாவளி காலையில் வழக்கம்போல் நீயும் குழந்தைகளும் அவரும் இங்கே பக்ஷணம் சாப்பிட வரவேண்டும்.

இப்படிக்குப் பிரியமுள்ள
கமலம் ராமேசம்.

தேவகி கடிதத்தை மடித்துச் சோபாவின்மேல் வைத்தாள். சீதாராமன் அதைப்பற்றிக் கேட்கும் முன் புதிய ஆடைகளின் சப்தம் அறைக்குள் கேட்டது. தையற்கடையிலிருந்து வந்த புதிய பாவாடையைக் கட்டிக்கொண்டு, குழந்தை சித்ரா வந்து நின்றாள்.

''அட! சித்ரா ரொம்ப ஷோக்காக இருக்கிறாளே!'' என்று தந்தை வியப்புடன் மகளை வரவேற்றார்.

'தீபாவளிக்கு வாங்கி வைத்திருக்கும் துணிகளை ஏன் அதற்குள் வீணாக்குகிறாய்?' என்று மகளை அதட்டவேண்டும் என்று தேவகிக்குத் தோன்றியது. ஆனால் சித்ரா ஒரே ஓட்டமாக ஓடிவந்து தாயின் கழுத்தைக் கட்டுக்கொண்டு, ''அம்மா, தீபாவாளிக்கு முன்னாடி கட்டிக்கொண்டேன்னு கோவிச்சுக்கமாட்டியே? கட்டிப் பாக்கணும்னு ஆசையா இருந்தது'' என்று கூறிவிட்டு, ''எனக்கு நன்னா இருக்காம்மா?'' என்று சங்கோசத்துடன் கேட்டாள். கழுத்தைச் சுற்றியிருந்த அவளது குழந்தைக் கரங்கள் தேவகியின் மேனியைப் புல்லரிக்கச் செய்தன. மிருதுவான அவளுடைய கன்னத்தைத் தன் கன்னத்துடன் பொருத்திக்கொண்டு, ''நன்னாயிருக்கு கண்ணு: கசக்காமல் பத்திரமா அவுத்து வைச்சுடணும்'' என்றாள்.

சித்ரா சிட்டுக்குருவி போல் அறையிலிருந்து வெளியே ஓடினாள். ''இப்பத்தான் சித்ரா பிறந்ததுபோல் இருக்கிறது. அதற்குள் பத்து வயதாகிவிட்டது. இன்னும் சில வருடங்களில் அவள் கல்யாணமாகிப் புக்ககம் சென்றுவிடுவாள் என்று நினைத்துப் பார்க்கமுடியவில்லை'' என்று பரிவுடன் பேசினார் சீதாராமன். தேவகி தனக்குள்ளே புன்முறுவல் செய்துகொண்டாள். சற்றுமுன் அவள் மனத்திலே ஜுவாலை விட்டுக்கொண்டிருந்த கோபமும் ஏக்கமும் இப்போது அடங்கியிருந்தன. அவருடைய வார்த்தைகள் கேட்பதற்கு ஆறுதலாக இருந்தன.

''அம்மா! அம்மா!'' என மெல்லிய குரலில் கூறியவாறு கண்களைக் கசக்கிக்கொண்டு குற்றவாளிபோல் ரகு அவளுக்குமுன் வந்து நின்றான். ''இங்கே வாடா ரகு! இங்கே வா!'' என்று தந்தை அழைத்தார். அவரைத் தன் கண்களால் வெட்டிவிடுகிறவன்போல் முறைத்துப் பார்த்துவிட்டுத் தாயின் அருகில் வந்து அவள் தோள்மீது சாய்ந்துகொண்டான்.

''அம்மா!'' என்று மெதுவாகக் கூப்பிட்ட மைந்தன் தன் கால் சராய்ப்பைக்குள் கையை விட்டு எதையோ எடுத்தான். ''உனக்காகத்தான் அம்மா இதைப் பறிச்சேன்: ராமேசம் மாமா கோவிச்சுக்கொண்டார். அப்பா அடிச்சுட்டார்'' என்று துக்கத்துடன் திணறிய மகன்,

வாடி வதங்கித் தன் செவ்விய நிறத்தை இழந்த பத்துச் சண்பக மலர்களைத் தாயின் கையில் திணித்தான்.

''எனக்கா!'' என்று வியப்புடன் தேவகி கேட்குமுன், ''நேத்து அந்த மாமிகிட்டே பேசிண்டு இருந்தப்போ நீ சொல்லலையா, 'எனக்குக் கூடச் சண்பகப் பூ பிடிக்கும்; ஆனா எங்க தோட்டத்திலே இல்லையா' துன்னு! நீயும் சித்ராவும் தலையிலே வச்சுக்க நான் ராமேசம் மாமா வீட்டு மரத்திலேருந்து பறிச்சேன்'' என்றான் ரகு.

தேவகியின் கண்கள் கலங்கின. ரகுவை மார்புடன் தழுவிக்கொண்டு, ''ரகு கண்ணு! ராமேசம் மாமாவைக் கேட்காமல் அவர் வீட்டு மரத்தில் ஏறிப் பறிப்பது தப்பல்லவா? நீ அப்படிச் செய்யலாமா?'' என்று கேட்டாள்.

''இனிமே அப்படிச் செய்யமாட்டேன். நான் நல்ல பையனா இருப்பேன். உனக்கு என்மேலே கோபமா?'' என்று கேட்டான் ரகு.

''இல்லேடா கண்ணு!'' என்று கொஞ்சலாகப் பதிலளித்தாள் தேவகி.

''பின்னே என் சாப்பிடலே? என்மேலே கோபமா இருந்தாத்தானே நீ சாப்பிடாம இருப்பே?'' என்றான் ரகு, விடாமல். அவளது மடிமீது உதிர்ந்து கிடந்த சண்பக மலர் ஒன்றைச் சீதாராமன் கையில் எடுத்துக்கொண்டார். இன்பம், துன்பம் என்று இனம் பிரிக்கமுடியாத ஓர் உணர்ச்சி அவரது நெஞ்சைப் பலமாக அழுத்தியது.

''நீயும் நானும் சேர்ந்து சாப்பிடுவதற்காகக் காத்திருந்தேன். வா போகலாம்'' என்று மகனை அணைத்துத் தூக்கிக்கொண்டபடி எழுந்து நின்றாள் தேவகி. அவள் உள்ளத்திலே வீசிய புயல் அடங்கி அதற்குப் பதிலாக அமைதியும் ஆனந்தமும் நிலவியிருந்தன.

''இரு'' என்று கூறிய சீதாராமன் தம் கையில் இருந்த சண்பக மலரை அவளது கூந்தலில் செருகிவிட்டு அர்த்தபாவத்துடன் முறுவல் செய்துவிட்டு மகனின் கன்னத்தைச் செல்லமாக வருடினார்.

''என்னைத் தொடாதே போ! உன்னோடே நான் டூ! வவ்வவ்வ்வே!'' அழகு காட்டினான் தந்தைமீது கோபம் தணியாத ரகு.

''சே, ரகு! அப்பாகிட்ட மரியாதை இல்லாமல் பேசலாமா? தீபாவளிக்கு உனக்கு எத்தனை பட்டாஸ் வாங்கித் தரப்போகிறார், தெரியுமா?'' என்று கூறிவிட்டு வாய்விட்டுச் சிரித்தாள் தேவகி.

''போக்கிரிக் கழுதை! இப்படி வா!'' என்று மைந்தனை அவளிடமிருந்து தந்தை தூக்கித் தம் தோள்மீது சாய்த்துக்கொண்டு சிரித்தார். குழந்தையும் வெட்கத்துடன் கோபத்தைவிட்டுப் பல்லைக் காட்டினான். எத்தனை இன்பமான சிரிப்பு!

'கணவனின் அன்பான மொழிகளைக் கேட்கும்போது ஏற்படும் ஆனந்தம், குழந்தைகளின் மழலை மொழிகளைக் கேட்கும்போது ஏற்படும் இன்பம்-இவற்றை நீ அறிவாயோ? கௌசல்யா! வாழ்விலே பெரும் பாக்கியத்தை இழந்தவள் நீதான்! நான் அல்ல!' என்று தேவகி தனக்குள்ளே எண்ணமிட்டவண்ணம் கீழே இறங்கிச் சென்றாள்.

—அக்டோபர்-1952

# மண்ணாசை

ந. பிச்சமூர்த்தி

இதுதான் என் வீடு. இதற்கு எதிர்த்தாற்போல இருக்கிற காலி மனை, வீட்டைச் சேர்ந்தது. காலி மனையை ஒட்டித் தொடர்ந்திருக்கிறதே சவுக்கண்டி, அது காலி மனையைச் சேர்ந்தது.

பதினைந்து வருஷத்துக்குப் பிறகு டில்லிக் கம்பளிச் சட்டையைப் போட்டுக்கொண்டு தெரு வழியாக வந்தபொழுது—வந்தே இருக்க வேண்டியதில்லை; புத்தி என்பது சாதாரணமாக எல்லாருக்கும் எப்பொழுதும் இருப்பதில்லை—தெருவில் இருந்த இரண்டொரு நாய்கள் என்னை விரைக்கப் பார்த்தன. இந்த ஊர் ஆள் அல்ல என்று அவற்றுக்கு நிச்சயமாகத் தெரிந்திருந்தது போல் கண்ணின் மணிகள் நிலைத்து நின்றன. ஆனால் இவன் அந்நியன், கடிக்காவிட்டாலும் குலைத்தேனும் விரட்டத் தக்கவன் என்ற அபிப்பிராயம் திட்டமாக உருவாகவில்லை. தொண்டை வரையில் வந்த குரைப்பு, தொண்டைக் கதிர் கருகியது போல் வெளிவரவில்லை; கால் கெண்டைச் சதைக்கோ உடுப்புகளுக்கோ அபாயம் இல்லை என்ற தைரியத்தில் வீட்டை நோக்கி நடந்தேன்.

தைரியம் என்றால் எதிரியை மறந்து விடவேண்டும்; நினைப்பில் வரக்கூடாது. எதிரியின் படைப்பலம் என்ன, எந்த இடத்தில் இருக்கின்றன என்று வேவு பார்க்க ஆள் வைத்துவிட்டுத் தைரியமாக இருக்கிறான் என்றால் அர்த்தம் இல்லை; குலைக்கிற நாய் கடிக்காது; அப்பொழுது கடிக்கிற நாய் குலைக்காமல் இருக்குமோ? இந்த மாதிரி தைரியந்தான் என்னிடம் இருந்தது. நடுவில் நடுவில் திரும்பிப் பார்த்துக்கொண்டே முன்னேறினேன். ஒரு நாய் பத்தடி தூரம் பின் தொடர்ந்தது. மற்றொரு நாய் பதினைந்தடி தூரம் வந்துவிட்டு நடு ரோட்டில் மண்ணைச் சேர்த்துக்கொண்டு படுக்கப் பிள்ளையார் சுழி போட்டது. நமக்கு மெத்தை மேடாக இருக்க வேண்டும். அதற்குப் பள்ளமாக இருக்க வேண்டும். இதனால் மேடும் பள்ளமும் ஒன்றுதான் என்று சொல்லிவிட முடியுமா? அல்லது சுகத்தைக் காண ஒரே வழிதான் என்று சொல்லிவிட முடியுமா? எப்படியானால் என்ன? என் தைரியம் ஊர்ஜிதமாகிவிட்டது. வீடு வந்துவிட்டது.

ஒரு வார்த்தை: வீடு வந்ததா? நான் போனேனா?—பாஷை என்னும் கருப்பைக்குள் கருத்து புகுந்திருக்கும்பொழுது தலைகீழாகத்தான் இருக்குமா? அல்லது கருத்தை மறைப்பதுதான் உயர்ந்த நடையா? தொனி என்றால் இதுவா?

வீடு எப்பொழுதும் போலத்தான் இருந்தது; பதினைந்து வருஷ காலத்தில் சின்னப் பெண் உருமாறிப் போனது போலவும் இல்லை;

இறங்கு முகமாக இருக்கும் கிழவியைப் போலவும் இல்லை. பழந்திண்ணை அப்படியே இருந்தது.

திண்ணையில் வாத்தியார் உட்கார்ந்துகொண் டிருந்தார். புகை இருந்தால் நெருப்பு அங்கே கட்டாயம் இருக்கும் என்பார்களே, அது மாதிரி எதிரில் உட்கார்ந்திருந்த பையனைக் கொண்டு அவர் வாத்தியார் என்று கணித்தேன். வாசலில் வந்து ஒரு நிமிஷம் தயங்கினேன்.

"யாரைப் பார்க்கிறீர்கள்?"

"சாமியை."

"அவர் இல்லை."

"அவர் சம்சாரம்?"

"அவரும் இல்லை."

நான் திரும்பலாமா என்று நினைப்பதை அறிந்துகொண்டுவிட்ட வாத்தியார் மூக்குக் கண்ணாடியைக் கழற்றி வைத்தார்.

"உட்காருங்கள். வந்துவிடுவார்."

போவது போலப் பாசாங்கு செய்தேனே ஒழிய, திரும்பும் அபிப்பிராயம் எனக்கு இல்லை. வெள்ளத்தில் வீழ்ந்தவன் துரும்பைப் பிடிப்பான் என்பார்களே, அந்த மாதிரி வாத்தியாரின் வார்த்தைகளில் தொற்றிக்கொண்டு திண்ணையில் உட்கார்ந்தேன்.

"சின்னசாமி, புத்தகத்தை வை. இவரோடு கொஞ்சம் பேசுகிறேன்."

சின்னசாமி திறந்திருந்த புத்தகத்தை அப்படியே கவிழ்த்து வைத்துவிட்டு—புத்தகத்தை மூட எவ்வளவு நேரம் பிடிக்கும்?—கூரையில் செருகியிருந்த கிட்டிப் புள்ளை எடுத்துக்கொண்டு ஓடி விட்டான்.

கிட்டிப்புள் எடுத்த இடத்தை நோக்கிக் கண் சென்றது. வரிசையாகக் குளவிக் கூடுகள் நாலைந்து, வேலைக்குச் சென்றுவிட்ட ஏழைக் குடியானவர்களின் வீடுகளைப் போல இருந்தன. ஒன்றாவது மூடியிருக்க வேண்டுமே; இல்லை. தேவைக்கு மிஞ்சிய வீடுகள் கட்டிக் கிடப்பது போல இருந்தன.

"ஏன் ஸார், குளவி முட்டையிடுமா? இல்லாவிட்டால் நம்மைப் போல் முழுக் குழந்தையாகப் பெறுமா?"

"இதெல்லாம் பாட திட்டத்தில் இல்லை. ஜாடையாகச் சொல்வது புரிகிறது. சாமி இருக்கிறாரே, அவர் ரொம்ப மதமதார் எருமை மாடு என்று நான் சொல்லப்படாது. ஆனால் அப்படித்தான். வீடு வாசல் ஒன்றிலும் பிடித்தம் கிடையாது. சுத்தமாக இருக்கவேண்டும் என்ற நினைப்பெல்லாம் கிடையாது. எங்கள் வீட்டை வந்து பாருங்களேன். உங்களுக்கு, ஜோலி இருக்குமோ என்னவோ? இதோ கோவிலுக்குப் பின்னாலேதான்; வாடகை வீடுதான். கிளிக் கூண்டு மாதிரி இருக்கும். இந்தக் குளவிக் கூடுகள் மூன்று வருஷமாக இருக்கின்றன. கேட்பார் கிடையாது. வீட்டை அவ்வப்போது ஒட்டடை அடித்துச் சுத்தமாக வைத்துக்கொள்ள வேண்டும் என்று சொப்பனங்கூடக் காண மாட்டார்."

"அப்படி இருக்காது. குளவிக் கூடுகள் கட்டுகிற வீட்டில்தான் பிள்ளைக் குட்டிகள் பிறக்கும் என்பார்கள்."

"அப்படியா? எனக்குத் தெரியாதே!"

''பாடத் திட்டத்தில் இதெல்லாம் சேர்ந்திருக்காது. மண்கூடு கட்டினால் பெண்கள் பிறக்கும் என்பார்கள்; அரக்குக் கூடாக இருந்தால் பிள்ளைகள்.''

''அதெல்லாம் இருக்கலாம். எல்லாவற்றுக்கும் ஓர் எல்லை வேண்டும். இவருக்கு மூன்று மண் கூடாகிவிட்டன. பாடம் சொல்லிக் கொள்கிறானே, அரக்குக் கூடு அவன் பெரியவன். இனிமேலாவது வீட்டைச் சுத்தமாக வைத்துக்கொள்ள வேண்டாமா?''

வாத்தியார் கர்ப்பத் தடை பிரசாரகரா என்ன என்று நினைத்துக் கொண்டு குறிப்பின்றி எதிரே பார்த்தேன்.

சவுக்கண்டிக்கு முன்னிருக்கும் மனையில் பக்கத்து வீட்டுக்காரர் வந்து நுழைந்தார். அதிலிருந்த வைக்கோற்போரிலிருந்து கற்றை கற்றையாக வைக்கோலை உருவிப் போட்டுச் சுருட்டி எடுத்துக்கொண்டு வீட்டுக்குத் திரும்பினார்.

''அந்த இடத்தை வாடகைக்கு வாங்கிக்கொண்டிருக்கிறாரா?''

''அதைத்தான் சொன்னேனே. பூசனிக்காய் போவது தெரியாது; கடுகைப்பற்றி ஆராய்வார். ஐந்து ரூபாய்க்குக் குறைந்து முடியாதென்றால் மூன்றரைதான் என்று கொக்கைப் போல் ஒரு காலால் நிற்கிறார். அதற்கும் விதியற்றுச் சொல்லிக் கொடுக்கிறேன். இதைக் கோட்டை விட்டுவிட்டார்.''

எனக்குத் திடீரென்று வெறிபிடித்து விட்டது. விட்டத்தின் ஓரத்தில் இருந்த குளவிக் கூடுகளை எல்லாம் ஒன்று விடாமல் பெயர்த்துத் தள்ளினேன். கூட்டுக்குள் குஞ்சுகள், முட்டைகள் இருந்தால்-மாட்டின் வலிக்கு மாட்டுண்ணி இரக்கப்பட்டால் - பூகம்பம் யாருக்கு இரக்கம் காட்டுகிறது? இரக்கம் என்பதே வாச்சாங்குள்ளி ஆட்டம் மாதிரி. தோற்கிறவன் ஜயிப்பதற்குச் செய்யும் சூழ்ச்சி. கூடுகள் பொலபொலவென்று விழுந்து பூகம்பம் குலுக்கிய வீடுகளைப் போல இறைந்து கிடந்தன.

வாத்தியார் என்னை வெறிக்கப் பார்த்துக்கொண்டே இருந்தார்.

''அதோ அவருக்குப் பேர் என்ன?''

''சாமிசா.''

''சாமிசாவா?''

''ஆமாம். அப்படித்தான் அவருக்கு வருகிற தபாலில் எல்லாம் விலாசம் எழுதியிருக்கு.''

''ஊரார் தபாலை எல்லாம் பார்க்கிறதுகூட உங்கள் வேலையா?'' என்று கேட்டுக்கொண்டே திண்ணையை விட்டிறங்கி, சாமிசா வீட்டுக்குப் பாய்ந்தேன்.

சாமிசா வீட்டுவாசலில் நின்று பார்த்தால், நடுவில் இருக்கும் முற்றம் தெரியும். சாமிசா பசுமாட்டு வாயில் வைக்கோலைத் திணித்துக்கொண்டிருந்தார். நான் ஒன்றுமே பேசாமல் முற்றத்தையும் அவரையும் மாட்டையும் மாறிமாறிப் பார்த்துக்கொண்டே இருந்தேன். இரண்டொரு நிமிஷமோ யுகமோ யார் கண்டது? மாடு, முற்றம் ஒன்றும் தென்படவில்லை.

''யாரு ஸார்?''

அந்தக் குரல் என்னைத் தட்டி உலுக்கி எழுப்பிற்று. இங்கே எதிர்த்த வீட்டுக்கு வந்தேன் என்று சொல்ல வந்தவன், ''நீங்கள் யார் ஸார்?'' என்று கேட்டுவிட்டேன்.

''இந்த வீட்டுச் சொந்தக்காரன்.''

பதில் சொன்னபோது தலையை ஒரு மாதிரியாகச் சாய்த்துக் கொண்டு நின்றார்; தலைமயிர் சண்டைக் கோழிக் கழுத்து மயிரைப் போல் சிலுப்பிக்கொண்டது.

''இந்த வீட்டுக்குச் சொந்தமென்றால் பக்கத்து வீட்டு மனையில் என்ன வேலை?''

''நீர் கேட்க வேலை என்ன? நீர் யாரு?''

''நான் - நான் - வீட்டுச் சொந்தக்காரன்.''

''தெரியும்டா!'' என்று கழுத்தைப் பிடித்துத் தள்ள வந்துவிட்டான். எங்கள் சத்தத்தைக் கேட்டு அல் அயல்காரர்கள் கூடிவிட்டார்கள். பேச்சு, செயலாக மாறியதும் குறுக்கிட்டார்கள்.

எனக்கு ஆத்திரம் பொங்கிக்கொண்டிருந்தது. கையாலாகதவனுக்கு ஆளத் தெரியாது— எதுவானால் என்ன, வீடு, வாசல், மனைவி, பணம்..பாத்திரம் அறிந்து, பிச்சை மாத்திரந்தான் இடவேண்டும் என்பதில்லை. கொதிப்பு வெடிக்கும் கட்டம்.

அப்போது கூட்டத்துக்கிடையே ஒருவர் தலையை நுழைத்தார். அமளிக்கிடையே கண் கலங்க நிற்கும் என்னைப் பார்த்தவர் சாமி!

நான் அவரைப் பார்த்தேன். உறுத்துப் பார்த்தேன்; மௌனமாகப் பார்த்தேன்.

''எப்பொ வந்தீங்க? எல்லாம் போக இவரோடு உங்களுக்கு என்ன தகராறு?''

நான் வாயைத் திறக்கவில்லை.

''இவன் யாரய்யா, கம்பளிச் சட்டையைப் போட்டுக் கொண்டு? இவன் வீட்டுச் சொந்தக்காரனுமே—இவனு? அப்போ நீர் யாரு?''

சாமி அவருக்கு எதுவும் பதில் சொல்லவில்லை; ''நீங்க வாங்க பேசிக் கொள்ளலாம்'' என்று சொல்லி, என்னை அழைத்துக்கொண்டு போனார். உண்மையில் கையைப் பிடித்து இழுத்துக்கொண்டு போனார்.

திண்ணையில் வாத்தியார் பையனுக்குப் பாடம் சொல்லிக் கொடுத்துக்கொண்டிருந்தார்.

''ஏன் வாத்தியார் ஸார், நீங்க இவர் கிட்டே என்ன சொன்னீங்க?''

''நீங்கள் வெளியில் போயிருப்பதாகச் சொன்னேன்.''

''இவர் யாரு தெரியுமா?''

''தெரியாதே!''

''இவர் கிட்டே இருந்துதான் இந்த வீட்டை வாங்கினேன்.''

என் கொதிப்பு வெடித்தது.

''உங்களுக்கு லாயக்குப்படாது, அலிக்குப் பெண்ணைக் கொடுத்தாற்போல.''

''குசாலாக எடுத்துக்கொள்ளுங்கள். அதற்காகவா வந்திருக்கிறீர்கள்?''

என் நாடி எல்லாம் ஒடுங்கிப் போச்சு. மோட்டாரில் பெட்ரோல் இருந்தால் அல்லவா வண்டி ஓடும்?

''இவர் திண்ணையில் உட்கார்ந்திருந்தார். குளவிக் கூடுகள் கண்ணில் பட்டன. அவற்றை உடைத்தெறிந்தார். எதிர்த்த மனையைப் பார்த்தார். பக்கத்து வீட்டுக்காரரோடு சண்டைக்குப் போய் விட்டார். சாமிசா இப்படி அக்கிரமம் செய்திருக்கிறுன் என்று நான் சொன்னேன்'' என்றுர் வாத்தியார்.

''வக்கில் வீட்டுக்குப் போய் நோட்டீஸ் கொடுத்துவிட்டுத்தான் வருகிறேன்.''

''நோட்டீஸ், மண்ணுங்கட்டி; தீயை வைத்து வைக்கோல் போரையும் அவன் வீட்டையும் கொளுத்தவேண்டாம்?''

''அதெல்லாம் முடியாதவர்கள் சட்டத்தின் பலத்தைத்தானே தேட வேண்டும்? தேடுகிறேன். அதெல்லாம் இருக்கட்டும். வீட்டில் உட்கார்ந்து ஆற அமரப் பேசுவோமே.''

''வீட்டில் உட்கார மனம் இல்லை. சல்லிசாகக் கல்லை விலைக்கு வாங்கித் தாத்தா கட்டின வீடு. மோரும், வறட்டியும் பாட்டி விற்று வாங்கினது எதிர்மனை என்பார்கள்.''

''திண்ணையில் உட்கார்ந்து சொல்லுங்களேன். நின்றுகொண்டே பேசினுல்?''

''நாய் வந்து குந்துமா உங்கள் வீட்டிலே, ரோசம் மானம் இல்லாதவர்களோடு..!''

அவர் கோபம் அடையவே இல்லை.

''இப்பொழுது பாதிப் பணம் கொடுத்தாலும் வீட்டைத் திருப்பித் தந்துவிடுகிறேன். பாக்கி பிறகு தரலாம். எனக்காக நீங்கள் படுகிற வேதனையைப் பார்த்தால்..''

திசை மாறிப் போய்விட்ட ஞாபகம், 'அப்போதுதான் வந்தது. வீட்டை விற்றுப் பத்து வருஷமாகிவிட்டன. டில்லியில் வேர் விட்டாயிற்று. மாஜி வீட்டைப் பார்க்க மனசுக்கு ஆசை. ஆசை நிறைவேருவிட்டால் கோபம், தாபம், ஆத்திரம். 'மனமே, படு, படு. சொன்னதைக் கேட்டாயா? இந்த ஊரில் இறங்கும் வேலை இல்லை என்று சொன்னேனே, கேட்டாயா?'

''இதோ போய்ப் பணத்தை எடுத்துக்கொண்டு வருகிறேன்'' என்று கூறி, ரெயில்வே ஸ்டேஷனை நோக்கிக் கிளம்பினேன்.

ஒவ்வொருவரும் அடுத்தவனை முட்டாளென்று நினைக்கிருர்கள். ஆனுல்—!

—ஏப்ரல், 1961

# பாத்திமா பெற்ற பிள்ளை

'ஜமீலா'

"பாத்திமா பீவி, மணியார்டர் வந்திருக்கிறது." பரிசயமான குரல் சைக்கிள் மணியின் ரீங்காரத்தினூடே தெருவில் எழுந்ததும், இடியாப்ப மாவைப் பிசைந்துகொண் டிருந்த பாத்திமா இடியாப்ப உரலை மாடத்தில் வைத்துவிட்டுக் குடிசைக்கு வெளியே தலையை நீட்டினாள்.

"என்ன நல்ல சேதி கொண்டாந்திருக்கீங்க?"—ஆர்வத்துடன் கேட்டுக்கொண்டே அன்பு சுரந்த விழிகளால் தபால்காரரை மலங்கமலங்கப் பார்த்தாள் பாத்திமா.

"பத்தொன்பது ரூபாய் வந்திருக்கிறது."

"அல்லாவே!" வானத்தை நோக்கி மானசிகமாக நன்றியை அருளாளனுக்குச் செலுத்திவிட்டு, "யாரப்பா அந்தப் புண்ணியவான் அனுப்பிச்சுது?" என்று உவகையுடன் கேட்டாள் கிழவி.

"மஜீத் சாஹேப்."

"ஹா!" திகைத்துப் போனாள் பாத்திமா.

"கொள்ளை கொள்ளையாச் சம்பாதிக்குதில்லே? அதான் சுளை சுளையாக மவன் கிட்டேந்து வந்துட்டிருக்கு!" கலகலவென்று சிரித்த தபால்காரர் மணியார்டர் பாரத்தை முன்நீட்டினார். தன் பெருவிரல் ரேகை புரட்டிய பாரத்தைத் திருப்பிக் கொடுத்துவிட்டுப் பணத்தை ஆசையுடன் பெற்றுக்கொண்டபோது பாத்திமாவின் கால்கள் ஏதோ நடுங்கின. ரூபாய் நோட்டுகளை மாடத்தில் வைத்துவிட்டு, "அளவற்ற அருளாளனும் நிகரற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ் ஒரு குறையும் உனக்கு வைக்கமாட்டான்! நீ நல்லா இருப்பே!" என்று உணர்ச்சி பொங்க மகனை வாழ்த்தியதும் பொலபொலவென்று சிதறியது விழிநீர். ஆனந்தப் பெருக்கினால் சென்று மறைந்த காலத்தின் சுவடுகளே அவளுக்குப் புலப்படாமல் போயின.

"போஸ்ட்!" வாசலில் மறுமுறை எழுந்த குரல் குடிசைக்குள் ஊடுருவிப் பாய்ந்து பாத்திமாவின் செவிகளை மோதியதும் அந்த முதியவளின் நெஞ்சம் திக்கென்றது.

"கடுதாசியா வந்திருக்கு?"

"ஆமாம்."

''கொஞ்ச முன்னுடிதான் அந்த நாமக்காரத் தபால்காரர் வந்து பணம் கொடுத்துட்டுப் போனாரு.''

''இது இரண்டாவது பட்டுவாடா. இந்தாங்க கடுதாசி.'' திண்ணைப்படியிடம் கடிதத்தை வைத்தார் தபால்காரர்.

''கடுதாசியைப் படிச்சுத்தான் சொல்லுங்களேன். நானோ நாலு எழுத்துப் படிக்காத இடியாப்பக்காரி!'' பக்கென்று சிரித்தாள் பாத்திமா.

''அதற்கென்ன?'' கடுதாசியை எடுத்து வாசிக்கலானார் தபால்காரர்.

''அன்புள்ள அம்மாவுக்கு ஆதாப்.

என்னிடம் மிஞ்சியிருந்த பத்தொன்பது ரூபாயை உங்களுக்கு இன்றைக்கு மணியார்டர் செய்துவிட்டேன். அதைப் பெற்றுக்கொண்டு இந்த மூத்த மகன் நல்வாழ்வுக்கு ஆண்டவனிடம் வாழ்த்துங்கள். தற்சமயம் நான் இருக்கும் நிலையில் இனி ஆறேழு மாதங்கள் வரையில் என்னிடமிருந்து கடிதமோ காசோ எதிர்பார்க்க வேண்டாம்.

தங்கள் அன்பு மகன்,
மஜீத்.''

மகனின் கடிதம் கூறிய செய்தியைச் செவிமடுத்த பாத்திமாவின் சப்த நாடிகளும் ஒடுங்கிவிட்டன. மதி மருண்டது.

தாயின் நெஞ்சம் தகித்தது. அப்படியே சோர்ந்து போய் விட்டாள். ''பெற்ற வயிறும் உடன் பிறந்த தம்பிமார்களும் உயிரோடிருப்பதை மறந்துவிட்டதா உன் பாழும் மனசு?'' பாத்திமாவின் மேனி பதறியது. மனவேதனை மார்பில் வலியை உண்டாக்கியது. அடிவயிற்றில் எழுந்த காந்தலும் நெடுமூச்சும் அவள் உடலை உலுக்கின.

கடிதத்தை மடித்துத் தன் மடிச்சீலைப் பைக்குள் திணித்துக் கொண்டாள். துப்பட்டியை எடுத்து மேனியைப் போர்த்துக்கொண்டு குடிசைக் கதவைக் கூடத் தாழிடாமல் தன் குடும்பத்து உபகாரியும், உள்ளூர் மசூதியின் இமாமுமான சுலைமான் சாஹேபின் இருப்பிடத்தை நோக்கி நடக்கலானாள்.

தெய்விகம் இலங்கும் மசூதியின் மண்டபத்தில் திருக்குரானை ஓதிக்கொண்டு அமைதியில் மூழ்கிக் கிடந்த சுலைமான் சாஹேப் அந்தி நேர வேளையில் வாசற்படியிடம் வாடி வதங்கி நின்றிருந்த பாத்திமாவைக் கண்டதும் திடுக்கிட்டார்.

''சாஹேப்!'' துயரத்தைத் தாளாமல் விம்மிய பாத்திமாவின் தோற்றம் சுலைமானைத் திக்குமுக்காடச் செய்தது.

''பொல்லாக் கடலுக்குக் கொண்ட கணவன் பலியான வேளையில் பச்சிளஞ் சிறுசுகளோடு நடுத்தெருவில் நின்ற இந்த விதவைக்குக் கைகொடுத்துக் கரையேற்றிய புண்ணியவானைத் தேடி வந்திருக்கிறேன் நான். இந்தத் துர்ப்பாக்கியவதிக்கு வந்து சேர்ந்த மற்றொரு விபத்தைக் கேளுங்களேன், சாஹேப்!'' ஓவென்று பிலாக்கணமிட்டுக் கொண்டே இடுப்பில் இருந்த மடிச்சீலைப் பையைத் திறந்து அதில் இருந்த கடிதத்தை எடுத்து, அவர் முன் வைத்து விக்கி விக்கி அழலானாள் பாத்திமா.

நீர்மல்கி நின்ற நயனங்களை மடலின்மீது ஓட்டிய சுலைமான் மௌனம் சாதித்தார். மேலெழுந்த அவர் நெடுமூச்சின் ஓசையை

மண்டபம் மெல்ல எதிரொலித்தது: ''மூத்தவனின் போக்கு மறுபடியும் விபரீதமாகப் போயிடுச்சே.''

முகத்தை இரு கைகளால் பொத்திக்கொண்டு அங்கலாய்த்த பாத்திமா தொடர்ந்தாள். ''மஜீதுக்கு நேரான வழியைக் காட்டி இந்த ஏழையின் ஜீவனத்துக்கு அடிக்கல் போட்ட புண்ணியவனுச்சே நீங்கள்! நரகக் குழியில் என் மகன் மறுபடி விழ்ந்துவிட்டானே! எந்தக் கேடு கெட்ட குட்டி போட்ட சொக்குப் பொடியில் மயங்கிவிட்டானே? லொடலொடத்துப் போன இந்த வயசில் குடும்பச் சுமையை என் தலையில் கட்டிவிட்டானே!'' பாத்திமாவின் நைந்துபோன நெஞ்சிலிருந்த துயரத்தின் இடி முழக்கம் மண்டபத்தை அதிரவைத்தது.

''மனத்தைப் போட்டு அலட்டிக்காதீங்க, பாத்திமா பீவி!'' இதமாக ஆறுதல் அளித்த சுலேமான், ''உங்களுடைய கஷ்டங்களைப் பகிர்ந்துகொள்ள இந்த மசூதி இமாமுக்குத் தடை போடமாட்டீர்கள் என்று நம்புகிறேன். பள்ளியில் படிக்கும் உங்கள் குழந்தைகளின் கல்விப் பொறுப்பு என்னைச் சேரட்டும். தவிர, மாதமாதம் என்னால் இயன்ற வரை தங்களுக்குப் பணவுதவி புரிய முன்வந்திருக்கிறேன் நான். சரி தானே?'' என்று இதமாகக் கூறி, அந்த அபலையை அனுப்பிய சுலேமான் குரானைக் கையிலெடுத்துக்கொண்டு உரக்க ஓதலானார்.

அக்கரையில் உள்ள எஜமானுக்கு உள்ளூரில் பணியாற்றி வந்த பறங்கிப்பேட்டை அப்துல் காதர் சாஹேப் உலகமறியாத பருவத்திலிருந்த மைந்தர்களைத் தம் 'பீவி'யிடம் ஒப்படைத்துவிட்டு, நடுக்கடலிலே இறுதிச் சலாம் வைத்த சோகக் கதையை அந்தக் கப்பலில் அக்கரையிலிருந்து வந்துகொண்டிருந்த பறங்கிப்பேட்டைப் பாய்மார்கள் இன்றுகூட நாத்தழுதழுக்க விவரிப்பார்கள்.

குடும்ப ஜோதி திடீரென்று அணைந்தவுடன் பாத்திமா பீவி உன்மத்தம் பிடித்தவள்போல ஆகிவிட்டாள். ஜீவன நிழல் தந்த ஆலமரம் விழுந்தபின் அதன் விழுதுகள் தனக்கு வருங் காலத்தில் உறுதுணையாக நிற்கும் என்ற திட நம்பிக்கையோடு பாத்திமா வருஷங்களை ஓட்டிக்கொண்டிருந்த காலத்தில், மூத்த மகனான மஜீத் சோதாக்களின் சகவாசத்தினால் சென்றுகொண்டிருந்த போக்கு அந்த விதவையைக் கலக்கக் கடலில் மூழ்கச் செய்தது.

பிறந்த நாள் முதல் விதவைக் கோலம் பூணும் வரையில் சகல சௌபாக்கியங்களுடன் வாழ்ந்த பாத்திமா பீவி அதே ஊரில் இடியாப்பக் கடையைத் துவக்கித் தன் ஜீவன யாத்திரையை மேற்கொண்ட நிகழ்ச்சி பொல்லாத விதி புரிந்துவிட்ட கண்ணாமூச்சி ஆட்டம் என்றே கூறவேண்டும். அந்த 'நாசுக்கான' சமயத்தில்தான் உள்ளூர் மசூதியில் இமாமாகத் திருப்பணியாற்றி வந்த ஹாஜீ சுலேமான் சாஹேபின் உதவி அந்த அபலைக்கு வலுவில் கிட்டிய சுபச் செய்தி, அல்லாஹுத்தாலாவின் ஆசி என்றே முடிவு கட்டவேண்டும்.

காலாடிகளின் கும்பலுடன் ஊதாரியாகத் திரிந்த மஜீத்தை உதவியாளனாக அமர்த்திக் கொண்டார் சுலேமான். அந்தக் கட்டிளங் காளைக்குத் தேவையான சாயாவுக்கும் பீடி கட்டுகளுக்குமுள்ள செலவைத் தாமே மேற்கொண்டு அந்த அரபுக் குதிரைக்குக் கடிவாளம் போட்டு அடக்கினார். வருஷக் கடைசியில் வடக்கேயுள்ள தொழிற்சாலையில் நல்லதொரு வேலை வாங்கித் தந்து, அந்த 'நவா'பை ரெயிலிலும் ஏற்றி அனுப்பிவிட்டார் அந்தப் புண்ணியவான்.

நாகபுரியில் புது வாழ்வை ஆரம்பித்த மஜீத் தன் தாய்க்கு மாதமாதம் நாற்பது ரூபாய் அனுப்பிக்கொண்டிருந்த 'சீரிய செய'லுக்குக் காரணம் இமாம் சுலேமான் போட்ட 'ஜபர்தஸ்த்' கட்டளையே ஆகும்.

ஒழுங்காக வந்துகொண்டிருந்த 'மாசப் பணம்' திடீரென்று நின்றுவிடப் போகும் அவலச் செய்தி பாத்திமாவை நடைப்பிணமாக மாற்றி அவந்தரையில் ஆழ்த்திவிட்ட சம்பவத்தை முன்பே கூறினோம்.

ஆறு மாதங்கள் உதிர்ந்து விட்டன.

தபால்காரரின் சைக்கிள் மணியோசை குடிசைக்கு வெளியே எழுந்தபோது திகில் அடைந்த பாத்திமா கதவைத் திறந்து கழுத்தை வெளியே நீட்டி விழிகளை ஓட்டினாள்.

ஆறுமாத காலமாக உதாசீனமாக நடந்துவிட்ட மூத்த மகன் கருணை கூர்ந்து அனுப்பின 'மாசப் பணம்' அவள் கரங்களுக்காகக் காத்திருந்தது. பாத்திமாவின் உடல் காந்தியது, நிலை தடுமாறியது.

'அரை வருஷம் அநாதைகளாகத் தவிக்கவிட்டுக் கவலையில்லாமல் காலம் தள்ளிய அந்தக் காதகன் அனுப்பின 'பிச்சை'யை அவனைப் பெற்றவள் கையேந்தி வாங்கிக்கொள்வாள் என்று நினைத்தான்? சைத்தான் தாயின் இதயம் ஓலமிட்டது. ரத்த நாளங்கள் துடித்தன.

''தபால்கார ஐயா! எவன் அந்தப் பணத்தை அனுப்பினானோ அதை அவனுக்கே திருப்பி அனுப்பிவிடுங்கள், ஐயா.'' வெறுப்புடன் கெஞ்சிய பாத்திமாவைக் கண்ட தபால்காரர் தத்தளித்துப் போனார்.

''உங்களுக்கு யார் மேலேயோ கோபம் வந்துடுச்சு, அம்மா. நாளைக்கு வந்து போறேன்'' என்று சொல்லிவிட்டுச் சிரித்துக்கொண்டே அகன்றார் தபால்காரர்.

ஆலவாயை அழிக்கச் சிலம்பின் செல்வி புறப்பட்டதுபோலத் தன் நெஞ்சில் கொழுந்து விட்டெரிந்த ஆத்திரத்தையெல்லாம் கொட்டிவிட இமாம் சாஹேபின் இல்லத்தை நோக்கி ஆவேசத்துடன் புறப்பட்டாள் பாத்திமா.

''பெற்றவளின் நினைப்பு மகனுக்குத் திடீரென்று வந்துவிட்டது, சாஹேப். பணத்தை வாரி அனுப்பியிருக்கிறான்.'' ஏளனமாகப் பேசிய பாத்திமா வறட்டுச் சிரிப்பை எழுப்பினாள்.

''ஓகோ, அப்படியா? ரொம்பச் சந்தோஷமான செய்தியை இன்று என் காதில் போட்டீங்க.'' முறுவல் பூத்தார், சுலைமான்.

''பிச்சைக் காசை அனுப்பினவன் முகத்திலேயே வீசியெறியும்படி தபால்காரரிடம் சொல்லிவிட்டேன்.'' பாத்திமாவின் அதரங்களில் வெறுப்புத் தாண்டவமாடியது.

''தாய்க்கு மகன் அன்புடன் அனுப்பிய காணிக்கைக்கு நேர்ந்த கதியா இது?'' தாடியை உருவினார் சுலைமான்.

''தாயையும் உடன் பிறந்த ஜீவன்களையும் மாசக் கணக்கில் பட்டினி போட்டு வதைத்த படுபாவி ஆச்சே அவன்!''

கோடையிடிபோல் கிளம்பின பாத்திமாவின் கர்ஜனையைத் தாளமுடியாத இமாம் சாஹேப் கவிழ்ந்த சிரத்துடன் மௌனம் சாதித்தார். அவர் நெற்றிக் கோடுகள் நெளிந்தாடின, இமைகள் படபடத்தன. குல்லாயை எடுத்து வழுக்கைத் தலையை மேல் துண்டினால் தடவிக்கொண்டே, ''பாத்திமா பீவி!'' என்று கனிந்த குரலில் பேசலானார்.

''மனிதன் புரிந்த தவறுதல்களை நீங்கள் மன்னிப்பீர்களானால் அருளாளனும் அன்புடையோனுமாகிய அந்த அல்லாஹ்-த்தாலா உங்களுடைய தவறுதல்களை மன்னித்து விடுவான். இந்தப் பொன்னான வரிகள் தாம் இன்று விடியற்காலை என் பார்வையில் பட்டது.''

குல்லாயை எடுத்துச் சிரத்தில் வைத்துக்கொண்டு பயபக்தியுடன் மாடத்தில் இருந்த திருக்குரானைக் கையில் எடுத்துக்கொண்டார்.

''சற்றுமுன் சொன்னேனே அந்தப் பொன்னான மொழியைச் செயலில் காட்டும் தருணம் உங்களுக்கு வந்துவிட்டது, பாத்திமா பீவி!''

மலங்க மலங்க விழித்த பாத்திமா விரல்களைப் பிசைந்து கொண்டு நின்றாள்.

ஆழ்ந்த நெடுமூச்சுடன் தொடர்ந்தார் சுலைமான்; ''ஆறு மாதங்களுக்கு முன்னால் நடந்த கதை, எந்தத் தினத்தன்று மகனிட மிருந்து வந்த கடிதம் உங்கள் இதயத்தில் ரணத்தை உண்டாக்கி யதோ அதே நாளன்று அவனிடமிருந்து எனக்கு வந்த கடிதம் இந்தக் கிழவனைத் துயரக்கடலில் மூழ்கடித்துவிட்டது. அந்தக் கடிதத்தில் தேங்கிக் கிடக்கும் கண்ணீரைத் தாயாகிய நீங்கள்தாம் துடைக்கப் போகிறீர்கள்.''

திருக்குரானை விரித்து அதிலிருந்த லிகிதத்தை எடுத்துப் படிக்க லானார் இமாம் சாஹேப்:

''அன்பு நிறைந்த இமாம் சாஹேப் அவர்களுக்கு மஜீத் எழுதிக் கொண்டது. அஸ்லாமு அலைக்கும்:

''கண்ணியமான குடும்பத்தில் மாணிக்கம் போன்ற தாயின் வயிற்றில் உதித்துப் பிறந்த ஊரிலே பண்பிழந்து மதியிழந்து மிகவும் கேடான வாழ்க்கையை மேற்கொண்ட இந்தப் பாதகனை மனிதனாக மாற்றி மான உணர்ச்சியுடன் வாழ்க்கை நடத்த வழிகாட்டிய செம்மலாச்சே நீங்கள்! தங்கள் ஆசிகளைப் பெற்று நாகபுரிக்கு வந்த நான் புது வாழ்வு துவக்கிய காலத்தில் பாழும் விதி புரிந்துவிட்ட நாடகத் தினால் மீளாத துன்பச் சுழலில் சிக்கிக்கொண்டேன். நல்லொழுக்கத் துடன் உழைத்து ஊதியம் பெற்று வந்த நாட்களில் தொழிற்சாலையில் நடந்த ஸ்டிரைக்கில் நிரபராதியான என்னைப் 'பலாத்காரத்தைத் தூண்டிவிட்டவர்களின் ஜாபிதா'வில் சம்பந்தப்படுத்தி ஆறுமாதச் சிறைவாசத்தை அளித்துவிட்டது நீதிமன்றம். இந்த ஏழை அனுப்பும் ஆறுமாத வருவாயை எதிர்பார்த்து ஏங்கி நிற்கும் என் தாய் என்ன என்ன அல்லல்கள் அநுபவிக்கப் போகிறாளோ? அந்த ஓர் எண்ணம் என் நெஞ்சைச் சல்லடையாகத் துளைக்கிறது. என்னிடம் மிஞ்சி நின்ற சில ரூபாய்களை என் அன்பு அன்னைக்கு இன்று தபாலில் அனுப்பி விட்டுத்தான் போலீஸ் வானில் ஏறி உட்கார்ந்தேன்.

''இந்தச் சோக விஷயம் என் அருமைத் தாயின் செவிகளுக்கு எட்டாதவாறு பார்த்துக் கொள்ளும்படி தங்களைத் தாழ்மையுடன் கேட்டுக்கொள்கிறேன்.

மஜீத்

கடிதத்தை மடித்துத் தம் பைக்குள் வைத்துவிட்டு இமைகளை இறுக்க மூடிக்கொண்டு மௌனமாக நின்றார், இமாம் சுலைமான் சாஹேப்.

சிறிது நேரம் கடந்தது, அமைதியில்.

பாத்திமா ஸ்தம்பித்துவிட்டாள். படபடவென்று அடித்துக் கொண்டது நெஞ்சக் கூடு. கண்கள் இருண்டன, கால்கள் தடுமாறின. ''என் அருமைச் செல்வமே! பெற்றெடுத்த பிள்ளையைப் புரிந்து கொள்ளாமல் போயிடுச்சே, இந்தப் பாழும் வயிறு!'' நெஞ்சம் துண்டு களாகப் பிளந்துவிடும்படி 'ஓ'வென்று பிலாக்கணமிட்ட தாய் பொல பொலவென்று விழிநீர் உகுத்தாள்.

—அக்டோபர், 1962

# நடுத்தெரு நாகரிகம்

கு. ப. ராஜகோபாலன், பி.ஏ.

''சோப்பு இல்லாமல் எத்தனை நாள்—தலைக்குத் தைலம் இல்லாமல் மயிர் கொத்துக் கொத்தாகக் கொட்டுகிறது'' என்று என் மனைவி அன்று விடிந்த பிறகு மூன்றாவது தடவையாகச் சுவரைப் பார்த்துப் புகார் செய்ய வாய் திறந்ததும் நான் சடக்கென்று எழுந்து பேனாவை மூடி வைத்துவிட்டுக் கடைக்குப் போனேன்.

''வாங்கோ, ஸார். என்ன பத்து நாளாய் இந்தப் பக்கமே காணோமே!'' என்று கடைக்காரர் குசலப்பிரச்னம் செய்தார்.

கொஞ்ச நாட்களுக்குமுன் அவர் சிறு பாக்கிக்காகக் காலையிலும் மாலையிலும் ஆள் அனுப்பினதிலிருந்து பணம் வந்த பிறகு ரொக்கமாகத்தான் வாங்குவது என்று நான் அந்தப் பக்கம் போகவில்லை. மனைவியின் புகாரும் அதனால்தான். ஆனால் குடும்பத்தில் நாம் செய்து கொள்ளும் பிரதிக்ஞைகள் எங்கே நீடிக்க முடிகிறது?

''ஏதாவது ஒரு சோப்புப் பெட்டியும் தைலச் சீசாவும் கொடுங்கள். கொஞ்சம் அவசரம்'' என்றேன் நான்.

''போகலாம், ஸார்; உட்காருங்கள். கடைப் பையன் கொஞ்சம் வெளியிலே போயிருக்கிறான். வந்ததும் எடுத்துத் தரச் சொல்கிறேன். ஆமாம், ஜப்பான்....'' என்று ஆரம்பித்தார்.

அன்று சாமான்கள் இல்லாமல் மனைவியின் முகத்தைப் பார்ப்பதில்லை என்று தீர்மானித்து, எழுதவேண்டிய விஷயம் மறந்து தொலைத்தாலும் தொலையட்டும் என்று கடைவாசலில் இருந்த ஸ்டூலில் உட்கார்ந்தேன்.

மாலை நேரமாதலால் திருவல்லிக்கேணி பைகிராப்ட்ஸ் ரோடில் ஒரே கூட்டம்: இரைச்சல். கடற்கரைக்குப் போகிறவர்களும் வருகிறவர்களும், தினசரி விற்கும் பையன்களும், மோட்டார்களுமாகத் தெருவு ரணகளப்பட்டது.

தெருவைப் பார்த்துக்கொண்டே என்னுடன் ஏதோ வம்பளந்து கொண்டிருந்த கடைக்காரர் திடீரென்று எதிர்ச்சிறகில் நடைபாதையில் போய்க்கொண் டிருந்த யுவதிகளின் கூட்டம் ஒன்றைப் பார்த்துக் கைதட்டி, ''மாடம், மாடம்!'' என்று கூப்பிட்டார்.

அந்தக் கூட்டத்திலிருந்து யுவதி ஒருத்தி தலையைத் திருப்பிப் பார்த்து, ''ஓ!'' என்று உதடுகளைப் பிரித்துப் புருவங்களைத் தூக்கிக்

கூப்பிட்டதற்குப் பதில் சொல்ல, தோழிகளிடம், ''ஒரு நிமிஷம்!'' என்று சொல்லி அங்கேயே நிறுத்திவிட்டுக் குதிகால் உயர்ந்த நடையுடன் ஒரு பாய்ச்சல் பாய்ந்து கடைப்புறம் வந்தாள்.

வரும்பொழுதே முகத்தில் ஒரு புன்னகையை வரவழைத்துக் கொண்டு, ''குட் ஈவினிங்!'' என்றாள்.

கடைக்காரரும் முறுக்காக, ''குட் ஈவினிங்'' என்று சொல்லிவிட்டு, ''பணம் வந்து சேரவில்லையே! போன முதல் தேதியே மணியார்டரை எதிர்பார்ப்பதாகச் சொன்னீர்கள். இந்த முதல் தேதியும் போய் விட்டது. இன்று தேதி பதினைந்து; பாக்கி ரொம்ப நிற்கிறதே!'' என்று தடதடவென்று பேசிக்கொண்டே போனார்.

யுவதி, பக்கத்தில் நான் இருப்பதைப் பார்த்துக் கொஞ்சம் கலவரமடைந்து, ''அது எப்படி ஆகிவிட்டது என்றால்....'' என்று சமாதானம் சொல்ல ஆரம்பித்தாள்.

கடைக்காரர் கடுமையாகக் குறுக்கிட்டு, ''நீங்கள்தான் சொல்லிக்கொண்டு வருகிறீர்களே, மூன்றும் மாதமுதல்! இதோ பாருங்கள்: நான் கணக்கு முடிக்கவேண்டியிருக்கிறது'' என்று சொல்லிக் கொண்டே அவள் முகத்தை உற்றுக் கவனித்தார்.

யுவதி, நான் அங்கே இருக்கிறேன் என்று சங்கடப்படுவதைக் கண்டு நான் பரிதாபமடைந்து, ''ஸார், கொஞ்சம் காரியம் இருக்கிறது; போய்விட்டுப் பிறகு வருகிறேன்'' என்று சொல்லி எழுந்தேன்.

கடைக்காரர் விடவில்லை.

''இல்லை, ஸார்; இதோ வந்துவிட்டேன். ஒரு நிமிஷம். நானே எடுத்துக் கொடுக்கிறேன், வாங்கிக்கொண்டு போய்விடுங்கள்'' என்று சொல்லி என்னை உட்காரும்படி சமிக்ஞை செய்துவிட்டு அவளைப் பார்த்து, ''அம்மா, இனிமேல் என்னால் பொறுக்க முடியாது'' என்றார்.

யுவதி வெலவெலத்துப் போனாள்.

''முதல் தேதி கட்டாயம் பணம் வந்துவிடும். முழுப் பாக்கியும் தீர்த்துவிடுகிறேன். பிறகு பணம் கொடுத்தே வாங்கப் போகிறேன்!'' என்று சொல்லிக்கொண்டு அவர் முகத்தை, 'இதோடு என்னை விட்டு விடுங்கள்' என்ற பாவனையாகப் பார்த்தாள்.

ஆனால் அவர் விடுவதாகத் தெரியவில்லை.

''செய்கிறபோது அப்படிச் செய்யுங்கள், தாராளமாக. எனக்கும் தொல்லையில்லை. ஆனால் இப்போது பாக்கி ரொம்ப இருக்கிறது. மாதமும் மூன்றுக்குமேல் ஆகிவிட்டது. நான் கடன் கொடுப்பதை நிறுத்தியும் மாதம் இரண்டாகப் போகிறதே. பாவம், வேண்டிய சாமான்கள்கூட இல்லாமல்..'' என்று 'வேறு இடத்தில் ரொக்கம் கொடுத்து வாங்குகிறீர்கள்' என்பதைச் சொல்லாமல் சொல்லிக் காட்டினார் கடைக்காரர்.

யுவதியின் முகம் வேர்த்துவிட்டது. உதட்டைக் கடித்துக் கொண்டு கைக்குட்டையால் முகத்தைத் துடைத்துக்கொண்டாள். ஒரு நிமிஷம் மெய்ம்மறந்தவள்போல நின்றாள். பிறகு திடீரென்று தூக்கி வாரிப்போட்டது போல் நினைவு பெற்றுச் சமாளித்துக் கொண்டாள்.

''முதல் தேதி பாருங்களேன்—இந்தத் தடவை நிச்சயம்—இனிமேல்—''

''முடியாதம்மா! நாளைக்கே எப்படியாவது கணக்கைத் தீர்த்து விடவேண்டும்'' என்று கடைக்காரர் இரக்கமின்றிக் கண்டிப்பான குரலில் சொன்னார்.

விஷயம் தலைக்குமேல் போய்விட்டது என்று அவள் கொஞ்சம் திடமடைந்து, ''தயை செய்து முதல் தேதிவரையில் பொறுங்கள்!'' என்றாள்.

''அன்றும் பழைய ஸால்ஜாப்புத்தானே!''

அவள் கண்களில் நீர் ததும்ப, ''இல்லை, ஸார், எப்படியாவது அன்று கொடுத்துவிடுகிறேன்'' என்றாள்.

''நிச்சயமாகவா?''

''நிச்சயம்.''

''சாமான்கள் எங்கே வாங்குகிறீர்களோ?'' என்று அவர் விஷமமாகக் கேட்டார்.

அவள் மனம் குழம்பி உளறலாக, ''இல்லையே! அதாவது, ஒன்றிரண்டு..கிட்டயே!'' என்று வாய்க்கு வந்ததைச் சொன்னாள்.

கடைக்காரருக்குக் கடைசியாக இரக்கம் வந்தது. இவ்வளவு வாட்டினது போதும் என்று எண்ணினவர்போல, ''சரி; போய் வாருங்கள். ஞாபகம் இருக்கட்டும், குட் ஈவினிங்!'' என்றார்.

அவள் பிழைத்தோம் என்று நிம்மதியுடன், ''குட் ஈவினிங்!'', என்று அரைகுறையாக முணுமுணுத்துவிட்டுப் பழைய குதிப்புடன் ரோடைத் தாண்டித் தன் தோழியருடன் போய்ச் சேர்ந்து கொண்டாள்.

முதலிலிருந்தே எனக்குத் தர்மசங்கடமாக இருந்தது. என்னை வைத்துக்கொண்டு அவர் ஒரு பெண்ணை அப்படி அவமானப்படுத்தினது எனக்குக் கொஞ்சம் கோபமாகக்கூட இருந்தது.

''என்னை வைத்துக்கொண்டு அவள் மானத்தை வாங்கிவிட்டீர்களே! மிகவும் தப்பு, ஸார்.''

''என்ன தப்பு? பணத்தைச் சரியான காலத்தில் கொடுக்கும் திறமையிருந்தாலல்லவா இந்த நவீன அலங்காரங்களையும் அழகுகளையும் செய்துகொள்ள வேண்டும்? மூன்றாவது மனிதரை வைத்துக்கொண்டு சொன்னால்தான் தைக்குமென்று சொன்னேன்.''

''நீங்கள் செய்தது மிகவும் கண்ணியக் குறைவான காரியம். நான் எதிர்பார்க்கவில்லை, நீங்கள், படித்தவர்கள், இப்படிச் சொல்வீர்கள் என்று..''

''கண்ணியமாய் எவ்வளவு தூரம் இருக்கலாம், சொல்லுங்கள்.''

''அப்படிப் பார்க்கப் போனால் சட்டப்படியல்லவா நீங்கள் வசூல் செய்யவேண்டும்? இப்படி அவமானப்படுத்துவதற்கு உங்களுக்கு என்ன அதிகாரம்?''

கடைக்காரர் சிரித்துவிட்டார்.

''இந்தக் கேள்வியைக் கேட்கத் தெரியாமலா அவள் சும்மா இருந்தாள் என்று நினைக்கிறீர்கள்?''

''சட்டப்படி—'' என்று நான் ஆரம்பித்தேன்.

அவர் குறுக்கிட்டு, ''இருங்கள், சட்டப்படி என்று பேசலாம், ஸார்; ஆனால் நடைமுதலில் அது உபயோகமில்லை'' என்றார்.

''யாருக்கு உபயோகமில்லை?''

''இரண்டு கட்சிக்குந்தான் என்று வைத்துக்கொள்ளுங்களேன். சட்டப்படி போனால் ஒன்றுமில்லையா என்ன? அன்று கோர்ட்டுக்குப் போயிருந்தேன். மூன்று மாதம் வீட்டு வாடகைப் பாக்கி என்று ஒரு பெண்ணுக்கு 'ஸம்மன்ஸ்' வந்தது. நவநாகரிகப் பெண், ஸார். கோர்ட்டுக் கூட்டத்தின் முன்னிலையில் வந்து நிற்பதுமட்டும் கௌரவமா?''

''வாடகையைப்பற்றி ஏதாவது தகராறு இருக்கலாம். அதில் என்ன அவமானம்?''

''நடவடிக்கைக்குச் சம்பந்தமில்லாமல் நீங்கள் பேசுகிறீர்கள்.''

''நீங்கள் பேசுவது, நீங்கள் நடந்துகொண்ட முறை சரியானது என்பதை ஸ்தாபிக்க முயலுவதுபோல் அல்லவா இருக்கிறது?''

''என் முறையில் ஒன்றும் பிசகில்லை. அவளுக்குச் செலவில்லாத முறை. அந்தப் பெண்ணே கோபித்துக்கொள்ளவில்லை. நீங்கள் ஏன் அவஸ்தைப்படுகிறீர்கள்?''

''எப்படித் தெரியும் உங்களுக்கு?''

''இந்தமட்டில் நான் விட்டுவிட்டது அவளுக்கு எவ்வளவோ சந்தோஷம் அல்லவா?''

''யார் அந்தப் பெண்?'' என்று எனக்கு அதற்குமேல் கேட்க வேண்டும்போல் இருந்தது; கேட்டேன்.

''மலையாள தேசத்துப் பெண். பிரஸிடென்ஸி காலேஜில் படிக்கிறாள். நாலைந்து பெண்களாகச் சேர்ந்து ஒரு வீட்டை அமர்த்திக் கொண்டு கூட்டாக வசிக்கிறார்கள். ஊரிலிருந்து சமையற்காரியையும் கூட்டிக்கொண்டு வந்திருக்கிறார்கள். மாசந்தோறும் பணம் வருகிறது; வராமல் இல்லை. எந்த முட்டாள்களோ தவறாமல் அனுப்புகிறார்கள். இந்தப் பெண்கள் அதைச் சோப்பிலும், பவுடரிலும், செருப்பிலும் லாண்டரியிலுமாகச் செலவழிக்கிறார்கள்.''

''இருந்தாலும் நீங்கள் இப்படிப் பேசும்படி, என்ன பிரமாதமாக உங்களுக்கு இவள் தரவேண்டும் அப்படி?''

''முப்பத்தைந்து ரூபாய், ஸார்!''

நான் திடுக்கிட்டுப் போனேன்.

''முப்பத்தைந்தா? அப்படி என்ன உங்களிடம் வாங்கமுடியும்? இன்றெல்லாம் சோப்பு வாங்கினாலும் மாதம் என்ன ஆகிவிடப் போகிறது? நீங்கள் விற்கும், பெண்களுக்கு வேண்டிய சாமான்கள் எல்லாம் சேர்ந்து ஒரு மாசத்துக்குப் பத்து ரூபாய்கூட ஆகாதே!''

என் அறியாமையைப் பார்த்து இரக்கப்படுபவர்போல் கடைக்காரர், ''ஐயோ பாவம், உங்களுக்கு எப்படித் தெரியும்? நீங்கள் நினைப்பதுபோல் ஜாப்தா அவ்வளவு சுருக்கமில்லை. சோப்பென்றால் ஒரு தினுசா? சீப்பென்றால் ஒன்றுதானா?—கீழே விழுந்துவிட்டால் போச்சு! 'டூத் பேஸ்ட்' உயர்ந்த ரகம் இப்பொழுது என்ன விலை தெரியுமா உங்களுக்கு? நீங்கள் வாங்கினால் அல்லவா தெரியப் போகிறது?'' என்றார்.

நான் ஒன்றும் பதில் சொல்ல முடியாமல் திகைத்துப் போய் உட்கார்ந்திருந்தேன். பெரிய வீட்டுச் சேவகன்போல் தென்பட்ட ஒருவன் ஒரு சாமான் ஜாப்தாவைக் கொண்டு வந்து அவரிடம்

நீட்டினுன். கடைக்காரர் அதைப் படித்துக்கொண்டே, ''பையன் வெளியே போயிருக்கிறுன்; சற்றுக் கழித்து வா. ஜாப்தா இருக்கட்டும்'' என்ருர்.

''இருக்கட்டுங்க; லாண்டிரிக்குப் போய்விட்டு வந்திடறேனுங்க'' என்று சொல்லிவிட்டு அவன் போய்விட்டான்.

''மாதிரிக்கு இந்தப் பெண்மணியின் ஜாப்தாவைக் கேட்கிறீர்களா?''

''பெண்மணியின் ஜாப்தாவா இது?''

''பின் என்ன? ஷாப்பு வியாபாரம் முக்கால்வாசி நவநாகரிகப் பெண்களால்தான் நடைபெறுகிறது, ஸார். நீங்கள் வாங்கியா ஆகிறது என்று நினைக்கிறீர்கள்? பெண்கள்தான். நேரில் சிலர் வருவார்கள். அவ்வளவு முன்னேற்றம் அடையாதவர்கள் ஆட்களை அனுப்புவார்கள். சுலோசஞ அவர்களின் ஜாப்தாவைக் கேளுங்கள், கொஞ்சம். ரொம்ப விசேஷமாக இருக்கும்.''

எனக்கு ஏற்பட்ட வெறுப்பை மறைத்துக்கொண்டு, ''வேண்டாம், வேண்டாம்! அந்தப் பெண்ணின் ரகசியங்களை நீங்கள் பகிரங்கப்படுத்துவதுபோல் ஆகும். நவீன யுகத்தில், டாக்டர், லாயர் இவர்களைப் போல ஷாப்புக்காரரும் தனி மனிதர்களின் (பெண்களின்) அந்தரங்கத்தைப் பகிர்ந்துகொள்ளும் ஆட்களாக இருக்கிருர்போல் இருக்கிறது. அந்தப் பொறுப்பை நீங்கள் துர்விநியோகம் செய்யக்கூடாது'' என்றேன்.

''பொறுப்பாவது மண்ணுங்கட்டியாவது, ஸார்! கடன் கொடுத்தாக வேண்டியிருக்கிறது. அதிலும் பெண்கள் முடியாதென்ருல் கேட்பதில்லை. சாமான்கள் கொடுத்ததற்குரிய காசை வாங்குவது கடைசியில் பிரம்மப் பிரயத்தனமாகிவிடுகிறது.''

''இன்னும் வேறென்ன?''

''அதை ஏன் கேட்கிறீர்கள், கடைக்காரர்கள் தொல்லையை? அது ஒரு தனிக் கதை! ரொக்கங்கூடக் கொடுக்கவேண்டியிருக்கிறது, ஸார்!''

''நாசமாய்ப் போச்சு! அது வேரு?''

''ரிக்ஷாவில் வந்து இறங்கி ரிக்ஷா வாடகை கொடுக்கச் சொல்லுவார்கள், இல்லாதுபோனல்—'' என்று அவர் அந்தத் தனிக் கதையை ஆரம்பித்தார்.

''போதும், ஸார்!'' என்றேன் கண்டிப்பாக.

சிறிது நேரம் யோசனை செய்துகொண்டிருந்துவிட்டு, ''அடடா, நம் பெண்கள் இப்படி நடுத்தெருவில் வந்து நின்ரு அவமானப்பட வேண்டும்?'' என்றேன்.

கடைக்காரர் உடனே கிண்டலாக, ''ஸ்திரீ சுதந்தரம், ஸார்! எந்தச் சுதந்தரத்துக்கும் உடனே பொறுப்புக்களும் கவலைகளும் வந்துவிடுமல்லவா?'' என்ருர்.

''இவையெல்லாமா பொறுப்புக்கள், கவலைகள்? இதுவா சுதந்தரத்தின் விளைவு?''

''பின் வேறெதை நீங்கள் எதிர்பார்க்கிறீர்கள்? என் அநுபவத்திலிருந்து சொல்லிவிடுகிறேன்: ஷாப்புக்குச் சாமான் வாங்கவராத நவீனப் பெண்களை இல்லை. ஆகையால் என்னுடைய வாக்குமூலத்தை

நீங்கள் நம்பலாம். மொத்தத்தில் சுருக்கமாகச் சொல்லுகிறேன்: வெளிக்குப் பகட்டாகத் திரிய, நவீனப் பெண் ரகசியமாக எந்த அவமானத்துக்கும் உட்படத் தயாராக இருக்கிறாள்.''

எனக்கு அதற்கு மேல் தாங்கவில்லை.

''என்ன ஸார், தாறுமாறாகப் பேசுகிறீர்கள்? நீங்கள் சொல்வது சுத்தப் பிசகு. ஒரு சிலரை மனத்தில் வைத்துக்கொண்டு நீங்கள் பொதுப்படையாக எல்லாப் பெண்களையும் இப்படித் தூஷிப்பது தவறு. இல்லை, இல்லை? நீங்கள் சொல்வது அபாண்டம். நவீனப் பயிற்சிகூடப் பெண்ணுக்கு இயற்கையான குணத்தை மாற்ற முடியாது, தெரியுமா?''

''எனக்கு அந்தத் தத்துவமெல்லாம் தெரியாது, ஸ்வாமி! எனக்குத் தெரிந்ததை நான் சொன்னேன்.''

''தப்பு, ஸார், தப்பு! இருக்காது, இருக்க முடியாது—இருக்கக் கூடாது!''

''என்னென்னவோ சொல்கிறீர்களே! இருக்கக்கூடாது என்றால்—'' என்று அவர் மேலும் என்னைக் கிண்ட ஆரம்பித்தார்.

எனக்கு அங்கிருந்து போய்விட்டால் அந்தப் பரிதாபகரமான நினைப்பு மறக்குமோ என்று எண்ணம்.

''சரி, நான் வருகிறேன்'' என்று கிளம்பினேன்.

கடைக்காரர் சிரித்துக்கொண்டு, ''சாமான்கள் வேண்டாமா?'' என்றார்.

மனைவியின் நினைவு வந்தது.

''ஓ, மறந்துவிட்டேன்!'' என்றேன்.

''அப்படியா! பெண் என்றால்—'' என்று இழுத்துக்கொண்டு அவர் என் கையில் எடுத்துக் கொடுத்ததைச் சரியாகக்கூடப் பார்க்காமல் வீட்டுக்குப் புறப்பட்டேன்.

—ஜனவரி, 1942

# திருடனுக்குத் தீபாவளி இனாம்!

சங்கரராம்

கிருஷ்ணாபுரம் காவேரியின் வடகரையை ஒட்டி இருந்தது. நரிப்பாளையமும் அதன் தென்கரையை ஒட்டித்தான் இருந்தது. இருந்தாலும் இரண்டு இடங்களுக்கும் எவ்வளவு வித்தியாசம்! கிருஷ்ணாபுரத்தில் காவேரி ஆற்றிலிருந்து பிரியும் பெரிய கால்வாய்களும் சிறிய கால்வாய்களும் நிலத்தைப் பொன் விளையும் பூமியாக்கின. நரிப்பாளையத்தின் கரையோ தரைமட்டத்துக்குமேல் பதினைந்து அடி உயரத்துக்கு ஐந்தாறு மைல்களுக்கு ஆற்றை ஒட்டி ஓடியது! எப்போதாவது அதற்கும் நல்ல காலம் வரலாம். புல்டோசர் என்ற கருவியால் மேட்டைப் பள்ளமாக்கிப் பிறகு சமமாக்கி, நரிப்பாளையமும் பொன் விளையும் பூமி ஆக்கப்படலாம். ஆனால் இன்றைக்கு அதில் புன்செய் விவசாயந்தான் செய்யமுடியும். மழை இல்லாவிட்டால் இதுவும் நின்றுவிடும். அந்த ஊர் மக்கள் அக்கரையிலுள்ள கிராமங்களுக்கே கூலி வேலை செய்யப் போகவேண்டும்.

சில சமயங்களில் கூலி வேலை கிடைக்காமலும் போய்விடும். அப்போது கஷ்டந்தான். ஆனாலும் கட்டுக்கு அடங்காதவர்கள் சிலர் நரிப்பாளையத்தில் இருந்தார்கள். வாய்ப்புக் கிடைத்தபோது, அக்கரைக்குச் சென்று வாழைத் தாறுகளையும் தென்னங் குலைகளையும் திருடுவது வழக்கம். மற்றும் சிலர் அதிக லாபத்தை உத்தேசித்து வசதியாக இருந்த வீடுகளிலும் நுழைவார்கள். ஒரு காலத்தில் கோடையில் ஆற்றுநீர் குறைந்திருக்கும்போதுதான் இரவில் அக்கரைக்குச் செல்ல முடிந்தது. இப்பொழுதோ நரிப்பாளையத்துக்கு இரண்டு மைல் தூரத்தில் ஆற்றுக்கு ஒரு பாலம் போட்டுவிட்டதனால், நினைத்த வேளையில் அக்கரையில் இருந்த கிருஷ்ணாபுரம் முதலிய கிராமங்களுக்கு நரிப்பாளையத்து மக்களுக்குப் போய்வர வசதி ஏற்பட்டுவிட்டது. திருட்டுக்களும் அதிகரித்தன. நரிப்பாளையத்தில் சிறைக்குச் சென்று வந்தவர்கள் பத்து ஆண்டுகளுக்குமுன், நூற்றுக்கு ஐந்து பேர் இருந்தார்கள். இப்பொழுது பதினைந்து.

இந்தத் தருணத்தில் மாயாண்டி சேலம் சிறையிலிருந்து விடுதலை செய்யப்பட்டு வந்தான். அவனுக்குத் தன் ஊர் ஊராகவே தோன்றவில்லை. மழையும் பெய்துகொண்டிருந்தது; அலைந்து திரியமுடியவில்லை. இந்தச் சங்கடத்தில் தீபாவளிக்கு இன்னும் ஒரு நாள்தான் இருந்தது. ஊரில் அனைவரோடும் கூடித் தீபாவளியைக் கழித்து அவனுக்கு வெகு காலமாயிற்று. கையிலும் காசு இல்லை. திண்ணையில் உட்கார்ந்தவாறு அவன் மரத்தூணை நகத்தால் கீறிக்கொண்டிருந்தான். வெளியே வந்த

அவன் தாய் அவனைக் கவனிக்கவில்லை. எப்பொழுதோ தன் மகனல்ல என்று அவனை விலக்கிவைத்துவிட்டாள். இப்போது மழை அதிகரித்ததனால் அவன் நண்பன் மதுரை ஒதுங்குவதற்குத் திண்ணைக்கு வந்தான்.

''இந்த மழையிலே எங்கடா புறப்பட்டே?'' என்றான் மாயாண்டி.

''கிருஷ்ணபுரத்திலே கன்னைய செட்டியார் வீட்டுக்கு மூணு படி பால் கொடுத்திட்டு வர்றேன். என்னைப் போல எத்தனையோ பேரு கிட்டே பால் வாங்கிக்கிட்டு இருக்காங்க. இன்னும் தீபாவளி ஒரு நாள் தானே இருக்குது? மருமகன் தீபாவளிக்கு வருவான் இல்லையா? அதுவும் முதல் தீபாவளி. எவ்வளவோ தினுசு பலகாரம் பண்ணுறாங்களாம்.''

''உனக்கும் கொஞ்சம் கொடுப்பாங்க'' என்றான் மாயாண்டி.

''அதுங்க கொடுக்கிற மூஞ்சியா?'' என்றான் மதுரை.

''அப்போ நாமே எடுத்துக்கவேண்டியதுதான்.''

''நாளும் கிழமையுமா அதெல்லாம் வேண்டாம், மாயாண்டி. ஆண்டவன் கொடுத்ததை வச்சுக்கிட்டுச் சந்தோஷப்படலாம்.''

''என்ன சந்தோஷமோ போ. என் கையிலே சல்லிக் காசு இல்லே. ஒரு பத்து ரூபாய் இருந்தால், தீபாவளியை ஜோராய்க் கொண்டாடிட்டு, மறுபடியும் எங்க வீட்டுக்குப் போயிடுவேன்.''

''அட பாவி! அப்படியெல்லாம் பேசாதே, மாயாண்டி. இப்போ நாங்கள் எல்லாம் பிழைக்கலே ஊரோடு ஊராய்?''

''எனக்கு மனம் மாறிப் போச்சு, மதுரை. இனி ஜெயிலுதான் எனக்கு வீடு. எப்போதாவது வெளியே வந்தாலும் எல்லாரையும் ஒரு வாட்டி பாத்திட்டு மறுபடியும் உள்ளே நுழையவேண்டியதுதான். அதுவே எனக்குச் சுகமாயிருக்குது.''

''அட பாவி! உனக்கு ஏண்டா இந்தப் பைத்தியம் பிடிச்சுது?''

''என்னைக் கேட்டால், நான் என்ன சொல்வேன்? பிடிக்க வச்சவங்களைக் கேளு'' என்று மாயாண்டி சொன்னபோது, அவனுக்கு முகத்தில் திடீரென்று சோகம் படர்ந்தது.

இப்போது மாயாண்டியின் தாய் வரவே, அவர்களுடைய பேச்சு நின்றது. மழையும் சிறிது ஓயவே, மதுரை எழுந்து போனான். ஆனால் பல ஆண்டுகளுக்குமுன் நடந்த சம்பவங்கள் அவன் மனத்தை உறுத்தத் தொடங்கின.

மாலையில் மாயாண்டி ஊரை ஒரு சுற்றுச் சுற்றிப் பார்த்தான். சிலர் பரிதாபத்தோடு அவனைப் பார்த்தனர். மற்றும் சிலர் அருவருப்போடு முகத்தை அப்புறம் திருப்பிக்கொண்டனர். இவை இரண்டையும் மாயாண்டி சட்டை செய்யவில்லை. தனக்கு ஒன்றுவிட்ட பெரியம்மாள் வீட்டண்டை வந்தபோது வீட்டுக்குமுன், பிளந்தும் பிளவாததுமாய் ஒரு பெரிய புளியமரத்தின் அடிப்பாகம் கிடந்தது.

''பெரியம்மா!'' என்று மாயாண்டி அழைத்தான்.

உட்புறத்திலிருந்து வந்த பெரியம்மாள் அவனைக் கண்டதும், ''ஐயோ!'' என்று தன் மார்பில் அடித்துக்கொண்டாள். கண்கள் கலங்கிவிட்டன; ''எப்போடா வந்தே?''

''ரெண்டு நாளாச்சு, பெரியம்மா. அது இருக்கட்டும். இந்தப் புளியங்கட்டையை ஏன் இப்படி விட்டுவிட்டீங்க? கோடாலியைக் கொண்டா, நான் பிளந்து தள்ளிடறேன்.''

''உனக்கு வேலை வேறே வைக்கச் சொல்றயாடா? இது யார் செஞ்ச பாவமோ? திண்ணையிலே உட்காருடா. பணியாரம் செஞ்சிருக்கேன். கொஞ்சம் தின்பே.''

''பணியாரம் வேண்டாம், பெரியம்மா, சாப்பாடுதான் வேணும்.''

''சாப்பிடாமலா இருக்கே?''

''சாப்பிடாமல் இப்படி யானையாட்டம் எப்படி இருக்கமுடியும்?'' என்று மாயாண்டி சிரித்தான். ''நீ கோடாலியைக் கொண்டா, பெரியம்மா, இருட்டுவதற்குள்ளே இதைப் பிளந்து தள்ளிட்டு, அப்பறம் சாப்பிடறேன்.''

மறுக்கமுடியாமல், அவனுடைய பெரியம்மாள் கோடாலியைக் கொணர்ந்து கொடுத்தாள். அடுப்பில் வைக்கக்கூடிய அளவுக்கு அந்த மரத்தை மாயாண்டி சிராய்களாக உடைத்துவிட்டான். அப்புறம், ஏதேதோ விஷயங்களைப்பற்றிப் பேசிவிட்டு வயிறார உண்டான்.

''பிறகு, மெதுவாகக் காவேரியின் புதுப் பாலத்தை நோக்கிச் சென்றான். வெற்றிலை மூட்டைகள் அடங்கின இரட்டை மாட்டு வண்டிகளும் சில லாரிகளும் அவன் எதிரில் வந்துகொண்டிருந்தன. அவனை அறியாமல் கடைசி மாட்டு வண்டியிலிருந்து ஒரு வெற்றிலை மூட்டையை எடுத்துக்கொள்ளலாமா என்ற எண்ணம் பிறந்தது. இந்த எண்ணத்துக்குக் காரணம் அவனுக்கே புரியவில்லை. ஒருவேளை இதுதான் திருட்டுப் பைத்தியம் என்பதோ? எதையும் தொடாமல் பாலத்தைத் தாண்டிவிட்டான். ஆகாயத்தை நோக்கினான். இனி மழை வராது என்று தெரிந்தது.

கிருஷ்ணபுரம் இரண்டு மைலுக்குள்ளாகவே இருந்தது. வழியில், பாழடைந்த பிள்ளையார் கோயிலில் சற்றுப் படுத்து உறங்கலாம் என்று நினைத்தான். ஆனால், தரையை அவன் துணியால் தட்டியபொழுது உட்பக்கத்திலிருந்து 'புஸ்' என்று சீறும் ஓசை வந்தது.

''ஓ! உன் இடமா இது?'' என்று மாயாண்டி மேலே சென்றான்.

கிருஷ்ணபுரம் வந்துவிட்டது. அங்கே பெருமாள் கோயிலின் மண்டபம் விசாலமாகவும் துப்புரவாகவும் இருந்தது. உடனே மாயாண்டி துண்டை விரித்துப் படுத்துக்கொண்டான்.

மாயாண்டி விழித்துக்கொண்டபோது இரவு சுமார் இரண்டு மணி இருக்கும். கிருஷ்ணபுரம் முழுவதும் தூங்கிக்கொண்டிருந்தது. எவ்விதப் பூட்டையும் திறக்கக்கூடிய சாவிக் கொத்து அவனிடம் இருந்தது. ஆனால் அதற்கு வேலை கொடுக்கக்கூடாதென்று நினைத்தான். முதல் முதலாக அவனுடைய கண்ணில் பட்டது கோதண்டராம செட்டியாரின் சிறு கடை. அது தெருப்பக்கம் கடை, பின்பக்கம் வீடாக இருந்தது. அவருடைய வியாபாரம் மிகச் சொற்ப முறையில் நடந்தது. கடலை, பொரி, பாக்கு, வெற்றிலை, வாழைப்பழம் போன்றவையே கடையில் இருந்தன. ஜன்னல் வழியாக எட்டிப் பார்த்தான். மினுக்கு மினுக்கென்று ஒரு விளக்கு எரிந்தது. அந்த வெளிச்சத்தில் நன்றாகப் புலப்பட்டது நாமம் தீட்டிய ஒரு சிறு உண்டி. நிரம்பக் காசுகளைப் போட்டிருந்தாலும் அதில் இரண்டு மூன்று ரூபாய்களுக்குமேல் இருக்கவே முடியாது. அந்த உண்டியைத் தொடவேண்டும் என்ற எண்ணங்கூட அவனுக்கு இல்லை. பசியாக இருந்தால் கடனாகக் கூடத் தின்பண்டங்களை வழங்குபவர் அவர். வரும்போது, போக்கு வண்டிகளிலிருந்து ஒரு வெற்றிலைக் கட்டையாவது சுமந்து வந்து அவருடைய கடையில் போட்டிருக்கலாமே என்று அவனுக்குத் தோன்றியது.

பிறகு அவன் கன்னைய செட்டியாரின் வீட்டை நோக்கிச் சென்ருன். அது பெரிய மூன்று மாடி வீடு. கூடம்போல் விசாலமாக இருந்த அதன் திண்ணையில் பலர் உறங்கிக்கொண் டிருந்தார்கள். சிலரின் குறட்டையும் கேட்டது. மாயாண்டி தெருவில் மேலும் கீழுமாகச் சில தடவை நடந்தான். அப்போது, ''திருடன்! திருடன்!'' என்று கூக்குரல் முதல் மாடியிலிருந்து வந்தது. அதே நொடியில் ஒருவன் வீட்டிலிருந்து பெருமாள் கோயில் பக்கமாக ஓடினன். ஓட்டத்தோடு ஓட்டமாய் அவன் சட்டையிலிருந்து பணப்பை போன்ற ஒன்றை எடுத்துக்கொண்டு சட்டையைக் கீழே போட்டுவிட்டுச் சென்ருன்.

உடனே மின்னல்போல், மாயாண்டி வீட்டை ஒட்டியிருந்த சந்து வழியாகப் பறந்து ஒரு பர்லாங் தூரத்திலிருந்த மாந்தோப்பை அடைந்தான். இங்கே வருவதற்கு பலர் அச்சப்படுவார்கள் என்று அவனுக்குத் தெரியும். அதுவும் தவிர சிலர் திருடன் தெரு வழியாக வெகு தூரம் ஓடினதைக் கண்டதனல், மாந்தோப்பை அவன் ஒளியும் இடமாக ஒருவரும் கருதமாட்டார்கள். பெருமூச்சு வாங்குவது சிறிது தணிந்ததும், மாயாண்டி ஆச்சரியத்தில் மூழ்கினன். இன்றைக்குத்தானு தன் ஊர் 'அம்மா'சியும் கிருஷ்ணபுரம் வந்து, கன்னைய செட்டியார் வீட்டில் புகவேண்டும்? ஆனல், அந்தப் பயல் அதிர்ஷ்டக்காரன். அவன் எடுத்த பணப்பையில் இருபது முப்பதாவது இருக்கும் என்று ஊகித்தான். ஓர் ஐந்தோ பத்தோ கிடைத்தால், தீபாவளியைக் குஷியாகக் கழிக்கவேண்டுமென்று நினைத்தவனுக்கு இப்படியா நேர வேண்டும்?

'இனி செட்டியார் வீட்டில் நுழையும் முயற்சியை விட்டுவிடுவதா' அல்லது, ஒரு மணி ஆரப்போட்டு, மறுபடியும் ஒரு கை பார்த்துவிடுவதா? என்று சற்று ஆலோசித்தான். ஊரில் தீபாவளியைக் கொண்டாடும் வாய்ப்பு மறுபடியும் எப்பொழுது கிடைக்குமோ? பிறகு, 'ஆனது ஆகட்டும்? ஒரு கை பார்த்துவிடுவது' என்ற முடிவுக்கு வந்தான். உண்மையில் அவன் எதற்காகப் பயப்படவேண்டும்?

கோழி கூவும் நேரம் நெருங்கிக்கொண் டிருந்தது. இதுதான் அனைவரும் அயர்ந்து தூங்கும் சமயம் என்று மாயாண்டிக்குத் தெரியும். உடனே அவசர அவசரமாகக் கன்னைய செட்டியாரின் புழக்கடைக்குப் போனன். அங்கிருந்த ஒரு தென்னமரம் உயர்ந்து வளர்ந்து, மூன்ருவது மாடியின் கைப்பிடிச் சுவரின்மீது சாய்ந்தவாறு இருந்தது. தென்னையில் ஏறினன்; மெதுவாக மொட்டை மாடியில் இறங்கினன். மழை சரியாகப் பெய்யாமல் நின்றுவிட்டதனல் புழுக்கமாக இருந்தது. மாடியில் உட்புறத்திலிருந்து மூவர் காம்புக் கட்டில்களை மொட்டை மாடியில் இழுத்துப் போட்டுக்கொண்டு உறங்கிக்கொண் டிருந்தனர். உட்புறத்திலும் நாலைந்து பேர் தூங்கினர்கள். சுவரில் இருந்த சட்டங்களில் சில சட்டைகள் தொங்கின.

ஓசை செய்யாமல், ஒவ்வொரு ஜேபியாக அவன் சோதித்தான். ஒன்றில் ஓர் எட்டணுக் காசு இருந்தது. மற்றென்றில் ஒரு சிகரெட்டுப் பெட்டியும் ஒரு ரூபாய் நோட்டும் இருந்தன. அவற்றை மடியில் கட்டிக்கொண்டான். மற்றச் சட்டைகளில் ஒன்றும் கிடைக்கவில்லை. ''பணக்காரப் பொறுக்கிங்க!'' என்று தன் மனத்துக்குள் சொல்லிக்கொண்டே, இரண்டாவது மாடிக்கு இறங்கப் படி அருகில் வந்தான். பிறகு அங்கிருப்பவர்கள் கீழே இறங்காதபடி மூன்ருவது மாடிக்கு நுழையும் வாசற்கதவைத் தாழிட்டான். இப்போது படிகளில் கீழே இறங்கும் போதே, பலகாரங்களின் மணம் மூக்கைத் துளைத்தது. அந்தக் கதவுக்கு இருந்த பூட்டைத் திறக்க அவனுக்கு வெகு நேரமாகவில்லை. நெய்யின் வாசனை, உடனே சிலவற்றை எடுத்துத் தின்னும்படி அவனைத்

தூண்டியது; ஆத்திரத்தில், ஒரு கொப்பரையின்மீது கால் இடறிக் கீழே விழுந்தான். ஓசையைக் கேட்டு, கீழே படிகளுக்கருகில் படுத்திருந்த அந்த வீட்டுக் காவல்காரன் வேலன், ''உச்சு, உச்சு! என்ன சத்தம்? பூனையா?'' என்று சொல்லிக்கொண்டு மெல்ல எழுந்தான்.

இப்போது, பேச்சுமூச்சு இல்லாமல், மாயாண்டி, கைக்கு அகப்பட்ட பணியாரங்களை எடுத்துத் தின்றான். மேலே சோதிக்கவேண்டுமென்ற எண்ணத்தோடு, காவல்கார வேலன் படிகளுக்கு அடியில் இருந்த மின்சார விளக்கைப் போட்டான். வெளிச்சம் மாயாண்டியின் அறைக்கும் கதவுகளின் இடுக்கின்மூலம் தெரிந்தது. எந்த எந்தப் பட்சணம் எங்கெங்கே இருக்கிறது என்பதைக் கண்டுகொண்டான். அப்புறம் என்ன தோன்றியதோ தினுசு தினுசாகப் பட்சணங்களைப் பொறுக்கி, வேலனின் தலையில் போட்டான்: பயத்தால் வேலன் நடுங்கிப் போனதும், வாய்க்கு எட்டிய பலகாரத் தூளின் சுவை அவனைப் பிரமிக்கச் செய்தது.

''இரு, இன்னும் வருது'' என்று பூந்தி நிறைந்திருந்த ஒரு கொப்பரையை எடுத்து, அவன் தலையில் சாய்த்தான்.

''பூந்திமழை, பூந்திமழை'' என்றான் மாயாண்டி ஆனந்தமாக. வேலன் திக்குமுக்காடிக்கொண்டு, ருசியால் நாக்கையும் சப்பளித்துக் கொண்டு, ''ஆஹா ஊஹூ!'' என்று கூவினான். பூந்திமழை ஓய்ந்தபோது, கொப்பரையிலிருந்து ஒரு தங்கச் சங்கிலியும் தலைவழியாக அவன் கழுத்தில் விழுந்தது. ஒன்றும் புரியாமல் வேலன் தங்கச் சங்கிலியைத் தொட்டுத் தொட்டுப் பார்த்துக்கொண்டிருந்தான்.

இதற்குள் பலர் வந்து வேலனைச் சூழ்ந்துகொண்டனர். ஆனால் அவனால் பேசமுடியவில்லை. கன்னைய செட்டியார் அவன் கழுத்தில் இருந்த சங்கிலியை எடுத்தார், அதில் 'முத்தம்மாள்' என்ற பெயர் பொறித்திருந்தது.

''அட துரோகி! இந்தச் சங்கிலி உன் கழுத்தில் எப்படிடா வந்தது?''

''எனக்குத் தெரியாதுங்க; சத்தம் கேட்டது, எளுந்திருச்சேன். அப்பாலே என் தலையிலே பூந்திமழை பெஞ்சபோது....''

''பூந்தி மழையா?'' என்று அவன் தலையிலும் முகத்திலும் தூவிக் கிடந்த பூந்திப் பொடியைக் கண்டு கன்னைய செட்டியார் சிரித்தபோது, எல்லாரும் சேர்ந்துகொண்டனர்.

ஆனால் அனைவரையும்விடப் பலமாகச் சிரித்தபடி படிகளில் இறங்கி வந்துகொண்டிருந்தான் மாயாண்டி.

''பாவம் வேலனுக்கு ஒண்ணும் தெரியாதுங்க; சத்தத்தைக் கேட்டு அது மேலே வரப் பார்த்தது. எனக்கு என்னவோ தோணிச்சு, அதன் தலையிலே, கொப்பரையில் இருந்த பூந்தியைக் கொட்டணுமின்னு. அதுலே சங்கிலி இருந்ததுன்னு தெரிஞ்சிருந்தால், சத்தம் போடாமே நான் அதை எடுத்துக்கிட்டுப் போயிருப்பேனே!'' என்று மாயாண்டி வருத்தப்பட்டான்.

''அது வேறயா?'' என்றார் கன்னைய செட்டியார்.

''ஆமாங்க, எனக்கு ஒரு பத்து ரூபாக் காசாவது கிடைச்சிருந்தால், தீபாவளியைக் கொண்டாடிட்டுத் திருச்சிக்குப் போய் மறுபடியும் திருச்சி செயிலுலே பூந்திடறதுன்னு பிளான் போட்டுக்கிட்டேன். இவ்வளவு பெரிய ஊட்டுலே எனக்கு ஒரு பத்து ரூபா கிடைக்காமல் போச்சே!''

''நீ யாருடா?''

''நான் மாயாண்டிங்க. ஊர் நரிப்பாளையமுங்க.''

''அப்படிச் சொல்லு. இது என்ன அநியாயம்? ஒரு நாளிலே ஒரு வீட்டிலே இரண்டு திருட்டுக்களா? கொஞ்ச நேரத்துக்கு முந்தித் தானே ஒருத்தன் வந்து போனான்?''

''எனக்குத் தெரியுமுங்க. அவன் அம்மாசியிங்க. அவனும் நரிப் பாளையந்தானுங்க.''

''அட கடவுளே! இந்த நரிப்பாளையம் எப்போ ஒழியும்?''

''எல்லாந்தான் ஒளிஞ்சிட்டுதுங்களே. இன்னும் ஜாஸ்தி இருந்தால் நாலஞ்சு பேரு. நான் திருடறது உண்டுங்க. ஆனா, பொய் சொல்ல மாட்டேனுங்க.'' இப்போது சிலருக்குச் சிரிப்பு வந்தது.

''நீங்க சிரிங்க. ஆனா நான் சொல்றது மெய்தான். பத்து ரூபா கிடைச்சால், தீபாவளியை நல்லாக் கொண்டாடிவிட்டு, திருச்சி செயிலுக்குப் போகணுமுன்னு நினைச்சேன்.''

''எப்படிடா செயிலுக்குப் போகணுமின்னு வெட்கமில்லாமல் சொல்றே?''

''வெட்கமென்ன இருக்குதுங்க? செயிலுக்குப் போகாத திருடறவங்க எத்தனை பேர் இருக்காங்க, உங்களுக்குத் தெரியுமா? செயிலுக்குப் போனவங்களைவிட அவங்க பத்துப் பங்கு இருப்பாங்க.''

''சரி, உன்னைப் புதுப்பாளையம் போலீஸாரண்டை ஒப்புவிக்கவேண்டியதுதான்.''

மாயாண்டி சிரித்தான்.

''எனக்கு என்ன பயமுங்க? உண்மையாச் சொல்றேனுங்க, நான் பொய் சொல்லமாட்டேன். சேலத்திலே ரெண்டு வருசம் இருந்தேன், கோயமுத்தூருலே ரெண்டு வருசம். நெம்பர் இருபத்தேழுன்னு யார் வேணுமின்னாலும் சொல்லுவாங்க.''

''சரி, சரி, உன் கதையெல்லாம் வேண்டாம். மாணிக்கம், இவனைப் பிடித்துக்கொண்டு போக இரண்டு போலீஸ்காரர்கள் வேணுமின்னு ஏட் ஐயாவிடம் சொல்.''

''ஐயோ, விசயம் தெரியாமப் பேசுறீங்களே. என்னைப்பத்தி எனக்குக் கவலையே இல்லே. நீங்க போலீஸ்காரங்க கையிலே ஆப்பிட்டுக்கிட்டா, என்ன பாடுபடுவீங்க தெரியுமா? 'முத்தம்மா சங்கிலி பூந்திக் கூடையிலே எப்படி வந்திச்சு? யார் மேலே சந்தேகப்படுறீங்க? அவங்க பேர் என்ன?' என்றெல்லாம் துளைத்து எடுத்துடுவாங்க. அதனாலேதான் பெரிய பெரிய பங்களாவிலே இருக்கிறவங்களெல்லாம் ஆயிரம் ஐந்நூறு கொடுத்து இதைப் போன்ற சமாசாரங்களை எல்லாம் அடக்கிடுவாங்க. வீட்டுக்குள்ளே நூறு இருக்கும்; அதை எல்லாம் வெளியிலே விடலாமா? நான் பேச்சுத் தவறமாட்டேனுங்க. எனக்குத் தீபாவளி இனும் பத்து ரூபா கொடுத்திடுங்க. நான் உயிரோடு இருக்கிறவரையிலும் இந்தப் பக்கம் வரமாட்டேனுங்க'' என்றான் மாயாண்டி.

கன்னைய செட்டியார் அவன் வார்த்தைகளில் சிறிது அழுத்தம் இருந்தது என்பதை உணர்ந்தார். தம் தம்பியை அப்புறமாக அழைத்துச் சென்று இரகசியமாகப் பேசினார். தம்பி ஒரு பத்து ரூபாய் நோட்டைக் கொண்டுவந்து மாயாண்டியின் கையில் கொடுத்தார். மாயாண்டி வணங்கிவிட்டு வெளியே சென்றான்.

— *நவம்பர், 1968*

# நக்ஷத்திரக் குழந்தைகள்

பி. எஸ். ராமையா

"அப்பா! நக்ஷத்திரங்களுக்குக்கூட அப்பா உண்டோ?"

"உண்டு அம்மா!"

"அவர் யார் அப்பா?"

"ஸ்வாமி."

"ஸ்வாமியா, அப்பா? அவர்கூட உன்னைப் போலத்தானே இருப்பார்? நக்ஷத்திரம் ரொம்ப அழகாயிருக்கே. அவா அப்பாகூட அழகாகத்தானே இருப்பார்?"

"ஆமாம் அம்மா! ஸ்வாமியினுடைய அழகைப் போல வேறு யாருக்கும் அழகு கிடையாது."

"ஸ்வாமிகூட உன்னைப் போல நல்லவர்தானே?"

"ஆமாம்."

"ஆமாம்; எனக்குக்கூடத் தெரியறது. ஸ்வாமி ரொம்ப.. ரொம்ப நல்லவர்; நக்ஷத்திரமே பளிச்சின்னு அவ்வளவு நன்றாயிருக்கே. அவா அப்பா எப்படியிருப்பார்?"

"அவர் ரொம்ப நல்லவர். நம்மையெல்லாம்விடப் பெரியவர்."

"அப்பா! நக்ஷத்திரம் எப்போ பிறக்கும்?"

"சாயங்காலத்தில்."

"எப்படியப்பா அது பிறக்கிறது?"

"நாம் சத்தியத்தையே பேசுவதால்; நாம் ஒவ்வொரு தடவையும் ஓர் உண்மையைச் சொல்லும்போது ஒரு நக்ஷத்திரம் பிறக்கிறது."

"நான்கூட நிஜத்தையே சொன்னல் நக்ஷத்திரம் பிறக்குமா அப்பா?"

"ஆமாம் அம்மா! நீ ஒவ்வொரு தடவையும் நிஜம் சொல்லும் பொழுது ஒரு நக்ஷத்திரம் பிறக்கிறது."

"அப்பா!"

"என்ன அம்மா!"

"நம்ம ஊரிலே அவ்வளவு பேரும்—குழந்தைகள் எல்லாம்—நிஜத்தையே பேசினு எவ்வளவு நக்ஷத்திரம் பிறக்கும், நிறைய

(இரண்டு கைகளையும் விரித்துக் காட்டி) இவ்வளவு நக்ஷத்திரம் பிறக்குமோல்லியோ?''

''ஆமாம் அம்மா!''

அதைக் கேட்டவுடன் குழந்தை ரோஹிணி வேறொன்றும் பேசாமல் ஆழ்ந்த சிந்தனையில் மூழ்கியவளாய்த் திரும்பிவிட்டாள். அவளுடைய முதிரா உள்ளத்தினுள்ளே ஸ்வாமியைப் பற்றியும், அவருடைய நக்ஷத்திரக் குழந்தைகளின் அழகைப் பற்றியும் மனிதர்கள் யாவரும் சத்தியத்தையே பேசுவதைப் பற்றியும் கற்பனை செய்துகொண்டே வாசலுக்குச் சென்றாள்.

* * * *

குழந்தை ரோஹிணிக்கு ஆறுவயசுதான் ஆகிறது. ஆனாலும் அவளுடைய வார்த்தைகள் யாவும் மணிமணியாக இருக்கும். முத்தும் பவளமும் கோத்த ஹாரம் போல இருக்கும் அவளது பேச்சு. அவளுடைய கேள்விகள் எல்லாம் தெய்வ உலகத்துக் கேள்விகள். அவளுடைய இளம் நெஞ்சில் உதிப்பவை ஸ்வர்க்க லோகத்து எண்ணங்கள்.

ஸ்ரீமான் சோமசுந்தரம் பி. ஏ. வரையில் படித்திருக்கிறார். ஆனாலுங்கூடக் குழந்தை ரோஹிணியின் சில கேள்விகளுக்குப் பதில் சொல்லத் தெரியாமல் ஒவ்வொரு சமயம் திணறிப் போய் விடுவார். 'ஐயோ! இந்தக் குழந்தையின் மனத்தைக்கூட என்னால் திருப்தி செய்ய முடியவில்லையே' என்று ஏங்கி நிற்பார். ஆனால் ரோஹிணியைக் கண்டவுடன்—அவளைப்பற்றி நினைத்தவுடன்—அவருடைய உள்ளத்தில் எழும் கர்வம் ஒரு சக்கரவர்த்திக்குக்கூட இராது.

பட்டணத்தில் இருக்கும்போது குழந்தை இயந்திர தேவதையின் குழந்தைகளைப்பற்றிப் புதிய புதிய கேள்விகளைக் கேட்பாள். கிராமத்துக்கு வந்தவுடன் அவளுடைய கேள்விகள் அதியாச்சரியமாக மாறிவிடும். இயற்கைத் தேவியின் சிறுவிளையாட்டுக்களின் இடையே அவளுடைய உள்ளம் சென்று கலந்து கொள்ளும். அவளுடைய எண்ணங்கள் இயற்கையன்னையுடன் இறக்கை விரித்துப் பறப்பவையாக இருக்கும்.

சோமசுந்தரம் அப்போது தபால் ஆபீசுக்குப் புறப்பட்டுக் கொண்டிருந்தார். தினந்தோறும் தபால்காரன் வருவதற்குள் அங்கேயே நேரில் போய் ஏதாவது கடிதம் உண்டாவென்று பார்த்து விடவேண்டுமென்ற ஆவலுடன் அவசரம் அவசரமாகப் போவார். கடிதம் எதுவும் வராவிட்டாலும் தினசரிப் பத்திரிகையாவது வருமே என்று போவார். அவ்வாறு அவர் புறப்பட்டபோதுதான் குழந்தை நக்ஷத்திரங்களைப் பற்றிக் கேட்டாள்.

அதற்குமேல் ரோஹிணிக்கு அப்பொழுது தெரிந்துகொள்ள வேண்டிய விஷயம் வேறு ஒன்றுமில்லை. நக்ஷத்திரங்களினுடைய அப்பாவைப் பற்றிக் கற்பனைசெய்து கனவு காண்பதற்குத்தான் அவளுடைய சிறிய மனசில் இடம் இருந்தது.

சோமசுந்தரம் அதைப்பற்றிச் சிந்தித்துக்கொண்டே தபாலாபீசுக்குச் சென்றார்.

* * * *

காலை நேரம் வந்தது. குழந்தை ரோஹிணி அப்பொழுதுதான் குளித்துவிட்டு அம்மா செய்துவிட்ட அலங்காரங்களுடன் வாசலில் வந்தாள். அவர்கள் வீட்டு வாசலில் இரண்டு பக்கங்களிலும் இரண்டு வாதாமரங்கள் உண்டு. அவற்றின் நடுவில் சென்று நின்றாள். சூரியன்

அஸ்தமிக்கும் சமயம்; வான வீதியில் வெளியும் ஒளியும் மோனத்திலே கலந்து நகைசெய்துகொண் டிருந்தன. குழந்தை ரோஹிணி மேற்றிசைக் கோடியில் நடந்துகொண் டிருந்த இந்திர ஜாலத்தைக் கண்டாள். அவளுடைய நிஷ்களங்க நெஞ்சத்தில் பரவச நிலை பிறந்தது.

ஆஹா! என்ன அழகு! அங்கு—அந்த வான வெளியிலே—'உமை கவிதை செய்து' கொண்டிருந்தாள். ரோஹிணியின் முகம் மலர்ந்தது. அங்கு ஒரு புதிய ஒளி தோன்றியது. அது வானவெளியில் தோன்றிய திவ்ய ஒளியின் பிரதி அல்ல. குழந்தையின் இருதய சந்திரனிலிருந்து வெளிப்பட்டு முகத்தில் வீசும் நிலவு! அவளுடைய கண்கள் சுடர் எறியும் இரண்டு மீன்களெனப் பிரகாசித்தன. காலையிலே—அதி காலையில்—சூரியோதய காலத்தில், தாமரையொன்று மலர்வதைக் கண்டிருக்கிறீர்களா? கொஞ்சமாகத் திறந்து அது தனது காதலனைக் கண்டு இளநகையாடுவதைப் போல மலர்ந்து வியப்பின்—சந்தோஷத்தின்—இளநகை தவழ்ந்து ஆட ரோஹிணியின் சிறிய அழகிய வாய் சிறிது திறந்திருந்தது.

'அவள் யார்? வானத்திலே அப்படிப் படம் எழுதி விளையாடும் அந்த வானுலக ரோஹிணி எப்படியிருப்பாள்?'

குழந்தை ரோஹிணி பலகையில் சித்திரம் எழுதி விளையாடுவதுண்டு. முதலில் ஒரு படம் வரைவாள். "சீ! இது நன்றாயில்லை" என்று அதை அழித்துவிட்டு வேறு ஒன்று எழுதுவாள். அது நன்றாக இருக்கும். ஆனாலும் அதைக் கலைத்துவிட்டு வேறு ஒன்று எழுதுவாள். அதையும் துடைத்துவிட்டுப் புதிய தினுசாக மற்றொன்று வரைவாள்.

வானத்து ரோஹிணியும் அதைப் போலவே புதிய புதிய படங்களை எழுதுகிறாள். ஆனால் அவள் அழித்து அழித்து வரையவில்லை; மாற்றுகிறாள். எல்லாம் வர்ணப்படங்கள்! புதிய புதிய வர்ணங்கள். ஒன்றைப் போல் மற்றொன்று இல்லை; கணந்தோறும் நவ நவமாங் களிப்புத் தோன்றுகிறது. அந்த வானுலக ரோஹிணிக்கு எவ்வளவு சந்தோஷமாக இருக்கும்! குழந்தை ரோஹிணிக்கும் சந்தோஷந்தான், வானுலக ரோஹிணியின் சந்தோஷத்தைப்பற்றி நினைப்பதில்.

ஸந்தியா தேவி நாணத்தினால் தலைகுனிந்து கீழ்த்திசை அடிவானத்தினின்றும் மெல்ல அடிவைத்து வான வீதியிலே வந்துகொண்டிருக்கிறாள். அவளுடைய வருகை ஓர் இனிய சங்கீதத்தைப் போன்றிருக்கிறது; கல்யாணி ராகத்தின் அவரோஹணம் போல. அவளுடைய ஸௌந்தர்யம் இனிமையானது. உள்ளம் கவர்வது; அது நாணத்தினால் ஆக்கப்பட்டது; நிமிர்ந்து பார்க்காது. ஆனாலும் மகிழ்ச்சி ஊட்டுவது; அவளுடைய நிறம் ஸப்த வர்ணங்களில் ஒன்றல்ல; அவற்றுக்குப் புறம்பானது: அதன் பெயர் மாலை; ஆதலால் அது மயக்கந் தருவது.

வர்ணப்படங்கள் எழுதுவது நின்றுவிட்டது; "இனி, வேறு வகையான சித்திரங்கள். வெள்ளை மேகத்தினால் ஆக்கப்படும் உருவங்கள். ஒளியையும் நிழலையும் கலந்து எழுதப்படும் ஓவியங்கள். அவற்றின் விளிம்புகளில் சுடர் கலந்த வெள்ளிமுலாம் பூசப்பட்டிருக்கிறது. அவை ஏன் இப்படி அங்கும் இங்கும் அலைந்துகொண்டே இருக்கின்றன? ஓரிடத்தில் இருந்தால் என்ன? ஆகாசத்துக்கு இந்த நீல வர்ணம் எப்படி வந்தது? பூமி ஒவ்வோர் இடத்தில் ஒவ்வொரு வர்ணமாக இருக்கிறதே: வானம் மாத்திரம் ஏன் இப்படி ஒரே நீலமாக இருக்கிறது? நேர் மேலே இரண்டு மேகவடிவங்கள் மெதுவாக அசைந்துகொண்டிருக்கின்றன. இரண்டுக்கும் நடுவில் நீலவானம்; களங்கமற்றது. ரோஹிணியின் உள்ளத்தைப் போன்றது; அந்த இடத்திலே—அந்த இரண்டு வெண்மையான மேகக் கூட்டங்களின் இடையிலுள்ள நீலப்

பட்டாடையிலே திடீரென்று ஒரு சுடர் தோன்றுகிறது. அடேயப்பா! அது எவ்வளவு துரிதமாகத் தோன்றிவிட்டது! கண் இமைக்கும் நேரத்தில்—அது கூட அதிகம்—ஒரு கணத்தின் ஆயிரத்தில் ஒரு பங்கு நேரத்தில் அந்தச் சுடர்ப் பொறி பிறந்துவிட்டது!

''அம்மா! ஸ்வாமிக்கு ஒரு நக்ஷத்திரக் குழந்தை பிறந்து விட்டது!'' என்று கூறினாள், குழந்தை ரோஹிணி. கைகளைக் கொட்டுகிறாள். அவளது கண்கள் சிரிக்கின்றன. உள்ளம் களிவெறி கொள்கிறது.

அவளுடைய தாய் வீட்டு வாசற்படியின் அருகில் நிற்கிறாள். அவளது கவனம் வீதியில் போவோர் வருவோர் மீது சென்று லயித்திருக்கிறது. அதோ போகும் பெண்ணினுடைய ஆடையைப் பற்றிச் சிந்தித்துக்கொண்டிருக்கிறாள். குழந்தை ரோஹிணியின் வார்த்தைகள் அவளுடைய செவிகளில் படவில்லை. ஆனால் குழந்தையின் சந்தோஷம் மாத்திரம் அவளுடைய மனத்தில் சென்று தாக்கி அதை ரோஹிணியிடம் இழுத்துச் செல்லுகிறது. குழந்தையை அப்படியே விழுங்க விரும்புவளைப் போலக் கரை புரண்டோடும் ஆசையுடன் அம்மாவின் கண்கள் குழந்தையைப் பார்க்கின்றன.

வானவெளியிலே இருள் பரவுகிறது. இருளும் அழகாகத்தான் இருக்கிறது. அதிலும் இனிமை இருக்கிறது. மாதாவின் ஸ்நேகத்தைப் போன்ற இனிமை. ஒன்றன்பின் ஒன்றாக நக்ஷத்திரங்கள் பிறந்து கொண்டேயிருக்கின்றன. அப்பா! எத்தனை நக்ஷத்திரங்கள்? குழந்தை ரோஹிணியால் அவற்றை எண்ண முடியவில்லை. அவை பிறக்கும் வேகந்தான் என்ன? அந்த வேகத்தைக் குழந்தையின் சிறிய மனம் தொடர்ந்து செல்வது சாத்தியமில்லை.

''வா கண்ணே! உள்ளே போகலாம். இருட்டிப் போய் விட்டது!'' என்று அம்மா அழைக்கிறாள்.

''இரு அம்மா போகலாம். மானத்தைப் பாரு. எவ்வளவு அழகாயிருக்கிறது!'' என்று நிற்கச் சொல்லுகிறாள் குழந்தை.

''ஆமாம்; அழகாய்த்தான் இருக்கிறது. இருட்டிப் போய் விட்டதே; இனிமேல் இப்படி வாசலில் நிற்கக்கூடாது. வா அம்மா உள்ளே'' என்று மறுபடி அழைத்தாள் அம்மா.

''அம்மா!''

''உம்.''

''மானம் இப்போ எதைப்போல் இருக்கு சொல்லட்டுமா?''

''சொல்லு.''

''உன் முகத்தைப் போல. நீ என்னை முத்தமிடுகிறாயே; அப்போ உன் முகம் இந்த மானத்தைப் போலவே இருக்கிறது.''

அம்மாவுக்கு அதன் பொருள் விளங்கவில்லை. அது சரி என்று தோன்றவில்லை. ஆனால் அந்த வார்த்தைகளில் இருக்கும் ஏதோ ஒன்று 'அது வாஸ்தவந்தான்' என்று சொல்லியது அவளுடைய மனத்தில்.

அம்மா சட்டென்று கீழிறங்கிச் சென்று குழந்தையை இழுத்துக் கட்டிலடங்காத காதலுடன் முத்தாடினாள். அம்மாவுக்கு வீட்டில் வேலையிருக்கிறது. மற்றொரு முறை, ''உள்ளே வாடா குஞ்சு'' என்று சொல்லி விட்டு வீட்டினுள் சென்றுவிட்டாள்.

குழந்தை ரோஹிணி, 'சீரவிருஞ்சுடர் மீனொடு வானத்துத் திங்களையும் சமைத்தே ஒரழகாக விழுங்கிடும் உள்ளச் செல்வம்' படைத்து அப்படியே நின்றிருந்தாள்.

வெளியே சென்றிருந்த சோமசுந்தரம் வீட்டிற்குத் திரும்பி வந்தார். வாசலில் தனியாக வானத்தின் அழகில் லயித்து நின்ற ரோஹிணியைக் கண்டார்.

''ரோஹிணிக் குஞ்சு! என்ன அம்மா பார்க்கிறாய்? உள்ளே போகலாம் வா'' என்று அழைத்தார்.

குழந்தை, ''இரு அப்பா! அந்த மானம் இவ்வளவு அழகாக இருக்கிறதே! அவ்வளவு குழந்தைகளை யுடைய ஸ்வாமிக்கு எவ்வளவு சந்தோஷம் இருக்கும்! அப்பா!'' என்றாள்.

அதற்குள் சோமசுந்தரத்தின் மனத்தில் ஏதோ சிந்தனை வந்துவிட்டது. குழந்தை சொல்லியது சரியாகக்கூடக் காதில் விழவில்லை. ''உம்'' என்று சொல்லிவிட்டு வீட்டுக்குள் சென்றார்.

அடுத்த விநாடி ஒரு விண்மீன் நிலைதவறிச் சுடர் வீசிக்கொண்டு வானத்திலிருந்தும் கீழே விழுந்து மறைந்தது. அதன் பிரயாணம் சில விநாடிகளே கண்ணுக்குத் தெரிந்தது.

குழந்தையின் கண்களில் கண்ணீர் பெருகியது. இரண்டு கண்களிலிருந்தும் இரண்டு நீர்வடிவமான முத்துக்கள் கீழே உதிர்ந்தன. அந்தச் சின்னஞ்சிறு இருதயத்தில் விவரிக்க இயலாத—சுருக்கென்று தைக்கும்—ஒரு வேதனை காணுகின்றது. குழந்தை விம்மி விம்மி அழத் தொடங்கினாள். அழுகையினிடையில், ''அப்பா!'' என்று இரும்பை உருக்கும் குரலில் கூப்பிட்டுக்கொண்டே வீட்டினுள் சென்றாள்.

சோமசுந்தரம் அப்பொழுதுதான் ஒரு சாய்வு நாற்காலியில் அமர்ந்து அங்கிருந்த மேஜையின் மீதிருந்து ஒரு புஸ்தகத்தைக் கையில் எடுத்தார். குழந்தையின் குரலைக் கேட்டவுடன் அவருடைய கையினின்றும் புஸ்தகம் 'தொப்' பென்று கீழே விழுந்தது. அவருடைய இருதயம் ஆயிரம் சுக்கல்களாகச் சிதறி விழுந்ததுபோல் இருந்தது. உடல் பதைத்தது,

''என்னடா கண்ணே! என் ராசாத்தியல்லவா! என் ரோஹிணிக் குஞ்சை யார் என்ன செய்தார்கள்?'' என்று படபடப்புடன் கேட்டுக் கொண்டே குழந்தையை வாரித் தூக்கித் தோளின்மேல் சார்த்திக் கொண்டார்.

''அப்பா! எனக்குத் தெரிஞ்சுபோச்சு!'' என்று விக்கல்களுக்கும் விம்மல்களுக்கும் இடையே சொன்னாள் குழந்தை.

''என்னடா கண்ணே! தெரிஞ்சுபோச்சு?''

''அப்பா! நம்ம ஊரிலே யாரோ ஒரு பொய் சொல்லிட்டா அப்பா!''

விக்கல்கள்-விம்மல்கள்-ஹுங்காரத்துடன் அழுகை.

''ஏன் அம்மா அப்படித் தோன்றுகிறது உனக்கு?''

''நீதானே அப்பா சொன்னே; நாம் ஒரு நிஜம் சொன்னால் ஒரு நக்ஷத்திரம் பிறக்கிறதுன்னு, அப்போ..ஒரு நக்ஷத்திரம்..கீழே விழுந்தா..யாரோ ஒரு பொய்..சொல்லிட்டான்னுதானே அர்த்தம்? ஸ்வாமியினுடைய மனசு இப்போ எப்படி இருக்கும் அப்பா? எனக்கே நிறைய அழவரதே'' என்று சொல்லிவிட்டு அழத் தொடங்கினாள், அந்தக் கபடமற்ற குழந்தை.

அந்தப் பச்சை உள்ளத்தில் எழுந்த துக்கத்தையும் அதன் துன்பத்தையும் நாவின் மொழிகளால் விவரிப்பது இயலாத காரியம். அது இருதயம் இருதயத்தினோடு தனது சொந்த பாஷையில் உணர்விக்க வேண்டிய புனிதமான ஒரு துக்கம்.

—நவம்பர், 1933

# கண்ணீர்த் துளிகள்

த. நா. குமாரஸ்வாமி

அவலக்ஷணமான தேகம்; அருசை தரும் முகத் தோற்றம். அந்தப் புலவனை எவரும் ஏறெடுத்துப் பார்ப்பதில்லை. அவன் எதிர்ப்படுவதே அபசகுனமெனக் கருதினர். அவனை விரும்புவார் ஒருவருமே இல்லை; அசேதனப் பொருளாகவே இருந்தான்.

இயற்கையும் அவனை அலட்சியம் செய்தது. அவ்வேழை இசைவாணனின் மேனி மையினும் கருமையானது. அநுதாபம் காட்ட உயிர் நண்பனோ, ஆதரவு தர உடன்பிறந்தவர்களோ யாருமே அவனுக்கு இல்லை. அவனைப் பார்த்தபோதெல்லாம் எல்லோர் வாயினின்றும் வசவும், ஏளனச் சொற்களுமே கிளம்பும். இவ்வளவையும் பொறுத்து அந்தப் புலவன் உயிர் வைத்துக்கொண்டு மறைவில் வாழ்ந்திருந்தது தான் அதிசயம்.

அந்தக் கருமேனியினுள்ளும் மின்னொளி திகழ்ந்தது. அவனது அழகற்ற முகத்திலும் எப்போதாவது மெல்லிய சிரிப்பு உலவும். அந்த உருண்டையான விழிகளும் சில சமயம் பொலிவுடன் விளங்கும்; அப்போது அகத்துள் மறைந்து கிடக்கும் ஓர் ஒளிப்பிழம்பு வெளிக் கருமையை விலக்கிக்கொண்டு வரத் தவிப்பது போல் இருக்கும். ஆனால் அந்த யாழிசைப் புலவனது உள்ளத்தில் அடங்கியிருந்த விசித்திர விஷயங்களை யாரே அறிவார்? வெளித் தோற்றத்தைக் கண்டு அவனை அவமதித்தனர். இருள் தன் இதயத்துள் வெளிச்சத்தைக் காத்திருப்பது எவருக்கும் புரியவில்லை. இகழ்ச்சிக்கு இலக்காக இருந்தான் அவ்விசைவாணன். ஆற்றங்கரையின் தனிமையே அவனுக்கு ஆறுதலைத் தந்தது. அவ்விடத்தை நாடி அவன் தன் துக்கத்தைப் போக்கிக்கொள்வான். உள்ளத்திலிருந்து விம்மியெழும் அழுகை ஓர் அபூர்வமான இசையாக அவன் கண்டத்திலிருந்து எழும். அதைக் கேட்டு அநுபவிப்பவர் யார்? நீங்குரற் புள்ளினமே அழுகை நிரம்பிய அவனது இசைக்கு ஒத்துப் பாடும்.

புது வருஷந்தோறும் அரசனைக் காண நாட்டினர் அனைவரும் சென்றனர். குறுநில மன்னர் முதல் குற்றேவலாளர்வரை தம் காணிக்கையைச் செலுத்தினர். ஆனால் அந்தப் புலவன்மட்டும் கடல்போன்ற அரசன் அவையிற் காணப்படவில்லை. வேற்று நாட்டினர் அரசனுக்கு அன்பளிப்பாக நிமிர்பரிப் புரவிகள் தந்தனர். வணிகர், மலையில் பிறந்த பொன்னும் மணியும் பரிந்து நல்கினர்; தென்கடல் முத்தும் குணகடற் பவளமும் கொண்டு குவித்தனர். சீனத்துப் பட்டும், யவனக் கலைப் பொருள்களும் அளவு கடந்து வந்தன.

வேந்தனுடைய நாட்டைப் பாடினர் சிலர். அவனது கொடையைச் சிறப்பித்தனர், புலவருள் ஒரு சாரார். அவனது வெற்றியை உயர்த்திக் கூறினர் நாவலர் பலர். ஙிமிறென ஒலிக்கும் தம் சிறிய யாழை இழைத்துப் பாணர் அவன் புகழைப் பாராட்டி அவனிடமிருந்து பொற்றாமரை பெற்றனர். கயல் விழி விறலியர் புரியும் ஆடலை வியந்து வேந்தன் அவர்களுக்குப் பொன்னிழைகள் வெகுமதியாக அளித்தான். கூத்தர்கள் பல களியாட்டங்களைக் காட்டி மன்னனை மகிழ்வித்தனர். நாட்டு மக்கள் தத்தம் ஆற்றலைப் புலப்படுத்தி அரசனிடம் பரிசு பெற்றுச் சென்றனர். ஆனால் அந்த எளிய புலவன்மட்டும் ஏனோ அங்கு வரவில்லை? அவன் ஒருவன் இருக்கிறானென்று யாரும் எண்ணவே இல்லை.

வேந்தன் கழலடியில் கிடந்த பொற்குவையும் மணித்திரளும் கண்களைப் பறித்தன. அரசனைக் குறித்துப் பாவலர் பாடிய கோவையும் உலாவும் சித்திர கவியும் எல்லார் மனத்தையும் பரவசப்படுத்தின. கலைஞரின் நிகரற்ற ஓவியங்களும் சிற்ப வேலைகளும் எவரும் பிரமிக்கும்படியாக இருந்தன. விறலியரின் அபிநயங்களைக் கண்டு ரசிகர்கள் ஆர்த்தனர். பாடகர்களின் இன்னிசையைக் கேட்டு அறிஞர்கள், ''அடாடா! உள்ளம் குளிர்விக்கும் அமிருதவர்ஷம்'' என்று மொழிந்தனர். யாழின் வாசிப்பை ஒருமுகமாகப் புகழ்ந்தனர். சபையில் மக்கள் ஏற்றத்தாழ்வின்றிக் களிப்பு மேலிட்டு அரசனை வாழ்த்தினர். அரசன் ஒவ்வொருவரையும் கவனித்து அவரவருக்கு ஏற்ற சன்மானங்களை வழங்கினான். அவற்றை மகிழ்ச்சியுடன் பெற்ற யாவரும் தம் தம் இடங்களுக்குத் திரும்பிக்கொண் டிருந்தனர்.

சபை கலையும் தறுவாய். அச்சமயம் நாற்புறமும் ஒரு பரபரப்புத் தென்பட்டது. கூட்டத்தை விலக்கிக்கொண்டு அந்த வறுமைப் புலவன் ராஜ சபையினுள் புகுவது தெரிந்தது. அன்று உள்ளே வருபவர் எவரையும் தடுக்கக்கூடாதென்பது அரசனுடைய ஆக்ஞை. அதனால்தான் அப்புலவனுக்கு ராஜ ஸாந்நித்யம் கிட்டியது.

புலவர் நேரே அரசன் முன்பு வந்து நின்றான். என்னதான் நடக்கிறதோவென்று பார்க்க வெளியே போகிறவர்கள் நின்றுவிட்டனர். யாவர் முகத்திலும் அருவருப்பு நடமாடியது. ஏழைப் புலவன் உள்ளே நுழையும்போது தற்செயலாய் அவனுடைய உடலைத் தீண்டியவர்கள் தம் தேகம் கூசினர். பகட்டான இழைகள் அணிந்த விறலியர் தம் கண்களைப் பொத்திக்கொண்டனர். விழிகள் தீக் கக்கக் காவிய சிரோமணிகள் வசையைப் பொழிந்தனர். பகை நரம்பு ஆர்த்தன, பாணர்கள் வசை பாடினர். ஆனால் அந்தத் தீனக் கவி எதற்கும் வாய் திறக்கவில்லை; எவரையும் நிமிர்ந்து நோக்கவில்லை. அமைச்சன், ''ஏய்! உனக்கு என்ன வேண்டும்?'' என்று திரஸ்காரத்துடன் அவ்வெளியவனைக் கேட்டான்.

ஆனால் புலவனோ வேந்தனையே உற்று நோக்கினான்; ''வேந்தரேறே, இன்று நாட்டினர் யாவரும் உம் சேவடியில் தம் காணிக்கைகளைச் செலுத்தி, தங்கள் திருக்கரத்தால் அளித்த பரிசில்களையும் பெற்று ஏகினர். தங்களுடைய மக்களுள் இவ்வேழையும் ஒருவன். எனது சிறிய காணிக்கையை ஏற்று அருளவேண்டும்'' என்றான் அக்குரூபி.

''அது என்னவோ?'' என அரசன் வினவினான்.

''பேரரசே! எனக்குள்ளது ஒரே செல்வம்; அதை உமக்கு அளிப்பேன்.''

''அச்செல்வம் யாதோ?''

''அதுவா? என் அழுகை!'' என்றான் அந்த அதிசய மனிதன்.

''அழுகையா?'' சபையினர் ஏளனமாக நகைத்தனர். நாலு பக்கத்திலிருந்தும் விரஸமான குறிப்புக்கள் எழுந்தன. அனைவரும் சிறினர். எதற்கும் புலவன் அசையவே இல்லை. அரசன் முன்பு அமைதியுடன் நின்றிருந்தான்.

அரசனுக்குச் சிரிப்பு வந்துவிட்டது; ''சரி, புலவரே, உமது வேண்டுகோளை அங்கீகரித்தோம். ஆரம்பியும்'' என்றான்.

அரசனுடைய வார்த்தையைக் கேட்டுத் திடுக்கிட்டனர் யாவரும்; உலகம் இகழ்ந்த அக்கவிஞனைப் புரவலன் வெறுக்கவில்லை. 'பொன்னும் மணியும் நல்கியவருக்கும், கவிதாமாலை சூட்டியவருக்கும் சமமாக இவ் வேழைக்கும் இடம் கொடுத்தானே அரசன்?' என்று எல்லாரும் புருவத்தைச் சுளித்தனர்; கைகளைப் பிசைந்துகொண்டனர். வானுறும் கதிரையும், தரையில் வளரும் சிறு புல்லையும் சமமாக நோக்குவன இறைவன் கண்களன்றோ!

உறை மறைவிலிருந்து ஏழைப் புலவன் தன் யாழை எடுத்துச் சுருதி கூட்டினான். அதனின்று எழுந்த நாதம் அடக்கமாகவே இருந்தது. சபை நிரம்பச் சப்திக்கவில்லை. ஆனால் அந்த யாழின் ஒலிக்கு அவனுடைய அந்தரங்கம் மட்டும் இழைந்து எதிரொலித்தது. யாழ் நரலுவதைக் கேட்ட சிலர் முகத்தை வேறுபுறம் திருப்பிக்கொண்டனர். வேந்தன் கற்பதுமைபோல் புலவனுடைய செயலைக் கவனித்துக்கொண்டிருந்தான். யாழின் இசை அரசனது உள்ளத்தைத் தொட்டது.

இரு விழிகளும் மூடியவண்ணம் எளிய புலவன் பாட ஆரம்பித்தான். அழுகையாகத் திரண்டெழுந்து அவன் வாழ்க்கையின் துயரம் பேரிசையாக மாறியது. ''இந்த ஓலத்தையும் கேட்பவர் உண்டோ?'' என்ற வார்த்தை கேட்டது சபையில். இசை வழியே மனத்தை வெளியிட்ட புலவனுக்கும், பூமிபாலகனுக்கும் அச்சொற்கள் செவியில் பாய்ந்தால் தானே? புலவனுடைய குரல் ஒலி அலைகளாகச் சபையை ஸ்தம்பிக்கச் செய்து வானெங்கும் பரவியது. மனத்துள் பதுங்கிக் கிடந்த அவனுடைய வேதனையைக் காட்டியது ஒரு சமயம். லயத்துடன் இன்பத்தின் பெருக்காகத் துள்ளியது அவ்விசை, வேறு ஒரு சமயம். மொட்டு அவிழும்போது மலர் படும் வேதனையைக் காட்டுவதுபோல் இருந்தது யாழின் துடிப்பு. சிலருக்கு மதுரகீதம் செவிக்குணவாக இருந்தது. சிலர் அதைக் கர்ண கடூரமாகப் பாவித்தனர். தம் உள்ளத்தில்தான் அவ்வேதனை குமுறுகிறதோவென்று ஐயுற்றனர் சிலர்.

அபாரமான சங்கீதத்தைப் பாடிக்கொண்டிருந்தான் அக்குரூபப் புலவன். அவன் இதயத்துள் ஆழ்ந்திருந்த துக்கம் அனைத்தும் நீங்கி விட்டது. ''எவ்வாறு அவனால் தன் மனவேதனையை இசைமூலமாகக் காட்ட முடிந்தது!'' என்று பலர் ஆச்சரியப்பட்டனர். அதை வர்ணிக்கச் சொற்கள் இராத குறையால் பலர் கண்ணீர் பெருக்கினர்; நெக்குருகினர். அதன் சுவையை நுகராத செவிடர்களும் இருந்தனர். அந்த மானிடன் தன் பாட்டை முடித்துவிட்டுக் கண்களைத் திறந்தான். அவனை மகிழ்விக்க ஆனந்த கோஷம் சபையில் எழவில்லை. ஆனால் ஒரு பெருமூச்சு மட்டும் அந்த ஜனத்திரளில் கேட்டது. அது உடனே மங்கி விட்டது.

''புலவரே!'' என்று அரசன் அந்த இசைப் புலவனை அழைக்கும் போது அவனது குரல் தழுதழுத்தது. ''சே, சே, அரசனும் இப்படி அறிவை இழந்துவிடுவானா?'' என்று சில 'மேதாவி'கள் துக்கப்பட்டனர். அரசன், ''புலவரே! உமது பாட்டு என்னை மயக்கிவிட்டது. ஆனால் நீர் அகாலத்தில் வந்தீரே! பரிசெல்லாம் வழங்கியாகிவிட்டதே! உமக்கு நான் எதைத் தருவது?'' என்று விசனப்பட்டான்.

''மன்னர்பிரானே, பரிவெய்தவேண்டாம்! எனக்குப் பரிசு கிடைத்துவிட்டது'' என்றான் அவ்வேழைப் பாவலன்.

''எப்போது புலவர்மணியே?'' என்று வேந்தன் வினவினான்.

''இப்போதுதான் அரசே! தங்களுடைய கண்களில் அரும்பிய நீர்த் துளி இன்னும் உலரவில்லை. அதுவே எனக்குப் போதுமான வெகுமதி'' என்றான் கவிஞன்.

''தன்யனானேன், புலவர் பெருமானே'' ஒன்று கூறி அரசன் தன் அரியாசனத்திலிருந்து இறங்கி வந்து விகார ரூபியான அவ்விசை வல்லுநனைத் தழுவிக்கொண்டான்.

பொறாமையினால் ஒரு கவிஞன், ''ஐயோ! இன்று காவியலட்சுமி கைம்மை பூண்டாள்'' என்று கூவினான். அனைவரும் வெளியேறினர். சபையில் அரசனும் அவ்வேழைப் புலவனுமே தனியாக நின்றனர்.

''என்னுடைய அற்பமான கண்ணீர்த் துளிகளைக் கொண்டு எவ்வாறு திருப்தி அடைந்தீர்கள்?'' என்று மன்னவன் புலவனை அன்புடன் கேட்டான்.

அதே சமயம் கொலுவறைக்கு வெளியே பலர் வாயிலிருந்து, ''இசையரசே, இதோ எளிய மக்களான நாங்களும் உம்முடைய இசையைக் கேட்டுக் கண்ணீர் உகுத்தோம். எங்களுடைய அல்லல்களையும் மறக்கச் செய்தது உமது கீதவெள்ளம். நன்றி செலுத்தக் கண்ணீர் சொரிகிறோம்'' என்ற வாக்கியம் ஒலித்தது.

''இதைவிட வேறு என்ன வேண்டும்?'' என்று அக் குரூபிக் கவியும் உள்ளம் மகிழ்ந்தான்.

*

—ஜனவரி, 1941

# முனியம்மா பந்தயம்

**தி. ஜ. ர.**

அப்பாவும் அம்மாவும் எப்போது ஊருக்குப் போனாலும், நானும் மதனியும் அண்ணா குழந்தைகளும் மட்டும் வீட்டில் தனியே இருக்க நேரிடும். அண்ணாவின் உத்தியோகம் என்றுமே வருஷத்தில் ஒன்பது மாதத்துக்குக் குறையாமல் சுற்றுப் பிரயாணத்தில் சென்று விடும். சொல்லப் போனால் கிராமத்தில் அவனை அந்த மீதி மூன்று மாத காலத்தில்கூட முழுவதும் பார்க்க முடியாது; சில சனி ஞாயிறு களில்தான் பார்க்க முடியும். பக்கத்துப் பட்டணத்திலே அவனுக்கு வேலை. ஒரு பெரிய கம்பெனியின் பிரயாணப் பிரதிநிதி அவன்.

ஓர் உறவினர் வீட்டில் நடக்கும் விசேஷத்துக்காக இந்தத் தடவை அப்பாவும் அம்மாவும் புறப்பட்டார்கள். இரண்டு பேருக்கும் வயசாகிவிட்டது; கோயில் குளங்களில் சற்று அதிகப் பிரமை. "போகிறதுதான் வெகுதூரம் போகிறோம்; அப்படியே சில திவ்ய தேசங்களின் பெருமாளையும் ஸேவித்துவிட்டு வருவோம்" என்று சொல்லிக்கொண்டே அப்பா கிளம்பினார்.

சின்னஞ் சிறிசுகளான எங்களுக்கு இராத்துணை வேண்டாமா? அதற்காக நெல்லுக்காரக் கிழவி எங்கள் வீட்டுத் திண்ணையிலே படுத்துக்கொண்டாள்.

நெல்லுக் குத்திப் பிழைக்கிறவள் அவள். அதனால்தான் அவளுக்கு நெல்லுக்காரக் கிழவி என்று பெயர். பரட்டைத் தலை; ஒன்றரைக் கண்; வாளிப்பான சரீரம். 'வுவ்வுவ்வுவ்' என்று வாய் கொஞ்சம் நடுங்கும். இருந்தாலும், கதை சொல்லத் தொடங்கி விட்டாளானால், நடுக்கமெல்லாம் எங்கேயோ பறந்து போய்விடும்.

எதற்கெடுத்தாலும் கதைதான். உபமானமாக எத்தனையோ கதை. நம்முடைய சகல பழக்க வழக்கங்களுக்கும் காரணமான பல கதை தெரியும் கிழவிக்கு. சகுனத்துக்குக் கதை; சாஸ்திரத்துக்குக் கதை; பூஜைக்குக் கதை; நியாயத்துக்குக் கதை-இப்படி எத்தனையோ கதை.

முன்னிலாக் காலம். எனக்கும் குழந்தைகளுக்கும் சாதம் போட்டு, தன் சாப்பாட்டையும் முடித்துவிட்டு, உள் ஒழித்துக் கொண்டு வாசல் திண்ணைக்கு வந்து சேர்ந்தாள் மதனி.

ஒட்டுத் திண்ணையில் என் படுக்கையைப் போட்டேன். பெரிய திண்ணைக் கோடியில் கிழவி ஒரு கந்தல் பாயை விரித்து, அதில்

உட்கார்ந்து தன் சேலை நுனியில் போட்டிருந்த 'பொளகு வெத்திலை' முடிச்சை அவிழ்த்தாள். ஆனால் அதில் சுண்ணாம்பு மடித்த ஒரு சருகுதான் இருந்தது.

பெரிய குழந்தை சௌந்தரம் தரையிலே ஒரு தலையணைமீது தலையை வைத்துப் படுத்தான். ஒரு துணியை விரித்து, சின்னக் குழந்தை மைதிலியை அதில் விட்டு முதுகில் தட்டிகொண்டே, ''என்ன கிழவி நாளைக்கு மைசூர்பாக்கு கிளறவேண்டும். காலையில் வந்து நாலு தேங்காய் உரித்துத் தா'' என்றாள் மதனி.

''அப்படிச் சொல்லாதே, தங்கச்சி; அப்படிச் சொல்லாதே'' என்றாள் கிழவி.

''எப்படிச் சொல்லப்படாது?''

''காலையில் வா என்று சொல்லக்கூடாதாம். 'பிழைத்து முளைத்திருந்தால், காலையிலே வா' என்றே சொல்ல வேண்டும்'' என்றாள் கிழவி.

ஏன் என்று நான் கேட்டேன்.

''ஏனா சொல்லுகிறேன். ஒரே ஒரு வெற்றிலைச் சருகு இருந்தால், எடுத்துவா''என்றாள் கிழவி.

உள்ளே போய் ஐந்தாறு வெற்றிலையையும் ஒரு பாக்கு வெட்டலையும் எடுத்து வந்து அவளிடம் கொடுத்தேன்.

வெற்றிலையைக் கிழவி சுண்ணாம்பு தடவிப் போட்டு மென்று கொண்டு, சிறிது புகையிலையையும் வாய்க்கதுப்பில் அடக்கிகொண்டு சொல்ல ஆரம்பித்தாள்.

''நாளைக்கு அதைச் செய்வேன், இதைச் செய்வேன் என்று மனிதன் கருவமாய்ப் பேசக்கூடாது. பேசினால், சாமிக்குப் பொறுக்காது.

நாளையென்றும் நேற்றென்றும்
நாம்சொல்லும் காலமெல்லாம்
நச்சரவம் பூண்டசிவன்
நாட்டியத்தில் பூத்த மலர்

நாளையும் நேற்றும் நமக்குச் சொந்தம் இல்லை.

''எங்கள் பெரியப்பாவின் மகன் ஒருத்தன் இருந்தான். அவனுக்குச் சின்னக் கருப்பன் என்று பெயர். அவன் மகா துணிச்சல்காரன். நூறு சால் தண்ணீரை நொடிப்போதில் இறைச்சிடுவான்; தொண்ணூறு பசுமாட்டைத் துரத்தி வந்து கட்டிடுவான்; எட்டடுக்கு மாளிகையில் ஏணி வைத்து ஏறிடுவான். வீமன் மாதிரி கட்டுமஸ்தாயிருப்பான்; சோமன் மாதிரி குளுமையாய்ப் பேசுவான்.

''இளங்காளை கறுப்பனுக்கு ஏற்ற பெண் ஒருத்தி எங்கள் அத்தைக்குப் பிறந்திருந்தாள். பச்சைக்கிளி அவள்; பார்த்த கண் பூத்திடும் பாவை. வேலைக்கு அஞ்சமாட்டாள்; விளையாட்டில் மிஞ்சிடுவாள். பிச்சியம்மன் திருவிழாவில் அவள் கும்மி அடித்துப் பாடினால், ஊர்ப் பயலெல்லாம் தலைகறங்கிப் போவான். முனியம்மாவும் சின்னக் கறுப்பனும் ரொம்பச் சிநேகமாயிருப்பார்கள். ஓயாமல் கேலியும் விளையாட்டுமாயிருப்பார்கள். சின்னக் கறுப்பனைக் கலியாணம் கட்டிக்கப் போகிறவள் முனியம்மாதான் என்று ஊரறிய நாடறியத் தீர்மானம் ஆகிவிட்டது.

''ஒரு நாள் சின்னக் கறுப்பனுக்கும் முனியம்மாவுக்கும் ஒரு போட்டி வந்தது. 'இருபது சால் தண்ணீர் இறைத்தால் எங்கள் மச்சான் இளைத்துப் போகும்!' என்றாள் முனியம்மா. 'சலிக்காமல் சோராமல் இருநூறு சால் தண்ணீர் நான் இறைப்பேன். ஆனால் எங்கள் அத்தை மகள் ஈரேழு பாத்திக்குத் தண்ணீர் கட்டுவதற்குள் கை ஓய்ந்து போவாள்' என்றான் சின்னக் கறுப்பன். 'பார்ப்போமா? என்ன பந்தயம்' என்று கேட்டாள் முனியம்மா. 'நான் தோற்றால் சந்நியாசியாக இருந்து விடுகிறேன். நீ தோற்றால்..?' என்று அவன் கேட்டான். 'நான் தோற்றால் கன்னியாய் இருந்து விடுகிறேன்' என்றாள் இவள். பக்கத்தில் இருந்தவர்களெல்லாம் சிரித்துவிட்டார்கள். 'ஏதப்பா இது? யார் தோற்றாலும் யார் ஜெயிச்சாலும், ஒருவன் சந்நியாசி; ஒருத்தி கன்னிப் பெண். இப்படி இல்லையா முடியும்போல் இருக்கு? இந்தச் சபதம் சரியில்லை' என்று நாட்டாண்மைக்காரர் வீட்டு வில்லப்பன் சொன்னான். என்ன இருந்தாலும் முனியம்மா நல்ல கெட்டிக்காரப் பெண் இல்லையா? 'இரண்டு பேரும் ஜெயிச்சிடுகிறோம். அப்போ..?' என்றாள். அப்போதும் வில்லப்பன் கொல் என்று சிரித்தான்; 'பெண் தயார்தான். மாப்பிள்ளை மனசு எப்படியோ?' என்றான்; முனியம்மாவுக்கு வெட்கமாய்ப் போச்சு. தலை குனிந்தாள்.

சின்னக் கறுப்பன் வீரச் சிங்கம் மாதிரி தலை நிமிர்ந்து, ''நாளைக் காலை விடிய ஜாமப்போது இருக்கையில் உருளையும் சால் கயிறும் எடுத்து வர்றேன். வந்து முனியம்மாவைக் கூப்பிடுகிறேன். அவள் மண்வெட்டி எடுத்து வரட்டும். சோளக் கொல்லைக்குத் தண்ணீர் இறைச்சுப் பார்த்துவிடலாம்'' என்றான். முனியம்மா கொஞ்சங்கூடத் தயங்கவில்லை. 'சரி' என்றாள்.''

கிழவி சற்று நிறுத்தினாள். வாசலில் தலைவிரித்து ஆடிக்கொண்டிருந்த தென்னமர மட்டையின் நிழல் கிழவியின் முகத்தில் கருங்கோலம் போட்டது.

''அப்புறம் என்ன, கிழவி? சொல்லேன்'' என்றேன்.

''சித்திரை மானம் சுட்டுக் கொளுத்துது; வைகாசி மானம் வறண்டு கிடக்குது; கார்த்திகை மானம் காய்ஞ்சு கிடக்குது - இப்படி என்று சொல்லுவார்கள். அது கார்த்திகை மாசம். மானத்திலே பொட்டு மேகம் கிடையாது. முனியம்மா படுத்திருக்கிறாள். எங்கே? வீட்டு நடு முற்றத்திலே. பூர்ணிமைக்கு முதல் நாள். பால் போல நிலாக் காய்ந்துகொண்டிருக்குது. ஈ, காக்கை மூச்சுப் பறியவில்லை. எல்லாரும் ஆழ்ந்து தூங்குகிறார்கள். எங்கும் 'கம்' என்று அடங்கிக் கிடக்குது.

''வாசலிலேயிருந்து 'முனியம்மா, முனியம்மா' என்று ஒரு சத்தம் கேட்டது. அவள்தான், 'இன்னிக்கு ஒரு கை பார்த்துப்பிடறது' என்ற நினைப்போடே படுத்திருக்கிறாளே, நல்ல தூக்கம் ஏது? சட்டென்று கண் விழித்துவிட்டாள். வாசலிலே வேலிக்குப் பக்கத்திலே ஆள் நிற்கிறதைக் கதவு இடுக்கால் கண்டாள். தலையிலே பெரிய மண் சால்; தோளிலே மர உருளை; கட்கத்திலே தாம்புச் சுருள்; கையிலே கல்பாரம் —இவற்றோடு நிற்குது அந்த ஆள். 'இதோ வந்துட்டேன், மச்சான்' என்று சொல்லி, பெரிய மண்வெட்டி ஒன்றைத் தூக்கிக்கொண்டு முனியம்மா கிளம்பினாள். கொஞ்சம் குளிராய் இருந்தது. ஒரு துப்பட்டியை எடுத்துத் தலையையும் உடம்பையும் போர்த்துக்கொண்டு அவள் வாசலுக்கு வந்தாள். ஆள் திரும்பிப் பார்க்கவேயில்லை; வேகமாக முன்னால் நடந்தது. பின்னாலே போனாள் முனியம்மா. 'என்ன மச்சான்? இங்கேயே இவ்வளவு வேகம்?' என்று சிரித்துக்கொண்டே, கேட்டாள்.

பதில் இல்லை. எப்படி எப்படியோ அவள் பேச்சுக் கொடுத்தாள்; கேலி செய்தாள். ஒன்றுக்கும் பதில் இல்லை. 'மச்சான் இப்பவே சந்நியாசியாகத் தீர்மானிச்சிட்டதுபோல் இருக்கு!' என்றாள். 'ஹ்ராங்' என்று ஓர் உறுமல் வந்தது; வேறே பேச்சில்லே; 'சரி; பார்க்கலாமே, இன்னிக்குத்தான்!' என்று சொல்லிக்கொண்டே முனியம்மாவும் நடந்தாள்.

''கொல்லைக்குள்ளே நுழைஞ்சாச்சு. ஆள் உயரம் சோளப் பயிர் 'இள இள' என்று வளர்ந்து கிடக்குது. பால்கொண்டை திரண்டிருக்குது; இன்னும் முற்றவில்லை. பயிருக்கு நடுவே ஆள் நடக்கிறதே தெரியாது. முந்தின நாள் தண்ணீர் இறைத்தபோது கிணற்றடிக்குப் பக்கத்திலே முதல் பாத்தியிலிருந்து தண்ணீர் கட்டினவள் முனியம்மாதான். அதனாலே இன்றைக்குக் கடைசிப் பாத்தியிலேயிருந்து தண்ணீர் கட்ட வேண்டும். ஆள் பேசாமல் கிணற்றடிக்குப் போச்சு; முனியம்மாவும் பிகுவாகவே கடைசிப் பாத்தியிலே போய் நின்னாள். என்ன அதிசயத்தைச் சொல்றது! அவள் போய் நிற்பதற்குள்ளே தண்ணீர் பெருக்கெடுத்து ஓடிவந்தது; ஒரு பாட்டில்லே; ஒரு வசனமில்லே. மச்சான் சின்னக் கறுப்பனா தண்ணீர் இறைக்கிறான்? கொள்ளை கொள்ளையாய்ப் பாடுவானே! இன்னிக்கு ரோஷத்திலே பாட்டுக்கூட வரல்லேபோலிருக்குது!' என்று சொல்லிக்கொண்டே, 'மடக்கு மடக்கு' என்று முனியம்மா தண்ணீர் கட்டினாள். ஒரு பாத்தி வாயில் மண்ணைத் திருப்பிப் போட்டு நிமிர்வதற்குள்ளே அது நிரம்பிப் போகுது. தண்ணீர் அப்படி வருகுது!

காவேரி வெள்ளம் கரைபுரண்டு வருகுது;
குடமுருட்டி வெள்ளம் கோலமாய் வருகுது;
வையை நதி வெள்ளம் வழிந்தோடி வருகுது;
வாய்க்காலில் வெள்ளம் வள்ளலென வருகுது.

''பத்துப் பாத்தி கட்டி முடிவதற்குள் வாய்க்கால் உடைப்பெடுத்துவிட்டது. முனியம்மா பயந்துபோனாள். 'இது மச்சான் இல்லே; மனிசனே இல்லே. ஒரு பிசாசு. அதுதான் தண்ணீர் இறைக்குது' என்று எண்ணினாள். இந்தப் பிசாசிடம் எப்படித் தப்புவது? முனியம்மாவுக்கு ஒண்ணும் புரியவில்லை....''

இந்தச் சமயம் பார்த்து மைதிலி திடுக்கிட்டுப் பயந்ததுபோல், 'வீல்' என்று கத்தினாள்.

''வேண்டாண்டி அம்மா, என் தாயி வேண்டாண்டி'' என்று அதைச் சமாதானப்படுத்தத் தொடங்கினாள் மதனி.

இந்த ஆர்ப்பாட்டத்தில் வெகுநேரம் போய்விட்டது. மைதிலி தூங்கிவிட்டாள்; ஆனால், கதை தொடரவில்லை. மதனி உள்ளே போனாள். நானும் தூங்கிவிட்டேன்.

## 2

மறுநாள் ராத்திரி நிலா இன்னும் நன்றாய்க் காய்ந்தது. வளர்பிறைச் சந்திரன் இல்லையா?

கிழவி வழக்கப்படி திண்ணையில் வந்து படுத்தாள். சௌந்தரம் பாடம் படிப்பதை நிறுத்திவிட்டு வாசலுக்கு வந்து சேர்ந்தாள். நல்ல வேளையாக இன்று மைதிலி முன்னதாகவே தூங்கிவிட்டாள். மதனி பெரிய திண்ணையில் வந்து உட்கார்ந்தாள். ஒட்டுத் திண்ணையில் என் படுக்கையை விரித்துக் காலைத் தொங்கவிட்டு நான் அமர்ந்தேன்.

"அப்புறம் என்ன, கிழவி? கதையைச் சொல்" என்று நான் கேட்டேன்.

"நேற்று என்ன சொன்னேன்?" என்று கேட்டாள் கிழவி.

"தண்ணீர் இறைப்பது மச்சான் அல்ல என்று முனியம்மா நினைத்தாள். பிசாசு என்று பயந்தாள்...." என்று அவள் விட்ட இடத்தை எடுத்துக் கொடுத்தேன்.

"ஆமாம்; அப்படிப் பயந்தாள்;

பழையனூர் நீலிக்குப் பலியானான் செட்டி மகன்.

அம்மாதிரி பலியாவாளா இவள்?" என்று தொடங்கினாள் கிழவி.

"அதென்ன கதை?" என்று கேட்டாள் மதனி.

"அதுதான் உலகறிந்த கதையாச்சே. அதை இன்னொரு நாள் சொல்லுகிறேன். இதைக் கேள்: முனியம்மா நல்ல அறிவுள்ள பெண். மண்வெட்டியைக் கீழே 'பதன'மாக நட்டாள். தன் மேலே போர்த்திருந்த துப்பட்டியை எடுத்தாள்; மண்வெட்டிக்கு அழகாகப் போர்த்திவிட்டாள். தலைகீழாய் நட்ட மண்வெட்டியின் இலை மேற்பக்கம் இருந்ததா? அது மனிசன் தலைமாதிரி தோணிச்சு. துப்பட்டி போர்த்ததும் அசல் ஆள் உட்கார்ந்திருப்பதுபோல் ஆச்சு. முனியம்மா துளிச் சந்தடி செய்யாமல், இலைகளை விலக்கிக்கொண்டு, பூனைபோல் பதுங்கிப் பதுங்கி நடந்தாள். கொல்லையை விட்டு வெளியே வந்தாள்; திரும்பிப் பார்க்காமல் ஓட்டமாய் ஓடினாள். இதை ஞாபகம் வெச்சுக்கோ, தங்கச்சி! பிசாசுக்குப் பயந்து ஓடினால் திரும்பியே பார்க்கக்கூடாது; பார்த்தால் போச்சு; ஒரே அறையாய் அறைந்து போடும்.

"முனியம்மா வீடு போய்ச் சேர்ந்தாள்; அவள் மார்பு 'விதுக்கு விதுக்கு'ன்னு அடிச்சுக்குது; வாய் பேச முடியவில்லை; யாரையாவது எழுப்பக்கூடத் துணிவில்லை; வாசல் கதவை மெதுவாய்ச் சாத்தி, தாழ்ப்பாளைக் கெட்டியாகப் போட்டாள்; பழையபடி படுக்கையில் படுத்தாள். ஆனால் நல்ல தூக்கம் வருமா? அதுதான் இன்னும் எட்டு நாளைக்கு வராதே! பெருமூச்சு விட்டுக்கொண்டு புரண்டு புரண்டு அவள் படுத்திருக்கிறாள். இங்கே இப்படியா? அங்கே பிசாசு என்ன செய்தது?

"பிசாசுக்குப் புத்தி ஏது? அது 'பரபர' என்று தண்ணீர் இறைத்தது. கொல்லை எல்லாம் ஒரே வெள்ளக்காடாய்ப் போச்சு. 'ஏ முனியம்மா, என்ன? சரியாத் தண்ணி கட்டலே?' என்று கேட்டது. முனியம்மா இருந்தால் அல்லவா பதில் சொல்லுவாள்? பேச்சில்லை. பிசாசு சாலை அப்படியே கிணற்றில் நிறுத்திவிட்டு, ஓடி வந்தது. போர்த்தியிருந்த மண்வெட்டியைப் பார்த்து, 'என்னடி முட்டாக்கு? தலையை நிமிர்' என்றிருக்கிறது. மண்வெட்டி எப்படி நிமிரும்? அது இருந்தபடி இருந்துவிட்டது. பிசாசு பலம்கொண்ட மட்டும் விட்டது ஓர் அறை. மண்வெட்டிக் கழி இரண்டு துண்டாய்ப் போச்சு."

"ஆமாம், கிழவி, இதையெல்லாம் யார் பார்த்தார்கள்?" என்று நான் கேட்டேன்.

"ஆத்திரப்படாதே, தம்பி;

நல்லதோர் கதையினுக்கே நாலுகால் இல்லை என்பார்;
வல்லமையில் லாதவரே வக்கணையாய்ப் பேசிடுவார்.

பிசாசுக்குத்தான் கால் இல்லை; கதைக்குக் கால் உண்டு. ஆனால், அது உனக்குத் தெரிகிறபோதுதான் தெரியும். பிசாசு இப்படியெல்லாம் செய்தது பின்னாலே உனக்குத் தெரியும்."

''நீ பாட்டுக்குச் சொல்லு, கிழவி; உனக்குத் தெரியுமே, அவன் குயுக்தி எல்லாம்'' என்றாள் மதனி.

''மண்வெட்டி உடைந்தது. பிசாசு ஏமாந்துபோச்சு. இந்தச் சங்கதியெல்லாம் சின்னக் கறுப்பன் கண்டானா? ஜாமக் கோழி கூவினதும், அவன் எழுந்தான்; ஒழுங்காய்ச் சால் கயிறுகளைச் சுமந்துகொண்டு முனியம்மாவின் வீட்டுக்கு வந்தான். கதவைத் தட்டி, 'முனியம்மா, முனியம்மா' என்று அழைத்தான். வந்தது சின்னக் கறுப்பனா? இல்லாவிட்டால் பிசாசுதான் மறுபடியும் வந்ததா? இப்படியெல்லாம் முனியம்மாவுக்குச் சந்தேகம் உண்டாச்சு. அது நியாயந்தானே? அவள் பேசாமல் கமுக்கமாயிருந்தாள். கறுப்பன் கதவை உடைத்துவிடப் போகிறவன் போல் இடித்தான்; திரும்பத் திருப்ப அழைத்தான். முனியம்மாவின் ஆயாள் விழித்துக்கொண்டாள். 'முனியம்மா, மருமகப்பிள்ளை கூப்பிடுதே, காதிலே விழல்லே?' என்று எழுப்பினாள். 'நீ சும்மா இரு, ஆயா' என்று முனியம்மா அவளை வாயடைத்தாள். 'ஏ பயந்தாங்கொள்ளி முனியம்மா!' என்று கத்தினான் கறுப்பன். கடைசியாக மனசைத் திடப்படுத்திக்கொண்டு, 'யாரது?' என்று கேட்டாள் முனியம்மா. 'நான்தான் உன் மச்சான்' என்றான் கறுப்பன். 'மச்சானா மச்சான்! உங்க சங்கதி தெரியும் எனக்கு. போது விடிஞ்சு வாருங்க. பாத்துக்கலாம்' என்றாள் முனியம்மா. கறுப்பனுக்குக் கோபம் கோபமாய் வந்தது. 'சை! இவ்வளவுதானா உன் வீறுப்பெல்லாம்! தெரிஞ்சு போச்சு உன் பவிசு. இனிமேல் உன் முகத்திலே முழிக்கமுடியாது. வார்த்தையைக் காப்பாத்தாத பெண்ணோடே வாசகம் ஏது?' என்று சொல்லி, 'தூ!' என்று காறி உமிழ்ந்துவிட்டு, கறுப்பன் திரும்பிப் போய்விட்டான். முனியம்மாவுக்கா அவமானம் தாங்கமுடியவில்லை. 'என்ன ஆனாலும் சரி! இது பிசாசாகவே இருந்தாலும் சரி. ஆறிலும் சாவு, நூறிலும் சாவு' என்று துணிந்தாள். பாய்ந்தெழுந்து வாசல் கதவைத் திறந்தாள். தெருவைப் பார்த்தாள். கறுப்பன் இதற்குள் வெகு தூரம் போய்விட்டான். முனியம்மா என்ன செய்வாள்? வாசலிலே ஓடிப் போய்ப் பார்க்கலாமா என்று நினைத்தாள். பயம் முழுக்கப் போகவில்லை. என்ன இருந்தாலும் பெண்தானே! 'பொழுது விடிஞ்சா, எல்லாம் சொல்லிக்கலாம்' என்று எண்ணினாள். மறுபடியும் உள்ளே போய்ப் படுத்தாள். உடம்பு களைத்துப் போயிருந்ததா? கண் கெஞ்சியது. தூங்கிப் போய்விட்டாள். நல்ல தூக்கம்.

தூக்கமான தூக்கம்—அது துயரமொழி தூக்கம்
பாற்கடலில் தூக்கம்—அது பரமனவன் தூக்கம்
கும்பகருணன் தூக்கம்—அது குடிகெடுக்கும் தூக்கம்
உம்பரவர் தூக்கம்—அது உரம்கொடுக்கும் தூக்கம்,

அது எனக்குத்தான் வரமாட்டேங்குது. முனியம்மா தூங்கினாள். வெள்ளி முளைத்தது. கோழி கூவியது. போது விடிந்தது. ஆயாள் பழங்கஞ்சி குடிக்கக் கூப்பிட்டபோதுதான் முனியம்மா எழுந்து பல் துலக்கி முகம் கழுவினாள்; என்னவோ அரைகுறையாய்க் கஞ்சி குடித்தாள். அவள் மனசிலே ஏறியிருக்கிற சுமையிலே கஞ்சி எங்கே பிடிக்கும்? ஓடினாள் சின்னக் கறுப்பன் வீட்டுக்கு. 'வெச்ச சபதம் வெச்சதுதான்; பிடிச்ச விரதம் பிடிச்சதுதான்' என்று அவன் சொல்லிவிட்டான். சரியாய் முகம் கொடுத்தே பேசவில்லை. பிசாசு வந்த சங்கதியெல்லாம் இவள் சொன்னாள். 'இதெல்லாம் வீண் பேச்சு; இந்தக் குட்டி என் கிட்டக் கதை அளக்கிறாள்' என்று அவன் சொன்னான்.

''இந்தச் சமயத்தில் நாட்டாண்மைக்கார வீட்டு வில்லப்பன் அங்கே வந்து சேர்ந்தான். அவன் என்ன செய்திருக்கிறான்? இந்த ஜோடி சபதம் கூறினபோது கூட இருந்தவனா? அது என்ன ஆகிறது

என்று பார்க்க எண்ணியிருக்கிறான்: காலங்காத்தாலே எழுந்திருந்து சோளக் கொல்லைப்பக்கம் போயிருக்கிறான். கொல்லை முழுக்க ஒரே வெள்ளக்காடாயிருக்குது. துணி போர்த்தின மண்வெட்டிக் கழி' உடைஞ்சு கிடக்குது. ஆனால் ஆள் இரண்டும் கண்ணிலே தட்டுப்படவில்லை. 'இதென்ன வேடிக்கை!' என்று நினைத்து, கறுப்பனுடைய வீட்டுக்கு வந்திருக்கிறான். இரண்டு பேரையும் சேர்ந்தாற்போல் பார்த்ததும், அவனுக்கு என்ன தோணிச்சோ, தெரியவில்லை. 'என்ன, அண்ணே! முகூர்த்தப் பேச்சா நடக்குது? முனியம்மா சொன்னது போலே இரண்டு பேரும் கெலிச்சிட்டாப் போலிருக்கு!' என்று கண்ணைச் சிமிட்டிக்கொண்டே கேட்டான். 'என்னடா சில்லறைப் பரிகாசம் பண்ணுகிறே?' என்று கோபத்தோடு சொன்னான் கறுப்பன். 'ஆமாம், இனிமேல் பரிகாசம் பண்ணாமல் விடுவாங்களா? கலியாணப் பெண்ணையும் மாப்பிள்ளையையும் முகூர்த்தம் நடந்து முடிகிறவரைக்கும் எல்லாருந்தான் பரிகாசம் பண்ணுவாங்க' என்றான் வில்லப்பன். 'டேய்! சும்மாப் போடா. இல்லே, எனக்குக் கெட்ட கோபம் வரும்' என்று அதட்டினான் கறுப்பன். வில்லப்பனுக்கு இது ஒண்ணும் புரியவில்லை! சற்று நின்று விசாரித்த பிறகுதான் சங்கதி தெரிந்தது. 'அண்ணே, நான் நேரே பார்த்தேன். முனியம்மா சொல்கிறது நிஜந்தான். கொல்லையெல்லாம் ஒரே வெள்ளமாயிருக்கு; மண்வெட்டி முறிஞ்சு கிடக்கு' என்றான். 'இரண்டு பேரும் பேசிக்கிட்டு, இந்தக் கதை கட்டியிருக்கீங்களா? இதெல்லாம் யாருக்குக் காது குத்த? என்கிட்ட பலிக்காது' என்றான் கறுப்பன். 'அண்ணே, இப்படிச் சொல்லாதே. இப்பவே நேரே கொல்லையைப் போய்ப் பார்க்கலாம்! வா' என்றான் வில்லப்பன். கறுப்பன் கொஞ்சம் விதண்டாவாதம் பண்ணிவிட்டுப் பிறகு 'சரி' என்று சம்மதித்தான். மூன்று பேரும் சோளக் கொல்லைக்குப் புறப்பட்டார்கள்.

''இவர்கள் இளம்பிள்ளைகள். ஆனால், இதற்குள்ளே பிசாசு என்ன செய்தது? அது பகலிலே உருவத்தோடேதான் வரமுடியாது; மற்றப்படி எல்லாம் செய்யும். இவர்கள் பேச்சையெல்லாம் கேட்டுக்கொண்டிருந்தது. குடுகுடு என்று பறந்தோடி மண்வெட்டியை மறைத்தது; கொல்லை வெள்ளமெல்லாம் காய்ந்துபோகச் செய்தது. இவர்கள் அங்கே போய்ச் சேர்ந்தார்கள்; பார்த்தார்கள். வில்லப்பனும் முனியம்மாவும் திடுக்கிட்டுப் போனார்கள். 'அடடே' மண்வெட்டியைக் காணல்லியே! இந்நேரத்தில் யார் இங்கே வந்திருப்பாங்க?' என்றான் வில்லப்பன். 'அடேயப்பா! என்ன பாசாங்கு! மண்வெட்டிதான் போச்சு. பூமி ஏன் ஏழு நாளைக்குமுன் தண்ணி இறைச்சதுமாதிரி வறண்டு கிடக்குது?' என்று ஏளனமாய்ப் பேசினான் கறுப்பன். முனியம்மா, வில்லப்பன் இரண்டு பேரும் சேர்ந்து சூழ்ச்சியாய்க் கட்டிவிட்ட அண்டப்புளுகு இது என்றே அவன் எண்ணிவிட்டான்.

''பிறகு யார் யாரோ வந்து பஞ்சாயத்தெல்லாம் செய்து பார்த்தார்கள். 'நான் என்ன தப்புச் செய்திருந்தாலும் என்னை மன்னிச்சிடு' என்று முனியம்மா எவ்வளவோ கெஞ்சினாள். ஒண்ணுக்கும் கறுப்பன் மசியவில்லை. 'ஐயோ! ஏன்தான் இந்தப் போட்டிப் போட்டேன்?' என்றெல்லாம் அவள் புலம்பினாள். போட்டியினாலேயா கெடுதல் வந்தது? கறுப்பன் வாயிலே சனியன் புகுந்தான்; 'நாளைக் காலையிலே நான் வர்றேன்' என்று கருவமாய்ப் பேசினான். வந்தது தொல்லை.

முத்துச் சிவிகையிலே மோகனமாய்ப் போவேன்;
பத்துச் சிவிகையிலே பாங்கிமார் பின்வருவார்.
தந்தச் சிவிகையிலே தளுக்கியே நான் போவேன்;
சிந்தும் எழில் மயில்போல் சேடிமார் பின்வருவார்.

மாமன் மகன் வந்து மாட்சியாய்க் கைபிடிப்பான்;
காமன் தனைவிஞ்சும் கட்டழகென் கண்ஒளிரும்.
பூப்போட்ட பந்தலிலே பொன்னுடை போர்த்திட்டுக்
காப்பிட்ட கையதனுல் கட்டிடுவான் நற்றுலி.

இப்படியெல்லாம் பல விமரிசைகளோடு தனக்குக் கலியாணம் நடக்கும் என்று கோடித்திருந்த முனியம்மா நினைப்பில் இடி விழுந்தாற்போலாச்சு. 'ஒன்று, உன் மனசு மாறி, உன்னையே நான் கலியாணம் கட்டிப்பேன்; இல்லையோ, கன்னி கழியாமலே காலங்கழிப்பேன்' என்று அவனிடமே சொல்லிவிட்டுக் கண்ணீரோடு அவள் வீடு வந்து சேர்ந்தாள். இவ்வளவுதான், தங்கச்சி, இனிமேல் என்னை நீ அடிச்சுப் போட்டாலும் சரி, மீதிக் கதை நாளைக்குத்தான்'' என்று சொல்லிக் கிழவி நிறுத்திஞள். அடுத்த நிமிஷமே குறட்டை விட்டுக்கொண்டு தூங்கிவிட்டாள்.

## 3

மூன்ருவது நாள் அண்ணன் நல்ல வேளையாக வரவில்லை. அப்பா, அம்மாவைப்பற்றியோ கவலை இல்லை. அவர்கள் வர ஒரு மாதமோ ஒன்றரை மாதமோ எவ்வளவாஞலும் ஆகும். கடிதம் மட்டும் வந்துகொண்டேயிருக்கும், என்னைச் சமர்த்தாயிருக்கச் சொல்லி.

வழக்கப்படி நிலவொளி திண்ணையில் வீச, மதனியும் நானும் கதை கேட்கத் தயாராஞேம். கிழவி 'பொளகு வெத்திலை'மென்று தொண்டையைச் சீர்படுத்திக்கொண்டு சொல்லத் தொடங்கிஞள்.

''கங்காணிச் சின்னுனும் கறுப்பியும் கூடிக்கொண்டு
சிங்காரச் செல்வனையே சிக்கவைத்தார் கப்பலிலே.

இது என்ன தெரியுமா? இந்த ஊரிலே அந்த நாளில் சின்னுள் என்று ஒரு கங்காணி இருந்தான்; கறுப்பி என்று ஒரு பெண் கங்காணி இருந்தாள். அவனுக்கும் கலியாணம் ஆகவில்லை; இவளுக்கும் கலியாணம் ஆகவில்லை. ஆனல், இரண்டு பேரும் தொட்டுத் தாலி கட்டிய புருஷன், பெண்சாதிமாதிரிதான் ஒரே வீட்டில் வாழ்ந்தார்கள்.

''சின்னுனும் சரி, கறுப்பியும் சரி, 'ஊரிலே எந்தப் பயலைப் பிடிக்கலாம்; எந்தக் குட்டியை வாவலாம்?' என்று ஒரே குறியாக இருப்பார்கள். யார் வீட்டிலாவது 'கலசல்' என்ருல், உடனே இரண்டு பேருக்கும் வெகு குஷி. அங்கே போனுல் 'இரை' கிடைக்கும் என்று அவர்களுக்கு நிச்சயமாய்த் தெரியும். மெல்லப் போய் 'வலை' விரித்து விடுவார்கள். சின்னக் கறுப்பனுக்கும் முனியம்மாவுக்கும் மனவாட்டம் வந்துவிட்டது என்று தெரிந்ததும், சின்னுனும் கறுப்பியும் அவனுக்குக் 'கண்ணி' வைக்க ஆரம்பித்தார்கள்.

''எங்கள் பெரியப்பாவுக்கு என்ன நினைப்பு? தம் தங்கை மகளைத் தான் கறுப்பனுக்கு எப்பாடுபட்டும் கட்டிவைக்கவேணும் என்று அவர் உறுதியாயிருந்தார். இதென்ன சுத்த முட்டாள்தனம்! தண்ணியிறைக்கிறதாம்; அதற்குப் பந்தயமாம். அது நடக்கல்லியாம். அதஞலே அந்தப் பெண்ணைக் கட்டிக்கமுடியாதாம்! அத்தறுதியா இதோடே விட்டுப் போச்சா? தங்கச்சி உறவை நான் உதறிவிடமுடியுமா? நீ அந்தப் பெண்ணைத்தான் தாலி கட்டணும். இல்லே, என் முகத்திலே முழிக்காமல் போகவேண்டியதுதான்' என்று கறுப்பனை ஓயாமல் அதட்டிக்கொண்டிருந்தார்.

''இரண்டு நாளைக்கொருவாட்டி வீட்டிலே பெரிய சச்சரவுதான். கறுப்பன் சோறே தின்னமாட்டான். இந்த நிலையிலே மெல்லத்

கறுப்பி வருவாள். கறுப்பனைத் தங்கள் வீட்டுக்கு அழைத்துப் போவாள். அங்கே சின்னனும் கூடிக்கொள்வான். கறுப்பனுக்குப் பெரிய உபசாரம் எல்லாம் நடக்கும். ஊர்க் கதையெல்லாம் பேசுவார்கள். இடையிலே 'இது என்ன எளவு ஊரு? ஒரு மங்குஸ்தான், ஒரு கிச்சிலி ஏதாவது ரெண்டு பழம் உண்டா? மானம் கண் திறந்தாப் போச்சு. இல்லே, திண்டாடவேண்டியதுதான். பச்சை மிளகாயைக் கடிச்சுக்கிட்டு, சோளக் கூழோ கம்பங் கஞ்சியோ கொட்டி வயித்தை நிறைச்சுக்கவேண்டியதுதான். ஒரு சுகமில்லே' என்பான் சின்னன். 'ஆமாம், வாங்களேன் போவோம், அடுத்த வாரக் கப்பலுக்கு; தம்பி யையும் வேணுமானல் அழைச்சுக்கிட்டுப் போவோம். எனக்குந்தான் பிடிக்கல்லே இந்த ஊரு' என்பாள் கறுப்பி.

''அந்த மலாயாவிலே அப்படி இருக்கும், இப்படி இருக்கும் என்று ரொம்ப வர்ணனையாய்ச் சொல்லுவார்கள். வெள்ளைக்காரத் துரைக்குத் தங்கள் இரண்டு பேரிடமும் வெகு பிரியமாம். இரண்டு பேரையும் சீமைக்கே வந்துவிடும்படி சொல்லுவாராம். பை பையாய்ப் பணம் கொடுப்பாராம். நாலு ரப்பர் மரத்திலே பால் எடுத்தால் போதுமாம். அந்த வேலே ஒடுகிற ஓட்டமாம்; வெகு சுளுவாயிருக்கு மாம். தம்பிமாதிரி ரெண்டு எளுத்துத் தெரிஞ்சவங்க, அதுகூட என்னத் துக்குச் செய்யவேணும்? மத்தவங்க எடுக்கற பாலேயும் மரங்களேயும் கணக்கு வெச்சுக்கிட்டாப் போகுது. போனவுடனே மேஸ்திரி வேலே. பின்னலே கங்காணி. அதுலேயும் ரெண்டு கோண எளுத்துத் தெரியும் தம்பிக்கு. தம்பியைத் துரை தலேயிலே வெச்சுக்கிட்டுக் கொண்டாட மாட்டாரா?'' என்பாள் கறுப்பி. 'அது சரிதான். அதுக்கு என்ன ஆட்சேபம்?' என்பான் சின்னன்.

''வீட்டிலே அப்பாவின் தொணதொணப்புச் சள்ளை தாங்கவில்லே. இனி இந்த ஊரிலே இருக்கத் தோதுபடாது என்று எண்ணினன் சின்னக் கறுப்பன். ஏன் மலாயாவுக்குப் போகப்படாது? போய்விடுவது என்று தீர்மானித்தான். போனல்தானே தெரியும், தம்பி, அந்தப் பவிசு? எத்தனையோ பேர் மலாயாவுக்குப் போன கதை எனக்குத் தெரியும்.

''முதலில ரெயிலிலே நாகப்பட்டணம் போகவேணும். அங்கே போனல், அங்கே பெரிய காம்பவுண்டு. அதிலே இவர்களையெல்லாம் ஏழு நாளேக்கு ஆடுமாடுமாதிரி அடைச்சுப் போடுவார்கள். அம்மை மருந் தெல்லாம் குத்துவார்கள். போடுகிற சோறே சொல்லத் தரமில்லே. எத்தனை பேர் வாயிலெடுப்பார்கள்! எத்தனை பேர் தப்பியோடி வரு வார்கள்! ஏழெட்டு நாள் இந்த ஜெயிலிலே இருந்த பிறகு, கப்பல் வந்து, ஐம்பது அறுபது பாகைக்கு அப்பாலே கடலில் நிற்கும். படகிலே இவங்களே ஏற்றிக் கப்பலுக்கு அனுப்புவார்கள். அப்போதே அந்த அலேயையும் ஆட்டத்தையும் பார்த்து பல பேருக்கு வாந்தியும் மயக்க மும் வந்துவிடும். கப்பலேறியாச்சு.

கப்பலுந்தான் புறப்படுது காலை யிளவெயிலில்
கடலலேயைப் பெருவாள்போல் கனமிடுக்காய்க் கீண்டே,

கப்பல் புறப்படுகிறது. ஏழு நாலு நாள் பிரயாணத்துக்குப் பிறகு அக்கரைச் சீமை வந்து சேரும். அங்கே சில சடங்கெல்லாம் நடந்த பிறகு, ரப்பர்த் தோட்டத்திலே கூலிகளாய் இவர்களே வேலே செய்யச் சொல்வார்கள். அதில் எத்தனையோ இக்கட்டு. சில துரைகள் வெகு கஷ்டப்படுத்துவார்களாம். நான் போனதில்லே, தம்பி. எல்லாம் சொல்லக் கேள்விதான். அப்பா, உற்ருர் உறவினர் யாரிடமும் 'சொல்லாமல் கொள்ளாமல்' இந்த அழகான வேலேயைத் தேடிக் கொண்டு சின்னக் கறுப்பன் போய்விட்டான்.

''ஊரிலே எல்லாரும்பட்ட வருத்தம் சொல்லிமுடியாது. குடும்பத்துக்குக் கண் அவன்; ஊருக்கு உசிர் அவன். யார்தான் வருத்தப்படமாட்டார்கள்? எல்லாரையும்விடப் பெரும் கஷ்டப்பட்டவள் முனியம்மாதான். சின்னனும் கறுப்பியும் தங்களுக்கு ஏதுமே தெரியாது போல் பாசாங்கு செய்தார்கள். ஆனால் ஊராருக்கு அவர்கள்மேலே தான் சந்தேகம். அவர்களைத் திட்டாதவர் இல்லை. பெரியப்பா நாகப்பட்டணத்துக்கெல்லாம் ஆள் அனுப்பிப் பார்த்தார். எப்படித்தான் ஒளிந்துகொண்டு கறுப்பன் போனானோ? அவன் அகப்படவில்லை. அக்கரைச் சீமைக்கே போய்விட்டான். அங்கேயிருந்து கடிதாசு போட்ட பிறகுதான் அவன் இருக்கும் இடம் தெரிந்தது. கடிதாசு மாத்திரமா போட்டான்? ஆறு மாசத்துக்கெல்லாம் இருநூறு ரூபாய் பணமும் அனுப்பினான். நம் ஊரில் அக்கரைச் சீமைக்குப் போன யாரானாலும் அனுப்புகிற பணத்தைப் பெரிய வீட்டுப் பிள்ளைக்குத்தான் அனுப்புவார்கள். இது வளமை; இப்படியே கறுப்பனும் அனுப்பினான். இங்கே முனியம்மா தவித்துக்கொண்டிருந்தாள். அத்தைக்கோ—அதுதான் முனியம்மாவின் தாய்—அவளுக்கு ரொம்ப ரோஷம் வந்துவிட்டது: 'இவன்தான் பெரிய மனிசனோ? வீரத்திலே அருச்சுனன், பெருமையிலே இந்திரன், அழகிலே மன்மதன்! போக்கணங்கெட்ட பயல். என் மகளைக் கட்டிக்கக் கொடுத்துவைக்கலை இவனுக்கு. அவளைக் கட்டிக்க எத்தனையோ ராசா காத்துக் கிடக்கிறான். இந்த வருசமே கலியாணத்தை நடத்திப்புடுறேன்' என்று வீறாப்புப் பேசினாள். முனியம்மா மனசை அவள் அறியவில்லை. இதனாலே இந்த வீட்டிலேயும் கொஞ்சம் கொஞ்சம் 'கலசல்' ஏற்பட்டது.

''கலகம் உண்டான இடத்திலே நாரத முனிவர் வந்து தோன்றிவிடுவார் இல்லையா? முனியம்மாவின் வீட்டுக்குக் கறுப்பி வரத் தொடங்கினாள். அவளுக்குப் பின்னாலே சின்னனும் வந்து சேர்ந்தான். ஆனால், இங்கே முனியம்மாவிடம் அவர்கள் பேச்சு எடுபடவில்லை. அவர்கள் அத்தையைப் பிடித்துவிட்டார்கள். அவள் மனசை நன்றாய்க் கரைத்தார்கள்.

கரைப்பார் கரைத்தால் கல்லுந்தான் கரையாதோ?
உரைப்பார் உரைத்தால் உள்ளந்தான் உருகாதோ?
தீயிட்ட செம்பொன் திண்ணெனவே இளகாதோ?
வாயிட்ட சீனியும் வந்திடுமோ பின்திரும்பி?

''முனியம்மாவின் தாய், வறட்டுத்தனமாய்ப் பேசினாளே தவிர, மருமகனுக்கிக்கொள்ள எந்தப் 'புள்ளி'யையும் குறித்துக்கொள்ளவில்லை. கறுப்பியும் சின்னனும் அந்த வேலையைத்தான் மேற்கொண்டார்கள். முதலில் அவர்கள் முனியம்மாவையும் அக்கரைச் சீமைக்கு அனுப்பிவிடலாம் என்று முயன்றார்கள். அவளோ இவர்களோடு பேசக்கூட மறுத்துவிட்டாள். 'இருக்கட்டும். இந்தக் குட்டியைச் சரியான தொழுவில் மாட்டிவிடவேண்டும்' என்று அவர்கள் வருமம் வைத்தார்கள். இதற்கு ஓர் ஆளையும் பிடித்தார்கள். அவன் வேறு யாரும் இல்லை. நாட்டாண்மைக்கார வீட்டு வில்லவப்பன்தான். உம்! தம்பி, உனக்குத் தூக்கம் வரவில்லையா? உனக்கென்ன? நீ சின்னஞ்சிறிசு. எனக்கோ வயசாச்சு. கண்ணைச் சுழட்டுது....''

அவ்வளவுதான். இனிப் பலிக்குமா? கிழவி கதையை மறுநாளைக்கு ஒத்திப் போட்டுவிட்டாள்.

## 4

அன்று காலையில் அண்ணன் வந்துவிட்டான்.

நல்ல சந்தன சோப்பு ஒரு 'பாக்கெட்' வாங்கிவரும்படி மதனி சொல்லியிருந்தாள். அண்ணனுக்குச் சோப்பு என்றாலே மகா வெறுப்பு. பயறு, கடலை மாவையோ, சீயக்காய்த்தூள் அல்லது வாசனைப் பொடியையோதான் நம் நாட்டுப் பெண்கள் தேய்த்துக் கொள்ளவேண்டும் என்ற திட அபிப்பிராயம் உடையவன்: இருந்தாலும் மதனியின் 'கட்டளை'யை அவன் மீறமுடியாது. சோப்புப் 'பாக்கெட்' வாங்கி வந்திருந்தான். சந்தன சோப்புத்தான்? ஆனால், நல்ல சோப்பு இல்லையாம். இதுபற்றி அண்ணனுக்கும் மதனிக்கும் பெரிய தர்க்கம் நடந்துகொண்டிருந்த சமயத்தில், நெல்லுக்காரக் கிழவி அங்கே வந்தாள்:

''சரிதான், பெரிய தம்பிதான் வந்துட்டதே. இன்னிக்கு ராத்திரி நான் துணைக்குப் படுக்க வரவேண்டாம்'' என்றாள்.

''வா, கிழவி. வராமல் இருந்துவிடாதே. கதையை முடிக்கவேண்டாமா? அரைகுறையாய்க் கதை சொன்ன பேர்....'' என்றேன்.

''ஆமாம் கிழவி. வந்து கதையை முடித்துவிட்டுப் போ. இல்லை, எங்கள் வீட்டுத் திண்ணையிலேதான் இன்றைக்கும் படுத்திரேன்'' என்றாள் மதனியும்.

அன்றிரவு அண்ணன் நடுவாசலில் நிலாவில் கட்டிலைப் போட்டுக் கொண்டு படுத்தான்.

சின்னத் திண்ணையில் நான்; பெரிய திண்ணையில் மதனி, கிழவி, சௌந்தரம் மூன்று பேரும் எப்போதும்போல் இருந்தார்கள். அண்ணா வின் கட்டிலைச் சுற்றிச் சுற்றி வந்து மைதிலி விஷமம் செய்துகொண்டிருந்தாள்.

கிழவி ஆரம்பித்தாள்:

''என்ன தம்பி, வெளியூர் போய் வந்திருக்குது பெரிய தம்பி. வெற்றிலை பாக்கு வாங்கி வந்திருக்குமே?''

''இதோ'' என்று சொல்லி, கால் கவுளி வெற்றிலையையும் ஒரு கை களிப்பாக்கையும் கிழவியின் முன்றானையில் போட்டாள் மதனி.

''கதை?'' என்றேன் நான்.

''என்ன கதை, கிழவி?'' என்று அண்ணா கேட்டான்.

''மண்ணாங்கட்டிக் கதை. சின்னப்பிள்ளையா இருக்கச்சே, உனக்கு எத்தனையோ தடவை சொல்லியிருக்கேனே, அந்த முனியம்மா கதை தான். அப்பவெல்லாம் இது உனக்கு ரொம்பப் பிடிக்கும். இப்பதான் கண்ணுக்குக் கண்ணெதிரே காணும் கரகம், தீமிதி, அக்கினிச் சட்டி ஒண்ணையுமே நீ நம்பமாட்டேங்கிறையே! சாமி, பூதம் எதுவுங் கிடையாது! நல்ல துணிச்சல்தாம்பா உனக்கு. இருந்தாலும் என் கதையை நான் முடிச்சுடறேன். நீ வேணுமானா உன் காதைப் பொத்திக்கோ'' என்று சிரித்துக்கொண்டே சொன்னாள் கிழவி.

அண்ணாவும் சிரித்தான்.

பிறகு, கிழவி விட்ட இடத்தில் கதையைத் தொடர்ந்தாள்.

''பாரதத்தைப் பதினெட்டு நாள் உடுக்கடிச்சுப் படிச்சாலும் படிப்பாங்க; இல்லே கிருட்டினன் தூது, மாடுபிடி சண்டை இதுகளை மட்டும் சொல்லி முடிச்சாலும் முடிப்பாங்க. அந்தமாதிரி இன்னிக்கு என் கதையைச் சுருக்க முடிச்சுப்பிடறேன். சரிதானா?'' என்று பீடிகை போட்டாள்.

சற்று நின்று, ஒரு கொட்டாவி விட்டு, விரலைச் சொடக்கி, ''அப்பாடா! நேத்து என்ன சொன்னேன்? ஆமாம்; சின்னுனும் கறுப்பியும் வில்லப்பனைப் பிடிச்சாங்க. வருசம் மூணுச்சு. கலியாண முகூர்த்தம் வெச்சாச்சு'' என்ருள்.

''என்ன கிழவி, ஒரே தாவாய்த் தாவறே! தந்தி பாஷையாயிருக்குதே!'' என்றேன்.

''நான் என்ன அநுமாரா லங்கா பட்டணம் தாண்ட? ஒரு கதை போகிற போக்கிலேதான் போகும். கேளு, குறுக்கே குறுக்கே பேசாதே; விழுந்து குளருதே. முனியம்மாவை வில்லப்பனுக்குக் கலியாணம் கட்டிவைக்கப் பெரியப்பாகூடச் சம்மதிச்சுட்டார். சின்னக் கறுப்பன்தான் அடங்காத பிள்ளையாய்ப் போனுனே! தவிர, அவனிடமிருந்து கடிதாசோ பணமோ ஒண்ணும் வெகு நாளாக வரவில்லை என்று அவருக்கு வருத்தம். அவன் இருக்கிருனே போனுனே என்றுகூட அவர் சந்தேகப்பட்டார். சின்னக் கறுப்பன் போட்ட எல்லாக் கடிதாசையும் பணத்தையுந்தான் வில்லப்பன் அமுக்கிப் போட்டானே! பெரியப்பாவுக்கு அவை எப்படி வரும்? அத்தனைக்கும் வழி சொல்லித் தந்தவர் சின்னுனும் கறுப்பியுந்தான்.

''முகூர்த்தம் குறிச்சாச்சு. பரிசப்பணமும் கொடுத்தாச்சு. கலியாண ஏற்பாடெல்லாம் தடபுடலா நடக்குது. பெரிய வீட்டுக் கலியாணம் இல்லியா? பறைமேளம், கொட்டு மேளம், பாண்டு, பல்லாக்கு, பூமாலை எல்லாத்துக்கும் சொல்லியாச்சு. சிலம்பு பழகிய பிள்ளைகளெல்லாம், 'இந்தக் கலியாணத்திலே விமரிசையாத் தாவடி போடப் போருேம்' என்று பேசிக்கொண்டார்கள். ஆனைமேலே அம்பாரி கட்டி, அதுக்கு மேலே கொடி பிடிச்சா இருக்குமே அந்த உயரம் பந்தல் போட்டாச்சு....''

''சரி, கிழவி, அப்புறம்?'' என்றேன் சலிப்புடன்.

''அட சொல்லவட்டுண்டா. வர்ணனை எவ்வளவு அழகாயிருக்கு!'' என்ருள் மதனி.

''ஊர் முழுக்க எல்லாரும் உற்சாகமாகத்தான் இருந்தார்கள். ஆனுல், என்னவோ ஒரு கலக்கமும் எல்லாருக்கும் இருந்தது. முனியம்மாவுக்கு மட்டும் ஒரே வேதனை. மனசுக்குள்ளேயே அவள் வெந்து கொண்டிருந்தாள். ஏற்கனவே வாடி இளைச்சுத் துரும்பாயிருந்தாள். அந்த இளைப்பும் அல்லிக்கொடிமாதிரி ஓர் அழகாய்த்தான் இருந்தது. பெரியவங்களுக்கு எதிரா ஒரு வார்த்தையும் அவள் பேசவில்லை. ரொம்ப மானம் மரியாதைக்குக் கட்டுப்பட்ட பெண் அவள். முகூர்த்த நாள் நெருங்க நெருங்க எல்லாருக்கும் பயமாயிருந்தது. அத்தைக்குக் கூட அதிக அச்சந்தான். ஒரு கணங்கூட மகளை விட்டு அகலாமல் கட்டிக் காத்துக்கொண்டிருந்தாள். மகள் என்ன செய்துவிடுவாளோ என்று அவள் பதறினுள். முனியம்மா மனசை யாராலும் அறிய முடியவில்லை.

''முகூர்த்தத்துக்கு முதல் நாள் குலதெய்வத்துக்குப் படைப்புப் போடுவது எங்கள் குடும்ப வழக்கம். அதற்கு வேண்டிய சாமக்கிரிகளெல்லாம் சேர்த்தாச்சு. ஒரு பக்கத்தில் பெரிய அடுப்புகள் வெட்டி, ஆண்பிள்ளைகள் எல்லாரும் ஆரவாரமாச் சமையல் செய்துகொண்டிருந்தாங்க. படைப்பெல்லாம் முடிந்தபிறகுதான் பெண்கள் அந்தப் பக்கமாகப் போகலாம். போய்ச் சாமி தரிசனம் பண்ணிவிட்டுக் கும்மியடிப்பார்கள்.

''இப்படிச் சாமி கும்பிட்டுக் கும்மியடிக்கப் போகுமுன்னே, பெண்ணுக்கு அலங்காரம் செய்யவேண்டும். அப்போது என்ன ஆச்சு! பெண்ணைக் காணவில்லை. ஊர்தேடு படலம் ஆரம்பம் ஆச்சு. எங்கே தேடியும் முனியம்மா அகப்படவில்லை. எல்லாருக்கும் ஒரே சந்தேகம், யார் மேலே? கங்காணி ஜதைமேலேதான். இந்தச் சூழ்ச்சிக்கும் அவர்களே காரணமாயிருப்பார்களோ என்று ஒவ்வொருவரும் நினைத்தார்கள்.

''இங்கே இப்படியா? அங்கே அக்கரைச் சீமையிலே என்ன நடந்திருக்கு? சாமி இல்லேன்னு சொல்லமுடியுமா? என்னவோ பெரிய தம்பி நினைக்குது! அது பெரியவங்க காலத்திலே இருந்தது; இன்னிக்கும் இருக்குது; நாளைக்கும் இருக்கப்போகுது. சாமி என்னிக்கும் அழியாது. நாம்பதான் வர்றோம்; போறோம்.

எங்கிருந்து வந்தேனோ எங்கேதான் போவேனோ?
ஏதுமே அறியா என் பாதையினைக் காட்டாயோ?

''அந்தப் பராபரந்தான் நம்மையெல்லாம் ஆட்டிவைக்கிறது.

''ஒன்றும் வேண்டாம், தம்பி. மனிசன் எத்தனையோ பாடுபடுறான். என்ன என்னவோ சாமர்த்தியமெல்லாம் பண்ணுறான். ஜகஜாலப் புரட்டெல்லாம் செய்யறான். இத்தனைக்குப் பிறகும் பத்துப் பேர் அவனைக் கொண்டாடாமலே அவன் போய்விடுகிறான். கோயிலிலே இருக்கிறதே, அந்தச் சிலை வெறுங் கல்லா? அப்படியானால், தலைமுறை தலைமுறையாய் எத்தனையோ பேர் ஏன் அதைக் கும்பிட்டு வணங்குகிறார்கள்? செய்த சிற்பி போய்விட்டான். தொழுத எத்தனையோ பேர் போய்விட்டாங்க. சிலை இருக்கிறது. அதற்கு இந்த மகிமை எப்படி வந்தது? எது எப்படியானாலும் சரி; மனிசனை மிஞ்சிய ஏதோ இருக்கிறது.''

கிழவி இந்தச் சுருதியில் இறங்கிவிட்டால், பரம வேதாந்திகளும் தோற்றுப் போகவேண்டியதுதான்.

''கிழவி....''

நான் அழைத்ததற்குக் காது கொடாமலே, ''ஏ பெரிய தம்பி, நான் உன்னை ஒண்ணே ஒண்ணு கேட்கிறேன்! அதற்கு மாத்திரம் பதில் சொல்லு. செத்தவன் சீவன் எங்கே போச்சு?'' என்றாள் கிழவி.

நல்லவேளையாக அண்ணு தூங்கிவிட்டான். இல்லாவிட்டால், அவனும் விடமாட்டான்; ஒரு பெரிய உபந்நியாசத்துக்குக் கிளம்பியிருப்பான்.

''அவன் தூங்கிவிட்டான். மேலே சொல்லு. எனக்குக்கூடக் கண்ணைச் சுழற்றுது'' என்றேன்.

''அப்புறம் என்ன? அக்கரைச் சீமையிலே சின்னக் கறுப்பனுக்கும் மன நிம்மதியில்லே. ஆனாலும் மனிசன் வீம்பு பிடிச்சால் பிடிச்சது தானே? முனியம்மாவை அடியோடு மறக்கத்தான் பார்த்திருக்கிறான். முடியவில்லை. உண்டாலும் சரிதான்; உறங்கினாலும் சரிதான்; பால் வெட்டினாலும் சரிதான். இவள் நினைப்பு அவனைவிட்டு அகலவேயில்லை. இத்தனையும் போக ஒரு நாள் இரவு அதிசயமான கனவு ஒன்று கண்டிருக்கிறான். குலதெய்வம் வந்து அதிலே பேசியிருக்கு. 'மகனே, முனியம்மா சொன்னது அப்படியே நிசம். உன்னையே நினைப்பாயிருக்கிறாள். அவளுக்கு ஆபத்து வந்திருக்கு. ஓடு; உடனே ஊருக்கு ஓடு. நீ போனால்தான் அவளைக் காப்பாத்தமுடியும்' என்று சொல்லியிருக்கு. இதோட மட்டும் இல்லே. கனவிலே மன்னார்சாமி கோயில் தெரிஞ்சுதாம். 'ஊருக்கு போனதும் நேரே அங்கே போ. உனக்கு நன்மை உண்டாகும்' என்றதாம் சாமி.

''அப்படியே அவன் உடனே கப்பல் ஏறி, ரெயில் ஏறி, வண்டி யேறி, கடைசிலே வழி நடந்து, அருச்சுனன் விட்ட அம்புமாதிரி பறந்துகொண்டு ஊருக்கு வந்திருக்கிறான். இப்படி அவன் வந்தபோது தான் ஊரிலே இந்த அமளி நடந்துகொண் டிருக்கிறது. சேதியெல்லாம் தெரிந்துகொண்டான். சாமி சொன்னது சரியாய்ப் போச்சு. முனியம் மாவை ஊரெங்கும் தேடி எல்லாரும் கைவிட்டுவிட்டார்கள். சாமி மேலே பாரத்தைப் போட்டான் சின்னக் கறுப்பன். யாரிடமும் ஒன்றும் சொல்லாமல், பித்துப் பிடித்தவன்மாதிரி ஓட்டமாய் ஓடினான் மன்னார்சாமி கோயிலுக்கு. சாமியை வணங்கினான். என்னமோ கவுளி சொல்லிச்சு. நல்ல வாக்குச் சொல்லு என்று எண்ணிக்கொண்டே, 'தெய்வமே, அவளை நான் எங்கே தேடுவேன்? நீயே வழிகாட்டு' என்று கத்தியிருக்கிறான். 'யார்? சின்னக் கறுப்பனா?' என்று அசரீரி மாதிரி ஒரு குரல் கேட்டது. யாரும் இல்லாத இடத்தில் இதென்ன குரல்? அதுவும் மேலேயிருந்து கேட்கிறதே! அவன் ஆச்சரியத்துடன் நிமிர்ந்து பார்க்கும்போது மறுபடியும் கேட்டது குரல்: 'என் அத்தான் சின்னக் கறுப்பனா? இது நிசமா? கனவா?' முனியம்மாவின் குரல்தான். அவளேதான் கோயில் மச்சுமேலே நின்றிருந்தாள்.

''சமாசாரம் இதுதான். முனியம்மாவுக்கு என்னவோ தோன்றி யிருக்கு. ஊருக்கு ஒதுக்குப்புறமாய் இருக்கும் மன்னார்சாமி கோயில் மச்சிலே போய், முகூர்த்த நாள் முடிய ஒளிந்திருப்பது; யாராவது கண்டுபிடித்துக் கலியாணத்துக்கு வற்புறுத்தினால், அங்கிருந்து கீழே பாறாங்கல் படிமீது குதித்துவிடுவது—இப்படி அவள் நினைத்திருக்கிறாள்.

''பிறகு என்ன, இவ்வளவுதான் கதை. பெண்ணும் பிள்ளையும் கண்ணீரும் கம்பலையுமாய் ஒருவரை ஒருவர் அணைத்துத் தேற்றிக் கொண்டார்கள். வில்லப்பனே மனம் மாறி, தான் எண்ணிய எண்ணத் துக்காக ரொம்ப வருத்தப்பட்டான். முனியம்மாவுக்கும் சின்னக் கறுப்பனுக்கும் அதே பந்தலில் அதே முகூர்த்தத்தில் கலியாணம் ரொம்ப விமரிசையாய் நடந்தது.

''பிற்பாடு மதனும் ரதியும்போல் இரண்டு பேரும் பல காலம் சௌக்கியமாய் வாழ்ந்தார்கள். இனிமேல் தூங்கு, தம்பி. தங்கச்சி, போய் வர்றேன்.''

கிழவியின் கதை முடிந்த சமயத்தில், அண்ணா ஏதோ உளறிக் கொண்டு எழுந்திருந்தான்.

''என்னடா, இன்னும் நீங்கள் தூங்கவில்லையா? நெல்லுக்காரி, உன் பிசாசுக் கதையும் பேய்க் கதையும் இன்னும் முடியவில்லையா? நானே தூக்கத்தில் மருண்டுபோனேன்'' என்றான்.

''பாத்தியா, தான் ஆடாவிட்டாலும் தன் சதை ஆடும். மனிசன் புத்தியினாலே எதையும் வெல்லமுடியாது. புத்திக்கு அப்பாலே ஏதோ இருக்கு. அதை நினைக்கவேண்டும்'' என்று சொல்லிக் கிழவி விடை பெற்றாள்.

அவள் என்ன சொன்னாலும் சரி; அண்ணாவுக்கு இந்த அதிசயத்தி லெல்லாம் நம்பிக்கை இல்லை. சோளக் கொல்லைக்கு முதலில் தண்ணீர் இறைத்தது வில்லன் சூழ்ச்சியாக இருக்கலாம்; சின்னக் கறுப்பன் கனவு அவனுடைய மனக் கவலையின் கற்பனையாக இருக்கலாம்; மன்னார்சாமி யின் கூற்று, பின்னால் கட்டிய கட்டாயிருக்கலாம்—இப்படியெல்லாம் அவன் சொல்கிறான். ஆனால், இந்தக் கதையைக் கேட்டதிலிருந்து எட்டு நாள்வரைக்கும் இரவிலே தூக்கத்தில் அவன் திடீரென்று உளறி யடித்துக்கொண்டு எழுந்திருப்பதுமட்டும் நிற்கவில்லை.

—ஜனவரி, 1954

# விபூதித் திருநாள்

ராஜம் கிருஷ்ணன்

நேர்வழியைப் பளிச்சென்று காட்டும் ஒளி எப்படி அவிந்ததோ தெரியவில்லை. மாணிக்கத்துக்கு உள்ளம் சோர்ந்தது. கால்கள் நிலைதடுமாறின. கண்கள் பஞ்சடைந்தன. உடல் தள்ளாடத் துவண்டு நின்ற இடத்திலேயே அவன் சாய்ந்துவிட்டான். 'அம்மா, அம்மா!' என்று அவன் எழுப்பிய ஒலி கண்டத்திலேயே நின்றது. கண்ணீர் வெளி வராமலே அவனுடைய நெஞ்சைச் சுமையாக்கியது.

''அ..ம்..மா..!''—சக்தியெல்லாம் ஒன்று திரட்டிக்கொண்டு கூவினான்.

''குழந்தாய்!''—கனிவு செறிந்த தெய்விகக் குரல் அவனுடைய செவிகளிலே இன்பத்தை வார்த்தது. பஞ்சு போன்ற கரம் ஒன்று அவன் தோளைத் தொட்டு அசைத்தது. உடல் சிலிர்க்க அவன் கண்களைக் கொட்டிக்கொண்டு விழித்தான். அவனுடைய தாயா? இல்லை, தேவ மாதாவின் திவ்ய ஒளிதானா? அவனுடைய கண்களை அந்தச் செவ்வொளி கூச வைத்தது.

''ஏண்டா, மணி ஏழு அடிக்கப் போகிறது. புதன்கிழமை யானால் விழித்துக்கொண்டேனும் படுத்திருக்க வேண்டுமா? போ, போ, பாலை வாங்கிக்கொண்டு வீட்டுக்குப் போ. கூஜாச் செம்பு வைத்திருக்கிறேன், பார்!''

ஓட்டல் முதலாளி பரமசிவத்தின் உதயகீதம் மாணிக்கத்தின் பிரமையைப் பறந்து போகச் செய்தது. முகத்துக்கு நேராக அடித்த இளஞ்சூரியனின் கிரணங்களைத் தெளிவுடன் பார்த்தவாறு மாணிக்கம் படுக்கையாக உதவிய துண்டை எடுத்துத் தோளில் போட்டுக்கொண்டான். மாசி மாதக் குளிர் உடலை ஒடுக்கியது.

''உன்னை எழுப்ப மெனக்கெட்டு இங்கே வந்தேன். போ, சீக்கிரம்'' என்று அவனை விரட்டிவிட்டுப் பரமசிவம் எதிரே இருந்த வெற்றிலை பாக்குக் கடைக்குப் போனார்.

புதன்கிழமைதோறும் அந்த ஓட்டலுக்கு விடுமுறை நாள். மாணிக்கம் தன்னந்தனியனாய், அவரிடம் ஓர் உதவி கோரி அங்கு வந்திருக்கிறான். வெறுமே சோறு போட்டுவிடுவாரா? ஓட்டலில் எடுபிடி வேலைகள் செய்வது தவிர, புதன்கிழமையன்று வீட்டு எஜமானியின் கொடுங்கோலுக்கும் அவன் கீழ்ப்படிந்தாக வேண்டியிருந்தது. ஹோட்டல் இருக்கும் நாளானால் காலையில் சூடான காபியும் இட்டிலியும்

சட்டினியும் கிடைக்கும். வீட்டில் அன்று என்ன கிடைக்குமோ! மாட்டுத் தோலாக இழுக்கும் ரொட்டியோ, அடிப்பிடித்த உப்பு மாவோ? 'மாட்டைக் கட்டு, மண்ணைத் தோண்டிப் போடு, மரத்தை வெட்டு' என்ற மாதிரியான அதிகாரங்களில் அந்தப் புதனுக்கு என்ன என்ன காத்திருக்கின்றனவோ?

சில நிமிஷங்களுக்கு முன் தேவமாதாவாகத் தோற்றம் அளித்த கதிரவனைப் பார்த்துக்கொண்டே அவன் திண்ணையை விட்டுக் கீழே இறங்கினான், கையில் கூஜாச் செம்புடன்.

இறங்க வாசற்படியில் காலை வைக்கையில் எங்கோ ஒரு மூலையில் 'க்கும், க்கும்' என்று கௌளி சொன்னாற்போல் அவனுக்கு ஒலித்தது.

மாணிக்கம் சட்டென்று சுற்று முற்றும் பார்த்தான். ஒலி வந்த திசை, தெற்கோ தென் மேற்கோ? விழிகள் துழாவின.

எந்த மூலையிலும் பல்லியும் இல்லை, பாச்சையும் இல்லை.

அவனுடைய அண்ணனுக்கு இதிலெல்லாம் அசாத்திய நம்பிக்கை.

அவன் அன்றுதான் அதையும் பார்ப்போமே என்று சோதிக்க எண்ணினான். திண்ணைச் சுவர்களை அவன் ஆராய்ந்துகொண்டிருக்கையில் முதலாளியின் குரல் மீண்டும் அவனை விரட்டியது.

''என்னடா, சுவரைப் பார்த்துக்கொண்டு நிற்கிறாய்? டிப்போக்காரன் கதவை மூடிவிடப் போகிறான்!''

பல்லியுடன் பரமசிவத்தையும் சபித்துக்கொண்டு மாணிக்கம் வாசற்படியை விட்டு இறங்கினான்.

புதன்கிழமை—மேற்கு—பல்லி சொல்லுக்குப் பலன் என்ன இருக்குமோ?

எடுத்த காரியம் வெற்றி—வழக்கில் ஜயம்—திரவிய லாபம்—இவை போன்ற சொற்றொடர்கள் உள்ளத்திலே கண் சிமிட்டி ஆசை காட்டின.

'மத்தியான்னம் வக்கீல் வீட்டுக்குக் கூட்டிப் போகிறேன்' என்ற பரமசிவத்தின் சொற்கள் அவனுடைய ஆசைக்கு நம்பிக்கைக் கொடி காட்டின. தேவமாதாவோ, அம்மாவோ உதயத்தில் அவன்முன் தோன்றியிருக்கிறாள்; இன்னும் என்ன கவலை?

மாணிக்கம் மனசைச் சற்று லேசாக்கிக்கொண்டு தெரு முனையில் இருந்த பால் டிப்போவுக்கு வந்தான். அன்று என்னவோ அவ்வளவாகக் கூட்டம் இல்லை. டிப்போக்காரர் கூஜாவில் பாலை அளந்து ஊற்றுகையில், சுவரில் லட்சுமி படத்துக்குக் கீழே தொங்கிய பாம்புப் பஞ்சாங்கத்தின்மீது மாணிக்கத்தின் பார்வை ஊன்றியது.

''அந்தப் பஞ்சாங்கத்தைக் கொஞ்சம் இப்படிக் கொடுங்கள், அண்ணாச்சி. ஒரு சமாசாரம் பார்த்துவிட்டுத் தருகிறேன்'' என்றான் அவன், பால் கூஜாவை எடுத்துக்கொள்ளாமலே.

''என்ன தம்பி விசேஷம், காலையிலே?'' என்று கேட்டபடியே அவர் பஞ்சாங்கத்தை எடுத்துத் தந்தார்.

பதில் சொல்லாமலே அவன் பக்கங்களைத் தள்ளினான், பல்லி சொல்லுக்குப் பலன்—திங்கள்—மேற்கு—ராஜதரிசனம். செவ்வாய்—மேற்கு—அநுகூலம். (இதற்குள் அவன் இருதயம் குதி போட்டது.) புதன்—தென்மேற்கு—பந்து மரணம். மேற்கு—பயம். அடசட்! வடமேற்காக இருந்தால் திரவிய நாசம்.

என்ன ஏமாற்றம்! பல்லி இப்படியா சொல்லிற்று? திரவிய நாசம். பந்து மரணம், பயம்! ஒன்றுகூட விளக்கம் இல்லை! திங்கட்கிழமையாகவோ, செவ்வாய்க்கிழமையாகவோ இருக்கக் கூடாதா? புதன்கிழமை சைத்தான்.

வெறுப்புடன் அவன் பஞ்சாங்கத்தை மூடியபோது டிப்போக்காரர் சிரித்துக்கொண்டே கேட்டார்; ''என்ன தம்பி, பார்த்தாய்?''

''ஒன்றும் சுகமில்லேங்க, அண்ணாச்சி. எழுந்திருக்கையிலே கௌளி சொன்னாற்போல் இருந்தது, பார்த்தேன். நன்றாக இல்லை'' என்றான் சப்பென்ற குரலில்.

''அதெல்லாம் பலிக்காது தம்பி!'' என்று சிரித்துவிட்டு அவர் பஞ்சாங்கத்தை வாங்கிச் சுவரில் மாட்டினார்.

'நிசந்தான். கௌளி சொல்லிற்றோ, பக்கத்துக் கடைக்காரர் 'சூள்' கொட்டினாரோ, பிரமை!' என்று ஒருவிதமாய்த் தேற்றிக்கொண்டவாறு, பால் கூஜாவுடன் தெருவில் இறங்கினான் மாணிக்கம்.

நியாயமுள்ள பக்கம் வெற்றி அடையாமல் தோற்குமா? அவன் இஷ்டப்படாமல் போட்டுவிட்டான் என்றாலும், தன் கையெழுத்தே இல்லை என்று வழக்காடலாமாமே? ஏன் ஆடக்கூடாது? திருப்பத்தில் உள்ள லட்சுமண விலாஸ் ஹோட்டலிலிருந்து வந்த வெங்காய சாம்பார் வாசனை அவன் மூக்கைத் துளைத்துக்கொண்டு ஏறியது. இருப்பு இரண்டணாச் சில்லறைதான். இல்லாவிட்டால் அப்போதே ஏறி நாலு இட்டிலியுடன் அந்தச் சாம்பாரை ஒரு கை பார்த்திருப்பான்.

'இருக்கட்டும். அந்தப் பயல் எல்லாவற்றுக்கும் சேர்த்து அநுபவிப்பான்!' என்று நெஞ்சினுள் வர்மத்தை வளர்த்து நாவை அடக்கிக்கொண்டு மாணிக்கம், ஊர் ஓரம் இருந்த பரமசிவத்தின் வீட்டை நோக்கி நடையை எட்டிப் போட்டான்.

அவன் தலையைக் கண்டதுதான் தாமதம்; எசமானி அம்மாள் பிரம்பு நாற்காலியில் உட்கார்ந்தபடியே உத்தரவிட்டாள். ''ஏண்டா இந்நேரம்? அதோ மரத்தடியில் கிடக்கிறது பார், முடிச்சுக் கட்டை; காய்ந்திருக்கிறது. ஒரு போடு போட்டுத் தாயேன். பச்சை விறகு; அந்த அம்மா கண்ணெல்லாம் எரிகிறது என்று புகார் பண்ணுகிறார்கள்.''

அந்தப் பூவரச மரத் துண்டைப் பார்த்துக்கொண்டே மாணிக்கம் நின்றான். ஒரு 'நாஷ்தா'வுக்கு வழி இல்லை; போது விடிந்து இந்த வேலை! ஹூம்! இப்படியும் வந்ததே அவனுக்கு? தேவமாதாவின் திருவுள்ளமா? இல்லை, அவன் செய்ய நினைப்பது தவறுதானோ?

கோடாலியும் கையுமாய் அவன் மரத்தண்டை வந்தான். முடிச் சென்றாலும் முடிச்சு! பயம்—திரவிய நாசம்—பந்து மரணம்—புதன் கிழமை!—ஓங்கி ஓங்கித் தன் ஆத்திரம் அத்தனையையும் அந்த மரத்தில் பாய்ச்சினான்.

மாணிக்கத்துக்கு உள்ளம் சோர்ந்தது: 'இல்லாவிட்டால், போனதெல்லாம் போகட்டும் என்று அவனிடமே போய்ச் சேர்ந்து விடலாமா?' அவனுக்கு ஒன்றும் புரியவில்லை.

மாணிக்கத்துக்கும் ராஜனுக்கும் தந்தை ஒருவரேயானாலும் அவர்கள் வெவ்வேறு தாய் வயிற்றுப் பிள்ளைகள்; வெவ்வேறு மதத்தைச் சார்ந்தவர்கள்.

ராஜனின் தாய் அவன் பிறந்த நான்கு மாதங்களுக்கெல்லாம் இறந்துவிட்டாள். பொன்னையா அதற்குப் பிறகுதான் மேரியை மணம் புரிந்துகொண்டார். மாணிக்கம் மேரிக்கு உதித்தவன். பொன்னையா ராணுவத்தில் சேர்ந்து இரண்டு உலக மகாயுத்தங்களிலும் பணியாற்றினார். இரண்டாம் உலக யுத்தத்தில் சைகோனுக்கு அருகே நிகழ்ந்த விமான விபத்தில் இறந்து போனார். இத்தனை தினங்கள்வரை பாலும் நீருமாய் மனம் ஒட்டியிருந்த சகோதரர்கள் இன்று திரிந்து சக்கையும் நீருமாய் வேறுபட்டு நிற்கிறார்கள்.

மேரி இருந்தால் இந்த நிலை வந்திருக்குமா?

ராஜனை அவள் தான் பெற்ற மகனுக்கும் மேலாக அல்லவோ வாஞ்சை வைத்து வளர்த்திருந்தாள்? மாற்றாள் பெற்ற பையன், வேறு மதத்தினன் என்று அவள் ஒருபோதும் நினைத்ததில்லையே?

மேரியை பொன்னையா விரும்பி மணம் புரிந்துகொண்டிருந்தாரே ஒழிய மதம் மாறவில்லை. இதனால் அவர்கள் இல்லத்தில் ஒருபோதும் அன்புக்கும் ஒற்றுமைக்கும் தடை ஏற்படவும் இல்லை. பொன்னையா இருந்தபோதும் சரி, இறந்த பின்பும் சரி, அந்த வீட்டில் தீபாவளிப் பண்டிகையையும் குதூகலமாகக் கொண்டாடினார்கள்; கிறிஸ்துமஸ் திருநாளையும் விசேஷமாகக் கொண்டாடினார்கள்.

மேரி மாதா கோயிலுக்குச் செல்லுகையில் ராஜனும் மாணிக்கத்துடன் செல்வான். அதேபோல் மாணிக்கமும் ராஜனுடன் ஈசுவரன் ஆலயத்துக்குச் செல்வது உண்டு. இவர்கள் இப்படி ஒற்றுமையுடன் வாழ்வதைக் காணச் சகியாதவர் பலர் இருந்தனர். ராஜனின் தாய் வீட்டைச் சேர்ந்த உறவினர்களும், மேரியின் சிற்றன்னை, அத்தை முதலியவர்களும் முக்கியமானவர்கள். ஆனால் இரண்டு பையன்களையும் எப்படியேனும் நல்ல குமாரர்களாக வளர்க்க வேண்டும் என்ற ஒரே லட்சியத்துடன் மேரி இடையில் பிறர் தலையிட்டுக் குழப்பங்கள் விளைவித்ததையும் சமாளித்தாள்.

பாவம்! அந்தத் தாய்க்கு அவர்கள் கொடுத்து வைத்திருக்கவில்லை.

மரணாவஸ்தையிலும், ''ஒற்றுமையுடன் இருங்கள். ஒரு குச்சியை உடைப்பது எளிது. கட்டுக் குச்சியை ஒன்றும் செய்ய முடியாது'' என்ற உபதேசத்தை அவள் செய்ய மறக்கவில்லை.

இருவரும் தாய் இறந்த பின்னரும் பிறர் அதிசயிக்கும் வண்ணம் ஒன்றுபட்டுத்தான் வாழ்ந்தார்கள்.

மாணிக்கத்துக்கு இயல்பாகவே ஏட்டுப் படிப்பில் நாட்டம் செல்லவில்லை. ராஜனோ, வெகு துடியானவன். மேரிக்கு அதனாலேயே அவன்மீது அதிகமான வாஞ்சை இருந்தது எனலாம். அவனுக்காகவே அவள் விருதுநகரிலிருந்து மதுரைக்குக் குடும்பத்தைக் கொண்டு வந்திருந்தாள். அவள் இறக்கும் சமயத்தில் ராஜன், மின்—பொறி—இயற்கலையில் தேர்ச்சிபெற முதலாண்டாகப் பயிற்சியும் கல்வியும் பெற்றுக் கொண்டிருந்தான். மாணிக்கம் பள்ளிப் படிப்பையே முடிக்கவில்லை. தாய் இறந்ததுமே 'ராதாராம் எலக்ட்ரிகல்ஸ்' என்ற ஸ்தாபனத்தில் சில்லறை வேலைகள் பழகப் புகுந்துவிட்டான்.

படிப்படியாக மாணிக்கம் வேலையில் தேர்ச்சி பெற்று மாசம் எண்பது ரூபாய்களுக்குமேல் சம்பாதிக்கத் துவங்கினான். தந்தை வாங்கியிருந்த நிலத்திலிருந்து சொற்ப வருமானமும், ராஜனுக்கு ராணுவத்தார் அளித்த உபகாரச் சம்பளமும் வந்தபோதிலும் மாணிக்கத்தின் வருவாயும் குடும்பத்துக்குத் தேவைப்பட்டது. மூன்று வருஷப்

படிப்பை முடித்துக்கொண்டு அண்ணன் டிப்ளமோ பெற்றவனுகத் திகழ்ந்தபோது மாணிக்கத்துக்கு உண்மையில் பெருமை பிடிபட வில்லே. தன் வேலேத் திறமையால் முதலாளியின் அபிமானத்தைப் பெற்றிருந்த அவனே அந்த ஸ்தாபனத்தில் அண்ணனுக்குக் கண்ணிய மான உத்தியோகத்தைப் பெறவும் முயற்சி செய்தான். ராஜனுக்கு அந்த ஸ்தாபனத்திலேயே உகந்த வேலே கிடைத்தது.

அண்ணன் தனக்கு மேலான ஸ்தானத்தில் இருக்கிருனே என்று பொருமை உணர்ச்சியோ, தாழ்மை உணர்ச்சியோ அவனுக்கும் இல்லே; ராஜனுக்கும் தம்பியிடம் பரிவும் நன்றி உணர்ச்சியும் மிகுதி யாக இருந்தன.

'ராதாராம் எலக்ட்ரிகல்' ஸின் முதலாளியாக இருந்தவர் கால மாஞர். கருரும் கண்டிப்பும் மிகுந்த அவருடைய மகன் கிரமப்படி முதலாளியாஞன். மாணிக்கத்தை இந்த மாறுதல் பாதிக்கவே இல்லே. ஆனுல் ராஜன் ஒரு நாள் தம்பியிடம் பிரஸ்தாபித்தான்: ''பிறரிடம் நாம் கைகட்டிச் சேவகம் செய்வானேன், தம்பி? நம் அறிவையும் ஆற்றலேயும் நமக்கே உபயோகித்துக்கொண்டு முன்னேறுவோமே! தனியாகத் தொழில் தொடங்கலாம் என்று யோசிக்கிறேன், தம்பி.''

மாணிக்கத்துக்கு இந்த யோசனேயில் எந்த விதமான சூதும் தென்படவில்லே. ''நிசந்தான். முதல் வேணுமே, அண்ணு?'' என்ற கேள்வியைத்தான் எழுப்பினுன்.

''நம் பூமியை விற்ருல் என்ன? நல்ல விலேக்குப் போகும்; நாம் என்ன அங்கேயே போயா விவசாயம் செய்யப் போகிருேம்?'' என்ருன் ராஜன்.

மாணிக்கத்துக்கு தவருகப் படவில்லே. 'அதுவும் நியாயந்தான். லாபம் வந்தால் ஒரு காண்டிராக்டில் கூட வாரிவிடலாமே' என்று நினேத்தான்.

காரியம் வெகு சுலபமாக முடிந்துவிட்டது. மாணிக்கம் கையொப்பம் இட்டு விட்டான். நிலத்தை வாங்கியவர் ராஜனின் தாய் மாமனே தாம். அண்ணனும் தம்பியும் ஒற்றுமையுடன் பிழைப்பதைக் கண்கள் கரிக்கப் பார்த்துக்கொண் டிருந்த மேரியின் அத்தை இந்தச் சமயத்தில் சிலிர்த்துக்கொண்டாள். மேரியின் மனசைக் கலேக்க முயன்று படுதோல்வி அடைந்த அவள் இதைப் பொன்னுன சந்தர்ப்ப மாகக் கருதிச் செய்தி கேள்விப்பட்ட அன்றே மாணிக்கத்தைப் பார்க்க வந்தாள். அவள் வந்த சமயம் ராஜன் வீட்டில் இல்லே.

''ஏண்டா அசட்டுப் பையா, இப்படியா செய்வாய்? அவன் வெகு சுளுவாய் உன்னே ஏமாற்றிவிட்டானே! நாங்கள் மக்கள் மனி தர்கள் என்று இருக்கும்போது, ஒரு பேச்சுக் கேட்காமலா கையெழுத் துப் போடுவாய்? இனி வீட்டை விட்டே உன்னேத் துரத்திவிடுவானே!'' என்று அவனே அவள் கடிந்துகொண்டாள்.

''அண்ணனேப்பற்றி இப்படியெல்லாம் பேசாதீர்கள், அத்தை. எங்கள் இஷ்டம் இது'' என்ருன்.

அவள் எளிதில் விட்டுவிடுவாளா? ''விவரந் தெரியாத கவடற்ற பிள்ளேயாக இருக்கிருயேடா. நினேத்துப் பார். அவன் மாமன் தன் மகளேக் கொடுக்க நிற்கிருன். உன்னே விரட்ட முதற்படி இது. வெளியே வீற்றிருக்கிருனுடா? நினேத்துப் பார். ஒரு சமாசாரம் எங்கள் காதிலே போட்டாயாடா, தம்பி?'' என்று வஞ்சக விதையை அவன் மனசில் தூவினுள் மெள்ள.

மாணிக்கத்தின் வெள்ளே உள்ளத்தில் இந்த விதை விழவும் அவன் மயங்கினுன்.

''அப்படியும் இருக்குமா, அத்தை?''

''உலகம் தெரியாத பயல் என்று கண்ணிலே மண்ணைத் தூவி விட்டான்டா! உன்னைப் பெற்றவள்தான் அசடு என்றால், நீயும் அசட்டுப் பயலாய் மக்காய்க் கண்ணை மூடிக்கொண்டு கையெழுத்தைப் போட்டு விட்டாயே? நாளைக்கு அவன் மாமன் மகள் வந்தால் இந்த வீட்டிலே உன்னை நிலைக்க விடுவாளாடா, தம்பி?''

மாணிக்கம் கலங்கி நின்றான். அண்ணன் அப்படியும் செய்வானா?

தொடர்ந்தாற்போல் இன்னோர் எதிர்பாராத சம்பவமும் நிகழ்ந்தது. ராஜன் துவங்க இருக்கும் தொழில் சம்பந்தமாக எங் கெங்கோ அலைந்துகொண்டிருந்தான். குறுகுறுத்த மனசுடன் பட்டும் படாமலும் அவன் காரியங்களை ஆராய்ந்துகொண்டிருந்தான் மாணிக்கம். இன்னும் அவர்கள் பழைய ஸ்தாபனத்திலிருந்து கத் திரித்துக்கொள்ளவில்லை. இதற்குள் புது முதலாளிக்கு, மாணிக்கம் வெளியே சாமான்களை எடுத்து விற்றுவிடுவதாகவும், பிறருக்கு வேலை செய்து ஊதியம் பெறுவதாகவும் ஒரு மொட்டைக் கடிதம் போயிருக் கிறது. ஏற்கனவே இரண்டு காண்டிராக்டில் நஷ்டம், ஏற்பட்டுவிட்ட தால் மனம் நலிந்து போயிருந்த முதலாளி தீர விசாரியாமல் மாணிக் கத்தின்மீது கடும் நடவடிக்கை எடுத்துக்கொண்டார். மூன்று மாசங்க ளுக்கு அவனை வேலையிலிருந்து நீக்கி வைத்தார்.

மாணிக்கத்துக்குப் 'பகீ'ரென்றது. நல்லபடியாக விடுபடாமல் இந்தக் குற்றச்சாட்டுடனா விலகுவான்? நேர்மையில் ஊறிய அவன் குன்றினான்; குமுறினான். அண்ணன் படித்தவன்; அவன் சொல்லுக்கு முதலாளியிடம் மதிப்பு இருக்கும் என்ற நம்பிக்கையில் தன்னைப் பற்றிய உண்மையை அண்ணனைவிட்டு முதலாளியிடம் எடுத்துச் சொல்ல வேண்டினான்.

''சே சே, அந்தச் சிடுமூஞ்சியிடம் எவன் போய்ப் பல்லைக் காட்டுவான்? கிடக்கிறது போ, தம்பி. நானும் உதறி எறியத்தான் நாள் பார்த்துக்கொண்டிருக்கிறேன்'' என்று மறுத்துவிட்டான்.

முன் காலமானால் மாணிக்கத்துக்கு இது சமாதானமாகப் பட்டிருக்கும். விஷம் வித்திடப்பட்ட நெஞ்சு இப்பொழுது வேறு வித மாக வேலை செய்தது.

இந்தச் செய்தியை அன்று அவனுக்கே ஆத்திரத்துடன் அத்தை யம்மாளிடம் போய்ச் சொன்னான்.

''தெரிந்து கொள்ளடா, தம்பி, தெரிந்துகொள்! அந்த மொட்டைப் புகாரே அவன்தான் எழுதிப் போட்டிருக்கிறான். வேலையை விட்டு, வீட்டை விட்டுத் துரத்திவிட்டானேடா!'' என்று புலம்ப ஆரம்பித்தாள் அவள்.

இதைக் கேட்டதும் மாணிக்கத்தின் ரத்தம் கொதித்தது; இரண்டில் ஒன்று அண்ணனிடம் கேட்டு வழி செய்துவிடுவது என்று, அத்தையம்மாள் தூண்டிவிட்ட வெறியுடன் அவன் வீடு திரும்பிய போது, ராஜன், மாமனுடன் பேசிக்கொண்டிருந்தான். கல்யாணப் பேச்சாக இருந்தது. தனக்கு வேலை போய்விட்டது. வேறு வழி இல்லை. அவனோ படித்தவன்; செல்வாக்கு மிகுந்தவன். கல்யாணம் செய்துகொண்டு இன்பமாக வாழ வழி செய்கிறான், தன்னைக் குப்புறக் கவிழ்த்துவிட்டு!

மாணிக்கத்தின் குமுறல் வெடித்தது. அனல் பறக்கும் சொற் களைக் கொட்டித் தீர்த்தான்.

இந்த எதிர்பாராத எரிசொற்களைக் கேட்ட ராஜன் திகைத்தான். ''எல்லாம் அந்த அத்தையம்மாள் வேலையா? தம்பி, நீயா இப்படிப் பேசுகிறாய்? என்ன செய்கிறேன் பார், இந்த அத்தையை!'' என்று பல்லைக் கடித்தான் மாமனை வைத்துக்கொண்டு.

''செய்வதையும் செய்துவிட்டு அத்தையம்மா மேலே பழியைப் போடுகிறாய்? உன் வேஷத்தை இனி நம்பமாட்டேன். நான் போட்ட கையெழுத்துச் செல்லாது என்று இப்போதே அவனுக்கு நோட்டீஸ் விடுகிறேனா இல்லையா, பார்! நீ துள்ளுகிறதைப் பார்த்து விடுகிறேன்!'' என்று அத்தை சொற்படி கறுவிவிட்டுப் படியிறங்கி வந்துவிட்டான்.

அன்றையிலிருந்து மாணிக்கத்துக்குப் பைத்தியம் பிடித்தாற்போல் ஆகிவிட்டது. அத்தை வீட்டில் ஒரு வாரம்போல் தங்கினான். அவள், அவன் மூளையை மேலும் குழப்பி வைத்தாள். 'ஏமாந்துவிட்டேனே, ஏமாற்றி விட்டானே' என்ற ஆத்திரம் அவனைப் பழி வாங்கும் எண்ணத்தில் உளைய வைத்து நச்சுப் புழுவாய்க் குடைந்தது. சொல்லாமல் கொள்ளாமல் சென்னைக்கு வந்தான். பரமசிவம் அவன் தந்தைக்கு நெருங்கிய நண்பராக இருந்தவர். அப்போது பட்டணத்தின் எல்லையை விட்டுத் தள்ளிப் பல்லாவரத்துக்கு அருகில் ஹோட்டல் நடத்தி வந்தார். அவரிடம் அண்ணனின் துரோகத்தையும், அத்தையம்மாள் யோசனையையும் கூறினான் மாணிக்கம்.

அவர் வேறு விதமாக ஒரு பிரச்னையைக் கிளப்பிவிட்டார். ''இப்படி ஆரம்பித்தால் எங்கே கொண்டு போகுமோ? அவன் எதிர் வழக்காடுகிறான் என்று வைத்துக்கொள், தம்பி! எப்படியெல்லாம் போகுமென்று கண்டோம்? உங்கள் அம்மாளே முறைப்படி கல்யாணம் கட்டியவள் அல்ல; சொத்தே செல்லாது என்று நிரூபித்தால் என்ன செய்வாய்? தீர யோசிக்க வேண்டும், தம்பி. அப்படி இருந்தாலும் நீ மேல் வழக்குக்குப் போவாயா? முடியுமா? கிணறு வெட்டப் பூதம் கிளம்பக்கூடாது, பார்!''

பின்னும் கலக்கிவிட்டார் அவர்.

அவன் செய்வதறியாமல் திணறினான். ''ஒரு புதன்கிழமை வக்கீலைப் பார்க்கலாம் தம்பி, பொறு'' என்று அவர் முடிவு கட்டிவிட்டு வேலை வாங்கிக்கொண்டிருந்தார் அவனிடம்.

அன்று போகலாம் அநேகமாய். அவர் வேறு என்ன சொல்வாரோ?

சுள்ளென்று வெயில் உறைத்தது. மாணிக்கத்தின் முகத்தில் வேர்வை தாரையாய் வழிந்தது. கோடரியை விட்டெறிந்தான். பிளந்த விறகைப் பொறுக்கி வைத்துவிட்டுத் தோட்டக் கிணற்றடியில் பல் விளக்கி முகம் கைகால்களைச் சுத்தம் செய்து கொண்டான். சமையற்கார அம்மாள் தந்ததைச் சாப்பிட்டுவிட்டு அவன் சொல்லாமல் கொள்ளாமல் வெளியே நழுவினான்.

வாசல் 'கேட்டுக்' கதவை ஓசைப்படாமல் சாத்துகையில் 'டாண் டாண்' என்று அந்தப் பேட்டை மாதாகோயிலிலிருந்து வந்த மணியோசை அவன் செவிகளில் பாய்ந்தது. புத்துணர்ச்சியையும் புனித நினைவுகளையும் அது கிளப்பிவிட்டது.

மேரி இருந்த வரையில் அநேகமாக எல்லா நாட்களிலுமே அவர்கள் காலைப் பிரார்த்தனைக்குப் போவது உண்டு. ஞாயிற்றுக்கிழமை, மற்றும் விசேஷ தினங்களில் தவறவே மாட்டார்கள். அவள் இறந்த பிறகு மாணிக்கம் கொஞ்ச நாட்கள் தவறாமல் பிரார்த்தனைக்குப் போய்க்கொண்டிருந்தான். அப்புறம் வழக்கம் கொஞ்சம்

கொஞ்சமாகக் குறைந்துவிட்டது. இப்போது அவன் கோயில் பக்கம் போய் எத்தனையோ நாட்களாகிவிட்டன.

''பிரார்த்தனை தான் ஆத்மாவுக்கு உணவு, தம்பி. உடலுக்கு உணவு இல்லாது போனாலும் ஆத்மாவுக்கு உணவு இல்லாமல் இருக்கக்கூடாது'' என்று அவனுடைய அன்னை சொல்வது வழக்கம்.

அந்த மொழிகளுள் நினைந்தவனாய் மாணிக்கம் கோயிலுக்குச் செல்லும் பாதையில் நடந்தான். கூட்டம் கூட்டமாகக் கையில் ஜபப் புத்தகத்துடன் ஆண்களும் பெண்களும் சிறுவர்களும் கோயிலுக்குப் போய்க்கொண்டிருந்தார்கள்.

புதன்கிழமைதானே? என்ன விசேஷம் இன்று? மாணிக்கம் புருவங்களைச் சுளித்துக் கொண்டு யோசித்தான்.

ஆம். நினைவு வந்துவிட்டது. பிப்ரவரி மாசம். இன்று விபூதித் திருநாளோ? அப்படித்தான் இருக்கும். பரமபிதாவின் நேச குமாரன் சிலுவையில் துன்பமேற்ற நாளுக்கு முன் தொடங்கும் நோன்பு; மாசத்தின் முதல் நாள்; புதன் கிழமை.

முதலில் தாயின் நினைவும், தொடர்ந்து கருணை உருவான கடவுளின் நினைவும் அவனுடைய நெஞ்சில் நிறைந்தன. மாணிக்கம் கோயிலுக்குள் சென்றான். பிரார்த்தனை மண்டபத்தில் வளைவு வளைவான வாயில்களைத் தாங்கிய தூண்களின் முகப்புகளிலும் எண்ணற்ற மெழுகுவர்த்திகள் எரிந்தன. எதிரே தேவகுமாரனின் திருவுருவம், 'அருளினில் பரந்தங்கு அன்பலை விசிறும் ஆழியில் பூத்திடும்' கண்கள் அவனை அழைத்தன.

அந்தத் தினத்துக்கான விசேஷப் பிரார்த்தனை தொடங்குமுன் பலிபீடத்தின்முன் எல்லாரும் தரையில் முழந்தாளிட்டுப் பணிய, பாதிரியார் திருமந்திரங்களால் புனிதமாக்கப் பெற்ற (குருத்தோலை) விபூதியுடன் முன்வந்தார். கட்டை விரலால் புனித விபூதியை எடுத்து மாணிக்கத்தின் நெற்றியிலே அவர் சிலுவை அடையாளமிட்டு, 'மண்ணிலிருந்து ஆன மனிதனே, நீ மண்ணிலேயே மறைவாய் என்பதை நினைவு வைத்துக்கொள்வாய்!' என்று ஆசீர்வதித்தபோது அவன் உடல் சிலிர்த்தது. எத்தனையோ முறைகள் விபூதித் திருநாளன்று இந்தச் சொற்களை அவன் கேட்டிருக்கிறான். ஆனால் இன்றுபோல் அவை அவன் உள்ளத்தில் படவில்லையே!

பிரார்த்தனைக் கீதம் பாடப் பெற்றதும் பாதிரியார் அன்றைக்கான விசேஷப் பிரசங்கத்தை நிகழ்த்தினார். ''நோன்பு நாள் வெறுமே கோவிலில் கூடுவதையும் உண்ணாமையையும் மட்டும் குறிப்பதாகக் கொள்ளக்கூடாது. பகைமை, துவேஷம், வஞ்சகம், பொறாமை ஆகிய தீய உணர்ச்சிகளை உள்ளத்திலிருந்து அகற்றிப் பரிசுத்தமாக்கிக் கொள்ள வேண்டும். செய்த தவறுகளை நினைந்து நினைந்து உருகி ஆண்டவனிடம் மன்னிப்புக் கோர வேண்டும். மாசு எதுவும் இல்லாத உள்ளந்தான் அன்புருவாகிய ஆண்டவனுக்கு உண்மையில் வரவேற்பு அளிப்பதாகும். அன்புதான் மக்களை இணையச் செய்யும்'' என்றெல்லாம் அவர் கூறிய ஒவ்வொரு சொல்லும் மாணிக்கத்தின் நெகிழ்ந்த நெஞ்சிலே ஆழமாகப் பதிந்தது. அவனுடைய குழப்பமெல்லாம் மறைந்தது.

கோயிலிலிருந்து திரும்பிய மாணிக்கம் புதியவனாக இருந்தான்.

'பகைமை விரோதத்தை வளர்க்கும். மண்ணிலிருந்து வந்த மனிதன் மண்ணாக மறைகிறான்.'

அவன் சிந்தனையில் மூலைமுடுக்குகளிலெல்லாம் இந்த வார்த்தைகள் புகுந்து எதிரொலித்தன.

அன்னப மறந்து, கலக்கத்துக்கு இடம் கொடுத்ததிலிருந்து ஒரு நாள் நிம்மதி உண்டா அவனுக்கு? அவனுடைய அன்னை, நினைக்கையிலேயே தேவமாதாவைப் போல நெஞ்சிலே புனிதத்தை நிரப்புபவள், அவன் செய்கையை ஆமோதிப்பாளா?

'மாட்டாள், மாட்டாள்!' என்று உள்ளத்தின் உள்ளிருந்த குரல் கூவியது. ஆலோசியாமல் அத்தையின் பேச்சைக் கேட்டு நெஞ்சில் துவேஷத்தை வளர்த்தது தப்பு தப்பு என்று விழிப்படைந்த உள்ளுணர்வு அவனுக்கு ஓதியது. ஓட்டமும் நடையுமாக அவன் பரமசிவத்தின் வீட்டை அணுகியபோது வாசல் வராந்தாவில் யாரைக் கண்டான்?

ராஜன்! ராஜன்தானா? தன்னுடைய கண்களையே அவனால் நம்ப முடியவில்லை.

''அண்ணா? அண்ணா!''

''தம்பீ!'' என்ற அவனுடைய குரலுடன் ஒலித்த அந்த ஒலி ஒன்றுபடும் உள்ளங்களின் முதல் அறிகுறியாய்த் திகழ்ந்தது.

பரட்டைத் தலையும் அழுக்குப் படிந்த சட்டையுமாய்க் கண்ட தம்பியைக் கைநீட்டித் தழுவிக்கொண்ட ராஜன், ''இது என்ன கோலம், தம்பி?'' என்று கேட்டபோது மாணிக்கம் கதறி விட்டான்.

''கேட்பார் பேச்சைக் கேட்டேன். மன்னித்துக் கொள்ளுங்கள், அண்ணா!''

''உன் பேரிலே தப்பு இல்லையடா, தம்பி. நான்தான் பொறுப்பு இல்லாமல், நினைத்துப் பார்க்காமல் இருந்துவிட்டேன். நாலு நாள் முன்பு பாதிரியார் வீட்டுக்கு வந்திருந்தார். 'வரும் புதன் விபூதித் திருநாள்; குருத்தோலை வாங்கிப் போக வந்தேன்' என்றார். சுவரில் நீ அலங்காரமாக வைத்திருந்த ஓலையை எடுத்துக் கொடுக்கையில் அம்மாவின் முகம் தோன்றியது. 'தம்பியை இப்படிக் கவனிக்காமல் விடலாமா?' என்று கேட்பபோல் இருந்தது. என்னால் பொறுக்க முடியவில்லை. உன் இருப்பிடம் விசாரித்துக்கொண்டு வருகிறேன். உனக்கு நிலத்தை விற்க இஷ்டமில்லையானால் ஒரு வார்த்தை அப்போதே வாய் விட்டுச் சொல்லி இருக்கக்கூடாதா டா, தம்பி? உலகோர் கண்முன் பெருமையுடன் வாழ்ந்த நாம் இப்படிப் பிறர் ஏளனத்துக்கு ஆளாகும் வண்ணம் வேற்றுமைப்படுவது அம்மாவுக்குப் பொறுக்குமா? நோன்பு துவங்கும் புதன்கிழமை அல்லவா தம்பி இன்று?''

நெஞ்சம் நெகிழ்ந்த அண்ணனின் மொழிகளில் கரைந்த மாணிக்கத்துக்குப் பேச்சே எழவில்லை.

''அந்தப் பெரியசாமிப் பயலுக்கு என்றைக்குமே நம்மீது பொறாமை. திருட்டுத்தனமாய் அவனே சாமான்களை விற்றுவிட்டுப் பழியை உன்மீது போட்டிருக்கிறான். முதலாளி என்னை நேரில் கூப்பிட்டுத் தவறுதலுக்கு வருத்தப்பட்டுக் கொண்டார். உன் இஷ்டப்படி எதுவும் செய்யலாம், தம்பி. நான் துரோகி என்று மட்டும் நினைக்காதே.''

''அண்ணா!'' என்ற கதறல்தான் பதிலாக எதிரொலித்தது.

'ராதாராம் எலக்ட்ரிகல்ஸ்' கைமாறி 'ராஜமாணிக்கம் எலக்ட்ரிகல்ஸ்' என்று புதுப் பெயருடன் இப்போது நாணயமும் நம்பிக்கையும் வாய்ந்த ஸ்தாபனமாக நற்பணி புரிந்துவருகிறது.

—பிப்ரவரி, 1956

# நாய்க்கர் திருப்பணி

தி. ஜானகிராமன்

•

ஜன்னல் வழியாக ஒரு காட்சி.

பிள்ளையார் கோயில் வாசலில் ஒரு விறகு வண்டி. வழிய வழிய விறகுக் கட்டுகள் அடுக்கிய வண்டி. வண்டிக்காரன் இடத்தில் இல்லை. மாடுகளை அவிழ்க்கவும் இல்லை. இரண்டு மூன்று விறகுக் கட்டுகள் தெருவில் கிடக்கின்றன. அவற்றின்மீது குப்புற விழுந்து அம்மி அழுத்திக் கொண்டிருக்கிறார் நாய்க்கர். சாட்டைக் குச்சியை அக்குளில் அடக்கிய வண்ணம் விறகுக் கட்டுகளை நாய்க்கர் பிடியிலிருந்து இழுக்க முக்கிக் கொண்டிருக்கிறான் வண்டிக்காரன். அவனோடு வந்திருந்த கூட்டாளியும் அவனுக்குக் கைகொடுத்து உதவுகிறான்.

''ஒரு சிரா உருவிடமுடியுமா உங்களாலே?'' என்றார் நாய்க்கர், சிரித்துக்கொண்டே.

''பார்த்துப்பிடறோம்.''

''விடாதே, நாய்க்கரே'' என்று வண்டிப்பேட்டையிலிருந்து ஒரு குரல் வந்தது. பிள்ளையார் கோயிலுக்கு எதிரே, அதாவது வீதிக்கு எதிர்ப்பக்கத்தில் சிவன் கோயில். சிவன் கோயிலுக்குப் பக்கத்தில் ஒரு வண்டிப்பேட்டை; வாடகை வண்டிகள் நிற்கும் இடம். இரண்டு பூட்டியும் நாலு அவிழ்த்தும் போட்டுக் கிடந்தன. அவிழ்த்துப் போட்ட வண்டிக்காரன்தான் நாய்க்கரை உற்சாகப்படுத்தியவன்.

''நம்ம நாய்க்கரா விட்டுப்பிடற ஆளு?'' என்று இன்னொரு வண்டிக்காரன் சிரித்தான்.

''விடாதே, நாய்க்கரே!''

''நாய்க்கரே, காவேரித் தண்ணியோட, கொள்ளிடத்துத் தண்ணி வம்புக்கு நிக்கிறதாவது! விடாதீங்க.''

நாய்க்கருக்கு உற்சாகம் தாங்கவில்லை.

''எலே, வீணா அளிஞ்சுபோகாதீங்க. இது சாமி காரியம்!''

''நாங்க இல்லேன்னு சொல்லலியே. ஒரு கட்டு எடுத்துக்குங்க. வேண்டாம்கலே.''

''புளியஞ்சிரா, கருகஞ்சிரா ஒரு கட்டு. இந்த முருங்கக் குச்சியை எட்டுக் கட்டு எடுக்காம, மூணு எடுத்தேன் பாரு; அது என் தப்புத் தாண்டா, அட! இழுத்துப்பிடுவீங்களா? பாக்கிறீங்களா இப்ப?'' என்று

விறகை அம்மிக்கொண்டே காலால் ஓர் எம்பு எம்பி முதுகை ஒரு திருப்புத் திருப்பினர் நாய்க்கர். அவ்வளவுதான். இரண்டு பேரும் ஏழெட்டு அடி தள்ளிப் போய் விழுந்தார்கள். விழவில்லே; விழாமல் சமாளித்துக் கொண்டார்கள்.

கீழே விழுந்த சாட்டையை எடுத்துக்கொண்டு, ''ம்! அவ்வளவு தான் தெரியுமா?'' என்று கையாலாகாத வீறுப்புடன் கத்தினன் ஒருவன்.

''நீதான் தெரிஞ்சுக்கிட்டியே இப்ப!'' என்று மூன்று கட்டுகளையும் தூக்கிப் பிள்ளையார் கோயில் திண்ணையில் எறிந்தார் அவர்.

வண்டிக்காரர்கள் மறுபடியும் சிரித்தார்கள். பிள்ளையார் கோயி லின் மறு திண்ணையில் ஓமப்பொடி, கொத்துக்கடலைச் சுண்டல், காரா பூந்தி விற்கிற முத்துவையர், ''நாய்க்கரே, ஜாக்கிரதை. கொள்ளிடத் துத் தண்ணி முளிக்குது பாருங்க. கபால்னு விறகு மறஞ்சாலும் மறஞ் சிப்பிடும்'' என்ருர்.

''ம், கையை வைக்கட்டும், பாத்துக்கலாம். எலே போங்கடா. புள்ளையாரு பத்து மடங்காக் குடுப்பாரு. மூக்காலே அளுவாம போங்க!''

வண்டிக்காரர்கள் போகவில்லை. நின்றுகொண்டே இருந்தார்கள்.

சிவன் கோயில் திண்ணையில் உட்கார்ந்திருந்த இரண்டு பண்டாரங் களில் ஒருவன், ''ஏன்யா நிக்கிறே! போலீஸ் டேஷன்லே போய்ப் புகார் குடேன்'' என்று உண்மையாகச் சொல்வதுபோலச் சொன்னன்.

''நாய்க்கரே, இதுதான் கடைசித் தடவை. நாளையிலேர்ந்து இதெல்லாம் நடக்காது. சொல்லிப்பிட்டேன்'' என்று சாட்டைக்காரன் வண்டியில் ஏறித் தலைக்கயிற்றைப் பிடித்தான். கூட்டாளி பின் தொடர வண்டி புறப்பட்டது.

''இந்த விறகெல்லாம் அப்படியே தங்கமா மாறிடும்யா. அப்ப டியே தங்கமா—தங்கமா—ஆம்மாம்!'' என்று இத்தனை நேரமாகக் கேட் காத குரல் ஒன்று வந்தது.

''ஆமாண்டா, பாண்டிய மகாராஜாவே சொல்லிப்பிட்டாரு'' என்று தேர்முட்டிக்கருகில் வைக்கோலைப் போட்டு அதன்மேல் வண்டிப் பாயைப்போட்டுப் படுத்திருந்த பாண்டியனைப் பார்த்தார்கள் எல்லாரும். பாண்டியன் புன்சிரிப்புச் சிரித்தான். கண்ணை மூடினன்; மறுபடியும் சிரித்தான். அவனுக்கு வேளை போது கிடையாது. வார்னிஷ், பட்டை எதுவும் தள்ளுபடி இல்லை. அது இல்லாவிட்டால் கை காலெல்லாம் சுவாதீனம் இல்லாமல் நடுக்கல் எடுக்கும் நிலையை எட்டியவன்.

நாய்க்கர் பின்னல் கையைக் கட்டி, வெற்றியுடன் பார்த்தார். ''போலீஸு மெரட்டினு ரெண்டு ரூபாயைக் கொடுத்தாலும் கொடுப் பானுவ. இதுக்கு எவ்வளவு மாலாசு பண்ருனுக பாத்தீங்களா?'' என்று எல்லாரையும் பார்த்துச் சொன்னர். திரும்பி அருகில் நின்ற என்னையும் பார்த்தார்; ''பாத்துக்கிட்டீல்ல, தம்பி!'' என்ருர்.

நான் என்ன சொல்வது? வெறுமே புன்சிரிப்புச் சிரித்தேன்.

ஒன்றியாக நின்று நாலு ஆட்களை அடிக்கக்கூடிய அவர் தேகக் கட்டையும் துணிச்சலையும் பார்க்க எனக்கு எப்போதுமே பரவசமாக இருக்கும்; ஓர் எலும்பு, ஒரு சுருக்கம் தெரியாத மேனி. தேர்ச் சக்கரம் போல வைரம் பாய்ந்த மார்பு. காலில் ஆடுசதை தெரியும்படியாக ஒரு நாலு முழம் கட்டிக்கொண்டிருக்கிருர். அது ஆடாத சதை. கர்லாக் கட்டைமாதிரி இருக்கும். வெள்ளிப் பூண் போட்ட கைத்தடியைப் பிடிக்கிற அந்தக் கையைப் பார்க்கும்போது மணிக்கட்டில் அவ்வளவு வைரமும் ஆண்மையும் தெரியும்; கிராப்பும் குடுமியும் இல்லாத தலையில்

இரண்டு மாத முடி நரையும் கறுப்பும் கலந்து மண்டிக் கிடந்தது. முன் தலையில் மட்டும் 'ப'வைக் கவிழ்ந்தாற்போல அழகு க்ஷவரம் செய்து தென்கலை நாமம் போட்டிருந்தார் அவர்.

நாயக்கர் சொந்தமாகவே விறகுக் கடை வைத்திருந்த காலம் உண்டு. நான் ஏழெட்டு வயசுப் பையனாக, தலையில் பின்னலும், வாயில் விரலும், கையில் தங்கக் காப்பும், காதில் பொன் தட்டையும், இடையில் மூலக்கச்சமுமாகப் பார்க்கப் போவேன். வியாபாரத்தை அல்ல; கெரடிக் கூடத்தை. விறகுவாடியில் ஒரு கீற்றுச் சார்ப்பில் விறகுகள் அடுக்கியிருக்கும். மிச்சம் இருந்த திறந்தவெளி முழுவதும் நாய்க்கர் இரண்டு 'ஹாரிஸாண்டல் பாரு'ம் 'வர்ட்டிகல் பாரு'ம் நட்டிருந்தார். அவர் பையன் தாமு பாரில் வேர்க்க வேர்க்கச் சுற்றிக்கொண்டிருப்பான். திடீரென்று நாலு சுற்றுச் சுற்றிப் பத்தடி தூரத்தில் இருந்த பார்க் கம்பிமேலே நிற்பான். அவன் தவறிவிட்டால் பிடித்துக்கொள்வதற்காகத் தயாராக நிற்பார் நாய்க்கர். ஆனால் அவன் தவறி நான் பார்த்ததில்லை. நாய்க்கரையே உரித்துவைத்தாற்போல் இருப்பான், அந்தப் பையன். நிறம் மட்டும் எண்ணெய் தடவின உளுந்து. அவன், அவன் தகப்பனார் - இரண்டு பேரிடத்திலுமே எல்லையில்லாத பிரமை உண்டு எனக்கு. கிராப்புத் தலையே மருந்துக்குக்கூட இல்லாத அந்தக் காலத்தில் அவர்கள் இருவரும் கிராப்பு வைத்துக்கொண்டிருந்தார்கள். அது ஒரு காரணம். கம்பிமேல் நடப்பது, 'பார்' விட்டுப் 'பார்' தாண்டுவது, ஊஞ்சல் சங்கிலியை அறுப்பது, இந்த அசகாய வேலையெல்லாம் அவர்கள் செய்தது இன்னொரு காரணம்.

விறகுவாடிச் சார்ப்பின்மீது ஓர் அதிசயமான கொடியை வளர்த்துப் படரவிட்டிருந்தார் நாய்க்கர். அதன் பூ நீலமாக ஒரு கிளியை அப்படியே அச்செடுத்தாற்போல் இருக்கும். நான் இன்னும் அந்த மாதிரி பூவைப் பார்க்கவில்லை. தாவர உலகத்தில் கிளி பூக்கிற கொடியை எங்கேயோ தேடிப் பிடித்துப் பயிர் செய்ய இவர்கள் எப்பேர்ப்பட்ட அதிசயப் பிறவிகளாக இருக்கவேண்டும்! இந்தப் பிரமிப்பில்தான் அவர் இட்ட வேலைகளையெல்லாம் நான் செய்தேன். வாடிக்கைக்காரர்களுக்கு விறகெடுத்துத் தராசில் போடுவது, அவருக்கு வெற்றிலை பாக்கு வாங்கி வருவது, சில்லறை வாங்கி வருவது- எல்லாப் பணிவிடைகளும் செய்தேன். கடைசியில் ஒரு நாள் வாயைத் திறந்து, வெட்கத்தை விட்டுக் கேட்டும் விட்டேன்.

''நாய்க்கர் மாமா, எனக்கும் 'பார்' விளையாடக் கத்துத் தர்றீங்களா?''

நாய்க்கருக்கு ஆச்சரியம் தாங்கவில்லை. புருவம் தலைமயிரைத் தொட்டுவிடுகிறாப்போல வியந்துகொண்டே, ''ஏண்டா தம்பி, உனக்கென்னாத்துக்குடா? உங்கப்பாருதான் இந்த ஜில்லாவிலேயே பெரிய வக்கீலு; நீயும் கோட்டுப் போட்டுக்கிட்டு நாளைக்குப் பெரிய வக்கீலாயிடுவே. ஜோராக் குருதை வண்டியிலே கோர்ட்டுக்குப் போவே!'' என்றார்.

''இல்லே மாமா, நானும் பார் ஆடுவேன்.''

''இப்ப என்னமாடா முடியும்? அதுக்கு இன்னும் பெரிய புள்ளையாகணும். இப்ப என்ன வயசு உனக்கு?''

''ஏழு.''

''பின்னே? இன்னும் அஞ்சு வருசம் போகணும்.''

ஐந்து வருடம் நான் காத்திருக்கத் தயார். ஆனால் அதே வருடம் கிறிஸ்துமஸ் லீவுக்குப் பட்டணம் போய்விட்டு வந்து உடனே விறகு வாடிக்கு ஓடினேன். பூட்டிக் கிடந்தது. மூங்கில் கதவிடுக்கில் பார்த்த

போது, விறகு, பார் ஒன்றையும் காணவில்லை. யாரைக் கேட்பது என்று தெரியாமல் நாலைந்து நாள் விழித்துவிட்டு, கடைசியில் அவர் வீட்டைக் கண்டுபிடித்து அவர் மனைவியைக் கேட்டேன்.

''அவங்க ரெண்டு பேரும் கல்கத்தாவுக்குப் போயிட்டாங்க'' என்றாள் அவள்.

''கல்கத்தாவுக்கா? எதுக்கு?''

''சர்க்கஸிலே சேந்துப்பிட்டாங்க.''

''சர்க்கேஸிலேயா?''—பறி கொடுத்த ஏக்கத்தில், ''எப்ப வருவாங்க?'' என்று கேட்டேன்.

''எங்க வரது? ஸர்க்கஸ் கம்பெனியோட ஊர் ஊராப் போவாங்க.''

நான் சமைந்துபோய் நின்றேன்.

விறகுக் கடைக்கு வேறு யாரோ முதலாளி வந்துவிட்டார். கிளிக் கொடி, பார்க் கம்பி இருந்த இடம் எல்லாம் விறகாக அடுக்கிக் கிடந்தது. நாய்க்கரும் தாமுவும் திரும்பியே வரமாட்டார்களா?

ஐந்தாறு வருடம் கழித்து ஒரு நாள் மார்க்கெட்டுக்குள் நுழைந்ததும் நாய்க்கர் ஒரு சார்ப்பின்கீழ் ஸ்டூலைப் போட்டு உட்கார்ந்திருந்ததைக் கண்டு எனக்குத் துக்கிவாரிப் போட்டது. அவருக்கு முன்னால் ஒரு மேஜை. மேஜைமீது காலணா, ஓர் அணா, இரண்டணா இப்படிச் சில்லறையாக அடுக்கியிருந்தது. ''இங்கே சில்லறை தரப்படும். ரூபாய்க்கு அரையணா வட்டம்'' என்று மேஜையில் பக்கவாட்டில் எழுதியிருந்தது.

''என்ன நாய்க்கரே, என்னைத் தெரியுதா?''

''அட! வா, தம்பி, அப்பா சௌக்யமா?''

''சௌக்யம். எப்ப வந்தீங்க?''

''நாலு நாளாச்சு. ஸர்க்கஸ் விளையாட முடியலே. திரும்பிட்டேன். சில்லறைக் கடை வச்சுப்பிட்டேன்.''

''தாமு?''

''தாமு வரமாட்டான். அவன் ஸர்க்கேஸ்லியே ஒரு பொம்பளையைக் கண்ணாலம் பண்ணிக்கிட்டான்'' என்று எங்கேயோ முகத்தைத் திருப்பிக்கொண்டார் நாய்க்கர். அவர் கண்களில் நீர் கட்டிவிட்டது.

''ஸர்க்கஸ் பொம்பிளேயா?''

''ஆமாம் தம்பி, வெள்ளைக்காரச்சி. அவன் இனிமே வரமாட்டான். அவன் அம்மா, தங்கச்சி எல்லாம் கறுப்பு. அவங்களைப் பார்க்கவே பிடிக்காது.''

''அவன்மட்டும் ரொம்ப ரொம்பச் சேப்போ?''

''என்னை ஒண்ணும் கேட்காதே தம்பி'' என்று குரல் உடைந்து அழுகையை அடக்கி மூக்கைச் சிந்திக்கொண்டார்.

ஆளே உடைந்துவிட்டார். என்ன செய்வதென்று நிலைகொள்ளாமல் தொழிலை மாற்றிக்கொண்டே வந்தார். மாட்டுத் தரகு, காய்கறித் தரகு - இப்படி இரண்டு மூன்று வருட காலம் போயிற்று. நானும் படிப்பதற்காகப் பட்டணம் வந்துவிட்டேன். படிப்பு முடிந்து மீண்டும் ஊருக்கு வந்து வக்கீல் என்று போர்டைத் தொங்கவிட்டபோது நாய்க்கர் இந்தத் திருப்பணியில் ஈடுபட்டிருந்தார்.

திருப்பணி நடந்த விதம் இதுதான். ஊருக்குள் வருகிற விறகு வண்டிகளிலிருந்து ஒன்றிரண்டாகக் கட்டைகளை உருவுவார். ஒரு சுமை சேர்ந்தவுடன் ஏலம் விட்டுவிடுவார். அப்பை சப்பையான விலைக்கு விட்டுவிடுகிறதும் இல்லை. திருப்பணி திருப்பணி என்று கொத்திக் கொத்தி மார்க்கெட்டு விலைக்கு ஓர் அணா இரண்டு அணாத் தூக்கலாகத்தான் ஏலம் போகும். விறகு கொடுக்க, உடையவன் தகராறு செய்தால் இரைச்சல், அடிதடி, சாபம்.

''எலே புள்ளையாருக்கா மாட்டேன்னு சொன்னே? பாத்துகிட்டே இரு; பதினஞ்சு நாள்ளே கண்ணெல்லாம் பஞ்சடைஞ்சுப்பிடும்; புடலம்பூவாக் கொதறிப்பிடும்'' என்று கடைசியாக ஒரு பாணத்தைப் போட்டுக் கக்க வைத்துவிடுவார். ஒன்றுக்கும் மசியாத ஆட்களோடு தெருவில் கட்டிப் புரள்வார். பொழுது விடிந்தால் நாலு சண்டை யில்லாமல் அவர் திரும்புகிறதில்லை. உச்சி வேளையோடு இந்தத் திருப் பணி வேலை முடிந்துவிடும். சேர்ந்த விறகையெல்லாம் ஏலம் போட்டுக் காசை எடுத்துத் தபாலாபீஸ் சேமிப்பு நிதியில் போட்டுவிட்டுப் போய் விடுவார். அப்புறம் மறுநாள் காலைவரை ஆளைக் காணமுடியாது.

மணி பதினொன்று இருக்கும். ஏலம் மும்முரமாகக் கேட்டது. கொள்ளிடத்துக் கட்டுகளோடு அப்புறம் சேர்ந்த பத்துப் பதினைந்து சிராயும் விலையாகிற புண்ணியத்தைப் பெற்றுவிட்டன. பிள்ளையார் கோயில் வாசலில் ஒரு சிறு கும்பல்.

''நமோ கணபதி எட்டணா; நமோ கணபதி பத்தணா'' என்று நாய்க்கர் ஏற்றிக்கொண்டேயிருந்தார்.

''ஒன்றேகால் ரூபாய், ஒரு தரம், ரெண்டு தரம்—''

''ஒரு ரூபா ஆறணா'' என்று ஒரு குரல்.

''உன்கிட்டக் காசு இருக்காடா?'' என்றார் நாய்க்கர், ''காசு இல்லாட்டி கேட்கப்படாது.''

''ஏன்..நான்..நான் வந்து..நான் வந்து..பாருய்யா, என்ன நாயம் இது? நாய்க்கர் பேசறதைக் கேட்டீங்களா?'' என்று ஆறணாவுக்கு உயர்த்தின பாண்டியன் கண் சிவக்க, தலை தொங்கலிட ஆட்சேபித்துக் கொண்டிருந்தான்.

''ஒண்ணேகால் ரூபா'' என்றார் நாய்க்கர்.

''நான் ஆறணாக் கேட்டேனே.''

''நீ தரையிலே நின்னு கேட்டா ஒப்புத்துப்பேன். வெள்ளைக் குதிரையிலல்ல ஏறிட்டிருக்கே! இரண்டு தரம்—மூணும் தரம்—ஒண்ணே கால் ரூபா.''

ஏலம் முடிந்துவிட்டது. நாய்க்கர் காசை வாங்கி மடியில் செருகி னார். கட்டுக்களை ஏற்றிவிட்டார்.

பாண்டியன் இடத்தைவிட்டு அசையவில்லை. வெறித்து அவரைப் பார்த்துக்கொண்டே நின்றான். கட்டுக்களை ஆள் தலையில் ஏற்றிவிட்டுக் கையைக் கீழே போட்டார் நாய்க்கர். ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து பாண்டியன் மடியைத் தட்டிவிட்டான். காசு உருண்டு தெருவில் ஓடிற்று. அவர் சிரித்துக்கொண்டே குனிந்து பொறுக்கப் போனார். ஓர் எம்பு எம்பி அவர் கழுத்தில் ஏறி உட்கார்ந்துவிட்டான் பாண்டியன். இருவ ரும் கட்டிப் புரண்டார்கள். சாக்கடை ஓரமாக உருண்டார்கள். வீதி யோரம் ஓடுகிற சாக்கடை பெரிய சாக்கடை. அதற்குள் விழுந்துவிட் டார் நாய்க்கர். விழுந்தவர் எழுந்து பாண்டியனையும் பிடித்து இழுத்

தார். மறுகணம் அவனும் உள்ளே போய்விட்டான். மேலே கூட்டம் கூடிவிட்டது.

சண்டை முடிந்து நாய்க்கர் மேலே ஏறும்போது அவருக்கு இன்னொரு கஷ்டம் காத்திருந்தது. மூன்று கட்டுக்களைப் பறிகொடுத்த கொள்ளிடக்காரர்கள் போலீஸ் ஸப்-இன்ஸ்பெக்டரை அழைத்து வந்து விட்டார்கள். நாய்க்கரும் பாண்டியனும் போலீஸ் ஸ்டேஷனுக்குப் போக வேண்டியிருந்தது. நாலைந்து வண்டிக்காரர்களும் கூடப் போனார்கள்.

கேஸ் விபரீதமாக வளரும்போல் இருந்தது. கலவரம் செய்வது, அமைதியைக் குலைப்பது, வழிப் பறி—இப்படிப் பல ஷராக்களில் அவர் மீது குற்றம் ஜோடனையாகிக்கொண் டிருந்ததாம். விழுந்தடித்து ஸ்டேஷனுக்கு ஓடினேன். ஸப்-இன்ஸ்பெக்டரோடு இங்கிலீஷில் பேசினேன். அப்பா ஐயா என்று மோவாய்க்கட்டையைப் பிடிக்காத குறையாகக் கெஞ்சினேன்; ''அது என்னுங்க, ஐயா சொல்றதும் சரிதானுங்களே. இஷ்டப்பட்டுக் கொடுத்தா வாங்கிக்கறதா? ஆளை மறிச்சு அடிச்ச மெரட்டி வாங்கவாவது?'' என்று வண்டிக்காரர்கள் எல்லாருமே இடம் மாறிப் பேசினார்கள்; சிவப்புக் கட்டிடத்தின் ராசி!

''அவர் நன்னடத்தைக்கு நான் உத்தரவாதம்'' என்று சொல்கிற வரையில் இன்ஸ்பெக்டர் இறங்கவில்லை.

''சரி, இவ்வளவு தூரம் நீங்க கேட்கறதுக்கு நான் மரியாதை செய்யணும். ஒண்ணே ஒண்ணு சொல்லிப்பிடறேன். இந்த நாய்க்கர் இன்னமே இந்தப் பிள்ளையார் கோவில் பக்கமே, இந்த வீதிப் பக்கமே வரப்படாது. அவரு இருக்கிறது வடக்கு வீதி. மேல வீதி முச்சந்திப் பிள்ளையாருக்கும் அவருக்கும் என்ன தொடர்பு?''

''அவர் இனிமே அந்தப் பக்கமே வராம நான் பாத்துக்கறேன்.''

''மேல வீதியிலே மறுபடியும் அவரைப் பார்த்தேனோ, கட்டாயமா அவரு பள்ளிக்கூடத்துக்குத்தான் போகணும்.''

''நான்தான் வரமாட்டார்ங்கறனே.''

''கொளந்தே, உங்க வார்த்தை மூளியாயிரப்படாதுன்னுதான் நான் அந்தப் பக்கம் வரலே. ஆனா நீங்க செஞ்சிருக்கிற காரியம் என்னை மட்டும் தடுக்கலே. தெய்வக் காரியத்தையே தடுத்திருக்கு. திருப்பணியை யார் நடத்துவாங்க இனிமே?'' என்று நாலைந்து நாள் கழித்துக் கீழ வீதி பஸ் ஸ்டாண்டில் என்னைக் கண்ட நாய்க்கர் புகையாய்ப் புகைந்தார். போலீஸ் பிடியிலிருந்து தப்பிவித்ததற்கு நான் அவருக்குச் சமாதானம் சொல்லவேண்டியிருந்தது. அவர் அதை ஏற்கவில்லை. விறுவிறுவென்று போய்விட்டார்.

வீதியில் உண்மையாகவே இப்போது அமைதி நிலவிற்று. விறகு வண்டிகள் பிள்ளையாரைக் கண்டு பயப்படவில்லை. கூச்சல் இல்லை. கைகலப்பு இல்லை. பத்து நாளாயின. பதினைந்து நாளாயின. நாய்க்கரை அந்தப் பக்கம் காணவில்லை.

இருபது நாளாயின; இருபத்தைந்து. ஒரு மாதம். அதுவும் தாண்டி விட்டது.

''ஐயா, கொளந்தையைத்தானே? எழுந்திருங்க. இங்கே வந்து பாருங்க இந்த அக்குறும்பை'' என்று அரைத் தூக்கம் கால் தூக்கம் என்று படிப்படியாக விழிப்பை நோக்கித் தடுமாறிக்கொண் டிருந்த என்னை உலுப்பிவிட்டது குரல்.

எதிரே பாண்டியன் நின்றான்.

''என்ன பாண்டி?''

''புள்ளையாரைக் காணும்.''

''என்னது?''

''ஆமாம். ஓடியாந்து பாருங்க.''

எழுந்து ஓடினேன். பிள்ளையாரைக் காணவில்லை; அவர் இருந்த இடத்தில் பள்ளந்தான் இருந்தது. கதவு திறந்து கிடந்தது. வாசலில் ஒரே கூட்டம். ''பாவிப் பய.. திருப்பணி திருப்பணின்னு திருட்டுப்பணி யாவே பண்ணிப்பிட்டானே!'' என்று பாண்டியன் அழுதான்.

நகையா, பணமா தேட? சாய வேட்டியை உடுத்திக்கொண்டு குந்திக் கிடந்தது பிள்ளையார்! போலீஸும் மும்முரமாகக் கொஞ்சம் முண்டிப் பார்த்தது—அதாவது நாய்க்கர் வீடு பூட்டிக் கிடந்ததைப் பார்த்து. ஆனால் ஏழாம் நாள் வேறு பிள்ளையாரைச் சுதையில் செய்து வைத்துவிட்டார்கள், கல்லுப் பிள்ளையார் வரும்வரையில் இருக்கலாம் என்று. மேளதாளமெல்லாம் கொட்டினார்கள். கொழுக்கட்டை செய்து வழங்கினார்கள்.

''வக்கீல் குழந்தைக்கு நமோ கணபதி கோபால நாய்க்கன் எழுதிக்கொண்டது. அபகாரம் பண்ணுகிற ஆத்மாக்களுக்கு உபகாரம் பண்ணினால்தான் புத்தி வரும். இது பெரியவர்கள் சொல்கிற நியாய மான சேதி. தாமுவுக்கு நம்ம வரகுண விநாயகரிடம் பக்தி ரொம்ப உண்டு. அவரைக் கும்பிட்டுத்தான் ஸர்க்கேஸில் சேர யோக்யதை அடைந்தான் அவன். எனக்கும் அவரிடம் அந்தப் பக்தி உண்டு. ஆகை யினால்தான் அவன் வெள்ளைக்காரச்சியைக் கலியாணம் பண்ணிக்கொள் ளக்கூடாது என்று நூறு தேங்காய் சிதறுவதாக நேர்ந்துகொண்டேன். எப்போது அதை அவர் கேட்கவில்லையோ, அப்போது அவருக்குத் திருப்பணி செய்ய நாம் அப்படியாப்பட்ட சின்ன மனுஷன் இல்லை என் கிற உண்மையை ருசுப்படுத்த நினைத்தேன். அது நடைபெறவில்லை; தபாலாபீசில் ஆயிரத்துச் சொச்ச ரூபாய் சேர்ந்திருந்தது. நான் பிள்ளையாரிடம் வருவதைப் போலீசு எப்படித் தடுக்கமுடியும்? அதனால் தான் பிள்ளையாரைத் தூக்கிவந்துவிட்டோம். இதை எப்படியடா கொண்டு போனான் என்று குழந்தைக்கு மலைப்புத் தட்டும். அப்புறம் கோபால நாய்க்கன் என்ற பேரில் ஒருத்தன் இருந்தால் என்ன? இல்லாவிட்டால் என்ன? ஒன்றரை முழப் பிள்ளையாராக இருந்ததால் கள்ளிப் பெட்டியில் போட்டுக்கொண்டு வந்துவிட்டோம். மலாய் நாட்டு ஜனங்கள் ரொம்பவும் பிரியமாக இருக்கிறார்கள். நம்மவங்கள்தானே?

''தாமு ஸர்க்கேஸ் கம்பெனியோடு எப்பவாவது நம்ம ஊருக்கு வந்தாலும் வருவான். அவன் தகப்பனாருக்கு அப்படி ஒன்றும் வருத்த மில்லை என்று குழந்தை அவனைப் பார்த்தால் கட்டாயம் சொல்ல வேண்டும்;

''திருப்பணி அடுத்த வருடம் நடக்கும். நான் இப்போது பண் டாரவாடை இஸ்மாயில் ராவுத்தர் கம்பெனியில் வேலை பார்க்கிறேன். —இப்படிக்கு, பிரியமுள்ள, நமோ கணபதி கோபால நாய்க்கன்.''

இந்தக் கடிதம் இரண்டு மாதம் கழித்து மலேயாவிலிருந்து வந்தது.

நாய்க்கரே, நான் ஆச்சரியப்படவில்லை. மூன்று முழப் பிள்ளையா ராக இருந்தாலும் நீர் கொண்டு போயிருப்பீரே!

—நவம்பர், 1958

# என்று வருவானோ?

என். சிதம்பர சுப்ரமண்யன்

"டங், டங், டங்!''

பக்கத்து மணிக்கூண்டிலே மணி மூன்று அடித்தது. மனிதன் கட்டிய அந்த மணிக்கூண்டு ஆகாயத்தை நோக்கி நின்றுகொண்டு காலத்தை ஏன் அளந்துகொண்டிருக்கிறது? அது காலத்தை அளக்கவில்லை. காலத்தை அளக்கமுடியாது. ஆனால் எதையோ அது அளக்க முயல்கிறது.

பார்வதி சமையல் உள்ளிலிருந்து எட்டிப் பார்த்தாள். அவள் மனம், அந்தக் கடிகாரத்தைப்போல் அடித்துக்கொண்டிருந்தது. அந்தக் கடிகாரமோ, ஒவ்வொரு தரம் அடிக்கும்போதும் அவளுக்குச் சவுக்கடி கொடுத்து வந்தது.

மணி எதையோ நினைத்துக்கொண்டிருந்தவன், மணிச் சப்தம் கேட்டுத் திடுக்கிட்டான். எங்கெங்கேயோ சஞ்சரித்துக்கொண்டிருந்த மனத்தை, இந்த உலகத்தில் அறைந்து பதிப்பதுபோல், மூன்று தரம் அடித்தது கடிகாரம். "பார்வதி, மணி மூன்று ஆகிவிட்டது. சீக்கிரம் தயார் செய்துகொள். நாலரை மணிக்குள், ராகுகாலத்துக்கு முன்பே, வந்து பார்த்துவிட்டுப் போய்விடுவார்கள். சீக்கிரம் ஆகட்டும்'' என்று அவசரப்படுத்தினான்.

அநேக தடவை தயார் செய்துகொண்டு அலுத்துப் போன பார்வதி சலிப்புடன் மனம் நொந்து, மறுபடியும் தயார் செய்துகொள்ள ஆரம்பித்தாள். பார்வதிக்கு வயது பதினேழு நடக்கிறது. ஆனால், பதினாறு வயது ஆகும்போதே, அவள் மிகவும் வளர்ந்துவிட்டாள். இப்பொழுது பெரிய 'அம்மாமி' மாதிரிதான் இருக்கிறாள்; அதற்கு அவள் என்ன செய்வது!

"உடம்பையும் வளர்த்தியையும் பார்த்து, யார் அவளைக் கல்யாணம் பண்ணிக்கொள்வார்கள்? ஐந்து வருஷமாகத்தான் வந்து வந்து பார்த்துவிட்டுப் போகிறார்கள். இவ்வளவு பெரிய பெண்ணைப் பார்த்துப் பயந்துவிடுகிறார்கள். இத்தனை வருஷமாக ஆகவில்லையே என்ற சந்தேகமாயிருக்காதோ?'' என்று பக்கத்து வீடுகளில், அடிக்கடி பேசிக்கொள்வார்கள். அது பார்வதிக்குத் தெரியாமலில்லை; ஆனால் அவள் என்ன செய்வாள்?

மணி பரம சாது. அவனுக்கு ஒரே தங்கை, பார்வதி; அவன், தாய், தங்கை மூன்று பேருமாக ஏதோ காலட்சேபம் நடத்தி

வந்தார்கள். அவனுக்குச் சம்பளம் முப்பது ரூபாய்தான்; தகப்பனார் தேடி வைத்த சொத்து ஒரு தம்பிடி கிடையாது. அவனுக்கும் வயது அதிகம் ஆகிவிடவில்லை; சிறு பையன்தான். ஆனால், தன் தங்கைக்குக் கல்யாணம் பண்ணிவைக்கவேண்டிய பொறுப்பு அவன் தலைமேலே விழுந்தது. அவனுக்குப் பெண் கொடுக்கச் சிலர் முன்வந்தனர். ஆனால், முதலில் தங்கைக்குக் கல்யாணம் செய்துவைக்கவேண்டுமே! ஆகவே, தன் கல்யாணம் பிறகுதான் என்று ஒத்திப் போட்டுவிட்டான். அதுதான் அவனால் செய்ய முடிந்தது.

மணிக்கு உதவி செய்ய யாரும் இல்லை. உறவினர் இருந்தார்கள்; ஆனால் ஒத்தாசை செய்ய அவர்களால் முடியவில்லை. அவரவர்கள் காரியங்களும் கவலைகளும் அவரவர்கள் தலைமேல் இருந்தன. மணியும் அவர்களிடம் ஒன்றும் எதிர்பார்க்கவில்லை. அவன் ஏதோ செட்டுக்கட்டாய்ச் சேர்த்துவைத்த ஐந்நூறு ரூபாயையும் தங்கை கல்யாணத்துக்குச் செலவிடத் தயாராயிருந்தான். எந்தக் கல்யாணந்தான் அதற்கும் குறைந்து நடக்கும்? எந்தக் கோவிலில் போய்ச் செய்தாலும், அந்தத் தொகைகூட இல்லாமல் எப்படி நடக்க முடியும்?

நான்கு வருஷத்துக்கு முன்பாயிருந்தால், கல்யாணத்துக்கு அவ்வளவு சிரமம் ஏற்பட்டிராது. பார்வதி சிறு பெண்ணைக் குத்துவிளக்கைப் போல இருந்தாள். ஆனால் அப்பொழுது, அவனிடம் பணம் இல்லை. இப்பொழுது, கையில் ஏதோ சொல்பம் இருக்கிறது. ஆனால் வந்து பார்ப்பவர்கள் பார்த்துவிட்டுச் சந்தேகத்தினாலோ, வேறு எதனாலோ, சரியான பதில் கொடுக்காமல் மழுப்பிவிட்டுப் போய்விடுவது சகஜமாகிவிட்டது.

ஏழை அழகாயிருந்தால் யாராவது தட்டிக்கொண்டு போய்விடுவான். பார்வதிக்கு அழகும் இல்லை. அவள் கறுப்பு. வயதான பெண், அம்மைவடு மூஞ்சி, அநேகம் பேர் வந்து பார்த்துப் போயும் கல்யாணம் ஆகவில்லை.

தோல் கறுப்பாயிருந்தால், ரத்தமும் கறுப்பாயிருக்குமா? உள்ளம் கறுப்பாயிருக்குமா? பார்வதி நல்ல குணவதி; பலவிதமான ஹிம்சைகள் பட்டு அவள் மனம் ஸ்புடம் போட்ட தங்கம்போல் பரிசுத்தமாயிருந்தது. துக்கமும் கஷ்டமும் நரம்புகளைப் பிடித்திழுத்து மனத்தை ச்ருதி சேர்க்கும் முறுக்காணிகள். துக்கத்தில் அவள் மனம் கனிந்திருந்தது.

பார்வதிக்கு வயது பதினேழாகிவிட்டது; இன்னமும் கல்யாணமாகவில்லை; பெண்ணாய்ப் பிறந்தவள் யாருக்காவது வாழ்க்கைப்பட்டுத்தானே ஆகவேண்டும்? அவளுக்குப் புருஷன் இனிமேல் பிறக்கப் போவதில்லை. ஆனால் அவள் புருஷன் யார்? எங்கிருக்கிறான்? என்று வருவான்? எங்கோ இருந்துகொண்டு தன்னை அழைத்துக்கொண்டு போகாத தன் நாயகனைத் தேடி அவள் மனம் தவித்தது. 'அவர், வராமல் இருந்துவிடுவாரோ, தான் தள்ளப்பட்டவள்தானோ?' என்று நினைக்கும்போது, அவளுக்கு அளவிறந்த வேதனை நெஞ்சில் ஊறும். அவனை ஏன் இன்னும் காணவில்லை? — தன்னைத்தானே நொந்துகொண்டு அவள் மனம் ஏங்கித் தவித்தது.

அவளோடு சம வயதான பெண்கள் எல்லாருக்கும் கல்யாணம் ஆகிவிட்டது. அவளுடைய சிநேகிதிகள் அநேகருக்குக் குழந்தைகள் பிறந்துவிட்டன. அவர்கள் எவ்வளவு பெருமையாகப் பிறந்தகம் வருகிறார்கள்! அவர்கள் புருஷர்கள் அந்தப் பெண்களை எவ்வளவு அன்போடு நடத்துகிறார்கள்! பிறந்தகம் வீடு ஆய்விடுமா? புருஷனோடு இருந்தால்தான் பெண்ணுக்குக் கௌரவம். தன் சிநேகிதிகளைப் பார்த்து அவள்

பொறுமைப்படவில்லை. தன்னைப்பற்றி, வெளியில் அவர்கள் மிகவும் இளப்பமாகப் பேசிக்கொள்வார்கள் என்பதும் அவள் அறியாமல் இல்லை. அவர்களிடம் கோபங்கொள்ளவோ அருவைப்படவோ அவள் மனம் இடங் கொடுக்கவில்லை. எல்லாம் அவள் கால வித்தியாசம்; அவள் துரதிருஷ்டம்; முந்திய கர்மாவின் பலன்கள்.

அன்று காலையிலிருந்து, அவள் மனம் நிலை கொள்ளாமல் தவித்துக்கொண்டிருந்தது. மணி பக்கத்து வீட்டிலிருந்து ஞாயிற்றுக் கிழமை வெளிவரும் வாரப் பத்திரிகை ஒன்றை வாங்கி வைத்திருந்தான். அதிலிருந்த ஒரு செய்தியை படித்ததிலிருந்து, அவள் மனம் குழம்பி யிருந்தது. 'கல்கத்தாவிலே மூன்று பெண்கள்—சகோதரிகள்—ஹூக்ளி நதியில் விழுந்து உயிரை விட்டனர். மூத்தவளுக்கு வயது 22. அடுத்த வளுக்கு வயது 19. மூன்றுமவளுக்கு வயது 17. மூவருக்கும் கல்யாண மாகவில்லை. அவர்கள் தகப்பனுருக்குக் கல்யாணம் செய்துவைக்கவோ, வரதக்ஷிணை கொடுக்கவோ ஐவேஜியில்லை. தங்கள் நிலைமையையும் பிறர் செயல்களையும் கண்டு வாழ்க்கையில் வெறுப்புற்ற மூவரும் நதியில் விழுந்து மடிந்தனர்.' உயிரை விடுவது லேசான காரியமல்ல. ஆனல், மற்றக் கஷ்டங்களோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது உயிரை விடுவது எவ்வளவோ மேல் என்றுதான் தோன்றுகிறது. பார்வதி அப்படித்தான் அப்பொழுது நினைத்தாள். மடிந்து மண்ணுகமாத்திரம் மனிதன் போவ தில்லை. அதைவிடக் கொடிய துன்பங்களையும் அவன் அநுபவிக்கத்தான் செய்கிறன். மனிதனின் சர்வரோக நிவாரணி எது? அதுதான் சாவு. கல்கத்தாச் சகோதரிகளின் கதையைப் படித்ததிலிருந்து அவள் மனம் தள்ளாடியது. அவர்களை, உயிரைக்கூட விடும்படி செய்யத் தூண்டு கோலாக என்ன இருந்திருக்கும் என்பது அவளுக்கு நன்ருய்த் தெரியும்.

ஆனல், மனிதனுடைய கண்ணீரையும், பிறப்புகளையும், இறப்பு களையும் கண்டுகொண்டிருந்த அந்தக் கடிகாரம், அவள் மனத்தை அதிக நேரம் அலையவிடவில்லை. மணி மூன்று அடித்தவுடன் அண்ணுவின் ஆக்ஞைப்படி அலங்கரித்துக்கொள்ள உள்ளே போனுள். எவ்வளவு கசப்பாக இருந்தது அந்த அலங்காரம்! தன்னையே அர்ப்பணம் செய்யத் தயாராகி, வந்தவன் எவனே அவன் காலில் விழுகிறள். ஆனல், வந்த வன் அவள் முகத்தில் உள்ள வடுக்களைப் பார்த்துவிட்டுப் போய்விடு கிறன். இந்தமாதிரியான சம்பவங்கள் அநேகம் நடந்து அவற்றல் அவள் ஹிருதயத்தில் ஏற்பட்ட வடுக்கள் எத்தனை?

மணி காலையில், வரப்போகிறவனைப்பற்றிச் சொல்லிக்கொண் டிருந்தான்: அவனுக்கு இரண்டு மனைவிகள் காலமாகிவிட்டனராம். ஆளுக்கு இரண்டு குழந்தைகள் வீதம் அவனிடம் ஒப்பித்துவிட்டு அவர்கள் போய்விட்டார்கள். அவனுக்கு வயது அதிகம் ஆகிவிட வில்லை: நாற்பது வயதுக்குள்ளேதான். அந்தக் குழந்தைகளைப் பாது காக்கவே இப்பொழுது அவன் கல்யாணம் செய்துகொள்ளப்போகி றன். பெண் பெரிய பெண்ணுய்த்தான் இருக்கவேண்டும். உடனே அவ னுடன் கிளம்பிவரத்தக்க பெண்ணை அவன் பார்த்துக்கொண்டிருக் கிறன். காரியம், குழந்தைகள் இவைகளைக் கவனிக்கத்தக்க பெண்தான் அவன் தேடுவது. சுமாராக நல்ல சம்பளம். எப்படியும் தை மாதத் துக்குள் கல்யாணம் முடித்துவிடவேண்டுகிறுனும். இந்த இடம் முடியும் என்ற நம்பிக்கை மணிக்கு இருந்தது. அவன் எவ்விதமோ அந்த நினைப்புக் கொண்டிருந்தான். ஆனல் பார்வதி என்ன நினைத்தாள்? அவளுக்கு நினைக்கவோ, செய்யவோ சுதந்தரம் ஏது? கல்யாணம் என்று தனக்கு ஆகுமா? அதுதான் அவள் கவலை.

பார்வதி ஸித்தமாக நின்றுள். அவளிடமுள்ள புடைவைகளுக் குள்ளே, சுமாராக நல்லதாயிருந்ததைக் கட்டிக்கொண்டிருந்தாள்.

அவள் பின்னல் இடுப்புக்கும் கீழே தொங்கியது. கழுத்தி லும், கையிலும் ஆபரணங்கள் ஜ்வலிக்கவில்லை. கையில் ஒரு காப்பு; இரண்டு ஜப்பான் வளையல்கள், கழுத்தில் சங்கு வைத்துக் கட்டின சங்கிலி. நெற்றியில் ஒரு குங்குமப் பொட்டு. இவ்வளவுதான் அவள் அலங்காரங்கள். ஆனால், தபஸ்வினியைப்போல எதையோ தியானித்துக் கொண்டிருந்தாள். அவள் முகத்தில் உள்ளத்தின் பிரகாசம், பொலி வோடு விளங்கி ஒரு களையை உண்டாக்கியது. ஆனால், அதில் சோகம் கலந்த சோபை நிரம்ப இருந்தது. அவள் எதைக் குறித்துத் தவம் செய்துகொண் டிருந்தாளோ!

வடக்கே, முன்பு ஒரு நாள், இமயத்தில் பனி மூடிய பர்வதத்தில் மலரணிந்த பார்வதி, தவக்கோலத்தில் அம்மலையைப் போலவே வெண் ணிறத்தவனாய், நீறுபூத்த மேனியனாய், அசையாதவனாய், ஆழ்ந்தவனா யுள்ள ஈசனுக்காகக் காத்துக்கொண் டிருந்தாள். அவள் நாயகன், அவள் தவத்தை மெச்சி அவளிடம் கருணை கூர்ந்து வந்து மணம் செய்துகொண்டான். தெற்கே, குமரி முனையில் ஒரு பெண், அதே நாயகனை வேண்டித் தவங்கிடந்தாள். அவளுக்கு அத்தேவன் அருள் கிடைக்கவில்லை. அதை வேண்டி அவள் இன்னமும் தவங்கிடக் கிறாள். தன்னை ஏற்றுக்கொள்ளாததனாலோ என்னவோ, அவள் உயி ரிழந்து கல்லாக நிற்கிறாள். இந்த இருவருக்கும் நடுவே பார்வதியும் தன் நாயகன் வரவை எதிர்பார்த்து ஆவலுடன் நின்றாள். அவள் மனோ ரதம் நிறைவேறுமா? அவளுக்கு ஈசன் அருள் கிடைக்குமா?

வண்டி ஒன்று வாசலில் வந்து நின்றது. மணி ஓடிப் போய், வாசலை எட்டிப் பார்த்தான். ஒருவித மனோபாவத்தையும் காட்டாத முகத் துடன் கண்ணியமான மனிதரொருவர் வண்டியிலிருந்து இறங்கினார். ''வாருங்கள், வாருங்கள்'' என்று படபடப்புடன் வரவேற்றான் மணி. வந்தவர் கைக்குட்டையால் முகத்தைத் துடைத்துக்கொண்டு கையி லிருந்த கண்ணாடியை மூக்கில் மாட்டிக்கொண்டு உள்ளே வந்தார்; அங்கே தயாராகப் போட்டிருந்த நாற்காலியைச் சுட்டிக் காட்டி, ''இப்படி உட்காருங்கள், இப்படி உட்காருங்கள்'' என்று உபசரித்தான் மணி. ''நல்ல வெயில்'' என்று சொல்லிவிட்டு விசிறியைக் கொண்டு வந்து கொடுத்தான். சம்பந்தா சம்பந்தம் இல்லாத இரண்டு மூன்று வார்த்தைகளைச் சொல்லிவிட்டு, ''அம்மா, பார்வதி, வந்து நமஸ்காரம் பண்ணு'' என்று ஒருவித நடுக்கத்துடன் சொன்னான்.

அன்று சிவன் காலில் விழுந்து நமஸ்கரித்த பார்வதியைப் போல அவர் காலில் வந்து அவள் நமஸ்கரித்தாள். வந்தவர் அவளை ஏற இறங்க ஒரு தரம் கவனமாகப் பார்த்தார். அப்பொழுதும் அவர் முகக்குறி ஒன்றும் காட்டவில்லை. பார்வதி தலையைத் தூக்கி அவரை உற்று நோக்கினாள். அவர் திருஷ்டி மறுபடியும் அவள்மேல் விழுந்தது. அவள் நாணத்துடன் தலை குனிந்துகொண்டாள். அவளைப் பார்த்து மணி ஏதோ சமிக்ஞை செய்தான். பக்கத்து ஹோட்டலிலிருந்து வாங்கிவந்த ஓர் அல்வாத் துண்டையும், இரண்டு வடைகளையும் தட்டிலேந்தி மெதுவாகக் கொண்டுவந்து வைத்தாள் பார்வதி.

''இதெல்லாம் எதற்கு?'' என்றார் வந்தவர்.

''சும்மா இருக்கட்டும்; ஒன்றும் பிரமாதமில்லையே!'' என்றான் மணி.

ஒரு பஞ்ச பாத்திரத்தில், தீர்த்தம் கொண்டுவந்து வைத்தாள் பார்வதி.

பாதி அல்வாத் துண்டையும், ஒரு வடையையும் சாப்பிட்டுவிட்டு, கையில் டம்ளரை எடுத்துகொண்டு வாசல் பக்கம் கையலம்பப் போனார்.

''இங்கேயே அலம்புங்கள்'' என்று முற்றத்தைக் காட்டினுன் மணி. கை அலம்பிவிட்டு, மெதுவாகக் கையைத் துடைத்துக்கொண்டார் வந்தவர். பார்வதி மற்றொரு தட்டில் வெற்றிலைபாக்கைக் கொண்டு வந்து வைத்தாள். ''பார்வதி, ஒரு பாட்டுப் பாடு'' என்ருன் மணி. கொஞ்சம் தள்ளி உட்கார்ந்துகொண்டு பாட ஆரம்பித்தாள் அவள். முதல் முதலாக ஒரு தியாகராஜ கீர்த்தனத்தைக் கச்சிதமாகப் பாடி முடித்தாள்.

அதற்கு அடுத்தபடியாக, அவள், ''வேலவரே, உமைத் தேடி ஒரு மடந்தை விடியுமளவும் காத்திருக்கிற வகை என்ன?'' என்று பாட்டிலே கேட்டாள். கனவு காண்பதும், காத்திருத்தலுமேயல்லவா மனிதர்களுடைய வாழ்க்கையை உயர்த்திக் கொஞ்சம் ரஸமுள்ளதாகச் செய்கின்றன? காத்திருக்கவேண்டியதுதான். அன்று வேலவரைத் தேடித் தவித்திருந்த மங்கையின் மனத்தைப் போலவே பார்வதியின் மனமும் காத்திருந்து, காத்திருந்து அலுப்புற்று, வேதனையடைந்திருந்தது. அவள் அடிவயிற்றிலிருந்த பைரவி ராகம் தலைவனிடமிருந்து பிரிந்து தவிக்கும் தலைவியின் பாவத்தைச் சாசுவதமாக ஞாபகப்படுத்திக் கேட்பவர்கள் மனத்தைப் புண்படுத்திக்கொண்டிருந்தது. இந்தத் தாபம் ஏன்? இந்த வேதனை ஏன்? யாரைப் பிரிந்து அந்தராத்மா அவஸ்தைப்படுகிறது? ஐயோ! அதுதான் தெரியவில்லை. ஆனுல், வேதனையிலும் பெருமூச்சிலும் பிறந்த சங்கீதம் மாத்திரம், ஏன் இவ்வளவு இரக்கமில்லாமல் இருக்கிறது? பிரிந்திருப்பதை ஞாபகப் படுத்திச் சங்கடப்படுத்துகிறது! நிரந்தரமான பிரிவினையின் பாட்டுக்குப் புதியதொரு சங்கதிபோல் இருந்தது அவள் பாட்டு.

அவளுடைய சன்னமான குரல் ஏக்க அலைகளைப்போல் மெதுவாக மிதந்துவந்தது; ஹ்ருதயத்துள் புகுந்து சலாகையைப்போல் குத்தக் கூடியதாயிருந்தது. ஆனுல், வந்தவர் ஹ்ருதயத்தில் புகுந்து மனக் கிளர்ச்சியை உண்டுபண்ணிற்ரு? அவள் பாட்டை முடித்துவிட்டு உள்ளே போனுள். அவள் போகும்போது, மறுபடியும் ஒருதரம் அவர் அவளை ஏற இறங்கக் கவனித்தார். பார்த்துப் பிரயோஜனம் என்ன? அவர் கண் பார்த்துச் சொன்னது சரிதானு? கண்ணுக்குப் பார்க்கும் சக்தி கிடையாது; காதல்தான் கண்ணைத் திறக்கிறது. அன்புதான் மனத்தை விசாலப்படுத்துகிறது. அவருக்குக் காதல் இல்லை; அநுதாபம் இல்லை. அவர் பார்வையில் பார்வதியின் வடுக்களே தெரிந்தன. ஆனுல் 'காதலின் கண்கள்' அந்த வடுக்களையே எவ்வளவு அழகுள்ளனவாகச் செய்திருக்கும்!

''சரி'' என்று போவதற்குத் தயார் செய்துகொண்டார் வந்தவர். தண்டனையை எதிர்பார்க்கும் குற்றவாளியைப் போல் அவர் வாயைப் பார்த்துக்கொண்டு நின்ருன் மணி. தனக்கு 'விமோசனம்' உண்டா என்று கேட்டுக்கொள்பவள் போல, ஒரு நம்பிக்கையற்ற கேள்விக்குறியுடன் கதவோரம் நின்றிருந்தாள் பார்வதி. அங்கவஸ்திரத்தை எடுத்து மாட்டிக்கொண்டு வாசல்பக்கம் போனுர் வந்தவர். பின்னுடி, அவரைத் துரத்திக்கொண்டு போனுன் மணி. ''சரி; பார்த்தாய்விட்டது. நான் இந்தத் தை மாதம் கல்யாணம் அநேகமாகச் செய்துகொள்ளப் போவதில்லை. சித்திரை வைகாசியில்தான் நடந்தால் நடக்கும். நான் உங்களுக்கு விவரமாகப் பின்னுல் கடிதம் போடுகிறேன்'' என்று சொல்லி விட்டு, விடுபட்ட பறவையைப் போல் வண்டியிலேறிக்கொண்டு போய் விட்டார் அவர். அந்தக் குரலும் அவர் சொன்ன விதமும் மணிக்கு ஏமாற்றத்தைக் கொடுத்தன.

மணி, மிகுந்த ஏமாற்றத்துடனும் கவலையுடனும் உள்ளே வந்தான். இம்மாதிரி மழுப்பல் பதில்கள் அவனுக்குப் புதியனவல்ல. சில பேர்கள்

நேருக்கு நேராகவே, 'பெண் பிடிக்கவில்லை' என்றுகூடச் சொல்லி விட்டுப் போய்விடுவார்கள்; சிலர் ஏதோ சாக்குப்போக்குச் சொல்லிப் போய்விடுவார்கள். இந்தச் சாக்குப்போக்கு அவனுக்கு மிகவும் துன்பத்தைக் கொடுத்தது. அவன் நம்பிக்கையில் இடி விழுந்தது.

உள்ளே வந்தான். பார்வதி அவனை ஆவலோடு பார்த்தாள். அவனுடைய சோகப் பார்வை அவளுக்கு விஷயத்தை விளக்கிச் சொல்லிற்று; அவளுக்குப் புரிந்துவிட்டது. இவரும் போய்விட்டார்; இவருக்கும் தேவையில்லை. இவ்வளவு நாழிகை அடக்கிவைத்திருந்த அவளுடைய துக்கம் பீரிக்கொண்டு வந்தது. திரஸ்கரிக்கப்பட்ட அவள் ஹ்ருதயத்திலிருந்து எழுந்த கண்ணீர்த்துளிகள் யாருக்கோ தொடுத்த மாலையைப் போல உதிர்ந்துகொண்டிருந்தன.

பார்வதியின் துன்பத்தைக் கண்டு மணியின் மனம் கஷ்டப்பட்டது; "அம்மா, பார்வதி! கவலைப்படாதே. இன்னும் வேளை வரவில்லை. உனக்குக் கல்யாணம் ஆகாமல் இருக்கப் போகிறதா? அந்தக் காலம் வந்துவிட்டால் தானே வந்து அழைத்துக்கொண்டு போய்விடுகிறான்" என்று அவளைத் தேற்றினான்.

அந்த வார்த்தைகள் அவ்வளவாக அவள் மனத்தைத் தேற்றவில்லை. 'வருவானோ?', 'என்று வருவானோ?' என்ற கேள்விகள் காதில் ஒலித்துக்கொண்டேயிருந்தன. இதுவரையில் அவளை வந்து பார்த்து விட்டுப் புறக்கணித்துச் சென்றவர்களில் அவள் புருஷன் ஒருவனும் இல்லை. அவள் புருஷன், அவள் நாயகன், இன்னும் வரவில்லை; "உன்னையும் என்னையும் ஒன்றும் பிரித்துவைக்கமுடியாது" என்று சொல்லி அவளை அடையப் போகும் புருஷன் இன்னும் வரவில்லை. அவன் என்று வருவானோ? அதை நினைத்து அவள் நெஞ்சம் ஏங்கித் துடித்தது.

பக்கத்து மணிக்கூண்டிலே, மணி நாலு அடித்தது. அதற்கு வேறு வேலையில்லை: மணிக்கு மணி, நிமிஷத்துக்கு நிமிஷம், விநாடிக்கு விநாடி ஒலித்துக்கொண்டே இருக்கிறது. கீழே மனித ஹ்ருதயத்தில் ஏற்படும் சோக நாடகங்களையோ மனக்கிளர்ச்சிகளையோ அது அறியுமா?

பார்வதியின் காதில் மணிச் சப்தம் விழவில்லை. ஆனால் அவள் ஹ்ருதயத்தில் விழுந்தது. 'என்று வருவானோ?' என்ற அவள் கேள்விக்கு மணிக்கூண்டு பதில் சொல்லுமா? *

—ஜனவரி, 1939

# பாட்டியின் அபிமானம்

கி. ஸரஸ்வதி அம்மாள்

சாம்பசிவம் ஒரு பெரிய மிராசுதார். கிராமத்தில் பாதிக்கு மேல் அவருடையது. பொன் விளையும் பூமி யென்றால் அவர் நிலங்களுக்கே தகும். இருபோகம் விளைந்து இரண்டு பங்கு வரும்படி. இவ்வளவு இருந்தும் சாம்பசிவத்துக்கு மனச்சந்துஷ்டி என்பது மட்டுமில்லை. காரணம், அத்தனை சொத்தையும் ஆள ஒரே ஒரு பிள்ளைக் குழந்தை இல்லாத குறைதான்.

ராமேசுவரம் முதலிய புண்ணிய க்ஷேத்திரங்கள் போய் எத்தனையோ சாந்திகள் செய்து பார்த்தாய்விட்டது. சாம்பசிவத்தின் தாயார், 'என் சாம்பசிவத்துக்கு ஒரு குழந்தை பிறந்து பார்ப்பேனோ?' என்று சதா சர்வதா அதே கவலையாக இருந்து வந்தாள். பாவம், ஒரு பேரனில்லாத குறையையாவது பொறுத்துக்கொண் டிருக்கலாம் போல் இருந்தது, ஆஸ்தி பாஸ்திகளைத் தாயாதிகள் கொண்டுபோய்விடுவார்களே என்று எண்ணிப் பார்க்கும்போது அவளால் சகிக்க முடியவில்லை. அவள் தன் நாட்டுப் பெண் சாரதாம்பாள்மீது பிராணனாக இருந்தாள்.

கடைசியில் தெய்வம் தாயாதிகளின் பங்கில் இல்லை என்று தெரிந்தது. சாரதாம்பாள் கர்ப்பவதியானாள். அவள் பிரசவிக்கும் வரையில் அது பெண்ணாயிருக்குமோ, பிள்ளையாயிருக்குமோ என்று பாட்டி கவலைப்பட்டது, அந்தக் கடவுளுக்குத்தான் தெரியும். நல்ல வேளையாகச் சாரதாம்பாளுக்குப் பிள்ளைக் குழந்தை பிறந்தது. சாம்பசிவத்துக்கும் அவர் தாயாருக்கும் உண்டான சந்தோஷத்தைச் சொல்ல வேண்டுமோ? குழந்தைக்கு ராஜகோபாலன் என்று பெயரிட்டாள், பாட்டி. தொட்டிலிடுவது முதல் ஆண்டு நிறைவுவரை ஒவ்வொரு விசேஷமும் தடபுடலாக நடந்ததென்று சொல்ல வேண்டியதில்லை.

ராஜகோபாலனைப் பார்த்துக்கொள்வதே பாட்டியின் முக்கிய வேலையாய்ப் போய்விட்டது. அவளுக்கு அவன் மீதிருந்த பாசம் இவ்வளவு அவ்வளவென்றில்லை. சொத்து முழுதையும் அவன் ஒருவனே ஏகபோகமாய் அநுபவிக்க வேண்டுமென்று ஆசைப்பட்டாள். சொத்தைப் பங்கிடும்படியாக இன்னொரு பேரன் பிறக்க வேண்டுமென்று அவள் விரும்பவில்லை. முன்னெல்லாம் சாரதாம்பாளுக்குக் குழந்தை வேண்டுமென்று தெய்வங்களை வரம் கேட்டு வந்தது போக இப்பொழுது இன்னொரு பிள்ளை பிறக்க வேண்டாமென்றுகூடப் பிரார்த்தித்துக்கொள்ளத் தொடங்கினாள்.

இரண்டு வருடத்துக்கெல்லாம் சாரதாம்பாள் மறுபடியும் கர்ப்பவதியானாள். பாட்டிக்கு அது கொஞ்சமும் பிடிக்கவில்லை. ஆனால் அதற்காக அவள் என்ன செய்ய முடியும்? 'பெண்ணாய்ப் பிறக்கட்டுமே? அதனாலே சொத்து பாகம் செய்யவேண்டியதில்லை. அவனுக்கும் விளையாட ஒத்தசையா யிருக்கவும் ஒரு தங்கை வேண்டாமா?' என்று எண்ணிச் சமாதானம் செய்துகொண்டாள்.

ஆனால் எல்லாம் நம் எண்ணப்படியே நடக்குமா? சாரதாம்பாளுக்கு இப்பொழுதும் ஓர் ஆண் குழந்தையே பிறந்தது. பாட்டியைப் போலன்றித் தன்னிரு குழந்தைகளிடமும் பாரபக்ஷமற்ற அன்பைச் செலுத்தக்கூடிய அவள், பிரசவித்த பதினொன்றும் நாளே இறந்து போனாள். சாம்பசிவம் மட்டற்ற துக்கமடைந்தார். அவர் தம் தாயாரிடம், 'அம்மா! நீதான் இனிமேல் இக்குழந்தைகளுக்குத் தாயார். எனக்கோ ஒன்றும் தெரியாது. இவர்களை வளர்ப்பது உன் பொறுப்பு' என்று சொல்லிக் கண்ணீருகுத்தார். அவர் அவ்விதம் சொன்னது மட்டுமின்றி அப்படியே நடந்து கொள்ளவும் செய்தார்.

பாட்டி தன்னுடைய இரண்டு பேரன்மார்களையும் மிகவும் செல்வமாகவே வளர்த்து வந்தாள் என்றாலும், சின்னவனிடத்தில் அவன் பிறந்ததிலிருந்தே அவளுக்குத் தன்னை யறியாமல் ஒருவித வெறுப்பு ஏற்பட்டிருந்தது. அவன் ராஜுவின் சொத்துக்குப் பங்காளியாக முளைத்ததுந் தவிரத் தாயையும் உருட்டிவிட்டான் அல்லவா? அவனாலன்றோ ராஜுவும் தாயிழந்தவனானன்? நடேசுவை (இளையவனுக்கு நடராஜன் என்று பெயரிட்டு இவ்விதம் அழைத்தார்கள்) பார்க்கும் போதெல்லாம் பாட்டிக்கு இத்தகைய எண்ணங்கள் தோன்றும். வீட்டில் எதுவும் ராஜகோபாலனுக்குத்தான் முதலில். அவன் இஷ்டப்பட்டோ, வேண்டாமென்றோ கொடுப்பதுதான் நடேசுவுக்கு.

ஒரு சமயம் நடேசு பாட்டியிடம், "ஏன் பாட்டி! மாமா பட்டணத்திலிருந்து பொம்மை வாங்கிண்டு வருவாளோன்னோ?" என்று கேட்டான்.

"எல்லாம் நேக்குத்தான்; ஒனக்கொண்ணும் கிடையாது, போ!" என்று ராஜு சொன்னான்.

"அங்கே நிறைய இருக்கும். எனக்கும்தான் வாங்கிண்டு வருவார்."

"எல்லாத்தையும் நான் எடுத்துண்டுடுவேன். அப்பறம்தான் ஒனக்குக் கொடுப்பேன்."

"பாரு பாட்டி, ராஜு சொல்றதெ" என்று நடேசு புகார் செய்தான். குழந்தைகளின் சம்பாஷணையைக் கேட்டுக்கொண்டிருந்த பாட்டி, "நடேசு! அவனோட என்ன தகராறு? அவன் உனக்குப் பெரியவன்; அவன் கொடுக்கிறதை வாங்கிக்கொண்டு பேசாதிரு!" என்று நடேசுவை அடக்கினாள்.

மாமா ஊரிலிருந்து வந்தபோது ஒரு மோட்டார் வண்டி வாங்கி வந்திருந்தார். அதில் ஏறி உட்கார்ந்து தோட்டத்தைச் சுற்றி வர நடேசு எவ்வளவோ ஆசைப்பட்டான். ஆனால் அவனைக் கவனிப்பார் யார்? ராஜு ஓட்டி ஓட்டி அலுத்துப் போய் வண்டியும் முக்கால் வாசி ஒடிந்தபிறகுதான் அது அவனுக்குக் கிடைத்தது. ராஜுவுக்குப் பின் பிறந்ததால் எதுவும் அவனுக்குப் பின்தான் நடேசுவுக்கு என்று ஒருவரும் சொல்லாமலே நடந்து வந்தது.

இருவரும் சேர்ந்தாற்போலவே பள்ளிக்கூடத்தில் படிக்க வைக்கப்பட்டார்கள். ஆனால் நடேசுதான் கெட்டிக்காரன் என்று பெயர்

வாங்கினான். தனது பாட்டி கொடுக்கும் அதிகமான செல்லத்தில் மூழ்கியிருந்ததனாலோ என்னவோ, ராஜு படிப்பில் அவ்வளவு சூடிகையாயில்லை. அவன் கொஞ்சம் சிரமப்பட்டுப் படித்தாலும் பாட்டி உடம்புக்காகாதென்று தடுத்துவிடுவாள்.

நாளடைவில் சகோதரர்கள் இருவரும் காலேஜில் சேர்ந்து பி.ஏ. பரீக்ஷைக்குப் படித்தார்கள். பரீக்ஷையில் நடேசு ராஜதானிக்கே முதலாவதாகத் தேற, ராஜுவுக்குப் 'பெயில்' ஆகிப் போய்விட்டது. ராஜுவுக்குத் தேறாதிருக்கும்போது, நடேசு உலகத்திலேயே முதலாவதாகத் தேறியிருந்தால்கூடப் பாட்டிக்குச் சந்தோஷம் எங்கேயிருந்து வரப்போகிறது? வீட்டில் ஒருவரும் அதிகம் சந்தோஷத்தைக் காண்பிக்காததால் நடேசுவும் தன் வெற்றியின் பெருமையை அவ்வளவாக அறிந்துகொள்ளவில்லை. நடேசு மேல் படிப்புக்காகச் சீமைக்குப் போக ஆசைப்பட்டான். அதைப்பற்றி அவன் தந்தையிடம் பிரஸ்தாபித்தபோது, ''நமது ஆசார விவகாரங்களைக் கெடுத்துக்கொண்டு என்ன படிப்பும் உத்தியோகமும் வேண்டியிருக்கிறது?'' என்றார் சாம்பசிவம்.

''என்னதான் பணம் இருந்தாலும் ஒரு பெரிய உத்தியோகத்தில் இருந்தால் பெருமைதானே? எனக்கு இரண்டாவதாகப் பாஸ் பண்ணின சுந்தரராஜன்கூடப் போகப் போகிறான். நானும் போய் வருகிறேன். நான் சில பேரைப்போல அங்கே கெட்டுப் போய் வருவேன் என்று நீங்கள் பயப்படவேண்டாம். நான் எவ்வளவு ஒழுங்காயிருந்துவிட்டு வருகிறேன் பாருங்கள்'' என்று நடேசு தந்தைக்குச் சமாதானமாகும்படி கூறினான். சாம்பசிவமும் அவன் சீமை போவதற்கு ஒருவாறு சம்மதித்தார்.

ஆனால் விஷயம் பாட்டியின் காதுக்கு எட்டியதும் அவன் பட்ட சிரமமெல்லாம் வீணாயிற்று. தன் வயதான காலத்தில் குழந்தையைத் தூரதேசம் அனுப்பிவிட்டுத் தன்னால் கவலைப்பட்டுக்கொண்டிருக்க முடியாதென்று ஒரேயடியாய்ச் சாதித்தாள். விசாரமும் கவலையும் ஒருபுறம் இருக்க, பணச்செலவு வேறு என்று நினைத்தபோது பாட்டிக்குச் சீமைப் படிப்புப் பிடிக்கவே இல்லை.

''பாட்டி! இரண்டு வருஷம் கொட்டைப்பாக்காக ஓடிவிடும். நான் உனக்கு வாரத்துக்கு ஒரு கடிதம் போடுகிறேன். நீ கவலைப்படும்படி நடந்துகொள்ளவே மாட்டேன். பணச்செலவு என்று பயப்படவேண்டாம். என்னோடு படித்த சுந்தரராஜன் போகிறானென்றால் பார்த்துக்கொள்ளேன். அவன் என்ன பணக்காரனா? அப்படிச் செலவழிகிற பணத்தைப் போல் நூறு பங்கு நான் உத்தியோகம் பண்ணிச் சம்பாதிப்பேன். ஏன் பாட்டி! நான் சீமை போய்ப் பாஸ் பண்ணிவிட்டு வந்தால் உனக்குப் பெருமையில்லையா?'' என்று நடேசு பாட்டிக்குப் பலவாறாக எடுத்துக் கூறி அவளுடைய அநுமதியை வேண்டினான்.

பாட்டிக்கும் அவன் 'போய்விட்டுத்தான் வரட்டுமே' என்று தோன்றியது. ஆனால் அதே சமயத்தில் ராஜுவிடம் அவளுக்கிருந்த அலாதி அபிமானம் அவளை எச்சரித்தது. 'குழந்தை ராஜு இப்போதே உத்ஸாகமில்லாமல் இருக்கிறான். நடேசு சீமைக்குப் போய்த் தேறாமல் வந்தாலும் ராஜு தம்பி தேறவில்லையே என்று வருத்தப்படுவான். தேறிவிட்டு வந்தாலும், நாம் மட்டும் ஒன்றுமில்லாமல் இருக்கிறோமே என்று எண்ணிக் கஷ்டப்படுவான்' என்று எண்ணினாள். உடனே, ''நடேசு! நான் கிழவி; இன்றைக்கோ நாளைக்கோ என்றிருக்கிறேன். உன்னை அவ்வளவு தூரத்துக்கு அனுப்பிவிட்டு என்னால் ஒரு நிமிஷங்கூட இருக்க முடியாது'' என்று கூறினாள்.

சாம்பசிவம் எப்போதும் தாயார் இஷ்டத்துக்கு விரோதமாக எதுவும் செய்வதில்லையாகையால் நடேசு சீமை போவதற்கு அவர்

சம்மதிக்கவில்லை. அவன் கனவெல்லாம் இருந்த இடம் தெரியாமல் மறைந்தது.

மேற்படி சம்பவங்கள் நடந்து நான்கு வருஷங்களாயின. சாம்பசிவம் இறந்துவிட்டார். ராஜுவும் நடேசுவும் தங்கள் கிராமத்தில் நிலத்தைப் பார்த்துக்கொண் டிருந்தார்கள். நடேசுவுக்குக் கிராம வாழ்க்கையும், பயிர்ச் செலவு வேலையும் அவ்வளவாகப் பிடிக்கவில்லை. ராஜதானிக்கெல்லாம் முதலாவதாகத் தேறியதனால் என்ன பயன் என்று எண்ணி அவன் வருத்தப்பட்டான்.

ஒரு சமயம் அந்த ஊருக்கு ஜில்லா அஸிஸ்டெண்ட் கலெக்டர் விஜயம் செய்வதாயிருந்தார். மிராசுதார்கள் தங்களால் கிஸ்தித் தொகையில் பாதிகூடச் செலுத்தமுடியாமல் இருப்பதைப்பற்றிச் சர்க்காருக்கு மனுச் செய்துகொண் டிருந்தார்கள். கிராமவாசிகளின் நிலைமையை நேரில் விசாரித்தறிந்து வருவதற்காக அந்த உத்தியோகஸ்தர் அனுப்பப்பட் டிருந்தார். கிராமத்தார் நடேசுவையே துரையிடம் தங்கள் குறைகளைப்பற்றி எடுத்துச் சொல்ல ஏற்பாடு செய்திருந்தனர்.

துரை ஊருக்கு வந்துவிட்டார். அவரைப் பார்த்ததும் நடேசு ஆச்சரியத்தில் பிரமித்துப் போனான். துரை வேறு யாருமில்லை. அவனுடன் காலேஜில் படித்த சுந்தரராஜன் தான், இப்பொழுது என்.எஸ். ராஜனாக விளங்கினான். நண்பர்களுக்குள் கடிதப் போக்குவரத்து நின்றிருந்தமையால் நடேசுவுக்குச் சுந்தரராஜன் ஐ.ஸி.எஸ். பாஸ் செய்து உத்தியோகமேற்ற விவரம் தெரியாது. அதிகார ஹோதாவில் வந்திருந்த சுந்தரராஜனுக்கு ஏற்பட்டிருக்கும் பெருமையைக் கண்டு மனம் குன்றினான். அவன் தன்னை லக்ஷ்யம் செய்து பேசுவானோ, மாட்டானோ என்று எண்ணிக்கொண் டிருந்தபோது சுந்தரராஜன், ''நடேசு! என்னை மறந்து விட்டாயா?'' என்று கேட்டுக்கொண்டே கைகுலுக்கினான். பிறகு நண்பர்கள் இருவரும் சகஜமாக வெகுநேரம் பேசிக்கொண் டிருந்தனர்.

சுந்தரராஜன் அன்றே ஊரைவிட்டுப் போய்விட்டான். நடேசு அவனைப் பற்றியே எண்ணி மனம் புண்ணாயிருந்தான். இரவு படுக்கையில் படுத்த பின்பும் அவனுக்கு அதே நினைவாக இருந்தது. அதிக வயதானதனால் தூக்கம் பிடிக்காமல் புரண்டுகொண் டிருந்த பாட்டியை, ''பாட்டி!'' என்று அழைத்தான்.

''என்ன அப்பா, நடேசு?''

''இன்று ஊரெல்லாம் அமர்க்களப்பட்டு எதிர்கொண் டழைத்தோமே, கலெக்டர், அவன் யார் தெரியுமா?''

''தெரியாதே.''

''என்னோடு படித்தானே அந்தச் சுந்தரராஜன்தான்.''

''சுந்தரமா?'' என்றாள் பாட்டி ஆச்சரியத்துடன்.

''ஆமாம். ஆயிரம் ரூபாய் மாதச் சம்பளம் வாங்குகிறான். நானும் அவனுடன் போய்ப் பாஸ் செய்து வந்திருந்தால், ஆயிரம் ரூபாய் இப்பொழுது சம்பளம் வாங்கலாமல்லவா, பாட்டி?''

பாட்டியிடமிருந்து இதற்குப் பதிலில்லை.

''பாட்டி, நீதானே பிடிவாதமாய்க் கூடாதென்று தடுத்தாய். நான் போயிருந்தால்..''

இதற்குப் பதில் இல்லை. பாட்டி ஒரே மௌனத்தில் இருந்தாள். அவன் மனநிலையை இப்பொழுதாயினும் உணர்ந்து பச்சாதாபப்

பட்டாளோ என்னவோ! ஆனால் பாட்டி தூங்கிவிட்டாளென்று கருதி நடேசு மீண்டும் கேட்கவில்லை; தன் அதிருஷ்டக் குறைவுக்காகப் பிறரை நோகும் சுபாவம் அவனிடமில்லை. நடேசு இரவெல்லாம் யோசனை செய்து பார்த்தான். தன் சிநேகிதன் கலெக்டர் என்.எஸ். ராஜன் சொன்னதுபோல் நிலங்கள் சாகுபடி செய்யும் விதத்தை அறிந்துவர, தான் அமெரிக்கா சென்றால் என்ன? அங்கு ஒரே அளவுக்குப் பூமிக்கு நம்முடையதைவிடப் பத்து மடங்கு அல்லவா வரும்படி கிடைக்கிறதாம். 'உன்னைப் போல் படித்த மிராசுதார்தான் போகவேண்டும். உனக்குமட்டுமன்றி உன் தேசத்துக்கே உபகாரம் செய்தவனாவாய்' என்று அவன் சொன்னது காதிலேயே தொனித்துக்கொண்டிருந்தது. பணத்துக்கு ஆக்ஷேபம் செய்ய இப்பொழுது தந்தைகூட இல்லை. கடைசியில் அமெரிக்கா போவதென்று தீர்மானித்தான். தான் போவதைப்பற்றிப் புறப்படும்வரையில் எவருக்கும் தெரிவிக்கக் கூடாதென்று எண்ணினான். பிரயாண ஏற்பாடுகள் எல்லாம் ரகசியமாகவே செய்துவந்தான்.

புறப்படும் தினத்தன்று பாட்டியிடம் விஷயத்தைத் தெரிவித்தான். பாட்டி அவன் போவதற்குத் தடையொன்றும் சொல்லவில்லை. நாம் சொல்லி அவன் கேட்கப் போவதுமில்லை; நம்மால் அவனுக்கு வருத்தமும் வேண்டாமென்று நினைத்தாள் போலும்.

அவன் அன்று மாலை புறப்படவேண்டும். மூட்டை முடிச்சுகள் கட்டி யாவும் சித்தமாயின. சில நண்பர்களைப் பார்த்து வர வெளிச் சென்று திரும்பினான். அவன் வந்தபோது வீட்டு வாசலில் ஒரே கூட்டமாய்க் கூடியிருப்பதைக் கண்டு ஒன்றும் தோன்றாமல் எல்லாரையும் விலக்கிக்கொண்டு உள்ளே நுழைந்தான். அங்கே கூடத்தில் ஒரு படுக்கையில் பாட்டி ஒருமாதிரியாய்ப் படுத்திருப்பதைக் கண்டான். நடேசு கைகால் பதற, கண்களில் நீர் பெருக ராஜுவை நோக்கி, "பாட்டிக்கு என்ன?" என்று கேட்டான்.

வைத்தியர் நாடியைப் பார்த்துவிட்டு நடேசு பக்கம் திரும்பினார்: "திடீரென்று மாரடைப்பு ஏற்பட்டது; தாங்கவில்லை. வயசும் ஆகிவிட்டதல்லவா?" என்று சொல்லித் தலையை அசைத்தார்.

நடேசுவுக்குத் தான் கேட்பது நிஜமென்று நம்பக்கூடவில்லை. சிறிது நேரம் அவன் திகைத்து நின்றான். தன் பாட்டி சாகக்கூடுமென்கிற எண்ணமே அவன் மனத்தில் இதுவரை தோன்றியதில்லை. "பாட்டி போய்விட்டாள்! எனக்கு நீயும், உனக்கு நானுந்தான் இவ்வுலகில்" என்று ராஜு கதறிக்கொண்டே நடேசுவைக் கட்டிக்கொண்டு அழுதபின்பே நடேசுவுக்குத் தன் நினைவு வந்தது. பாட்டி நிஜமாகவே இறந்துவிட்டாள் என்பதை உணர்ந்தான். அப்பொழுது கடியாரத்தில் மணி ஆறு அடித்தது. அதேசமயம்தான் அவன், புறப்பட விருந்ததும், "பாட்டி, நான் போகக்கூடாதென்பதற்காகவா இந்த உபாயம் தேடினாய்? நீ சொல்வதைக் கேட்கமாட்டேன் என்கிற பயமா?" என்று புலம்பினான்.

பாட்டிக்கு நடேசுமேல் ஆசையில்லாமல் இல்லை. ஆனால் அவன் எந்த விதத்தில் உயர்வாக வந்தாலும் பட்டிக்காட்டில் மிராசுதாராய் உட்கார்ந்திருக்கும் ராஜு மனவேதனைப்படமாட்டானா? அத்தகைய நிலைமை ஏற்படுவது பாட்டிக்குக் கொஞ்சமும் பிடிக்கவில்லை. இப்பொழுது நடேசுவோ அவனையும் மீறிச் செல்வதாயிருந்தான். அந்தச் சந்தர்ப்பத்தில்தான் அவள் ராஜுமீது வைத்திருந்த தனி அபிமானம், தன்னையும் அறியாமல் அவளை உயிர்விடச் செய்தது போலும்! . .

—மே, 1937

# பாவ சங்கீர்த்தனம்

## தெளிவத்தை ஜோசப்

மலைக் குறுக்கில் இறங்கிவரும் கொழுந்துப் பெண்களாய் வளைந்து நீண்டு வரிசை குலுங்காமல் நின்றது'க்யூ'. குனிந்த தலை நிமிர்வதில்லை ஒருவருக்கும். மனசிலே புடைத்து நிற்கும் பாவத்தின் சுமை கயிறு கட்டி இழுத்துக் கவிழ்க்கிறது தலையை.

வெள்ளையும் இளநீலமுமாய்க் கடையும் போது உப்பிக் கிளம்பும் பஞ்சுக் கூட்டமாய் அமைந்துவிட்ட ஆகாயப் பின்னணியில் அழகாய், அமைதியாய் நிற்கும் அந்தத் தேவ மாதாவின் சொரூபத்தை நிமிர்ந்து நோக்கும் துணிவு ஒருவருக்கும் இல்லை. தாய் சொல் கேளாத பிள்ளை கெட்டலைந்து, கேடு சூழ்ந்தபின் நீதான் துணை என்று நிமிர்ந்து நோக்கக் கூடாத அவமானத்துடன் அடிபார்த்து நிற்கும் அவலநிலை. ஒவ்வொருவராகப் பாவ சங்கீர்த்தனத் தொட்டிலை நோக்கி நகர்கின்றனர்.

சில்லிட்டிருந்த அமைதியைச் சிதற அடிக்கிறது மாதா கோவிலின் மணி. கோவிலுக்கு வெளியே பாதையின் அருகே வளர்ந்து படர்ந்து நின்ற சாம்பிராணி மரத்தின் கிளை கோவிலின் கூரையைத் தொட்டுக் கொண்டிருந்தது. 'ஏசு மகானின் ஆடையை எட்டித் தொட்டாலும் என் பிணி அகலும்' என்ற நம்பிக்கை இதற்கும்.

மரக்கிளையின் இலைக்கற்றை கூரைத் தகரத்தை வருடும்போது எழும் மெல்லொலிகூட மணி அறைந்த ஓசையில் ஒடுங்கிவிட்டது.

தனக்கும் மிக அருகில் முழங்காலில் மண்டியிட் டிருந்த ஒரு பெண்மேல் பட்டு லயித்த கண்களைப் பலவந்தமாக இழுத்தெடுத்துத் திருப்பிக் கொண்டார் அவர்.

இந்த வயசிலும் இப்படி ஒரு பார்வையா? இப்படி ஓர் அற்ப நினைவா?

நெற்றி முற்றி முக்கால் தலை வந்துவிட்டது; பிறையாக நின்ற பின்மயிரிலும் வெள்ளை பின்னலிட்டுக் கிடக்கிறது; உடல், மூப்புக்கு உதாரணம். மனம்....!

புருவங்களுக்கிடையில் மூக்குத் தண்டின் மேல் நின்ற கண்ணாடி இணைப்புத் தங்கமாய் மின்ன, கசங்காத சூட்டும் கழுத்துப் பட்டியுமாக அவர் தோற்றம் - உடம்பின் ஊட்டம் - வயசைக் குறைத்தே கணிக்கத் தூண்டுகிறது; என்றாலும் மூப்பு மூப்புத்தான்.

கோவில் என்ற நினைவு மனத்தைக் குத்த, பாவைமேல் விழுந்த பார்வையைப் பறித்தெடுத்துப் பீடத்தைப் பார்த்துப் பின்பு விழியை உயர்த்தினார், 'இவர்கள்தாம் எப்படி வருகிறார்கள் கோவிலுக்கு; புடைவைக் கடையில் காட்சி தரும் கண்ணாடிப் பொம்மையாய்' என்ற மன ஓட்டத்துடன்.

உயர்ந்த அவர் விழிகளுக்குள் ஊடுருவிப் பாய்ந்தன மாதாவின் விழிகள். 'தெய்வம் ஒரே நேரத்தில் எல்லாரையும் பார்க்கிறது' என்பதை உறுதிப் படுத்துவதுபோல் மாதாவின் கண்களைப் பார்ப்பவர்களைப் பார்ப்பதுபோல் அமைந்துள்ள அந்தக் கண்களின் தீட்சண்யத்தைத் தாள இயலாதவராய்ப் பார்வையை ஒதுக்கி மேகப் பின்னணியைப் பார்த்தார். மேகக் கூட்டத்தின் மென்மை மனத்தைத் தடவியது, மோரில் மிதக்கும் வெண்ணெய் உருண்டையைத் தொடுவது போன்ற மென்மையுடனும் குளர்ச்சியுடனும்.

அமர்ந்திருந்த பெண் எழுந்தாள். குதி உயர்ந்த சப்பாத்தின் வெள்ளிக் கூர் தரையைத் துளைக்க நடந்துவிட்டாள்.

அவள் சென்று மறைந்த திக்கில் பார்வையை ஒரு விநாடி இறைத்துவிட்டுப் பாவ சங்கீர்த்தனத் தொட்டிலில், குனிந்த தலைக்கு அணைவாக இடக் கையை நெற்றியில் ஊன்றிக்கொண்டு உட்கார்ந்திருக்கும் சாமியாரைப் பார்வையால் துழாவுகிறார்.

ஒரு சத அகலத்துக்கு முடி துறந்த உச்சியே கண்ணில் பட்டாலும் சுவாமியாரின் முகம் மனத்தில் படுகிறது.

"ஹெய்ல் மேரி புல் ஆப் கிரேஸ் தி லோட் இஸ் வித் தீ .."

அதரங்கள் ஆடுவது தெரிகிறது. வலக்கையில் சுருண்டு கிடக்கும் ஜபமாலையின் ஒரு முத்து உள்ளங்கையில் வழிந்து இறங்குகிறது. அடுத்த முத்து, கட்டை விரலிடை உருளுகிறது.

'ஹெய்ல் மேரி....'

'பிரிய தத்தத்தினாலே பூரண மரியாயே வாழ்க' என்ற ஜபத்தைத்தான் அவர் ஆங்கிலத்தில் உதறித் தள்ளுகிறார். அந்த ஜபம் அவருக்குச் சிங்களத்திலும் தெரியும். சிங்களத்தில் ஜபம் செய்வது தம் அந்தஸ்துக்குச் சரியல்ல என்பதுடன் சிங்களத்தில் ஜபத்தைச் சொல்வதிலும் பார்க்க ஆங்கிலத்தில் சீக்கிரமாகச் சொல்லிவிடலாம் என்பதும் ஒரு காரணம். இதற்கென்றே பெரும்பான்மையோர் மந்திரங்களை ஆங்கிலத்திலேயே மனனம் செய்துகொள்வது உண்டு, கீழ் வகுப்புப் பிள்ளைகள் பெருக்கல் வாய்பாடு ஒப்பிப்பது போல.

உலகத்தில் அசுர வேகத்துடன் இணைந்தோட இறை வணக்கத்திலும் ஒரு வேகம். வெறும் உதட்டாட்டம். ஜபத்தின் கருத்து மனத்தைத் தீண்ட முடியாத ஒரு வேகம்.

ஜபமாலையின் முத்துக்கள் ஒவ்வொன்றாய் ஊர்ந்து இறங்குகின்றன. கட்டைவிரல் முத்துக்களைச் சீராக உருட்டி இறக்குகிறது. உதடுகள் சீராக அசைகின்றன. மனம் சுவாமியாரைப் பற்றி எண்ணுகிறது. இருவரும் இறுகப் பழகுபவர்கள். ஐயாமேல் சுவாமிக்கு ஒரு மானசிகமான மதிப்பு.

மார்புவரை தொங்கும் தாடியை இடக்கையால் நெருடிய வண்ணம், போன வாரங்கூடச் சுவாமியார் கூறினார், 'நல்லவர்கள் அங்கிகளுக்குள் மாத்திரம் நுழைந்துகொண்டவர்களாய் இருக்கக் கூடாது; உங்களைப் போல் வெளியேயும் இருக்க வேண்டும்' என்று.

ஐயாவின் இல்லத்தில் சுவாமியார் எத்தனையோ தடவை இராத் தங்கல் போட்டிருக்கிறார்.

தேயிலைத் தோட்டங்களிலே ஐந்துக்குக் காலாய், கஞ்சியிற் பயிரெனக் கிடக்கும் கிறிஸ்துவத் தொழிலாளிகளுக்குக் கோவில் வசதியோ, பூசை காணும் வாய்ப்போ இல்லை. பெரும்பான்மையினர் இந்துக்கள். எனவே தோட்டத்துக்கு ஓர் இந்துக் கோவில் இருக்கும். கிறிஸ்துவர்கள் பூசை காண வேண்டுமென்றால் கடல் கடந்து செல்ல வேண்டும் நகரத்துக்கு. படம் பார்க்கப் படும் சிரமத்தை யார் பக்தி மேலீட்டால் படப் போகிறார்கள்?

இவர்கள் பாவ சங்கீர்த்தனம் பூசை கண்டு, திவ்விய நற்கருணை பெற வசதி செய்து கொடுக்கும் உயர் எண்ணத்தால், பட்டணத்தில் இருக்கும் பாதிரியாரைச் சுற்றியுள்ள தோட்டங்களுக்குச் சென்று பூசை வைப்பதுண்டு, மாதத்துக்கு ஒரு முறை என்று.

தாம் அந்தத் தோட்டத்தில் தலைமைக் குமாஸ்தா என்பதைக் கூட மறந்து தொழிலாளர்களுக்குத் தம் பங்களாவிலேயே ஒரு சிறிய தேநீர் கொடுத்தனுப்பும் ஒரு பெரியவரின் பெருந்தன்மை கண்டு பூரித்துப் போவார் சுவாமியார். பூசைக்கு வந்தவர்கள் எல்லாரும் சென்றபின் இருவரும் வெகுநேரம் பேசிக்கொண் டிருப்பார்கள்; முன் ஹாலில் அமர்ந்து பேசுவார்கள்; உள் அறையில் உட்கார்ந்து பேசுவார்கள்; சாப்பாட்டு மேசையில்கூட உணவை மறந்து உரையாடுவார்கள்.

தட்டுக்களைக்கூட நகர்த்த முடியாதபடி விதத்துக்கு ஒன்றாய் நிறைந்து கிடக்கும் பலவகை உண்டிகள் குளிர்ந்து கிடக்கும். பெரியவரும் சுவாமியாரும் பேசிக்கொண் டிருப்பார்கள். பூனைக் கண்ணாய் மின்னும் சாப்பாட்டறைச் சுவர்க் கடிகாரத்தின் பெண்டுலம் எழுப்பும் மெல்லொலியே பேயொலியாய் அதிரும் இரவின் அமைதியில், இருவரும் வெளியே வந்து, பலாமரத்தின் அடியில் கிடக்கும் சிமிந்திப் பலகையில் அமர்ந்துகொள்வார்கள்.

ஆர்வம் மிக்கவர்களின் உழைப்பால் அழகு பெற்ற அந்த மலைச் சரிவுகளின் தேயிலைப் பயிர் நிலவின் சூதால் சுயநிறம் இழந்து கறுப்பாய்த் தோன்றினாலும் அதுவும் கண்ணுக்கு ரம்மியமாகத்தான் இருக்கிறது, பெண்ணின் நிழல் போல.

இரவின் அமைதியில் இருவர் தனிமையில் பேசிக்கொள்ளும் பேச்சுக்குதான் எத்தனை மாயசக்தி!

சவர்க்காரத்தின் மணற்குறுணி கன்னத்தில் கீறலைப்போல் தாம் எப்போதோ செய்த இரண்டொரு பாவத்தின் நினைவு மனத்தைக் கீற, தம்மிலே ஒரு தீனத்துடன் சுவாமியார் நினைத்துக்கொள்வார், 'அங்கிக்குள் இருக்கும் என்னைவிட ஆபீசில் இருக்கும் இவர் எத்தனை உயர்ந்தவர்!' என்று. அதே நேரத்தில் ஐயா கூறுவார், ''எண்ணிப் பார்த்தால் என்ன சுவாமி இருக்கிறது இவ்வுலக வாழ்வில்— ஒன்றுமே இல்லை!'' என்று.

அடிவானமும் மலைமுகடும் ஆறத் தழுவிக் கொள்ளும் அந்தத் தொலைதொட்டு அருகே தலைக்கு மேலாகப் பந்து பந்தாய்க் காய்த்துத் தொங்கும் மாதுளைமரம் வரை ஒரு கணம் மறைந்துவிடும், சுவாமியாரின் பார்வையில்.

கண்களை இறுக மூடிக்கொள்வார். ஐயாவின் பேச்சில் அத்தனை வியப்பு.

இரண்டு மணிக்கு மேல் படுத்தாலும் அதிகாலையிலேயே எழுந்து சுவாமியாரைக் கவனித்து அனுப்பி வைப்பார். 'நல்லவர்கள் நன்றாகத்தான் இருப்பார்கள்' என்ற நல்ல எண்ணத்துடன் சுவாமியார் விடை பெறுவார்.

அதே அவர்தாம் இதோ பீடத்தின் அருகே உட்கார்ந்திருக்கிறார், பாவசங்கீர்த்தனத் தட்டில். மனம் எதை எதையோ உருட்ட, கை சீராக ஜபமாலையை உருட்டுகிறது.

பாம்பாய் நெளிந்த 'க்யூ' பாதியாய்க் குறைந்துவிட்டது.

'இவரிடம் நான் பாவசங்கீர்த்தனம் செய்வதா!' ஏதோ ஒன்று பற்றிக்கொண்டு வந்தது, புகையும் பொருமலுமாய். நெருப்பின் மேல் கிடக்கும் சருகின் நிலை.

காலணி எழுப்பும் ஓசையைக் கட்டுப்படுத்த நுனிக் காலை மெதுவாக ஊன்றி வெளியே வந்தார். அரை முழங்காலிட்டு வெளியே வந்தவர் காரில் ஏறிக்கொண்டார். தொட்டு ஒற்றிக்கொண்ட தூய நீர், விரல் நுனியிலும் நெற்றிப் பொட்டிலும் ஈரமாய் நின்றது.

சிவப்பாய்ப் பூத்துநின்ற பெரிய தென்ன மரங்களிடையே கறுப்புப் பட்டையாய் நெளிந்த தார் ரோட்டில் வழுவிக்கொண்டு ஓடுகிறது கார். முன்கையில் சுருண்ட ஜபமாலையும் முகத்தில் அமைதியுமாகப் பின் சீட்டில் அமர்ந்த ஐயாவின் பக்தி கண்டு அவர்மேல் பக்தி கொண்டு, பாதையில் சென்ற பார்வையை ஒரு விநாடி கண்ணாடி வழியே ஐயாமேல் பாய்ச்சிப் பெருமிதம் கொண்டான் காரோட்டி.

வெளித்தோற்றம் கண்டு கணக்கிடும் இயல்பு. மெரினாவில் நிற்கும் காந்திச் சிலையாய் யாரென்று கூற முடியாதவாறு அமைந்துவிட்ட பண்டாரநாயகாவின் சிலை, நகரசபைக் கட்டிடம், அரசாங்க ஆசுபத்திரி ஆகியவற்றைப் பின்னொதுக்கிப் பாய்ந்தது கார். நகர எல்லை தாண்டியதற்கு அறிகுறியாக அடுக்குக் கட்டிடங்கள், ஆரவாரம் ஆகியவை மறைந்து இரு மருங்கிலும் எழுந்து நிற்கும் தேயிலையின் இருண்ட அமைதியில் மறைந்தோடிய பாதையைத் தேடி விரைந்தோடியது கார்.

பதுளை மாதா கோவிலிலிருந்து வெளியே வந்த ஐயா, இங்கே கூட்டம் கூட, ''பண்டாரவளைக் கோவிலுக்குப் போ'' என்றார்.

அவன் போகிறான். இடைத்தூரம் பதினைந்து கல். அவனுக்கு என்ன, 'ஐயா தாம்' என்றால் முதலாளி என்ன சொல்லிவிடப் போகிறார்? ஐயாவும் முதலாளியும் அந்நியோந்யம்; வெகு அந்நியோந்யம்.

இந்தப் பதினைந்து கல்லைத் தாண்டி அவர் பாவசங்கீர்த்தனம் செய்யப் போகிறார்.

அவருடைய பக்தியை, மதப்பற்றை, அவன் வியந்ததில் வியப்பில்லை.

தேயிலைத் தோட்டத் தலைமைக் கிளார்க்கின் மதிப்பு, பதவியின் பவிசு தெரிந்தவர்களுக்கே தெரியும். தோட்டத்துக்கு ராஜா போன்றவர் துரை. அந்தத் துரை ராஜாவுக்கு இவர் மந்திரி; நிர்வாகத்தின் நிதி அமைச்சு.

இப்போது ஓடுகிறதே ஓடம் போன்ற இந்தக் கார் - புகை நிறக் கேம்பிரிட்ஜ் - நகரத்திலுள்ள முதலாளி ஒருவருடையது. இவருடையதைப் போல் பாவித்துக்கொள்வார்.

அது காட்டுவது முதலாளியின் தாராளத்தை அல்ல; தந்திரத்தை. இவரையும் முதலாளியையும் இணைக்கும் உறவுநூல் ஓர் இம்மி நெகிழ்ந்தாலும் தோல் சிறுப்பு முதலாளிக்கு; இவருக்கு அல்ல.

'இவர்கள் அனுப்பும் பொருள்கள் சாம்பில்களுடன் ஒத்துப் போவதில்லை' என்ற ஒரு குற்றச்சாட்டுப் போதும். ''வேறு இடத்தில் வரவழை'' என்பார் துரை. முதலாளியின் வியாபாரம் துண்டு படும். வியாபாரம் என்றால் சாமானியமான வியாபாரமா? மாதத்துக்கு லட்ச ரூபாய் வியாபாரம் ஆயிற்றே! இவர் கொடுக்கும் கமிஷனை அந்த மற்றவர் கொடுக்க மாட்டாரா என்ன? ஆகவேதான் பெரியவரின் மனம் நோவாமல் நடந்து கொள்கிறார் முதலாளி.

ஈரைந்து மைலில் எட்ட உள்ள எஸ்டேட்டிலிருந்து இரண்டு ராத்தல் இறைச்சி வேண்டும் என்பார் ஐயா. முதலாளி தம்முடைய காரில் கொடுத்து அனுப்புவார்.

என்ன செய்வது? தோட்டம் ஊற்றும் நீரைக் குழாயாய் நின்று கொணர்ந்து ஊற்றுவது அவராயிற்றே. திசை மாறி விட்டால்....?

முதலாளி கடையில் இருந்துகொண்டே ஐயாவைப் பங்களாவுக்கு அனுப்புவார், சாப்பிட. அத்தனை இறுக்கம்.

வற்புறுத்தலின் பேரில் முதலில் போனவர் அப்புறம் அப்புறம் தாமாகவே போகத் தொடங்கினார். நிழலிலே நின்று நிழலிலேயே வளர்ந்த முதலாளியின் இளம் மனைவி கீரைத் தண்டுபோல் இல்லாமல் எப்படி இருப்பாள்? சுண்டினால் ரத்தம் கன்றி நிற்கும்; அப்படி ஒரு நிறம்.

உட்கார்ந்தால் நாற்காலி வழியும். அம்மா இருக்கிறார்கள் வீட்டில். இவருக்கு எருமைக் குணம். சேற்றில் புரளவேண்டும். கன்னப் பட்டை கட்டி வெளியே அனுப்ப இவர் என்ன வண்டிக் குதிரையா?

பெரியவர்தாமே என்று சற்றுத் தாராளமாகவே பழகிய பெண்ணுக்கு, இவர் உத்தியோகத்தில் மட்டுந்தான் பெரியவர், வீட்டில் அல்ல என்பது அடுத்த முறை சாப்பிட வந்த போதே தெரிந்து விட்டது.

மார்புக்குள் மறைந்து கிடந்த தாலிக் கொடியை உருவி மார்புச் சேலைக்கு மேல் வழிய விட்டிருந்தாள், நெருப்புக் கொடியாய்.

இவர் சிங்களவர். பண்பின் சமிக்ஞையை உணரும் சக்தி இல்லாமல் இருந்திருக்கலாம்.

''மோகம் அகமியா கமனம் பண்ணுதிருப்பாயாக!'' ''பர தாரத்தை அபேட்சியாதிருப்பாயாக!'' என்ற தேவக் கட்டளைகூடவா மறந்துவிட்டது? அதைத்தான் மனனம் செய்து வைத்துக்கொண்டு மந்திரம் படிக்கிறாரே!

கோவிலில் மண்டியிட்டுக் கூற மட்டுந்தான் ஜபம் என்றால் அந்த ஜபத்தைப் படிக்க வேண்டிய அவசியம்....?

இவருக்குக் கீழ் வேலை செய்யும் இரண்டாவது குமாஸ்தாவின் மனைவியைப் போல முதலாளியின் மனைவியும் இருப்பாள் என்று பெரியவர் தப்புக் கணக்குப் போட்டுக் கொண்டதன் விளைவு—?

பெரியவர் முதலாளியின் வீட்டுப்பக்கம் போவது அறுபட்டது; நாள் கிழமை என்றால்கூடக் கெட்டவர்கள் கெட்டவர்களை வைத்தே மற்றவர்களைக் கணித்துக்கொள்கிறார்கள். யாரை நோவது?

தோட்டத்தில் போடும் ஆட்டத்தை வெளியே போட முடியாத புகைச்சல் பெரியவருக்கு. இரண்டாவது மனைவி—அவள் என்ன செய்வாள், பாவம்! ஊர்விட்டு ஊர் வந்திருக்கிறார்கள் பிழைக்க, யாழ்ப்பாணத்தில் வீடுகட்ட எல்லா ஏற்பாடுகளும் முடிந்துவிட்டன. முழுச் சம்பளத்தையே மீதம் செய்யும் அளவு கிம்பளம் தேடும் திறமை அவர்களுக்கே கைவந்தது. இல்லை என்றால் சாதாரண நூற்றைம்பது ரூபாய்க்குத் தோட்டத்துள் நுழைபவர்களுக்குப் பத்து வருடத்தில் அங்கே பங்களா ஒன்று முளைக்குமா? எப்படியோ வாழலாம் என்றால் பிறகு என்ன?

எந்த நேரத்தில் ஆரம்பித்தாரோ அந்த வாரத்திலேயே சின்னவர் மாட்டிக்கொண்டார். ஆடிட்டர்மார்களின் திடீர் வரவு இவர் கிம்பளம் தேடும் இடத்தில் போய் நின்றது.

பெரியவருக்கு வேண்டுமென்றால் அதையெல்லாம் சரிக்கட்டத் தெரியும். அவரா . . . . ?

விஷயத்தைப் பெரிதுபடுத்தித் துரை வரையில் ஓட்டிவிட்டு ஆதாயத்தைப் பார்த்துக் கொண்டார். 'நான் சிங்களவன், நீ யாழ்ப்பாணத்தான்' என்ற துவேஷம்.

வேலை பறிபோகும் நிலைகூட வந்துவிட்டது. ஆரம்பித்த வீட்டுவேலை என்ன ஆவது? ஐயா திகைத்தார். அம்மா திணறினாள். ஊரில் உள்ளவர்கள் மென்று துப்புவார்களே என்ற கௌரவ பங்கம்; தன் ஊர் ஆட்களைப்பற்றி அம்மாவுக்குத் தெரியும். யாழ்ப்பாணத்து மணல் காலை மட்டுமே சுடும். மக்களோ மனத்தையே பொசுக்கிவிடுவார்கள்.

பெரிய ஐயாவிடம் சென்று, 'தெரியாமல் நடந்துவிட்டது பிழை. மானேஜரிடம் கேட்டு மன்னிப்புப் பெற்றுத் தாருங்கள்' என்று கேட்பதற்காக, அந்தி இறங்கியபின் சின்ன ஐயா நடந்தார், அம்மாவுடன் பெரியவரின் பங்களாவுக்கு; வீடு தேடி வருபவர்களுக்குப் பெரியவர் கட்டாயம் உதவி செய்வார், 'இருக்குமிடம் தேடி வந்தானே' என்று.

பெண்ணின் கண்ணீருக்குச் சக்தி கூட என்பதால்தான் சின்னவர் தம் மனைவியையும் கூட்டிச் சென்றார். கண்ணீரைவிட அந்த கண்களுக்கே சக்தி அதிகம் இருப்பதைக் கண்டார் பெரியவர்.

இருதய ஆண்டவர் படமும், அணையாத சிவப்பு விளக்குமாய், அமைதியாய்க் காட்சியளித்த முன்னறை, கோவிலைப் பிரதிபலித்தது.

முன்னறையை விட்டு உள்ளறையில் அமர்ந்தே பேசினர் நால்வரும். ஆண்டவனிடமிருந்து மறைந்து நிற்கவே ஆசைப்படுபவர் பெரியவர். தாம் ஆணி அடித்து மாட்டிவிட்ட இடத்தில்தான் ஆண்டவன் இருக்கிறான் என்னும் அந்தக நினைவு.

கணவனின் வேலைத் தகராறு வெகு சிறிதாகப் பட்டது, சின்னவரின் மனைவிக்கு, பெரியவரின் கண்களைப் பார்த்ததும், கண்வரியில் கொக்கியிடும் போதையைப் பார்த்ததும்.

பெரியம்மாவுடன் சின்னம்மாவைச் சிறிது நேரம் பேசிக்கொண்டிருக்கவிட்டுச் சின்னவர் தனியே வர வேண்டியதாயிற்று.

இடைவெளியைச் சுருக்கத்தான் வந்தாள். இடைவெளி சுருங்கியதுடன் இணையவும் வேண்டி வந்துவிட்டது.

அதன்பின் நடக்கும் அத்தனை பாவங்களுக்கும் அந்த முதல் நடையே காலாய் நின்று பந்தல் போட்டது.

இரண்டு மணி நேரம் 'லீவ்' சிபாரிசு செய்யவே எருமையாய்க் கொம்பாட்டும் பெரியவர், இரண்டு மூன்று நாள் என்று லீவு வாங்கிக் கொடுத்து இவரை யாழ்ப்பாணம் அனுப்புகிறார் என்றால், சின்னம்மா வின் தனிமையை அவர் எத்தனை தூரம் எதிர்பார்க்கிறார் என்பது வெளிச்சமாகிறதல்லவா?

யாழ்ப்பாணம் எங்கே, மலைநாடு எங்கே? இரண்டுக்கும் எட்டாத தொலை. இருவருமாகப் போவதென்றால், அதுவும் அடிக் கடி—கோச்சுக்காரனே கடன்காரனுக்கிவிடுவானே!

சின்னவரின் அம்மாவை வெள்ளிக்கிழமை நாட்களில் பெரியவரே கூடப் பார்க்கமுடியாது. மூன்று மணிக்குச் சுவாமியறையுள் நுழைந் தால் வெளியே வர ஏழாகும். அப்படி ஓர் அசுர பக்தி.

கட்டிக் கொள்ளும் பாவங்கள் கனமானவை. ஆகவே காட்டிக் கொள்ளும் பக்தியும் கனமாக இருக்கிறது. ஐயாவின் காட்டுத்தனம் தோட்டம் அறிந்த ஒன்று. சின்னவருக்கும் தெரியும். 'சின்ன விஷயம்' என்று இருந்துவிட்டார். பெரியம்மாவுக்கும் தெரியும்; பெரிதுபடுத்திக் கொள்ளவில்லை.

ஆரம்பத்தில் காதைக் கடித்துக் கொண்டார்கள். ஊர் பார்க் கிறது என்றதும் இவர்கள் கண்களை மூடிக் கொண்டனர். அதுவும் தைரியந்தான்.

கிழமைக்கு ஒரு நாள் பாவ சங்கீர்த்தனம் தவறுவதில்லை; திவ்ய நற்கருணை பெறுவது தவறுவதில்லை.

பாவ சங்கீர்த்தனம் பண்ணுவது, பழக்கம் இல்லாத சுவாமி யாரைத் தேடி, திருச்சபையையே ஏமாற்றிவிட்ட பெருமையுடன்;

ஒரு வாரம் செய்த பாவங்களைச் சுவாமியார் ஒருவரிடம் சொல்லிவிட வேண்டியது; அடுத்த வாரத்துக்கான பாவங்கள் அடுத்த வாரத்தில் ஒரு நாள். குப்பைத் தொட்டி நிறைவதும் காலி பண்ணு வதும், பிறகு நிறைவதும் போல. அதுவா பாவ சங்கீர்த்தனம்? அவருக்குமா பாவ மன்னிப்புக் கிடைக்கிறது?

அதோ ஆள்காட்டி விரல் தொட்ட ஆகம நீரை நெற்றியில் இட்டவண்ணம் காரில் ஏறும் பெரியவரின் முகம் காட்டும் திருப்தி; அவருக்குப் பாவ மன்னிப்புக் கிடைத்துவிட்டதில் ஏற்பட்ட திருப்தியா? நான் பாவ சங்கீர்த்தனம் செய்துவிட்டேன் என்பதில் ஏற்பட்ட திருப்தியா?

இரண்டாவதுதான்.

—டிசம்பர், 1964

# பிரளயம்

லா. ச. ராமாமிருதம்

நான் என்னை வெறுக்கும் வெறுப்பில், என்னை மறந்த வெறியில், வானை நோக்கிக் கைகளைக் காட்டிப் பழித்து இழைத்த சாபங்களே உருவாவதுபோல், இதுவரை தூய்மையதாயிருந்த வானில், கருமேகங்கள் திரள ஆரம்பித்துவிட்டன. அவை எங்கிருந்து எப்படி எப்பொழுது அப்படிக் குழுமின என்றே எனக்குத் தெரியவில்லை. எதிரில் ஒருவரும் இல்லையென்று நான் என்னுடனேயே என்னைப் பற்றிப் பேசிக்கொள்ள ஆரம்பித்ததுமே என் எண்ணங்கள் பெருக் கெடுத்துவிட்டன. அவை போன வழி என்னை இழுத்துச் சென்றதில், நான் செல் வழியும், என்னைச் சுற்றி இருப்பவையும் நேர்பவையும் எனக்கு மறந்தன. நானே என் எண்ணங்கள் முழுவதையும் அடைத்துக் கொண்டிருந்ததில், மற்றவை மறைந்தும் போயின.

அச்சமயம் என்னை என்னிலிருந்து பிரித்து என்னெதிரில் நிறுத்தி வைத்துக் கேள்விகள் கேட்டு என்னை நான் துப்பிக்கொண் டிருந்தேன். தன்மீது தான் வைத்திருக்கும் பாசத்துக்கு மிஞ்சியதும் இல்லை. ஆகையால் தன்னை வெறுக்கும் பயங்கரம்போல் எதுவும் இல்லை. தன்னை வெறுக்கையில் தான் வெறுக்காதது எதுவும் இல்லை.

அவளை அவள் ஊருக்கு அழைத்துச் சென்ற ரெயிலை வெறுத்தேன். அவளைக் கூட்டிச் செல்லக் கூடவந்திருந்த அவள் வீட்டாரை வெறுத் தேன். பச்சைக் கொடி காட்டி, மணியடித்து, வண்டியைத் துரிதப் படுத்திய சிப்பந்திகளை வெறுத்தேன். பிரிவில் தவிக்கும் என் நிலை தெரிந்து என்னை ஏளனம் செய்த புகைவண்டி ஊதலை வெறுத்தேன். அவள் புன்னகையின் மயக்குக்கே முழுக் காரணமாய் இதுவரை நான் நினைத்திருந்த அவளுடைய தத்திப் பல், இப்பொழுது பிரியும் சமயத்தில் அவள் சிரித்த சிரிப்பில் தோன்றியதும் அதையும் வெறுத்தேன். உணர்ச்சி வேகத்தில் என் முகத்தில் குழுமியதாக நான் உணர்ந்த ரத்தச் சிவப்பை வெறுத்தேன். இப்பிரிவுக்குக் காரணமாயிருந்த என் வித்தை வெறுத்தேன். இம்மாதிரியே தான் என்னைப் பெற்ற சமயத்தில் என் தகப்பனார் என்னை வெறுத்திருப்பார் என்று நினைக்கையில் அவரை வெறுத்தேன். என்னை வெறுத்தேன். அப்புறம் அச்சமயம் உலகில் நான் வெறுக்காதது எதுவும் இல்லை.

இம்மாதிரி நேரும் என்று நான் நினைக்கவில்லை. இம்மாதிரித்தான் எல்லாருக்கும் நேருகிறது என்பதையும் நான் நினைக்கவில்லை. இம்மாதிரி நேராவிடில் நானே நேர்ந்திருக்கமாட்டேன் என்பதையும் நினைக்கவில்லை.

என்னைப்பற்றி மாத்திரந்தான் நினைத்தேன். இந்த 'என் என்' என்று என்னுள்ளிருந்து என்னை ஆட்டுவித்த எந்த 'என்னை' நான் வெறுத்தேன்? மண்டையின் எரிச்சலில் எண்ணங்களின் உருக்களும் உருகிச் சவுங்கிக் குழம்பின.

திடீரென ஒன்றும் இரண்டுமாய்த் தூற்றல்கள் என்மேல் விழுந்தன. உடனே மடமடவெனக் கொட்டவும் ஆரம்பித்தன. கோடை மழையே இப்படித்தான். ஒவ்வொரு துளியும் ஒரு வெள்ளத்தின் அம்சந்தான். திக்குமுக்காடித் தெளிந்து ஒதுங்க இடந் தேடுவதற்குள், கணுக்கால் ஆழத்துக்கு ஒரு வெள்ளம் காலடியில் மண்ணைப் பறித்துக்கொண்டு ஓடியது. எங்கிருந்தோ வேரோடு பிடுங்கிக்கொண்டு, ஜலத்தில் அடித்துக்கொண்டு வந்த ஒரு கொடி என் காலைச் சுற்றிப் பின்னியது. ஜலம் கோபக் கண்ணின் அடிச் சிவப்புடன் வண்டல் மண்ணைக் கரைத்துக் காலடியில் சுழித்தது. பிரளயமாய் ஓடியது, வானம் எதிர்த்துச் சீறியது. என் கண்கள் ஒதுங்க இடந் தேடி அலைந்தன. என் எதிரில் ஏரிகரை. இருமருங்கிலும் காற்றில் அலைந்து பிராசமாய் ஆடும் பனைமரங்கள். அப்பால் வயல்களும், கட்டான் கட்டாளுய் வயற் பரப்புக்களும். அந்தண்டை ஊருக்கு மதில்போல் நிற்கும் சவுக்குத் தோப்பு. அவற்றின்மேல் அடிப்பாரம் போட்டுக்கொண்டு, கொட்டுவதற்குத் தயாராகும் இன்னொரு மேகக் கூட்டம்.

இத்தனையையும் ஒரே நோக்கில் வட்டமிட்டு மீள்கையில்தான் என் பார்வை எதிரில் கிட்ட நின்ற பாழ் மண்டபத்தின்மேல் விழுந்தது. இடுப்பின்கீழ்க் கல்லாய்க் கனத்த கால்களை என்னுடன் எதிர்வெள்ளத்தில் இழுத்துக்கொண்டு மண்டபத்தை அடைந்தேன். உடலோடு ஒட்டிப் போன சட்டையை உரித்துப் பிழிந்தேன். சாரல் சாட்டை நுனிமாதிரி கொட்டியது. சட்டையை மறுபடியும் போட்டுக் கொண்டேன். சில்லென்று குளிர் உடலை ஊடுருவியது.

''நல்ல மழை.''

உருத் தெரியாது, மழையிருட்டில் குரல் மாத்திரம் உள்ளிருந்து வெளிப்பட்டதும் எனக்குத் தூக்கிவாரிப் போட்டது. கூர்ந்து உள் நோக்கினேன். ஒத்தாசையாய் அந்த ஆளும் உள்ளிருந்து எழுந்து வந்தான். இடுப்புவரை வெறும் உடம்பு.

''சமயங்கூட இப்போதுதான் சரி. இத்தனை காய்ச்சலுக்கப் புறம் இப்படிப் பூமி குளிர்ந்து, ஆடியிலே விதையைப் போட்டால், மாசியிலே அறுப்புச் சுமாராய் இருக்கும். ஏதோ போன வருஷந்தான் பயிர் பதராய்ப் போயிற்று. இந்தத் தடவை அரைவயிற்றுக்காவது ஆகுமா?''

எதிர் மொழியை வேண்டி அவன் தொடுத்த பேச்சு என் செவியில் பட்டதேயன்றிக் கவனம், அவன் வலக்கரத்தில் பாய்ந்து அங்கேயே நின்றுவிட்டது. அந்தக் கை தோள் கூட்டினின்று முழங்கை வரையில் இரண்டு சுண்டுவிரல் பருமன் அளவுக்குச் சூம்பிப்போயிருந்தது. அவ்விடத்துத் தோல் பார்வைக்கு அருவருப்பையும், மனத்துக்கு ஒரு சிறு பயத்தையுங்கூட விளைவித்தது: கொஞ்சம் சுரண்டினால், அல்லது இசைகேடாய் எங்கேயாவது பட்டால் எலும்பில் முகடு வெளிப்பட்டுவிடுமோ என்னவோ?

வசியமாய்ப் போன என் நாட்டத்தை அறிந்து அவன் அர்த்தத்துடன், ''சட்டையைப் பிழிந்து உலர்த்தியிருக்கிறேன்?'' என்றான்.

நான் வெட்கி வார்த்தைகளுக்குத் தட்டித் தடுமாறினேன்: புன்னகை புரிந்தபடியே அவன் என்னைக் கையமர்த்தினான்.

''ஒரு விஷயம்: எங்களைப் போன்றவர்கள் ஒரு தினுசில் உங்களைப் போன்றவர்களைவிட உயர்ந்தவர்கள்தாம். நாங்கள் போனவிடமெல்லாம், அங்கிருப்பவர் கவனத்தை முன்னால் கவர்ந்துவிடுவோம். எப்போதுமே, அழகைவிட அங்கஹீனந்தான் சீக்கிரம் மனத்தை இழுக்கிறது. அந்த இழுப்பிலிருந்து கவனம் விடுபட முயல்வது வேறு விஷயம்.''

நான் பதில் சொல்லமுடியாமல் தத்தளித்தேன்; ஆயினும் அவன் இரக்கமற்று மேலும் கிண்டிக்கொண்டே போனான்:

''ஒரு தினுசில் நாங்கள் ஞானிகள்கூடத்தான். ஏனெனில், நாங்கள் ஒட்ட விரும்பினாலும் எவரும் எங்களுடன் ஒட்டமாட்டேனென்கிறார்கள். முதல் முதலாய் அங்கஹீனத்தைப் பார்த்து அதில் ஏற்பட்ட அருவருப்பு, அப்புறம் எவ்வளவு இழைந்து இழைந்து பேசினாலும், இடையில் சுவர்மாதிரி விழுந்துவிடுகிறது. இந்தச் சுவர் எங்களுக்குத் தெரியவில்லை என்று நினைக்கிறீர்களா?

''இல்லை, எங்கள் கையைப் பார்த்து அருவருப்பு ஏற்படவில்லை, அல்லது ஏற்பட்ட அருவருப்புப் பழகப் பழக மறைந்துவிடுகிறது என்றே சாதிக்கிறீர்கள் என்று வைத்துக்கொள்வோம். அதையும் உண்மையென்று வைத்துக்கொள்வோம். அடுத்தாற்போல் உங்களுக்கு எங்களைக் கண்டு தோன்றும் உணர்ச்சி என்ன? இரக்கம், அநுதாபம்! படியேறிக் கைநீட்டும் பிச்சைக்காரர்களுக்கும் நாக்கைத் தொங்கப் போட்டுக்கொண்டு வாலைக் குழைக்கும் நாய்க்கும் காட்டும் மனக்கசிவு! வேண்டாமையா, எங்களுக்கு அம்மாதிரி மனக்கசிவு வேண்டாம்!''

அவன் தொனியில் சிந்திய சீற்றமும், பேச்சின் போக்கும் சுவாரசியமாயிருந்தன. ''பின் என்ன வேண்டும் உங்களுக்கு?'' என்றேன்.

அவன் விரலைச் சொடுக்கினான். ''அன்பு.''

அவன் வாயினின்று விழுந்த அந்த ஒரு வார்த்தைக்குத் தீர்மானமாயும் முற்றுப்புள்ளியாயும் அவன் கைச்சொடுக்கு அமைந்தது.

''இப்படி வாருங்கள்! உட்கார்ந்து பேசுவோம். மழையோ இன்னமும் விட்டபாடில்லை. பொழுதுந்தான் போகவேண்டுமே!''

''இந்த அன்புக்கு நாங்கள் எவ்வளவு ஏங்குகிறோம் என்று உங்களுக்குத் தெரியுமா? உங்களால் அறியமுடியாது. மனத்திலும் உடலிலும் சமநிலையுள்ள இருவரிடையில் தோன்றும் இவ்வுணர்ச்சியின் அருமை, அவயவங்கள் நிறைந்த உங்களைவிட அங்கம் சிதைந்த நாங்கள் நன்கு அறிவோம்.

''இம் 'மெய்யெனும் பொய்' என்று மெய்கண்டார் பழிக்கிறீர்கள். ஏனோ என்றுதான் எனக்குத் தெரியவில்லை. இம் 'மெய்யினும் மெய் எது? நான் யார் என்று என்னை நான் எண்ணிப் பார்த்தால் இவ்வுடலைத்தான் 'நான்' என்பேன். அழியும் உடல்தானே என்பீர்கள்; அழியட்டுமே! அதனால் அதன் 'நான்' குறைந்துவிடுமா? நீங்கள் சிகரெட் குடிக்கும் பழக்கமுண்டா? இல்லையா நான் குடிப்பதற்கு ஆக்ஷேபம் உண்டா? இல்லையா? சந்தோஷம்!''

புகையை ஆசையாய் இரண்டு இழுப்பு இழுத்தான்.

''இந்தக் கை இருக்கிறதே பாருங்கள், இது எனக்குப் பிறவி யூனம். என்னைப் பெற்றவள், பெற்றவுடன் இதைப் பார்த்த பயத்திலேயே போய்விட்டாள் என்பது எண்ணம். மற்றவர்கள் பிரசவக் கோளாறு என்று சொன்னால்தான் என்ன?

''கடவுளை நாம் ஒன்று கேட்க நியாயம் உண்டு. ஏன் கஷ்டத்தைக் கொடுத்தாய் என்று வேணுமானால் கேட்கவேண்டாம். கூடவே ரோசத்தை ஏன் கொடுத்தான்? நான் ஏதோ ஒன்றும் இல்லாததைப் பிரமாதம் பண்ணுகிறேன் என்று நீங்கள் நினைக்கலாம். ஆயினும் பிறந்தது முதல் உங்கள் கை நல்ல கை என்று ஞாபகம் வைத்துக் கொள்ளுங்கள். ஆகையால் நீங்கள் நானாகமாட்டீர்கள். நானும் நீங்களாகமாட்டேன்.

''பீமனும் ராமனுங்கூட, தங்கள் புஜங்களை, நான் என் வலத் தோளைப் பார்த்துக்கொண்ட அத்தனை தடவை பார்த்திருக்கமாட்டார்கள். ஆனால் ஒன்று சொல்லவேண்டுமல்லவா? என் கையின் ஊனத்தினால் அதன் பயனுக்கு ஒன்றும் தடங்கல் இல்லை. பிறருடன் நான் பழகுவதற்குத்தான் அல்லது நான் விரும்பின உறவுக்குத்தான் தடங்கல். இந்தத் தடங்கலும் நானாகப் பாவித்துக்கொண்டதாகவே இருக்கலாம். எதைத்தான் உண்மையென்று சொல்வது? அல்லது பொய் என்றுதான் தீர்மானிப்பது?

''எனக்கு என்னுள் ஒரே கேள்விதான்; என்னைச் சமமாய்ப் பாவிப்பவர் யார்? நான் படிக்கும் நாளிலும் என்னுடன் ஒரு பையனும் சண்டைக்கோ சச்சரவுக்கோ வரமாட்டான்; வாத்தியார்களே தடுத்துவிடுவார்கள், 'பாவம், அவனோடு என்னடா சண்டை?' என்பார்கள்.

''என் வாழ்நாள் முழுவதும் உலகம் என்னிடம் காட்டும் நடைமுறையே இதுதான். நான் வேண்டியது அதுவல்ல. ஆயினும் நான் வேண்டுவதை எப்படி அடையமுடியும்? மனத்தைத் திருப்ப வேண்டுமென்றால் எப்படி? எதனின்று மனத்தைத் திருப்பவேண்டுமென்னும் முயற்சியுடன் திருப்புகிறோமோ அதில்தான் மனம் திரும்பத் திரும்பத் திரும்புகிறது.

''சில சமயங்களில் வாழ்க்கையின் இன்பப் பகுதிகளைப் பலவந்தமாகவே வாழ்க்கையினின்று பிடுங்கி அனுபவித்தல் நலம் என்று தோன்றுகிறது. முதலில் அக்கிரமமாக இருந்தாலும், இறுதியில் பயன்பட்டதற்கும் பயன்படுத்துபவர்க்கும் இருசாராருக்குமே நன்மையாய் முடிகிறது; அந்த முரட்டுத்தனத்தில் ஈடுபடுவதற்கு அஞ்சுகையில் தான் நாம் அவஸ்தைப்படுகிறோம்; அந்த முரட்டுத்தனங்கூட அவ்வளவு அக்கிரமம் அன்று. அதை விலக்குவதில் நாம் பெரிய பொருளாகப் பாவிக்கும் மானம், கௌரவம், நன்மதிப்பு, பிறர் மனம் கருதுதல் முதலிய லட்சியங்களெல்லாம் பலவீனங்களாய்ப் போய்விடுகின்றன.

''உதாரணமாய்ப் பாருங்கள்: எனக்கோ பணம் காசுக்குக் குறைவில்லை. ஒரு மனைவியை நான் விலைக்கு வாங்கிவிடலாம். இருந்தும் என் கை, என் துணிச்சலுக்கு குறுக்கே நின்று தடுத்தது. என் எதிரிலோ, கண் மறைவிலோ, என் கையைப்பற்றி வாய்விட்டுப் பேசாவிட்டாலும், மனத்தில்கூடவா அஞ்சாமல் இருப்பாள்? புலன்களுக்குப் பிடிபடாவிடினும், மனத்தில் மாத்திரம் அந்த அருவருப்பு இருக்கும்; அதைக் குறுக்கே வைத்துக்கொண்டு நாங்கள் வாழ்க்கை நடத்துவது எப்படி என்று நினைக்கையிலேயே என் உள்ளம் பதறிற்று; ஆயினும் உலகில் இதைவிட மோசமான காரியங்கள் நடக்கவில்லையா? என்றாலும் சில சமயங்களில் நியாயமாகவே படவேண்டிய சுகத்துக்குக் கூடச் சுயகௌரவம் இடம் கொடுக்கமாட்டேனென்கிறது.''

இன்னொரு சிகரெட்டை அவன் பற்றவைத்தான்; 'சுர்'ரென்று தீக்குச்சி பற்றிச் சுடர் அவன் முகத்தை ஒருகணம் ஏற்றி அவிந்தது. அப்புறம் இருட்டிலிருந்து அவன் குரல்மாத்திரம் வந்துகொண்டிருந்தது:

அவனிருந்த இடத்தைச் சிகரெட்டின் தணல் நுனிதான் குறித்தது. இருட்டில் உடலின் கோடுகூடத் தெரியவில்லை.

வெளியில் அடைமழை இப்போதைக்கு நிற்குமென்று தோன்றவில்லை.

''சொந்தத்திலேயே ஒரு பெண் இருந்தாள். பேரையும் ஊரையும் இப்பொழுது சொல்லுவானேன்? நாமே எங்கிருந்து வருகிறோம், எங்கே போகிறோம் என்று புரியாமல் இருக்கையில் பேருக்கும் ஊருக்கும் என்ன முக்கியம் வந்தது? பிரமாத லக்ஷணமும் இல்லை. ஆனால் அவள் அவயவங்கள் முழுமையாயிருந்தன. எனக்கு அதைவிடப் பெரிய லக்ஷணம் ஒன்றும் தோன்றவில்லை. ஏழைக் குடும்பந்தான். ஒருவேளை நான் மணமும் புரிந்திருக்கலாம். ஆயினும் என் கை..?

''நான் என் கைக்கு அஞ்சி, அவள் வீட்டாரைக் கேட்கவில்லை. அவள் பெற்றோர்கள் என் பணத்துக்கு அஞ்சி அவளை எனக்குக் கொடுக்க முன்வரவில்லை. அல்லது என் கைதான் காரணமோ என்னவோ? நாங்கள் சேர்ந்து விளையாடுகையில் அவள் என் கையைப்பற்றி எத்தனையோ கேலி, விளையாட்டாகப் பண்ணியிருக்கிறாள்.

''எப்படியிருந்தால் என்ன? அவளுக்குக் கல்யாணமாகாமல் போகிறதா? அந்தப் பையனைக்கூட எனக்குச் சுமாராய்த் தெரியும். நல்ல பையன். ஆனால் அவர்கள் மாதிரியே அவனும் பரம ஏழை. ஏழைதான் ஏழையாகிக்கொண்டு வருகிறான். அவனுக்கு உற்றார் உறவினரும் இல்லை. மணமானதும் அவளைக் கூடவே தான் பிழைக்கும் இடத்துக்குக் கூட்டிக்கொண்டு போய்விட்டான். எப்பொழுதாவது ஒன்றிரண்டு மாதங்களுக்கு ஒரு முறை அவனிடமிருந்து க்ஷேமலாபம் பற்றிக் கடிதம் வரும்.

''ஒவ்வொரு சமயம் மனத்தில் கவியும் இருளை நீங்கள் புலன் மூலம் எப்பொழுதேனும் அறிந்திருக்கிறீர்களா? சிற்சில சமயங்களில் மனோவிகாரத்தின் மிகுதியான வேகத்தில் நீங்கள் கண்ணால் காணுவதெல்லாங்கூடச் சுய ஒளி மங்கியழுவதுபோல் தோன்றும். என் தனிமையில் எத்தனையோ தடவை உலகம் அம்மாதிரி சோபை இழந்திருக்கிறது.

''ஒருவன் காட்டிலும் ஜெயிலிலும் உணரும் தனிமை சகிக்கக் கூடிய தனிமை. தன் இஷ்டமாயோ, பிறராலேயோ பலவந்தமாய் ஏற்படுத்திக்கொள்ளும் அந்தத் தனிமைகளிலிருந்து விடுவித்துக்கொள்ளவோ, விடுதலை பெறவோ வேளையுண்டு. அல்லது வேளை வரும் என்ற நம்பிக்கை உண்டு. ஆயினும் என்மாதிரி தனிமை இருக்கிறதே; இத்தனை பேர் என்னைச் சுற்றியிருந்தும் நான் என்னுள் உணரும் என்னுடைய தனித்தன்மைதான் சகிக்கமுடிகிறதில்லை. இந்தத் தனிமை உள்ளத்தின் தனிமையா? உடலின் தனிமையா?

''ஓரிரவு சரியாய்த் தூக்கம் இல்லை. நடுநிசி தாண்டிச் சற்றுக் கண்ணயர்ந்தேன். ஆயினும் எனக்குத் தூங்கினமாதிரியே ஞாபகம் இல்லை. விழித்த கண்களுடனேயே ஒரு கனவுள் புகுந்துவிட்டேன்.

''நீலக் கண்ணாடி வழியே பார்ப்பதுபோன்று, கண்களுக்குக் குளுமையாய் என்னைச் சுற்றியும் நீல இரவு. கண்களுக்குத் தெரியாச் சரடுகளிலிருந்து நக்ஷத்திரங்கள் விளக்குகள்போல் தொங்கிக்கொண்டிருந்தன. நான் நடுஜலத்தில் ஓர் ஓடத்தில் துடுப்புகளை நானே தள்ளிக்கொண்டு போய்க்கொண்டிருந்தேன். எங்கே என்று நானே அறியேன். இரு பக்கங்களிலும் கரைகள் நீலக் குன்றுத் தொடர்கள்போல் உயர்ந்தும் தாழ்ந்தும் ஓங்கி நின்றன. அவற்றின்மேல் வளர்ந்திருந்த

தென்னங்கன்றுகளின் மட்டைகள் ஜலத்தின் பக்கமாய் வளைந்து என் தோள்களிலும் ஜலத்திலும் உராய்ந்தன. என்ன ஆச்சரியம்! என் தோளில் நான் பிறவி முதல் தாங்கிவரும் ஊனத்தைக் காணவில்லை. துடுப்புகளை முன்னும் பின்னுமாய், குனிந்தும் நிமிர்ந்தும் தள்ளிக் கொண்டு, நான் தண்ணீரைக் கிழித்துக்கொண்டே முன்னேறுகையில், என் மார்பிலும் முதுகிலும் புஜங்களிலும் நரம்பு முடிச்சுக்கள் பந்து பந்தாய் எழும்பி வடிவதை நான் உணர்கிறேன். என் உடலில் நான் புதிதாய் உணரும் வலுவும் விறுவிறுப்புமே ஒரு சகிக்கமுடியாத இன்பம்.

''திடீரென ஓடம் கரை தட்டியது. என் பால்ய சிநேகிதி கரையில் நின்றுகொண்டிருந்தாள். ஏன் தன்னந்தனியாய் அந்த நேரத்தில் அங்கே நின்றாள் என்று நான் கேட்கவில்லை; கேட்கத் தோன்றவும் இல்லை. சந்திக்க நாங்கள் முன்னேற்பாடு பண்ணிக்கொண்டதுபோலவே அவள் அங்கே காத்திருந்தாள். ஆகையால், கடுகளவேனும் நான் அவள் அங்கு அப்படி நிற்பது சரியா, தப்பா என்பதைப் பற்றித் திகைக்கவும் இல்லை, சிந்திக்கவும் இல்லை.

''நீட்டிய என் கையைப் பிடித்துக்கொண்டு அவள் ஓடத்தில் தாவியேறினாள். ஓடம் தானே நகர்ந்து ஜலம் இழுத்த வழியே சென்றது. அவள் நீலப் புடைவை உடுத்தியிருந்தாள். அடித்தட்டில் மல்லாந்து படுத்தவண்ணம் அவள் என்னையே பார்த்துக்கொண்டிருந்தாள். ஓடத்தின் இரு பக்கத்திலும் ஜலம் கிளுகிளுத்தது. நான் அவளை அணைத்தேன்.

''நான் நானாய் இல்லை அப்பொழுது. ஆனால் என் நினைவு என்னை விடவில்லை. ஆனால் நான் அப்பொழுது எப்படி இருந்தேன் என்பதை உங்களிடம் சொல்ல முயல்கையில் பாஷை தடைப்படுகிறது; தளர்வும் அடைகிறது.

''திடீரென ஓடம் எங்கோ ஜலத்தடியில் பாறைமேல் மோதியது போல் குலுங்கி, அடித்தட்டுத் திறந்து அவள் அப்படியே மூழ்கிப் போனாள். என் உடல் குலுங்கியது. நான் விழித்துக்கொண்டேன். ஜன்னலுக்கு வெளியே கருவானில் வெண்மேகங்கள் சந்திரனுக்குப் பின்னால் விரைந்து சென்றுகொண்டிருந்தன. என் மனப்படலத்தினின்று பிதுங்கிய படம் மறைந்து போயிற்று. ஆயினும் அழிந்து போகவில்லை. அதன் ஒவ்வோர் அம்சமும் மனத்தில் ஆழமாய்ப் பதிந்து போயிற்று. இல்லாவிடில் இவ்வளவு வெளிச்சமாய் உங்களுக்கு நான் இன்னமும் சொல்லமுடியுமா?

''இரண்டு மாதங்கள் கழிந்தன. ஒரு நாள் மாலை வெளியிலிருந்து அறைக்குத் திரும்பிக் கதவைத் திறந்ததும் உள்ளே காலடியில் எனக்கு ஒரு கடிதம் கிடந்தது; தபால்காரன் கதவிடுக்கின் வழியே உள்ளே தள்ளியிருந்தான். பிரித்துப் படித்தேன். என் சிநேகிதன், கால வித்தியாசத்தையும், கிரகக் கோளாறுகளையும், அதிருஷ்டத்தையும், வயிற்றுப் பிழைப்பின் கஷ்டங்களையும்பற்றிப் பக்கம் பக்கமாய் எழுதிவிட்டு, கடைசியில் ஒரு வரி, தன் மனைவி இரண்டு மாதங்களாய் ஸ்நானம் பண்ணவில்லை என்றும் எழுதியிருந்தான்.

''என் உள்ளத்தில் கண்ட அதிர்ச்சியில் நான் அப்படியே உட்கார்ந்துவிட்டேன். நான் எந்தக் காரணத்தினால் அப்படி நினைத்தேன் என்று கேளாதேயுங்கள். அல்லது நான் நினைத்தது நடக்கக்கூடியதா என்றும் கேளாதேயுங்கள். அல்லது நான் நினைத்தது பாவமா புண்ணியமா என்றும் கேளாதேயுங்கள். இரண்டுக்கும் வித்தியாசம் திண்ணமாய் எனக்கு இன்னமும் தெரியாது. அவள் வயிற்றில்

கண்டிருக்கும் பொறி என்னுடையது என்ற எண்ணம், மனத்துள் மின்னலைப் போன்று பளிச்சென்று பாய்ந்த வேகத்திலேயே பதிந்தும் போயிற்று. அந்த நிமிஷம் முதற்கொண்டே என்னை உறுத்திக்கொண்டிருந்த தனிமையின் ஏக்கமும் தணிய ஆரம்பித்தது. நானும் எல்லாரையும்போலத்தான். இல்லை, கூட ஒரு படி உயர்ந்தவன்.

''உடனே அவனுக்குப் பணம் அனுப்பினேன். திருப்பிக் கொடுப்பதைப்பற்றி இப்பொழுது கவலைப்படவேண்டாம், ஒருவருக்கு ஒருவர் உதவத்தான் பணம் இருக்கிறது என்றும், இன்னும் நான் நம்பியதும் நம்பாததுமான பொது வேதாந்தங்களும் எழுதிவிட்டு, இனித் தாயாகப் போகிறவளின் உடம்பை ஜாக்கிரதையாய்ப் பார்த்துக் கொள்ளும்படியும் எழுதினேன்.

''அப்புறம் நான் மீதப் நாட்களை எண்ண ஆரம்பித்தேன்; என்றேனும் என் குழந்தையையும் நான் என் மார்மேல் சார்த்திக் கொண்டு அதன் கன்னத்தை நிமிண்டி விளையாடும் நாள் வரும். அதன் கனவில் அது மலர் காணுகையில் அதன் வாய் சிரிப்பில் மலர்வதைக் கண்டு களிக்கவும் முடியும். ஏன்? ஒருவேளை அதைப் பெற்றவர்களிடத்துக்கே நான் போனாலும் போய்விடுவேன். இப்பொழுது நான் இருக்கும் இடத்திலேயே நான் இருந்துகொண்டிருக்க வேண்டுமென்று என்ன நிர்ப்பந்தம் எனக்கு இருக்கிறது? சில சமயங்கள், பாருங்கள், நல்ல அறிவோடு இருக்கையிலேயே ஏற்படும் இம்மனப் பிதற்றலுக்கு ஜுர ஜன்னியில் காணும் வாய்ப் பிதற்றல் எவ்வளவோ தேவலை. ஏதேனும் டுரு சாக்கை வைத்துக் கொண்டே மாதம் தவறாது நான் அவனுக்குப் பணம் அனுப்பிவந்தேன்.

''பிள்ளைப் பேற்றுக்கு அவள் பிறந்தகம் வந்திருந்தாள். கூட அவள் கணவன் வர முடியவில்லை. அந்தப் பக்கம் வந்த யாரோடேயோ துணை கூட்டி அனுப்பியிருந்தான். நான் அவளைப் பார்க்கப் போகவில்லை. ஆனால் ஒருமுறை அகஸ்மாத்தாய்க் குளத்தங்கரையில் சந்திக்க நேர்ந்தது. ஸ்நானம் பண்ணிவிட்டு ஈரப் புடைவையுடன் படித்துறை ஏறிக்கொண்டிருந்தாள். நான் இறங்கிக்கொண்டிருந்தேன். நிறை மாதம், மேனி மினுமினுப்பாய்த்தான் இருந்தாள்.

''அத்தனை நாள் கழித்து என்னை முதல்முதலாய்க் கண்ட உணர்ச்சியாக இருக்கலாம். அல்லது அச்சமயம் அவளுடைய வயிற்று நிலையில் நான் அவளைப் பார்க்க நேர்ந்ததால் அவளைப் பிடுங்கிய வெட்கமாக இருக்கலாம். நன்றியாகவும் இருக்கலாம். என்னைக் கண்டதும் அவள் கண்களில் கண்ணீர் தளும்பிற்று. வாய் பேசக்கூட வரவில்லை. ஆனால் அவள் என்ன பேசமுயன்றாள் என்று எனக்குத் தெரியாமல் போய்விடுமா? அவளை அப்பொழுது கண்டதில் என் நெஞ்சும் குரலுங்கூடத் தழுதழுத்தன.

''இதென்ன நான் போகும்போது என் பணத்தை என்னோடு கூடவா கொண்டு போகப்போகிறேன்? அத்துடன் உனக்கு நான் ஒத்தாசை செய்யப் பாத்தியமுண்டு என்றுதான் வைத்துக்கொள்ளேன். உடம்பை ஜாக்கிரதையாய்ப் பார்த்துக்கொள்' என்றேன்.

''நாங்கள் பேசிய பேச்சே அவ்வளவுதான். அப்புறம் அவளை நான் உயிருடன் பார்க்கவில்லை. வேளை இன்றைக்கோ நாளைக்கோ என்றிருக்கையில் கிணற்றடியில் வழுக்கி விழுந்துவிட்டாள். படாத இடத்தில் பட்டு அப்புறம் நினைவுகூட இல்லை. ஏக அமர்க்களம். குழந்தை வயிற்றிலேயே இறந்துவிட்டது. பிணத்தை எடுத்துச் செல்லுமுன் அதன் உயிரற்ற உடலை ஒரு முறை தொட்டுப் பார்த்தேன்.

குழந்தையாகவா இருந்தது அது? கடோத்கஜன் மாதிரி இருந்தது; கருப்பையைக்கூட மீறிய உடல் பருமன்.

''பிணத்தை எடுத்துப் போன பிறகுதான் அவள் கணவனே வந்து சேர்ந்தான். அன்று மாலே நாங்கள் இருவரும் பக்கத்தில் பக்கத்தில் குளத்தின் படிக்கட்டில் உட்கார்த்துகொண்டு, அவளேப் பற்றியும் அத்தனே ஏழைமையில் அவன் அவளுடன் நடத்திய இன்ப வாழ்க்கையைப் பற்றியும் பேசுகையில் எங்களே இணைப்பதாக நான் உணர்ந்த உறவே அலாதி. என் குழந்தையைப் பெற்றவள் அவள்; என் குழந்தைக்குத் தந்தையாய் இருப்பவன் அவன்....

''அவன் பெருமூச்செறிந்தான்.

''இப்பொழுது தோன்றுகிறது. என் அளவுகடந்த ஆசைப் பசியே அவளே விழுங்கிவிட்டது என்று நினைக்கிறேன். இதிலிருந்து எதை நான் உங்களுக்கு நிருபித்தேன், அல்லது நிருபிக்க முயல்கிறேன் என்று எனக்குப் புரியவில்லே. உள்ளத்தின் மூலம் உடலே வெற்றி கொண்டேனு அல்லது உடலின் மூலமே உள்ளத்தின் தாபத்தைத் தணித்துக்கொண் டேனு? மொத்தத்தில் இந்த வெற்றி, தோல்வி என்னும் இரண்டு வார்த்தைகளுமே எனக்குப் பிடிப்பதில்லே. இரண்டும் இரண்டு முற்றுப்புள்ளிகள். அம்மாதிரி முற்றுப்புள்ளிகளே வாழ்க்கையா? என்னவோ பேச்சு எங்கேயோ ஆரம்பித்து எப்படியோ முடிந்தது. மழையும் நின்றுவிட்டது. நான் ரெயிலடிக்குப் போகிறேன். நீங்கள் ரெயிலடியிருந்துதான் வருகிறீர்களாக்கும். சரி, நமஸ்காரம்.''

''எனக்கு என்ன தோன்றிற்றே தெரியவில்லே. அன்றிரவு என் மனேவிக்கு நான் எழுதினேன்.

''இன்றுவரை நான் என்னுடைய 'நா'னேப் பற்றியே நினேத்துக் கொண்டிருந்துவிட்டேன். உனக்கும் ஒரு 'நான்' உண்டு என்பதைக் கருதவில்லே. நம்மிருவருக்கும் சேர்ந்தே ஒரு 'நாம்' உண்டு என்பதை யும் எண்ணவில்லே. அந்த 'நா'மிற்கே ஒரு 'நான்' உண்டு. அந்த 'நா'னி லிருந்து இப்பொழுது பிறக்கப் போகும் 'நா'னேப் பற்றியும் நினேக்க வில்லே. நாமேதான் நான், நானேதான் நாம்.''

—செப்டம்பர், 1948

# நிழலின் அருமை

'எல்லார்வி'

"சாந்தா, அப்பா ஒரு மாதிரியாகப் பேசுகிருரே, ஏன்?" காபியை அவன் கைத் தம்பளரில் விட்டுக்கொண் டிருந்த சாந்தா, அவனை நிமிர்ந்து பார்த்தாள்.

"தனி ஜாகையாமே? இதுபற்றி உனக்கு ஏதாவது தெரியுமா?"

"என்னைக் கேட்டால்? அப்பாவோடு பேசுகிறபோது பழைய காலப் பள்ளிக்கூடப் பிள்ளை மாதிரி கைகட்டி நின்றுவிட்டு...."

"இன்னென்று சாந்தா; வாய் ஓயாமல், 'சாந்தா, சாந்தா' என்பவர் இன்று, 'உன் மனைவி' என்று குறிப்பிட்டார். நீ ஏதாவது தப்புச் செய்தாயா?"

சாந்தா முகத்தை நொடித்தாள். "ஓகோ! நாயை எங்கே அடித்தாலும் அது காலைத்தான் விந்துமாம். குடும்பத்தில் எது நடந்தாலும் பழி சாந்தா தலையில்! என் பேரைச் சொல்ல அவருக்கு இனிமேல் பிடிக்குமா? இரண்டு குட்டி போட்டாகிவிட்டது. சீர் கொண்டு வந்து சாய்க்க இனி வழி இல்லை; மேலும் நாம் சம்சாரி ஆகிவிட்டோம். இல்லையா? பாரத்தைக் குறைத்துக் கொள்ளத்தான் இப்படி—"

ராகவன் துள்ளி எழுந்தான்; "சீ! மூடு வாயை! என்னவோ கேட்டால் ஏதேதோ சொல்லிக்கொண்டு! சீராம், சம்சாரியாம், பாரமாம்!"

சட்டைகூட மாற்றுமல் அவன் வெளியேறினன். நேரே தாயிடம் சென்று வினவினன். "எனக்கென்ன தெரியும்?" என்ற அவள் குரலில் நயம் இல்லை; பேச்சில் ஒட்டுறவு இல்லை. செய்தி கேட்டு அவள் திடுக்கிடவும் இல்லை.

சலிப்புடன் ராகவன் தம்பியிடம் போனன். "எனக்கு ஒன்றும் தெரியாது; ஆனல் அப்பா எதுவும் தவருகச் சொல்ல மாட்டார் என்பது மட்டும் உறுதி" என்று அவன் பட்டுக் கொள்ளாமல் பேசவே, வேதனை மேலிட்ட ராகவன், "அப்பாவிடம் விளக்கம் கேட்கவும் வாய் வரவில்லை; அம்மாவும் ஒன்றும் சொல்ல மாட்டேன் என்கிருள். நான் என்னதான் செய்வது?" என்று அலுத்துக் கொண்டான்.

"அப்பா சொல்கிறபடி செய்வது" என்றுன் ராமு. இதற்கு மேல் அவனிடம் பேசிப் பயன் இல்லை. தங்கைகளிடம் பேசிப்

பார்த்தான். அவர்களும் பளிச் சென்று எதுவும் சொல்லவில்லை. ஆனால் இதில் மொத்தமாகப் புரிந்துகொண்ட தனிக் குடித் தனச் செய்தி யாரிடமும் அதிர்ச்சியை உண்டு பண்ணவில்லை என்பதே. இது அவனைத் தவிர அனைவரும் முன்னதாகவே அறிந்திருந்த செய்தி என்பது புரிந்தது. நிம்மதி பறிபோன நிலையில் அவன் கடற்கரையை நோக்கிச் சென்றான்.

மாலையில் அலுவலகத்தில் இருந்து வீடு திரும்பிய ராகவனை அவன் தந்தை, ''ராகவா!'' என்று அழைத்தார். குரலில் உறுதி இருந்தது. சொன்னார்:

''உனக்கு முப்பது வயதாகிறது. இதுவரை நான் சொன்ன எதையும் நீ மறுத்ததில்லை. ராமனைப் போலத் தந்தையின் சொற்படி நடந்துகொண்டிருக்கிறாய். இந்தக் காலத்தில் இப்படி ஒரு பிள்ளையைக் காண்பது அரிது.''

எங்கோ பார்த்தபடி நின்றிருந்த ராகவன் ஒன்றுமே புரியாமல் திகைத்தான். ''எதற்கப்பா இப்போது இப்படியெல்லாம்..?''

''சொல்கிறேன். இப்போது நான் சொல்லப் போவதையும் எப்போதும் போல் நீ கேட்கவேண்டும் என்பதற்காகத்தான் இந்தப் பீடிகை. கேட்பாயல்லவா?''

அவன் புருவங்கள் குவிந்தன. என்ன சொல்வாரோ?

''பராங்குசம் தெரு, ஆறும் நெம்பர் வீடு காலியாக இருக்கிறது. சின்ன வீடு; தனி வீடு. வாடகை ஐம்பது ரூபாய்தான்.''

''அந்த இடம் நமக்கு எப்படியப்பா போதும்?''

''நமக்குப் போதாது; உனக்குப் போதும்.''

''நீங்கள் என்ன அப்பா சொல்கிறீர்கள்?''

''இரண்டு அறைகள்; ஒரு கூடம்; சிறு முற்றம். உனக்கும், உன் மனைவி குழந்தைகளுக்கும் அந்த இடம் போதாதா? வருகிற ஞாயிற்றுக்கிழமை நல்ல நாள், குடி போக.''

அடிமேல் அடி விழுந்தாற்போல் இருந்தது ராகவனுக்கு. 'திடீ ரென்று தனிக்குடித்தனம் ஏன்?'—இது முதலடி. 'மூச்சுக்கு மூன்று முறை, சாந்தா சாந்தா என்கிற அப்பா, பெற்ற பெண்களைவிட, வந்த மருமகளிடம் மட்டற்ற பாசம் வைத்துள்ள அப்பா, இப்போது பிரித்துக் காட்டி, விட்டேற்றியாக, ஒட்டாத சொல்லாக உன் மனைவி என்பது ஏன்?'—இது இரண்டாவது அடி. அவனுக்குச் சகிக்கவில்லை.

''எதற்கப்பா, இப்படியெல்லாம் பேசுகிறீர்கள்?''

''நம் குடும்பம் சில காலம் பிரிந்திருக்க வேண்டும் என்று சோதிடர் சொன்னார். வேறு ஒன்றும் இல்லை.'' இப்படிக் கூறிவிட்டு ராமநாதன் வெளியே சென்றுவிட்டார்.

ராகவன் அடித்து வைத்த சிலைபோல் அசைவற்று நின்றான். சில நாட்களாகவே அப்பாவிடம் கலகலப்பு இல்லை. அம்மாவும் அப்படித்தான். தொடர்ந்து நினைத்துப் பார்த்தபோது தம்பி, தங்கைகள் எல்லாருமே ஒரு மாதிரியாக இருந்து வருவது படம் பிடித்தாற்போல் தெரிந்தது. மப்புச் சூழ்ந்திருந்த வானம் இப்போது மழையே பெய்துவிட்டது.

வறுமையோ, செம்மையோ, கலகலவென்றிருக்கும் குடும்பத்தினர் ஒருவருக்கொருவர் முகம் கொடாமல் வக்கரித்துக்கொண்டிருக்கும் நிலையை அவனால் தாள முடியவில்லை. மறுபடி ஒருமுறை தகப்பனாரிடம்

இதுபற்றிப் பேசலாமென்று அவன் துணிச்சலுடன் முயன்ற சந்தர்ப்பங்கள் வீணாயின. ஒன்று, அவர் வீட்டில் இருப்பதில்லை; அல்லது அவன் அணுகுகிறபோது அவர் முக்கிய அலுவல் எதிலாவது ஈடுபட்டிருப்பார்; வெளியார் எவருடனாவது உரையாடிக்கொண் டிருப்பார். இப்படியே காலம் கரையலாயிற்று. ராமநாதன் குறிப்பிட்ட ஞாயிறு வந்தது.

பார்வதி அம்மாள், ராகவன், சாந்தா, குழந்தைகள் ஆகியோர் பெரியவரின் கட்டளைப்படி நல்ல நேரத்தில் புதிய வீடு சென்று பால் காய்ச்சி வந்தனர். சாமான்கள் வண்டியில் சென்றன.

'வேறு வழி இல்லை; போய்தான் தீர வேண்டும்' என்ற முடிவில் ராகவனும் சாந்தாவும் ராமநாதனை அணுகி வணங்கினார்கள்.

''போய்த்தான் ஆகவேண்டுமா, அப்பா?'' ராகவன் கலக்கத்துடன் கேட்டான்.

''கண்டிப்பாக!'' ராமநாதன் உறுதியாகச் சொன்னார்.

''ஏன் அப்பா, அப்படி?''

''அன்றே காரணம் சொன்னேனேடா! சில காலம் பிரிந்திருப்போம்.''

''ஓய்வு பெற்ற உங்களை எப்படி யெல்லாமோ வைத்துப் போற்ற வேண்டும் என்று கனவு கண்டேன்; அதற்கு மாறாக....''

''ராகவா, உனக்கொன்று சொல்கிறேன் கேள்: கோபுரத்தைப் பொம்மை தாங்குவதில்லை. மாதம் ஆயிர ரூபாய்க்குமேல் செலவாகும் நம் குடும்பத்தில் நானும் சம்பாதித்த காலத்திலேயே பற்றாக்குறை இருந்தது. விலைவாசி கூடியதால் மாதந்தோறும் கடன், தான். நீ தனியாகப் போனபின் இன்னும் கொஞ்சம் கூடுதலாகக் கடன் வாங்க வேண்டியிருக்கும்; அவ்வளவுதானே? என்னை, 'நல்லவன், நேர்மையாளன்' என்று எண்ணுபவர் இன்னும் பலபேர் இருக்கிறார்கள். அவர்கள் தயவில் எப்படியோ காலத்தை ஓட்டுகிறேன். என்றாவது எந்த உருவத்திலாவது நல்ல காலம் வரும்; வாங்கின கடன்களைத் திருப்பிக் கொடுத்து விடுவேன். அப்படிக் கொடுக்க முடியாவிட்டாலும் என்னை யாரும் எதுவும் செய்துவிட மாட்டார்கள். ராகவா, நேற்று நன்றாக வாழ்ந்தேன். அது உன் மனைவிக்கு வேண்டுமானால் தெரியாமல் இருக்கலாம். உனக்குத் தெரியும்; ஊரில் உள்ள அனைவருக்கும் தெரியும். நாளை மீண்டும் நல்வாழ்வு உண்டு என்ற நம்பிக்கை என் உள்ளத்தில் மடியவில்லை. நீ வளரும் பயிர். உனக்கென்று வருங்காலம் இருக்கிறது. சம்சாரியாகி வருகிறாய். நாலு காசு சேர்க்க வேண்டிய காலத்தில் உன் வருவாய் முழுவதையும் இந்தக் குடும்பத்தில் கொண்டுவந்து கொட்டிவிட்டு....''

ராகவன் பதறினான், சேலைத் தலைப்பை முறுக்கியபடி அவன் அருகில் நின்றிருந்த சாந்தா தூண் மறைவில் நகர்ந்து கொண்டாள். மாமனார் பேச்சு அவளுக்கு வேம்பாய்க் கசந்தது.

''யார் அப்பா, இப்படியெல்லாம் சொன்னவர்?''

''ஒருவர் சொல்ல வேண்டுமா? அப்படியே சொல்லியிருந்தாலும் அதை உன் எதிரில் நிரூபிக்க வேண்டுமா? என் இயல்பு உனக்கு நன்றாகத் தெரியும். என் கண்ணால் பார்த்து, என் காதால் கேட்பவற்றை மட்டுந்தான் நான் நம்புவேனே தவிர, பிறர் சொல்வதைக் கேட்டுத் தாளம் போடும் வழக்கம் எப்போதுமே என்னிடம் கிடையாதே! உதாரணத்துக்கு ஒன்று சொல்கிறேன், கேள்: உன் திருமணத்துக்குப் பிறகு நம் குடும்பத்தில் அடுத்தடுத்து எத்தனை துன்ப

நிகழ்ச்சிகள் நடைபெற்றன? மிக நன்றாக இருந்த குடும்பம் நொடிந்தது. அடிமேல் அடி, இடிமேல் இடி! இவற்றுக்கெல்லாம் காரணம், 'மருமகள் வந்த வேளை!' என்று சிலர் சொன்னார்கள். நான் ஏற்கவில்லை. 'மருமகள் நிலத்தில் காலைச் சீய்த்துச் சீய்த்து நடக்கிறாள்; அதன் பலன்தான் இது!' என்றார்கள்; நான் ஒப்பவில்லை. குடும்பத் தலைவனாகிய என்னுடைய போதாத காலமே அனைத்துக்கும் காரணம் என்பதே என் முடிவு. அது ஒருபுறம் இருக்கட்டும். தலைமுறை தலைமுறையாக இந்தக் குடும்பத்தில் பல உயர்ந்த பண்பாடுகள் உண்டு. வீட்டுச் செய்திகளை வெளியே பரவவிடாமல் பாதுகாப்பது அவற்றுள் முக்கியமான ஒன்று. சில காலமாக அந்தப் பண்பு மாறிவிட்டது. நம்மைப் பற்றிப் பல செய்திகள் வெளியே உலவுகின்றன. சிலர் அதுபற்றியும் என் செவியில் போட்டார்கள். அப்போதெல்லாம் அதை நான் ஏற்கவில்லை, ஆனால்....''

அவர் பெருமூச்செறிந்தார்; பிறகு தொடர்ந்தார்.

''வேண்டாம் ராகவா, வேண்டாம்; நீ போய் வா; நன்றாய் இரு. இந்தக் குடும்பத்தைப் பற்றியும் கவலைப்படாதே!''

தகப்பனார் மறைபொருளாகப் பேசியதிலிருந்து ராகவன் நிலவரத்தை ஒருவாறு ஊகித்துக்கொண்டான். ''முடியாதப்பா! முடியாது! உங்களைப் பிரிந்து செல்ல என்னால் முடியாது!'' என்று உறுதியாகச் சொன்னான்.

''சண்டித்தனம் செய்யாதே, ராகவா! என் வைராக்கியம் ஊரறிந்தது. இன்று நீ இங்கிருந்து போகாவிட்டால் நாளை நான் எல்லாரையும் அழைத்துக்கொண்டு இந்த ஊரை விட்டே போய்விடுவேன். எது நல்லது? யாராவது கேட்டால், 'சில காலம் பிரிந்திருக்க வேண்டும்' என்று சோதிடர் சொன்னதாகச் சொல்வேனே தவிர, இப்போது உன்னிடம் சொன்னதையெல்லாம் யாரிடமும் சொல்லமாட்டேன். புறப்படு!''

இவ்வாறு சொல்லிவிட்டு அவர் வெளியே சென்றுவிட்டார். ராகவன் சாந்தாவைத் திரும்பிப் பார்த்தான். அவனுக்கு நெற்றிக் கண் இல்லாததால் அவள் பிழைத்தாள்.

நெடு நேரத்துக்குப் பின் வீடு திரும்பிய ராமநாதனிடம் பார்வதி அம்மாள் வருத்தம் தோய்ந்த குரலில் சொன்னாள்: ''என்ன இருந்தாலும் நீங்கள் இத்தனை அவசரப்பட்டிருக்க வேண்டாம்.''

''என்ன?'' என்று அவர் அதட்டினார்.

''சிறிசுகள் சற்றே ஏறுமாறாக இருந்தாலும்....''

''போ, வாயை மூடிக்கொண்டு!'' அவர் சீறினார்.

அதற்குமேல் அவள் ஏன் அங்கே நிற்கிறாள்?

''அழகும் அறிவும் படிப்பும் உத்தியோகமும் எல்லாம் இருந்தும் சூதுவாது இல்லாதவனாக நடந்துகொள்ள வேண்டும் என்கிற கொள்கையினால் பிள்ளைப்பூச்சியைப் போல் வளர்ந்துவிட்டவன் ராகவன். அதன் பயனாக இன்று பெற்றோரையும் உடன் பிறந்தோரையும் பிரிந்து தனிக் குடித்தனத்தில் ஈடுபடவேண்டிய தலைவிதிக்கு அவன் உள்ளானான்.

'சாந்தா ஏதோ தவறு செய்திருக்கிறாள். தருமபுத்திரர் போன்ற அப்பாவே இவ்வளவு வருத்தப்பட்டு உடனடியாகக் குடும்பத்தைப் பிரிக்க வேண்டுமென்றால், சாந்தா செய்த குற்றம் மன்னிக்க முடியாததாய் இருக்கவேண்டும். மேலும் அவரிடம் பேசினால் சண்டை வலுக்கும்: ஊர் சிரிக்கும்; நாலு பேர் நாலு விதம் பேச இடமாகும்'-இவ்வாறு

எண்ணிய அவன் அவளிடம் எதுவும் கேட்கவில்லை; மனத்துள் புழுங்கினான்.

அத்தனைக்கத்தனை சாந்தா உற்சாகமாகக் காணப்பட்டாள். குழந்தைகளிடம் பேசுகிற வாய்ப்பில் ஜாடை ஜாடையாக என்ன என்னவோ பேசினாள். அந்தப் பேச்சின் குறிப்பு, இத்தனை காலமும் நரகத்தில் உழன்றது போலவும், இப்போது சொர்க்க வாழ்வில் திளைப்பது போலவும் இருந்தது. ஆனால்....

அவள் கண்டது ஏமாற்றந்தான்; விலைவாசி ஏற்றம் காரணமாக, ராகவனின் சம்பளம் தனிக் குடித்தனத்துக்குக் கட்டிவரவில்லை. ஒன்றும் கடன் வாங்கக்கூடாது என்ற கொள்கை உடையவன் அவன். எனவே, குடும்ப நிர்வாகத்தில் துன்பம் தோன்றியது. தேவைகளுக்குக் கணவனை அணுகி அவள் முறையிட்டதெல்லாம் வீணாயிற்று. அவன் அவளோடு பேசுவதே இல்லை. குழந்தைகளிடங் கூடப் பராமுகமாகத்தான் இருந்தான். வாழ்க்கை இனிக்காமல் சாந்தா கண்ட கனவு கானல்நீர் ஆயிற்று. உள்ளமும் உடலும் ஒருங்கே நலிந்து நோய்வாய்ப்பட்டுப் படுக்கையானாள்.

ஒரு நாள் ராகவன் தாயிடம் வந்தான்:

''அவளுக்கு உடல் நலம் இல்லை'' என்றான். இளைத்துத் துரும்பாகியிருந்த மகனைப் பார்த்துத் தாய் மனம் பதைத்தாள். 'சாந்தா, சாந்தா' என்பவன், அவள் பெயரைச் சொல்லாமல், 'அவளுக்கு உடல் நலமில்லை' என்று சொன்னதிலிருந்து நிலைமையை ஒருவாறு ஊகித்தாள். இரு குழந்தைகளை வைத்துக்கொண்டு அவன் திண்டாடும் நிலையை எண்ணி லேகாவை உதவிக்கு வனுப்பி வைத்தாள்.

லேகாவைக் கண்டதும் சாந்தா ஓ வென்று அழுதாள். ராகவன் இல்லாதபோது தன் நிலைமையை அழுதுகொண்டே விவரித்தாள். ''உன் அண்ணா என்னிடம் குரூரமாக நடந்து கொள்கிறார்'' என்று முறையிட்டாள்.

லேகா ராகவனிடம் தனிமையில் மன்றாடினாள், அண்ணியிடமும் குழந்தைகளிடமும் பராமுகமாக இருக்கக் கூடாது என்று. அந்த வாய்ப்பைப் பயன்படுத்திக்கொண்டு அவன் லேகாவிடம் கேட்டான்: ''அன்று அப்பா மறைமுகமாக ஏதேதோ சொன்னார். ஓரளவு புரிந்து கொண்டேன்; முற்றும் விளங்கவில்லை. ஆனால் நம் குடும்பத்தில் உள்ள அனைவருக்கும் தெரிந்திருக்கிற ஒன்று எனக்குத் தெரியவில்லை. அது என்னவென்று இப்போது நீ சொல்வாயா?''

லேகா மௌனமாக இருந்தாள். அவன் விடாமல் வற்புறுத்தினான். ''நான் ஏதாவது சொன்னேன் என்று தெரிந்தால் அப்பா என்னைக் கொன்றுவிடுவார், அண்ணா'' என்றாள்.

''அப்பாவிடமோ வேறு எவரிடமோ நான் எதுவும் சொல்ல மாட்டேன், லேகா. என்னை நம்பு. விவரம் அறியாத வரையில் நான் இப்படியேதான் இருப்பேன். இந்தக் குடும்பம் நரகமாய்த்தான் இருக்கும். எனக்குப் பைத்தியம்கூடப் பிடிக்கும்.''

ராகவனின் போக்கையும் மனநிலைமையையும் லேகா நன்கு அறிவாள். ''சரி அண்ணா, நடந்ததை நடந்தபடி நான் சொல்கிறேன். முன்னதாக நீ எனக்கு இரண்டு உறுதிமொழிகள் தரவேண்டும்; அவற்றை நிறைவேற்ற வேண்டும்.''

''சரி. என்னவென்று சொல்!''

''நான் சொல்வதை யாரிடமும் சொல்லக்கூடாது. விவரம் அறிந்தபின் கோபம் அதிகமாகி அண்ணியிடம் வெறுப்பை வளர்க்கக் கூடாது. 'பேதை' என்று அவளை மன்னித்து, முன்புபோல் அவளிடம் அன்பாக நடந்துகொள்ள வேண்டும்.''

''சரி, லேகா, அப்படியே ஆகட்டும். சொல்'''

''போஸ்ட் மாஸ்டர் அருணசல மாமா மனைவி நாகம்மாள் இல்லை? அவளுக்கு வம்பு என்றால் கரும்பு. இது உனக்கும் தெரிந்தது தான். அண்ணி அவள் வலையிலே விழுந்துவிட்டாள். இனிக்க இனிக்க இவளிடம் பேசி நம் குடும்பச் செய்திகளைக் கறந்து, கண், காது, மூக்கு வைத்து ஒன்றுக்குப் பத்தாக ஊரெல்லாம் அவள் விதைத்து வருகிறாள். அம்மா ஒரு நாள் இதைப்பற்றிப் பேசி வருத்தப்பட்டுக் கொண்டபோது அப்பா சீறி விழுந்தார். 'அந்த நாகம்மாளுக்கு வேலை என்ன? உனக்குந்தான் வேறு வேலை என்ன? அவளுக்கு வம்பே குறி. அவள் இவளுடைய வாயைக் கிளறியிருப்பாள். இவள் இரண்டுங் கெட்டான். ஏதாவது உளறியிருப்பாள். தள்ளு, குப்பையை!' என்று அம்மாவின் வாயை அடைத்துவிட்டார். ஆனால் அவர் செவிகளை அவரால் அடைத்துக்கொள்ள முடியவில்லை.

''ஒரு நாள் எல்லாரும் சினிமாவுக்குப் போயிருந்தோம். அண்ணி முன்பே பார்த்த படம். அதனால் அவள் வரவில்லை. வெளியே சென்றிருந்த அப்பா திரும்பி வந்து முன்புற அறையில் கதவைச் சாத்திக் கொண்டு பெட்டிகளைக் குடைந்து எதையோ தேடிக்கொண்டிருந்தார். அண்ணிக்கு அது தெரியாது. அப்போது நாகம்மாள் வந்திருக்கிறாள். வீட்டிலே யாருமே இல்லை என்கிற தைரியத்தில் இருவரும் உரக்கவே பேசிக்கொண்டிருந்திருக்கிறார்கள். அந்தப் பேச்சு முழுவதையும் அப்பா அம்மாவிடம் அப்படியே சொன்னார். அதில் முக்கியமான பகுதி இதுதான்:

''....'எங்கே, தனிக் குடித்தனமாவது, மண்ணாங்கட்டியாவது? மூத்த பெண்ணின் கல்யாணக் கடனே இன்னும் அடைந்தபாடில்லை. அடுத்தது குதிர்போல வளர்ந்து நிற்கிறது. இவர் உழைத்துக்கொண்டு வந்து கொட்டுகிறார். எல்லாம் கடலில் கரைத்த காயம் மாதிரிதான். எனக்கு எல்லா ஆசையும் வற்றிவிட்டது. ஒரு நாடகம் உண்டா, சினிமா உண்டா? கடற்கரை, கண்காட்சி அங்கே இங்கே என்று குழந்தைகளைக் கூட்டிக்கொண்டு போக, ஆசைப்படும் பொருள்களை வாங்கிக் கொடுக்க—ஊஹூம்! எந்த ஆசைக்குமே இடம் இல்லை. இரண்டு குழந்தைகள். சம்சாரி ஆகி வருகிறோம். இப்பொழுதே பிடித்து நாலு காசு சேர்த்தால்தானே முடியும்? அவருக்கு அந்த நினைவெல்லாம் இல்லை. இந்தக் குடும்பமே கோயில், அப்பாவே தெய்வம் என்று இருக்கிறார். இந்த அழகில் தனிக் குடித்தனமாவது! அதெல்லாம் ஒன்றும் நடக்காது!'

''அப்பா அனைத்தையும் சொல்லிவிட்டு, 'இதை யாரிடமும் சொல்லக் கூடாது. ராகவன் இதைத் தாளமாட்டான். உடனே அவர்களைத் தனிக் குடித்தனம் வைத்துவிட வேண்டும்' என்றார். ஆனால் இவ்வளவு சடுதியில் அவர் இதைச் செய்துவிடுவார் என்று யாருமே எதிர்பார்க்கவில்லை.''

லேகா இதைச் சொல்லி முடித்ததும் ராகவன் அப்படியே சோர்ந்து சாய்ந்துவிட்டான்.

கார் வந்து நின்றது. அதிலிருந்து இறங்கி உள்ளே வந்த பெரிய மனிதர் ராமநாதனை நோக்கி, ''நமஸ்காரம், சுவாமி!'' என்று கை கூப்பினார்.

''அடடே? தணிகாசல முதலியாரா?'' என்றார் ராமநாதன்.

''முதலியார் எல்லாம் வேணுங்க. முன்னே போலே; 'டேய், தணிகாசலம்!' அப்படின்னே நீங்க கூப்படுங்க, ஐயா!''

''இப்பொழுது நீ கோடீசுவரன் ஆயிற்றே, அப்பா?''

''அது மத்தவங்களுக்குத்தான். அது இருக்கட்டும், நான் வந்த காரியத்தைச் சொல்றேன். என் கம்பெனியோட மதுரைக் கிளையைக் கவனிச்சுக்கிட்டிருந்த என் மைத்துனர் காலமாயிட்டாரு. இந்த ஊர்க்கிளையை என் மகன் கவனிச்சுக்கிறான். பங்களூரை விட்டு இந்தண்டை அந்தண்டை நகர என்னாலே முடியாது. மதுரைக்கு என்ன செய்யறதுன்னு யோசிச்ச அப்போ என் மகன்தான் உங்க பேரை நினைப்பூட்டினான். விசாரிச்சப்போ நீங்க வேலையிலேருந்து ஓய்வான சேதி கிடைச்சுது. ரொம்ப நல்லதாப் போச்சுன்னு உடனே ஓடியாந்தேன். நீங்க அட்டி சொல்லாமெ பெரிய மனசு பண்ணணும்.''

''என்ன தணிகாசலம், பரிகாசம் செய்கிறாயா?''

''பரிகாசமா? சத்தியமான பேச்சுங்க, ஐயா. மனச் சுத்தம், கைச்சுத்தம் உள்ளவங்க வேறே யாரையாவது சொல்லுங்க. உங்களை விட்டுடறேன். அன்னிக்கு நீங்க என் வாழ்விலே ஏத்திவச்ச விளக்கு இன்னிக்குப் பேரொளியாய்ப் பிரகாசிக்குது. அதை எண்ணித்தான் என் மகன் என்னைவிடப் பிடிவாதமாய் இருக்கான். நீங்க ஒண்ணுமே செய்ய வேணாம். இருக்கிறவங்க வேலை செய்வாங்க. நீங்க கண்காணிச்சாப் போதும். உங்க சின்னப் பையனுக்கும் நல்ல சம்பளத்திலே அங்கேயே ஒரு வேலை போட்டுத் தரச் சொல்றேன். பெரிய புள்ளைக்கு அரசாங்க வேலை. கல்யாணமாகிக் குழந்தைகளும் இருக்கிறதாலே அந்தப் புள்ளை இங்கேயே....''

''அதெல்லாம் சரிதான், தணிகாசலம். இங்கே...''

''என்னங்க யோசனை? பழகின ஊரை விட்டுப் புது ஊரிலே போய் எப்படி இருக்கிறதுன்னா? மதுரை ரொம்ப நல்ல ஊருங்க. அரண்மனை மாதிரி நம்ம வீடு அங்கே இருக்கு. அதுலே நல்லா இருந்துக்குங்க. அப்புறம்....?''

''நல்ல யோசனைதான். ஆனால் திடீரென்று நான் இந்த ஊரைவிட்டுக் கிளம்ப முடியாதவனாக இருக்கிறேன், தணிகாசலம்.''

''அப்படியா? ஏன்? எதனாலே?''

''சில பேரிடம் கடன் பட்டிருக்கிறேன்.''

''பூ' இவ்வளவுதானே? பெரிய பாப்பா கல்யாணத்துக்கு வாங்கின பாக்கியாய் இருக்கும். அப்படி என்ன பிரமாதமா இருந்துடப் போவுது? எவ்வளவு வேணுமோ சொல்லுங்க. உடனே அனுப்பி வைக்கிறேன்.''

இதற்கு மேல் மறுக்க ராமநாதனுக்கு வாய் இல்லை. ''சம்மதம்'' என்றார். தணிகாசலம் சொன்னதுபோல் மதுரையில் அரண்மனை போன்ற பெரிய வீட்டில் ராமநாதன் குடும்பத்தோடு குடியேறி விட்டார். பழைய கடன் முழுவதும் அடைந்து வீட்டில் பரம நிம்மதி. தணிகாசலம் கொடுத்த தொகைக்கு ராமுவின் சம்பளத்தை மாதந் தோறும் ஈடுகட்டி, ராமநாதனின் சம்பளத்திலே குடும்பம் அழகாக நடந்தது. கம்பெனிக்கும் மற்ற இடங்களுக்கும் ராமநாதன் காரில் போய் வந்தார். இத்தனை குதூகல வாழ்க்கையினூடே பார்வதிக்கு ஒரு வருத்தம். ''இவ்வளவு பெரிய வீட்டிலும் தோட்டத்திலும்

ராகவன் குழந்தைகள் ஓடி விளையாடினால் எவ்வளவு நன்றாக இருக்கும்'' என்று பெருமூச்செறிந்தாள்.

''சிலபேர் சொல்வார்கள், 'மருமகள் வந்த வேளை, குடும்பத்தில் இருள் கவிந்தது' அவள் விலகினாள். அந்த இருளும் விலகிற்று' என்று. நான் அதை ஏற்கத் தயாராக இல்லை. இன்றும் என்றும் என் கால பலன்படியே எல்லாம் நடக்கின்றன என்பதே என் உறுதியான நம்பிக்கை, பார்வதி.''

''ஆறு வருஷ காலமாய் அண்ணன், அண்ணி குழந்தைகளோடு கலகல என்று இருந்துவிட்டு இப்போது அவர்களை யெல்லாம் பிரிந்திருப்பது எவ்வளவு வேதனையாக இருக்கிறது தெரியுமா?'' என்று லேகா கண் கலங்கினாள்.

''உனக்கு மட்டுந்தானா? இருபுறமும் இரு குழந்தைகளைச் சுமந்து அவர்கள் விளையாட்டுக்களைப் பார்த்துப் பூரித்த என் உள்ளமுந்தான் வேதனையால் வாடுகிறது. அசட்டுப் பெண்! அந்த நாகம்மாள் போதனையில் மயங்கி, உம்... .ஓரளவு புரியும்படி எல்லாம் சொன்னேன். புரிந்துகொண்டு திருந்தினாளானால்....'' என்று ராமநாதன் கூறி வருந்தினார்.

வாசலில் டாக்ஸி வந்து நின்றது. ராகவன், சாந்தா, குழந்தைகள் எல்லாரும் உள்ளே வந்தார்கள். சாந்தா, ராமநாதன் காலில் விழுந்து பணிந்து விசித்தபடி சொன்னாள்: ''அந்த நாகம்மாள் போதனையில் மயங்கி உங்கள் அருமை பெருமைகளை உணராமல் நடந்துகொண்டு விட்டேன். எல்லாரையும் பிரிந்து, இவர் அன்பையும் இழந்து, வறுமையில் நொந்து நான் பட்டபாடு போதும். நான்தான் இடைவிடாமல் வற்புறுத்தி இவரை மதுரைக்கு மாற்றல் வாங்கிக் கொள்ளச் செய்தேன். நிழலின் அருமை வெயிலில் தெரிந்தது. இப்போதுதான் எனக்கு நிம்மதி. இனிமேல் நீங்கள் கழுத்தைப் பிடித்துத் தள்ளினாலும் உங்களை எல்லாம் பிரிந்து நான் எங்கும் போகமாட்டேன். என்னை மன்னித்து விடுங்கள்!''

''சரி சரி, உள்ளே போய் முகம் கழுவிக்கொண்டு சாப்பிடு! குழந்தைகளைக் கவனி'' என்ற ராமநாதனின் முகத்தை நிமிர்ந்து பார்த்தாள். அந்த முகத்தில் மகிழ்ச்சி சுடர் விட்டது.

—நவம்பர், 1975

# புயலும் அமைதியும்

'ஸேனு'

ஊர்க் கோடியில் இருந்தது ஜினதேவர் கோயில். அது ஜைனர்களின் முக்கிய க்ஷேத்திரம். ஏழெட்டு ஜைனக் குடும்பங்களே அங்கே இருந்தன. அவர்களும் வேளாண்மையில் ஈடுபட்டு வெளியே ஜீவனம் நடத்துகிறவர்கள்தாம். வெகு நாளாகப் பழுது பார்க்காமல் அந்தப் பழைய கோயிலின் சுவர் பிளந்து காரை பெயர்ந்து கிடந்தது.

மாணிக்கத்துக்குப் பழைய சிற்பம் என்றால் மிகவும் ஆசை. காலேஜில் பழைய சரித்திரத்தை உபபாடமாக எடுத்துக்கொண்டிருந்தான். இந்தப் பழங்கோயிலைப் பார்க்கவேண்டுமென்று அவனுக்கு வெகு நாளாக ஆவல்.

ஆறு வறண்டு கிடந்தது. அதைத் தாண்டியதும் நிச்சந்தடியான இந்த ஊர். சூரிய அஸ்தமன சமயம். எல்லாம் சேர்ந்து அவன் மனத்தில் ஒரு நிம்மதி ஏற்பட்டது. கோயில் திறந்திருந்தது. உள்ளே கர்ப்பக்கிருகத்தில் ஒரே இருட்டாக இருந்தது. அதே சமயம் அர்ச்சகர் தீவட்டியோடு அங்கே வந்தார். இந்த மாதிரி வேடிக்கை பார்த்துவிட்டுப் போகிறவர் வருகிறவர்களோடு பழகியிருப்பதால் அவர் அந்தக் கோயிலின் அருமை பெருமைகளை நெட்டுருப் போட்டதுபோல் கடகடவென்று ஒப்பிக்க ஆரம்பித்துவிட்டார். சந்நிதியின் அகல் விளக்கில் எண்ணெயும் திரியுமிட்டு அதை ஏற்றிக்கொண்டே, ''இவர் தாம் மகாவீரர்'' என்று சொல்லியபோது சற்று வெளிச்சம் உண்டாயிற்று. அந்த ஒளியில் பிரம்மாண்டமான காரைச் சிலை ஒன்று - தியானத்தில் அமர்ந்த ஜினதேவரின் மூர்த்தி - காட்சியளித்தது. மாணிக்கத்துக்கு மெய் சிலிர்த்தது. பக்தியோடு கை கூப்பினான். அர்ச்சகர் பின்னும் உற்சாகத்துடன், ''1600 வருஷத்துக்கு முன் பல்லவ ராஜா கட்டின கோயில். இந்தக் காலத்திலே ஜைனத்தை யார் மதிக்கிறார்கள்? ஆனால் வேறு மதத்தவராக இருந்தாலும் உங்களைப் போல் பவ்யஜீவன்கள் அடிக்கடி வந்து பார்த்துவிட்டு ஏதாவது ஒன்று அரை கொடுத்துவிட்டுப் போகிறார்கள். கர்ப்பூர ஆரத்தி செய்யலாமா?'' என்று ஜாடையாகக் கேட்டார்.

மாணிக்கம் வேறு நினைவாகச் சிலையையே கண்கொட்டாமல் பார்த்துக்கொண்டிருந்தான். கடைந்தெடுத்ததுபோல் அங்க அமைப்பு உள்ள சிலை அது; அதைத் தொட்டுப் பார்க்க வேண்டுமென்று அவனுக்கு ஆசையாக இருந்தது; அர்ச்சகர் கடைசியில் சொன்னது

அரைகுறையாகக் காதில் விழுந்ததும் தூக்கத்திலிருந்து விழித்து எழுந்தவன் போல், ''செய்யுங்களேன். இந்தாருங்கள்'' என்று ஒரு முழு ரூபாய் நாணயத்தை அவரிடம் நீட்டினன். அது விளக்கு வெளிச்சத்தில் பளிச்சென்றது. அர்ச்சகரின் கண்களும் அதைப் போலவே பளபளத்தன. ஒரு பெரிய கர்ப்பூரக் கட்டியாகப் பார்த்து மடியிலிருந்து எடுத்து ஏற்றி அர்ச்சகர் மேலும் கீழுமாக இறக்கி, கர்ப்பூர ஆரத்தி காட்டினர். மாணிக்கம் சற்றுநேரம் அங்கே இருந்துவிட்டுச் சுற்றுப் பிராகாரத்தையும் கல்வெட்டுகளையும் கவனிக்கப் புறப்பட்டான்.

அதற்குள் இருட்ட ஆரம்பித்தது. வெளிப் பிராகாரச் சுவரில் சற்றுத் தூரத்துக்கு ஒரு தரம் மாடம் ஒன்று இருந்தது. மொத்தம் 24 தீர்த்தங்கரர்களின் குட்டிச் சிலைகள் அவற்றில் இருந்திருக்க வேண்டும். இப்போது ஏழெட்டுமட்டுமே இருந்தன. அவற்றில் சில, தலை போயும் முகம் தேய்ந்தும் கை ஒடிந்தும் காட்சியளித்தன. மேற்குப் பக்கமாக இருக்கும் மாடத்தண்டை வரும்போது வெள்ளை வெளேர் என்று சின்னஞ்சிறு சலவைக் கல் சிலை ஒன்று தெரிந்தது. நெருங்கிக் கவனித்தான் மாணிக்கம். ஜினதேவரின் உருவம். தொட்டுப் பார்த்தான். மழுமழுவென்று இருந்தது. அந்த அந்தி மங்கலிலும் அதன் முகத்தில் பால் வடிவது போன்ற பாவம் நன்றாகத் தெரிந்தது.

மாணிக்கத்தின் மனசில் சட்டென்று ஓர் எண்ணம் உதித்தது. அவன் சுற்றுமுற்றும் பார்த்தான். யாரும் அங்கே இல்லை. அந்தச் சிலை மேலோடு புதைத்திருந்தது; அதை ஓர் ஆட்டு ஆட்டினன். சிலை இடம் பெயர்ந்து வந்துவிட்டது. திக் திக் என்று மாணிக்கத்துக்கு இருதயம் அடித்துக்கொண்டது. இருந்தாலும் சமாளித்துக்கொண்டு அந்தச் சிலையைத் தன் கையிலிருந்த பையில் போட்டு மெதுவாக இருட்டில் கோயிலுக்கு வெளியே நழுவினன்.

ஊரைத் தாண்டும்வரையில் அவனுக்கு வாயிலும் பல்லிலும் ஈரமில்லை. இத்தனைக்கும் ஒரு நாய்கூட அவனைத் துரத்திக்கொண்டு வரவில்லை. பிறகு, ''அப்பாடா!'' என்று பெருமூச்சு விட்டான். ஜல் என்று வேர்த்தது. ஆற்று மணலைக் கடக்கும்போது மாணிக்கத்தின் மனத்தில் இருந்த உற்சாகத்தைச் சொல்லி முடியாது. 'நாம் செய்தது நல்லதுதான். இங்கே காற்றும் மழையும் பட்டு இந்த அருமையான சிற்பம் பாழாய்த்தானே போகும்! பத்திரமாக வீட்டில் கொண்டுபோய் நம் அறையில் வைத்துக்கொள்ளலாம்' என்று சொல்லிக்கொண்டே போனன்.

அன்று இரவு ரெயிலுக்கே சென்னைக்குப் புறப்பட்டுவிட்டான் மாணிக்கம். கையிலுள்ள அரிய கலைப் பொக்கிஷத்தை மடியில் வைத்துக்கொண்டு சென்றான். நடுவில் ஒரு ஸ்டேஷனில் வண்டி நின்றது. சப் இன்ஸ்பெக்டர் ஒருவர் இரண்டு மூன்று போலீஸ் சேவகர்களோடு அவன் இருக்கும் பெட்டியை நோக்கி வருவது தெரிந்தது. பகீரென்றது மாணிக்கத்துக்கு. அவன் முகம் வெளுத்துவிட்டது. 'தெரிந்துவிட்டது போல் இருக்கிறது. நம்மைப் பிடிக்கத்தான் வருகிறார்களோ?' என்று எண்ணினன். சப் இன்ஸ்பெக்டர் நேராக அவன் இருக்கும் வண்டியில் நுழைந்தார். மாணிக்கத்தின் கால் நடுங்க ஆரம்பித்தது. இருந்தாலும் தன்னைச் சமாளித்துக்கொள்ள ஒரு கனைப்புக் கனைத்துக்கொண்டான். சுற்றிலும் கவனித்தான். இன்ஸ்பெக்டர் அவனைத் தாண்டின பிறகுதான் விஷயம் புரிந்தது. அதே பெட்டியில் மூலைக்கு ஒருவராக யாரோ கிராமவாசிகள் நாலைந்து பேர் இருந்தார்கள். அவர்கள் காலடியில் இரண்டு மூன்று மூட்டைகள் காட்சியளித்தன. ஓர் ஊரிலிருந்து வெளியூருக்குப் 'பெர்மிட்' இன்றி அரிசி எடுத்துச் செல்லத் தடை விதித்திருந்த சமயம் அது. அவர்களை நெருங்கி இன்ஸ்பெக்டர், ''இதென்ன, அரிசிதானே?'' என்றார். கிராமவாசிகள்,

''தெரியாதுங்களே!'' என்றார்கள். ''பின்னே உங்கள் மூட்டை இல்லையா இது?'' என்றார் இன்ஸ்பெக்டர். ''இம்....இல்லீங்க'' என்று தயங்கிக்கொண்டே அவர்கள் பதில் சொன்னார்கள். அதிலிருந்தே விஷயம் தெரிந்துவிட்டது: இன்ஸ்பெக்டர் அவர்களை ஒரு விதமாகப் பார்த்துக்கொண்டே போலீஸ் சேவகர்களைவிட்டு மூட்டைகளைக் கீழே இறக்கி எடுத்துக்கொண்டு போய்விட்டார். பிறகு கிராமவாசிகள் ஏதோ முணுமுணுத்துக்கொண்டிருந்தார்கள். 'அப்பாடா! கடைசியில் இதற்கா பயந்து செத்தோம்!' என்று மாணிக்கம் பெருமூச்சு விட்டான்.

* * * *

மாணிக்கத்தின் அறை மேஜையில் ஜின தேவரின் வெள்ளைச் சலவைக் கல் சிலை வைத்திருந்தது. அதைச் சற்றுத் தூரத்திலிருந்து நின்றுகொண்டு பார்த்தான் மாணிக்கம். மொத்தத்தில் அந்த அறைக்கே அது சோபிதமாக இருப்பதுபோல் அவனுக்குப் பட்டது. பிறகு வெளியே புறப்பட்டுப் போனான். தெருக்கோடிக்கு வரும்போது ஒரு கடையில் தமிழ்த் தினசரிகளின் போஸ்டர்கள் தொங்கிக்கொண்டிருப்பதைக் கண்டான். விசேஷம் ஏதாவது இருக்கிறதா என்று கவனித்தான். இதென்ன, 'கோயிலில் களவு' என்று போட்டிருக்கிறதே! மாணிக்கம் அதே இடத்தில் நிலைத்து நின்றுவிட்டான். 'சரி, கண்டுபிடித்துவிட்டார்கள்போல் இருக்கிறதே! அந்த அர்ச்சகன் அடையாளம் சொல்லியிருப்பான். நம்மைக் கட்டாயம் பின்தொடர்ந்து பிடித்துவிடப் போகிறார்கள்! இப்போது என்ன செய்வது?' என்று யோசித்தான். எதற்கும் பத்திரிகையை வாங்கிப் படிக்கலாம் என்று ஒன்று வாங்கினான். கடைசிப் பக்கத்தில் ஒரு மூலையில், 'திருக்களிப்பூர்க் கோயிலில் களவு! லட்சம் ரூபாய் பெறுமான நகைகள் காணமல் போயின' என்று போட்டிருந்தது; அவ்வளவுதான்; மாணிக்கம் விழுந்து விழுந்து சிரிக்கத் தொடங்கினான். அங்கிருந்த ஒருவர், ''என்ன அப்பா, விசேஷம்? அப்படிச் சிரிக்கிறாயே!'' என்று கேட்டார். மாணிக்கம், ''ஒன்றுமில்லை'' என்று சொல்லிக்கொண்டே அந்த இடத்தை விட்டு நழுவினான். திரும்பி வரும்போது, 'அட என்ன, பைத்தியம்மாதிரி அங்கே சிரித்தோமே!' என்று அவனுக்கே பட்டது. அதோடு சிறிது கவலையும் அவனது முகத்தில் தோன்ற ஆரம்பித்தது. 'இன்றைக்கு இராவிட்டாலும் இன்னும் இரண்டு நாள் கழித்தாவது கண்டுபிடித்துவிட மாட்டார்களா?' என்று எண்ணியபோது அவனது மனத்தில் திகில் புகுந்து வாட்டியது.

வீட்டுக்குள் நுழைந்ததும் அவனுடைய தாய் அவனது முகத்தைக் கவனித்து, ''என்னடா மாணிக்கம், உடம்பு சரி இல்லையா?'' என்று கேட்டாள்.

''ஒன்றுமில்லையே, அம்மா!''

''சற்று நேரத்துக்கு முன்னே உன் சிநேகிதப் பையன் ஒருத்தன் வந்தான். அறைக்குள்ளே பார்த்தேன்; உன்னைக் காணவில்லை. ஏதோ பொம்மை வாங்கி வந்திருக்கிறாயே, சாந்தி பொம்மைமாதிரி; மேஜையிலே பார்த்தேன்.''

''ஆமாம், அம்மா..வாங்கவில்லை..''

''யாரேனும் கொடுத்தார்களா? உனக்குத்தான் இதிலே ஒரு பித்தாச்சே!''

''இல்லை. அம்மா..சொல்ல வெட்கமாய் இருக்குது.''

''என்கிட்ட என்ன வெட்கம்?''

"இல்லை. அந்த ஊருக்குப் போயிருந்தேனே, அப்போது அங்கே ஒரு கோயிலிலே இது இருந்தது. ஜைன சாமி சிலை!"

"என்ன, என்ன, கோயிலிலிருந்தா?..மாணிக்கம்!..மாணிக்கம்! என்னடா இது?"

"என்ன அம்மா, தப்பு? அங்கே இது காற்றிலும் மழையிலும் நனைந்து பாழாய்த்தானே போகும்?"

அவனுடைய தாயின் முகத்தில் திகிலும் கலவரமும் தாண்டவமாடின. "மாணிக்கம்! நீ நல்லா படித்த பையன். இப்படிச் செய்யலாமா? அதுவும் கோயில் சொத்தை எடுத்து வரலாமா? குலநாசம் என்பாங்களே!" என்று கையைப் பிசைந்துகொண்டாள்.

மாணிக்கத்தின் மனத்திலும் ஒருவித பீதி குடிகொண்டது. இருந்தாலும், "என்ன அம்மா, தப்பு? அந்தக் கோயிலோ இடிந்துகிட்டே வருது. நம்மிடத்திலே இருந்தாலாவது பத்திரமாக இருக்கும்" என்றான்.

அவனுடைய தாய் அதற்குமேல் ஏதும் கூறவிட்டாலும் அவளது மனத்துக்கு அது ஒப்பவில்லை என்று தெரிந்துகொண்டான் மாணிக்கம். பேசாமல் சாப்பிட்டுவிட்டுத் தன் அறையினுள் நுழைந்தான். அங்கே அரிக்கேன் விளக்கு எரிந்துகொண்டிருந்தது. அதன் வெளிச்சத்தில் அந்தச் சிலை பளிச்சென்று தெரிந்தது. மாணிக்கம் அதை உற்றுக் கவனித்தான். இதென்ன, பால் வடியும் அந்த முகத்தில் சோகக் களை! — மாணிக்கத்துக்கு என்ன செய்வதென்று புரியவில்லை. கடைசியில் விளக்கை அணைத்துவிட்டுப் படுக்கையில் சாய்ந்தான்.

* * * *

மாணிக்கம் அந்த ஜினதேவரின் கோயில் எதிரே நின்றிருந்தான். அர்ச்சகர் அந்தப் பக்கமாக வந்தார். "கதவைத் திறக்கவில்லையா?" என்று விசாரித்தான். "போ, ஐயா. உம்மைப் போல் ஆசாமிகளை இங்கே யார் வரச் சொல்றாங்கோ? இப்படி வருகிறதும் ஆள் இல்லாவிட்டால் அதையும் இதையும் திருடிக்கிட்டுப் போகிறதுந்தான் வேலை உங்களுக்கெல்லாம்! அதனால் சாமி பூஜைவாயில் மண் விழுந்தது. இதோ நாளைக்குத் தீபாவளி; எங்க சாமிக்கு முக்கியமான நாள். தீப அலங்காரம் பண்ணுவோம். இந்தத் திருட்டுக்கு அப்புறம் சர்க்கார் வந்து கதவை மூடிட்டாங்க. இந்தத் தடவை தீபாவளியும் நடக்காது. ஒரே இருட்டாகத்தான் இருக்கப்போவுது. திருடின பாவிங்களைச் சாமி சும்மா விடாது" என்று சாபம் இட்டார் அவர்.

மாணிக்கத்தின் மனத்தை ஏதோ ஒன்று உறுத்தியது. உண்மையைச் சொல்லிவிடலாமா என்று எண்ணினான். அப்போது உடம்பில் சில்லென்று ஓர் உணர்ச்சி ஏற்பட்டது.

* * * *

மாணிக்கம் துக்கி வாரிப் போட்டுக்கொண்டு எழுந்தான். குளித்துவிட்டு ஈரக் கையோடு அவனுடைய தாய் அவனைத் தொட்டு எழுப்பிக்கொண்டிருந்தாள். பொழுது விடிந்துவிட்டது.

"மாணிக்கம், நேற்று இரவெல்லாம் எனக்குத் துக்கமே இல்லையடா! இந்தச் சிலையின் முகம்போல் இருக்குது ஒரு குழந்தைக்கு; அந்தக் குழந்தை வந்து, 'என்னை வீட்டுக்குக் கொண்டு விடேன்! கொண்டுவிடேன்!' என்று கதறி அழுகிறமாதிரி இருந்தது" என்றாள் தாய்.

மாணிக்கம், முகத்தைத் தொங்கப் போட்டுக்கொண்டு, "என்ன, அம்மா, செய்யவேண்டும்?" என்றான்.

''பேசாமல் அதை மறுபடியும் அங்கேயே கொண்டு வைத்துவிடு'' என்றாள் அவனுடைய தாய்.

மாணிக்கம் பகுத்தறிவுள்ள வாலிபன்தான். அது வெறும் சிலை தானே என்று முதலில் அவனுக்குப் பட்டது. ஆனால் அந்த எண்ணத்தையும் மீறி ஏதோ ஒன்று அவனை, ''நீ செய்தது தவறு, தவறு!'' என்று குத்திக் காட்டிக்கொண்டே யிருந்தது. அதை மனத்திலிருந்து உதறப் பார்த்தான். இருந்தும் பகுத்தறிவுக்கு எட்டாத ஒரு சக்தி இருக்கத்தான் வேண்டுமென்ற ஒரு சந்தேகம் நடுநடுவே தோன்ற ஆரம்பித்தது. அதுவும் அன்று விடியற்காலை கனவு கண்டதிலிருந்து அவன் மனத்தில் நிம்மதியே இல்லை.

மாணிக்கம் படுக்கையை விட்டு எழுந்தான். ''அம்மா! எனக்குக் கூட என்னவோ மாதிரிதான் இருக்குது'' என்று, தான் கண்ட கனவை அவளிடம் சொன்னான்.

தாயின் கட்டளைப்படி அன்று காலை ரெயிலுக்கே அந்த ஊருக்குப் புறப்பட்டான். பையில் அந்த வெள்ளைக் கல் சிலை இருந்தது. அந்த ஸ்டேஷனில் வந்து இறங்கினதும் பக்கத்து ஊரில் சாயங்காலம் வரையில் தங்கியிருந்தான். அந்தி நேரம் ஆகும்போது ஆற்றைக் கடந்து ஊர் எல்லையை அடைந்தான். மார்பு திக்குத் திக்கென்று அடித்துக்கொண்டது. சுற்றிலும் உள்ள இயற்கைக் காட்சியில் அவன் மனம் சென்றால்தானே? கோயிலருகில் வரும்போது அவனது கால் எழவேயில்லை. கோயில் கதவு திறந்திருந்தது. அப்போதுதான் சந்நிதியில் அர்ச்சகர் விளக்கேற்றிக்கொண்டிருந்தார். அவர் அவனைக் கவனிக்கவில்லை. மெதுவாக அந்தச் சிலை இருந்த மாடத்தருகில் வந்தான்; சுற்று முற்றும் பார்த்துக்கொண்டே அதைப் பழைய இடத்தில் வைத்தான். அப்போதுதான் அவனுக்கு உயிர் திரும்பி வந்த மாதிரி இருந்தது. நிம்மதியோடு ஒரு பெருமூச்சு விட்டான். பிராகாரத்தைச் சுற்றும் போது அர்ச்சகர் ஒவ்வொரு மாடமாக அகல் விளக்கை வைத்து, திரியும் எண்ணெயும் இட்டு ஏற்றிக்கொண்டே வருவது தெரிந்தது. அவரை நெருங்க அவனுக்குத் திகிலாகத்தான் இருந்தது. அவனைப் பார்த்ததும் சிரித்துக்கொண்டே, ''என்ன, தீபாவளி தரிசனத்துக்காக வந்தீர்களா? வாருங்கள்; நல்ல நாளில்தான் வந்தீர்கள். இன்றுதான் மகாவீரர் ஜோதியில் கலந்த தினம். அதை உத்தேசித்துத் தீபாலங்காரம் விசேஷமாக இருக்கும்'' என்றார்.

மாணிக்கத்துக்கு அவர் இப்படிப் பேசியது ஆச்சரியமாக இருந்தது. இருந்தாலும் அவரோடு கூடவே போனான். வெள்ளைச் சிலை மாடத்தண்டை வரும்போதும் அவர் முன்போலவேதான் அகல் விளக்கை வைத்து ஏற்றினார். 'சரி, சிலை கெட்டுப் போன விஷயமே இவருக்குத் தெரியாதுபோல் இருக்கிறது!' என்று அப்போதுதான் தெளிவாகப் புரிந்துகொண்டான் மாணிக்கம்.

அகல் விளக்கின் ஒளியில் அந்தச் சலவைக் கல் சிலையின் முகம் நன்றாகத் தெரிந்தது. இப்போது அதில் சோகம் காணவில்லை; புன்னகை திகழ்ந்தது. மாணிக்கத்தின் மெய் சிலிர்த்தது. தலை வணங்கி வெகு நேரம்வரை அங்கேயே நின்றிருந்தான். பிறகு நிதானமாகச் சந்நிதியை நோக்கி நடந்தான். கோயில் முழுவதும் லட்சக்கணக்கான அகல் விளக்குகள் ஒளிரும் காட்சி ஆனந்தமாக இருந்தது; மாணிக்கத்தின் உள்ளத்திலும் இதுவரை இல்லாத ஓர் அமைதியும் இன்பமும் குடிகொண்டன.

—நவம்பர், 1950

# தாயின் பரிசு

'அநுத்தமா'

"ஏன்டா, வரதா, இன்றைக்கு என்கூட வருகிறாயா?" என்று கேட்டாள் பொன்னம்மா.

அவள் மகன் வரதன் கஞ்சிக் கலயத்தின் முன் உட்கார்ந்திருந்தான்.

"தோட்ட வேலை காலியாக இருக்குதாம். வாயேன், தள்ளின மட்டும் தள்ளட்டுமே; புதுத் துணி எடுக்கவாவது உபயோகப்படுமே!" என்றாள் பொன்னம்மா.

"போ, போ, தொழிற்சாலையிலே வேலை செய்த கை, மண்ணை வெட்டுமா?"

"மண் வெட்டினால் மதிப்புக் குறைவாடா. கண்ணு? கம்பி இழுத்தால்தான் கண்ணியமா? உடலை உழைத்து வேலை செய்ய வேண்டும்! அது எந்த வேலையானால் என்ன?"

"சரிதான் போ அம்மா! உனக்கு எங்கே புரியப் போகிறது?" என்று சலித்துக்கொண்டு வரதன் ஒரே மடக்கில் கஞ்சியைக் குடித்துவிட்டு எழுந்து போய்விட்டான்.

வரவர அவன் போக்கே அவளுக்குப் பிடிக்கவில்லை. அவள் முணுமுணுத்துக் கொண்டே சட்டிப் பானைகளைக் கழுவ கிணற்றடிக்குக் கொண்டு போனாள்.

அவளுடைய பெண் எல்லம்மா நீர் சேந்திக்கொண்டிருந்தாள். தாயின் ஏமாற்றமடைந்த முகத்தைக் கவனித்து. "ஏன் அம்மா, ஏன்தான் இப்படி உருகி உருகிப் போகிறாயோ?" என்று கேட்டாள்.

"உருகிப் போகாமல் உப்பித்தான் போவேன், உங்களை எல்லாம் பெற்று எடுத்த பெருமைக்கு!"

"ஏன்? அண்ணன் தோட்ட வேலைக்கு வரமாட்டேன்னு சொல்லிவிட்டதா?" என்று சிரித்தவண்ணம் கேட்டாள் எல்லம்மா.

"சிரி, சிரி; நம் பிழைப்புத்தான் சிரிக்குதே!" என்று ஆத்திரத்துடன் பேசிக்கொண்டே பானையை வைத்து அழுத்தி அழுத்தித் தேய்த்தாள் தாய்.

''பொன்னக்கா, உங்கள் மருமகள் எங்கே? வந்த பெண்ணை வேலை வாங்குகிறுயே; பாவம், முழுகாமல் இருக்கே!'' என்றுள் அடுத்த வீட்டுக் குமுதம்.

''மகளாவது மருமகளாவது! இன்னும் இரண்டு பேர் இருந்தாலும் வேலை செய்ய வேண்டியதுதான் இந்த வீட்டிலே!'' என்றுள் பொன்னம்மா.

தண்ணீர் சேந்தும் சாக்கில் ஊர்வம்பைச் சேந்தும் விஷமக் காரிகளுடன் பேசப் பிரியப்படாத பொன்னம்மா, சட்டென்று எழுந்து தன் வீட்டுக்குள் சென்றுவிட்டாள். ''நம் தொல்லையே தலைக்கு மேலே இருக்கிறது. இவர்கள் வேறே உயிரை எடுக்கிறுர்கள்'' என்றுள் எரிச்சலுடன்.

எல்லம்மா தன் தாயின் செய்கைகளைக் கண்டு சிரித்துக் கொண்டே கேழ்வரகைக் குற்றிப் புடைத்துக்கொண்டிருந்தாள். ''ஏன் இன்றைக்குக் காலை முதல் சிடுசிடென்று வெடித்துக் கொண்டே இருக்கிறுய்?'' என்று கேட்டாள்.

''ஆமாம்டி; நான் வெடிமருந்து. நீங்கள் அமைதியாய் இருங்கள். என் உயிர் போய்விட்டால் நன்றுக இருக்கும்.''

''கோபித்துக்கொள்ளாதே, அம்மா. என்ன செய்கிறது சொல்லு. உன் கஷ்டம் எனக்குத் தெரிகிறது. உன் உடம்பிலே வலுவு இருக்கிற வரையிலும் நீ உழைக்கிறுய். வேறே என்ன செய்வாய் நீ?''

''வேதாந்தம் நன்றுகத்தான் பேசுகிறுய். நாளை விடிந்தால் நோன்பு. நோன்புக்கு அதிரசம் சுடவேணும். பணியாரம் படைக்கவேணும். ஒருத்தர்போல நான் என்னவாவது உன்னை உட்கார்த்தி வைத்து, வாய்க்கு வேண்டியது வேண்டாததைக் கேட்டுச் செய்து கொடுக்கிறேனு?'' பொன்னம்மாவின் கண்ணில் நீர்கூட வற்றிவிட்டது போலும். தொண்டை நடுக்கம் ஒன்றுதான் அவள் உணர்ச்சியை வெளிப்படுத்தியது.

எல்லம்மா தன் தாயைப் பார்த்தாள். ஒட்டி உலர்ந்த சரீரம். நல்ல உயரம் இருந்தபடியால் பெரிய நீளக் கதவு ஒன்று நடந்து செல்வது போல இருந்தது. எலும்புக் கூட்டின் விஸ்தாரத்தினுல் ஓரளவு ஆகிருதி இருந்தது அவளுக்கு. இரண்டு நிறப் புடைவைத் துண்டுகளைச் சேர்த்துப் புடைவயாகக் கட்டித் தண்ணீரிலும் சேற்றிலும் நடந்து நடந்து சேற்றுப்புண் அரித்த அவள் பாதங்கள் சப்பையாகத் தேய்ந்துவிட்டன. கைகளோ பற்றுத் தேய்த்து, துணி துவைத்து, இடித்து, அரைத்து, குற்றி, வெறும் கரடு முரடாக முறுக்கேறிய எலும்புக் கூட்டங்களாகக் காணப்பட்டன. பாவம்.

''நேரமாய்விட்டது. இந்தப் பாழாய்ப் போகிறவன் வர மாட்டானென்று தெரிந்தால் விடிகிறதற்கு முன்னேயே போயிருப்பேன். அவர்கள் என்ன சொல்வார்களோ? சொல்லட்டும். என்ன சொல்லப் போகிறுர்கள்? வேலையை விட்டுப் போய்விடு என்று சொல்வார்கள். வந்துவிடுகிறேன். அப்பனும் பிள்ளையும் மகளும் மருமகளும் திண்டாடட்டும். இன்னும் எத்தனை நாள் இந்த வண்டி ஓடப் போகிறது!'' இப்படித் தனக்குள் பேசிக்கொண்டே பொன்னம்மா தன்னுல் இயன்றவரை விசை நடை போட்டாள்.

அவள் எதிர்பார்த்தபடியே அவள் வேலை செய்துகொண்டிருந்த வீட்டு எசமானி வெகு கோபத்துடன் அவளை வரவேற்றுள்.

''பொன்னம்மா என்ன வரவர உனக்கு? பண்டிகை நாளும் அதுவுமாத் தெருவிலே தண்ணீர் போடுகிற வேலைகூட எங்களைச்

சேர்ந்ததுதானு? அழகாகத்தான் இருக்கிறது! நாளை விடிந்தால் தீபாவளி. மாப்பிள்ளை வருவதும், விருந்தாளி வருவதும் வீட்டிலே வேலை நிமிர் வாங்கப் போகிறது எனக்கு. வேளைக்குப் பாத்திரங்கூடத் துலக்கித் தராமல் இருந்துவிடு. தாட்சிண்யமே பார்க்காமல் இன்றோடு சீட்டுக் கிழித்துவிடுவேன்'' என்று மிரட்டினுள் எசமானி.

பொன்னம்மா ஒன்றும் சொல்லவில்லை. பேசாமல் விடுவிடென்று வீட்டுக்குள் நுழைந்தாள். கொல்லைப்புறத்தில் அம்பாரமாகக் கிடந்த பற்றுப் பாத்திரங்களைத் துலக்குவதில் இறங்கிவிட்டாள்.

''இந்தா, வீட்டை விளக்கு. கோலம் போட வேண்டும்'' என்ருர்கள்.

''இந்தா, வெந்நீர் அறையைச் சுத்தமாக்கு!'' என்ருர்கள்.

பொன்னம்மா மௌனமாகத் தன்னுல் இயன்றவரை பம்பரமாகச் சுற்றினுள். அன்று என்றுமில்லாத சோர்வு அவளை ஆட்கொண்டது. பிள்ளையுடன் கெஞ்சும் அவசரத்தில் அவள் ஒரு விழுங்குக் கஞ்சி கூடக் குடிக்காமல் வந்துவிட்டாள். இப்பொழுது கண் இருட்டிக் கொண்டு வந்தது. மனச் சோர்வு வேறு. பொன்னம்மா தாங்காத குமுறலுடன் வீட்டைத் துடைப்பம் போட்டுப் பெருக்கினுள்.

கூடத்தின் மத்தியில் பாய் விரித்து வீட்டினருக்கு வாங்கின ஜவுளியெல்லாம் கிடந்தது. அவள் துடைப்பத்தை நிறுத்தி வைத்துக் கொண்டு, ''அம்மா, இந்தச் சாமான்களெல்லாம் எடுத்தால்தானே நான் கூட்ட முடியும்? அப்புறம் பொன்னம்மா சரியாகத் துடைப்பம் போடவில்லை. 'போடி கழுதை வீட்டுக்கு' என்று திட்டுகிறீர்கள்'' என்று குரல் கொடுத்தாள் அவள்.

வீட்டில் எசமானியம்மாளும் பெண்ணுமாகக் குவிந்து கிடந்த துணிமணிகளை அள்ளிக்கொண்டு போஞர்கள். பொன்னம்மா பாயை உதறினுள். அதிலிருந்து ஒரு சிறு தங்க வளையல் உருண்டு ஓடியது. அவள் அதை எடுத்து எஜமானியிடம் கொடுத்து, ''இந்தாருங்கள், கண்ட இடத்திலும் போட்டுவிட்டு ஏழைகள் மண்டையை....'' என்ருள்.

அவள் பேச்சைப் பூர்த்தியாக முடிப்பதற்குள் வீட்டின் பெரிய பெண் சீறிக்கொண்டு வந்தாள். ''போதும். வெறுமனே வாயை வளர்க்காதே! நானும் காலை முதல் பார்க்கிறேன். வேலைக்குச் சரியாக வராததும் இல்லாமல் முணுமுணுப்பும் சிடுசிடுப்பும் அதிகமாகத்தான் இருக்கின்றன'' என்று அவள் கடிந்து கொண்டாள்.

''ஏனம்மா, என்னை விட்டால் உங்களுக்கு ஆளா கிடைக்காது? அம்மாதான் சொல்லிவிட்டார்களே!'' என்ருள் பொன்னம்மாவும்.

''வாய் அதிகமாகிவிட்டது!'' என்று கூறிக்கொண்டே வீட்டுப் பெண் உள்ளே போய்விட்டாள். அப்பொழுது தெருவிலிருந்து வீட்டுப் பெரிய பிள்ளை வந்து, ''பொன்னம்மா, உன் மகன் வந்திருக்கிருன்'' என்ருன்.

மகன் வந்திருக்கிருன் என்றவுடன் பொன்னம்மா பின்னும் சிடுசிடுத்த முகத்துடன் வெளியே சென்று பார்த்தாள்.

வரதன் வராந்தாவில் நின்றிருந்தான். ''அம்மா, என்னவோ வேலை இருக்கிறதென்ருயே?'' என்று கேட்டான்.

''நீதான் கால்சட்டை, கைச்சட்டை போட்ட பெரிய உத்தியோகஸ்தனுச்சே; மண்வெட்டி பிடிப்பாயோ?'' என்று இரைந்தாள் பொன்னம்மா.

அவள் குரலைக் கேட்டு விட்டு எசமானி வெளியே வந்தாள். "பொன்னம்மா, என்ன சத்தம்?" என்று கேட்டாள்.

"தோட்ட வேலை இருக்கிறது என்றீர்களே? வந்திருக்கிறான் என் மகன்" என்று சுருக்கமாகக் கூறிவிட்டு, அவள் உள்ளே தன் வேலையைப் பார்க்கப் போனாள்.

அவள் வெகு நேரம் கழித்துத் தோய்த்த துணிகளை உலர்த்த மேல்மாடிக்குச் சென்றபோது மாடிக் கூடத்தில் அவள் மகன் ஸ்விட்சைச் சரிபார்த்துக்கொண் டிருந்தான். திருப்புளியும் கம்பியும் வைத்துக்கொண்டு அவன் என்ன செய்துகொண் டிருந்தானோ தெரியாது. அவள் கீழே இறங்கிவிட்டாள். ரேடியோ போடும் ஸ்விட்சைப் பழுது பார்த்தான் போலும். ரேடியோ தரையில் வைத்திருந்தது. அதன்மீது கைக்கடிகாரம் இருப்பதை அவள் கண்டாள். மணி பார்த்தாள்.

"வெயில் தலை வெடித்தாலும் வீடு போக நேரம் கிடைக்காது" என்று முணுமுணுத்துக்கொண்டே அவள் தன் வேலைகளைச் செய்துகொண்டிருந்தாள்.

"பொன்னம்மா, இந்தா வைத்துக்கொள்" என்று சொல்லிக்கொண்டே அவளிடம் பணத்தைக் கொடுத்தார்கள்.

"என்னம்மா கணக்குத் தீர்த்துக் கொடுத்தீர்களா?" என்று கேட்கும்போது பொன்னம்மாவின் முகம் வெளிறிட்டது.

"இல்லை, இல்லை. பண்டிகை வருகிறதே, செலவு இருக்கும் என்று கொடுத்தேன். கையிலே பணம் இல்லாமல்தான் நீ இன்று கடுகடுவென்று இருக்கிறாய்; தெரியாதா?" என்றாள் எசமானி.

பொன்னம்மா பணத்தைப் பெற்றுக்கொண்டு தன் வீடு சென்றாள். பெண் எல்லம்மா அடுப்பில் மாவுச் சோறு கிண்டிக்கொண் டிருந்தாள். மருமகள் மூலையில் துணியை விரித்துப் போட்டுப் படுத்திருந்தாள். வாசற்படியின் பக்கத்தில் திண்ணையில் பொன்னம்மாவின் கணவன் தேவராஜு, தன் மலைபோன்ற சரீரத்தைப் போட்டுக்கொண்டு நல்ல உறக்கத்தில் ஆழ்ந்திருந்தான். இடுப்பிலே சிவப்பும் வெள்ளையும் கட்டம் போட்ட கைலி, உடம்பில் வலைப் பனியன்; அவன் பக்கத்தில் ஒரு சீட்டுக் கட்டும், இரண்டு பீடிகளும் தீப்பெட்டியும் இருந்தன.

"பார்த்தாலே போதும், சே!" என்று அலுத்துக்கொண்டே பொன்னம்மா உள்ளே போனாள்.

கையில் கிடைத்த பணத்துக்கு அவள் சில பண்டங்கள் வாங்கி வந்திருந்தாள். பொட்டலங்களை அவிழ்த்துக் கொட்டிப் பார்த்தாள். எல்லம்மா தாயினிடம் ஏதோ கண்சாடை காட்டினாள். பொன்னம்மா புரியாதது போலக் கவிழ்ந்த தலையைத் தூக்கவில்லை. பிறகு எல்லம்மா வெளிப்பக்கம் போய் நின்றுகொண்டு, "ஏ அம்மா, கொஞ்சம் வந்து ஒரு குடம் தண்ணி இழுத்துக் கொடேன்!" என்று அழைத்தாள்.

"நான் இவ்வளவு நேரம் ஊஞ்சலாடி விளையாடிவிட்டு வந்தேனாக்கும்! உனக்குத் தண்ணீர் எடுக்கிறேனடி!"

பிறகு பெண் அழைக்கும் அவசரத்தை உத்தேசித்து எழுந்து சென்றாள் தாய். கிணற்றங்கரையில் யாரும் இருக்கவில்லை. அங்கே குடத்தை வைத்துவிட்டுத் தாழ்ந்த குரலில் பேச ஆரம்பித்தாள் எல்லம்மா.

''அம்மா, நீ அந்தண்டை போனதுதான்; இங்கே ஒரே யுத்த களம். அண்ணி அண்ணனை அடிக்காத குறையாய்ப் பேசியது? வேலையிலே நிற்க வக்கில்லையாம். ஒரு பொட்டுப் பொன், ஒரு புடைவை நூல் கூட வாங்கித் தராத புருஷன் ஏன் கல்யாணம் கட்டிக்க வேணும், அப்படி இப்படி என்று பேசி, அண்ணன் கத்த, அவள் கத்த, கடைசியிலே நன்றாகப் புடைத்துவிட்டுப் போய்விட்டான். அப்பொழுது முதல் அழுதுகொண்டு படுத்திருக்கிறாள். அப்பா வேறே வந்து குதிகுதியென்று குதித்தாயிற்று. பணம் வேணுமாம்.''

''யார் இந்த ஆளை வரச் சொன்னார்கள் வீட்டுக்கு? பிடித்து வெளியே தள்ளுகிறதுதானே? குடித்துவிட்டு வீட்டிலே உருளுவதற்கு நாம்தான் துட்டுக் கொடுக்க வேணுமா?'' என்றாள் பொன்னம்மா.

''அதுக்குத்தான் பசியோ என்னவோ என்று கொஞ்சம் கஞ்சி கரைத்துக் கொடுத்தேன். அப்புறம் மாவுச் சோற்றையும் தின்ன ஆரம்பித்தேன்.''

''எதைத்தான் செய்து வை. தின்னுகிறதுக்குப் படைதான்; செய்யத்தான் படை இல்லை'' என்று கூறிப் போய்விட்டாள் பொன்னம்மா. பிறகு வாங்கி வந்த சாமான்களை ஒழுங்குபடுத்திக் கண் மறைவாக வைத்துவிட்டு ஓர் ஓரமாகப் படுத்தாள். எல்லம்மா தொந்தரவு செய்து அவளை ஒரு குவளை கஞ்சி குடிக்க வைத்தாள்.

மாலை நேரமான பிறகுதான் பொன்னம்மா கண் விழித்தாள். அதற்குள் யார் மனம் எப்படி மாறியதோ தெரியவில்லை. வீட்டில் எண்ணெய்ப் புகையும் வெல்லப் பாகின் வாசனையும் சூழ்ந்துகொண்டிருந்தன. பொன்னம்மா எழுந்து ஒத்தாசை செய்யப் போனாள். மகளும் மருமகளும் அதற்கு இடந் தரவில்லை. பிறகு வேறு வழியின்றி அவள் வெளியே கிளம்பிவிட்டாள்.

''பண்டிகை தினம். கூழ் குடிக்கிறோமோ, பாயாசந்தான் சாப்பிடுகிறோமோ, யார் கண்டார்கள்? நல்ல முகமும் தலையில் பூவும் வகயில் வெற்றிலையும் இருந்தால் போதுமே'' என்று தனக்குள் பேசிக்கொண்டே அவள் கடைத் தெருவில் ஒரு முழம் பூ, நான்கு வாழைப் பழங்கள், ஒரு தேங்காய், அரையணாவுக்குச் சூடம் எல்லாம் வாங்கி மடியில் கட்டிக்கொண்டிருந்தாள். அப்பொழுது எசமானருடைய வீட்டிலிருந்து ஓர் ஆள் வந்து அவளை அழைத்துச் சென்றான். திடீரென்று இப்படி அழைப்பு வந்ததும் அவள் நடுநடுங்கிவிட்டாள்.

போனவுடனே அவள் திகில் பன்மடங்கு அதிகரிக்கும்படி நிகழ்ச்சி நடந்தது. தெருவிலேயே குரோதம் பொங்கும் விழிகளுடன் வீட்டின் எசமானர் காத்துக்கொண்டிருந்தார்.

''பொன்னம்மா, இன்றைக்குச் சின்ன ஐயா கைக்கடிகாரம் போய்விட்டது. நீ எங்காவது பார்த்தாயா?'' என்று கேட்டாள் எசமானியம்மாள்.

பொன்னம்மாளின் விழிகள் பிதுங்கின; ஒரு பதிலும் அவளால் சொல்ல இயலவில்லை.

''உன்னைத் தவிர ஒருத்தரும் புதிய மனிதர்கள் வரவில்லை. யோசித்துச் சொல்.

பொன்னம்மா யோசித்தாள் போலும். அவள் பதில் சொல்ல ஒரு விநாடியாயிற்று. ''எங்கேயாவது வைத்துவிட்டு ஏழைகளை வதைக்கலாமா, அம்மா? நான் காலையிலேயே வளையலை எடுத்துக் கொடுக்கவில்லையா? திருடிப் பிழைத்துத்தான் உங்கள் வீட்டிலே ஐந்து வருஷ

மாக வேலை செய்கிறேனு? கொஞ்சம் ஈவு, இரக்கம் இருக்க வேண்டாம்? ஒரேயடியாக..'' என்று அவள் புலம்ப, அவளைப் பேச முடியாமல் தடுத்துவிட்டார்கள் வீட்டினர்.

''சரி, சரி. அதெல்லாம் எதற்கு? நீ எடுக்கவில்லையென்றால் சொல்லிவிட்டுப் போயேன். நல்ல நாளும் அதுவுமாக அழுது தொலை வானேன்?'' என்றார் எசமானர்.

''சத்தியமாக நான் எடுக்கவில்லை, சாமி'' என்றாள் பொன்னம்மா. பிறகு தலை நிமிராமல் வீட்டுக்குத் திரும்பினாள்.

''சரி, வேறு வழியில்லை. போன் செய்து போலீசுக்குச் சொல்லி விடவேண்டியதுதான்'' என்று வீட்டு எசமானர் கூறுவது மிதந்து அவள் செவியில் வந்து விழுந்தது. ''ஆ, போலீசா!'' என்று அலறியது அவள் மனம். அதன்பின் கால்கள் நடக்கவில்லை; பறந்தன வீட்டை நோக்கி.

அவள் வீட்டுக்குள் நுழைந்தாள். இடுப்பில் கட்டியிருந்த சாமான்கள் அவிழ்ந்து கொட்டின. அவை சிதறிக் கிடக்க, அவள் ஆவேசம் வந்தவளைப் போல மூலையில் அடுக்கியிருந்த பானைகளெல்லாம் உருட்டினாள். சரப்பட்டையில் கையை விட்டுத் துழாவினாள். அவள் கண்கள் வெறிபிடித்த பார்வை பார்த்தன.

''என்ன அம்மா வேண்டும்?'' என்று எல்லம்மா என்ன கேட்டும் அவள் பதில் சொல்லவில்லை. அவள் தலை அவிழ்ந்து கழுத்துப் பட்டையில் புரண்டது. குங்குமம் கலைந்து நெற்றி அலங்கோலமாகக் கிடந்தது. பிறகு சற்று நிதானம் தோன்றியது. அவள் ஏதோ ஒரு பொருளை எடுத்துத் தன் இடுப்பில் செருகிக் வைத்துக்கொண்டாள். உடனே யார் என்ன கேட்டும் பதில் சொல்லாமல் இருளில் மறைந்தாள். அவள் கிளம்பியபோது பிரமாத சந்தோஷத்துடன் எல்லம்மாவும் அவள் தகப்பனும் சாப்பிட்டுக்கொண்டிருந்தனர். வரதன் மட்டும் பேசாமல் உணகலத்தின் முன் இருந்தான். இவை பொன்னம்மாவின் கண்களில் பட்டன; கருத்தில் பதியவில்லை.

பொன்னம்மா எந்த வேகத்துடன் வெளியே கால் எடுத்து வைத்தாளோ அதைவிட விரைவில் திரும்பிப் பின்பக்கமாகவே நடந்து தன் குடிசைக்குள் வந்து விழுந்தாள். வாசற்படியில் அவள் வேலை செய்துவந்த வீட்டின் மனிதர்கள் நின்றனர். பெரிய இடத்து ஆண்கள் இருவர் வந்திருப்பதைப் பார்த்துப் பொன்னம்மாவின் கணவன் எழுந்து வந்து அவர்களை மரியாதையுடன் வரவேற்றான்.

''வாருங்கள் சாமி, ஏது இந்த ஏழைக் குடிசையிலே..?'' என்று குழைந்தான் அவன்.

''சொல்கிறேன், சொல்கிறேன். பொன்னம்மா எங்கே?'' என்று வந்தவர் பதில் சொல்வதற்குள் பொன்னம்மா எசமானர் காலில் விழுந்துவிட்டாள்.

அவள் உடலெல்லாம் வேர்த்து ஆறுகப் பெருகியது. வலிப்பு வந்தவள்போல அவள் நடுக்கத்துடன் தடுமாறினாள். அவள் கண்கள் பஞ்சடைந்தன.

''சாமி, என்னை மன்னித்துவிடுங்கள்; தெரியாமல் செய்து விட்டேன். இந்தாருங்கள்!'' என்று அவள் தன் இடுப்பில் இருந்த கடிகாரத்தை எடுத்து எசமானரின் காலடியில் வைத்தாள்.

''எனக்கு அப்பொழுதே சந்தேகம். ஐந்து வருஷமாகப் பழகினவள் ஆயிற்றே, போலீஸ்காரன் கிட்டே அடிபட வைக்கக்

கூடாது? நல்ல நாளும் அதுவுமாக நம் வீட்டில் ரகளை வேண்டாம் என்று இங்கேயே வந்தோம். இத்தனை வருஷங்களாக இல்லாத ஒரு சிடுசிடுப்பு இன்று இவளுக்கு. தினம்போல் இல்லாமல் வேறு விதமாக இருக்கும்போதே சந்தேகம் தட்டியது. நாங்கள் நேராக வந்ததும் நல்லதாகப் போயிற்று. ஏன், அம்மா, வாய் திறந்து இனும் கேட்டிருக்கக் கூடாதா? நம்பின வீட்டில் மோசம் செய்யலாமா?'' என்றார் எசமானர்.

பொன்னம்மா கட்டைபோலக் கிடந்தாள். இத்தனையையும் கேட்டுக்கொண்டிருந்த அவள் கணவன் ஒரு விறகை எடுத்து அவளைச் செம்மையாக அடித்துவிட்டான்.

''திருட்டுப் பிழைப்பா பிழைக்கிறாய்? ஓடு கழுதை, வீட்டைவிட்டு!'' என்று அவன் ஓங்கி ஓங்கி அடிக்கலானான். வந்தவர்களுக்கே அது பொறுக்கவில்லை. பொன்னம்மாவின் வாயிலிருந்து ரத்தம் கசிந்தது.

எங்கிருந்தோ மூலையிலிருந்து எழுந்து வந்த வரதன் தந்தையின் கையைப் பிடித்துக்கொண்டுவிட்டான். அவன் கண்கள் கோவைக் கனியாகச் சிவந்திருந்தன. தொண்டை கரகரத்தது.

''இருங்கள், அப்பா. அம்மாளை ஏன் போட்டுக் கொல்கிறீர்கள்? நாம் தினம் தினம் அணு அணுவாக அவள் மனசைக் கொலை பண்ணுகிறோமோ, அது போதாதா? உடலையும் அடித்துப் போடவேணுமா?''

''அட போடா, பேச வந்துவிட்டான்! நான் குடிப்பேன், சீட்டாடுவேன், பாட்டுப் பாடுவேன். ஒருத்தர் சொத்து மேலே விரல் வைப்பேனா? திருடலாமா? திருட்டுக் கழுதையை வீட்டிலே வைக்கலாமா? சே, மானங்கெட்ட பேமானி!'' என்று அவன் கர்ஜித்து மீண்டும் கையை ஓங்குவதற்குள் வரதன் தாயின் உடலை அணைத்துக் கொண்டு குறுக்கே விழுந்து அடுத்த அடியைத் தன் முதுகின்மேல் தாங்கிக் கொண்டான்.

''சாமி, கடிகாரத்தை எடுத்தது நான்தான். ஸ்விட்சு ரிப்பேர் பண்ணும்போது ரேடியோ மேல் இருந்தது அது. ஒரு விநாடி சபலத்திலே எடுத்துவிட்டேன். இன்று காலையிலே என் பெண்சாதிக்கும் எனக்கும் சிறு சச்சரவு. மனசு கலைந்திருந்த வேகத்தில் புத்தி மழுங்கிவிட்டது. அப்போது முதல் என் மனசு கிடந்து உளைகிறது: ஆனால் என்னால் என் தாய்க்குக் கஷ்டம் வரும் என்று நான் நினைக்கவே இல்லை. என்னைப் போலீசுக்குக் கொண்டு போங்கள்'' என்றான் வரதன். அவன் தலை அவமானத்தினால் குனிந்தது.

இதுவரை மூச்சுவிடக்கூடத் திராணியற்றுச் செத்தைபோலக் கிடந்த பொன்னம்மா இப்பொழுது ''இல்லை, இல்லை; அவன் பொய் சொல்கிறான்..நான்தா....'' என்று குழறினாள்.

வந்தவர்கள் இந்தக் காட்சியைக் கண்டு சிலையாக நின்றனர். எசமானரின் மூத்த மகன் முதலில் பேசினான். ''இவனைப் போலீசில் ஒப்படைக்க வேண்டியதுதான், அப்பா; யோசிக்காதீர்கள்'' என்றான்.

''வேண்டாமடா, இரு'' என்று கூறிவிட்டு, வரதனைப் பார்த்து ''நீ சொல்வது உண்மைதானா?'' என்று கேட்டார் எசமானர்.

''ஆண்டவனுக்குப் பொதுவாகச் சத்தியம். இதுதான் நான் முதல் தடவை வழி பிசகியது'' என்றான், தலை நிமிராமல்.

பொன்னம்மா முனகிக்கொண்டே எழுந்து உட்கார்ந்தாள். எசமானர் அவள் அருகில் குனியவும் அவள் கூசிக்கொண்டு எழுந்திருக்க முயன்றாள்.

''வேண்டாம் இரு, பொன்னம்மா. நீ எவ்வளவு பெரிய தப்புப் பண்ணிவிட்டாய், பார்த்தாயா? அவன் செய்த திருட்டை மறைத்ததால் மீண்டும் திருட வழி வகுத்த மாதிரி ஆகிவிட்டதல்லவா?'' என்றார்.

''சாமி, நான் ஏழை. எனக்கு அதெல்லாம் எப்படித் தெரியும்?' நான் படிக்காத மூடம். பையன் தவறு செய்துவிட்டான். நீங்கள் எப்படியும் எங்கள் வீட்டைச் சோதனை போடுவீர்கள் என்று தெரிந்தும், ஓடி வந்தேன். அதுக்குள்ளே....''

''அது சரி. நீ இப்படி நடந்தது அவன் தப்புச் செய்கிறதுக்கு ஒத்துழைக்கிற மாதிரி இல்லையா?''

''சாமி, உங்கள் மகனுக்கு நீங்கள் நினைத்தால் இந்தக் கடிகாரத்துக்குப் பதிலாக ஆயிரம் ரூபாயிலே ஒன்று வாங்கித் தீபாவளிப் பரிசாகக் கொடுத்துவிடுவீர்கள். ஆனால் என் மகனுக்கு நான் என்ன கொடுக்க முடியும்? இந்தச் சரீரத்தினாலே முடிந்ததைத்தானே செய்ய முடியும்? நான் திருட்டுப் பட்டம் கட்டிக் கொண்டாலும், ஜெயிலுக்குப் போனாலும் எப்படியோ என் மீதி ஆயுசைக் கழித்துவிடலாம். அவனுக்கு அவப் பெயர் வந்து விட்டால்..அவன் ஆயுசே இன்னும் தொடங்கவில்லையே! எப்படித் தலைநிமிர்ந்து வாழ்ந்து, பெண்டாட்டி பிள்ளையைக் காப்பாற்றுவான்? அதனால்தான்....'' மேலே பேச முடியாமல் தலை சுற்றி மயங்கி விழுந்துவிட்டாள் பொன்னம்மா.

''அம்மா!'' என்று ஒரு குரல் எடுத்து அலறினான் வரதன். அறியாமல் செய்த அபசாரங்களுக்கெல்லாம் கழிவிரக்கம் காட்டியது அந்தத் தொனி.

வந்தவர்கள் பொன்னம்மாவின் முகத்தில் தண்ணீர் தெளித்து அவளை விழிக்க வைக்க உதவினர். பொன்னம்மா கண் திறந்ததும் எசமானரைக் கண்டு கரங் குவித்தாள். அந்தத் தாயின் வாய் பேச நினைத்து முடியாமல் கண் பேசியது.

''பயப்படாதே, பொன்னம்மா. இன்றைய நிகழ்ச்சியை இதோடு விட்டுவிடு. தவறுவது யாருக்கும் இயற்கையே'' என்று நிதானமாகக் கூறிப் போய்விட்டார் எசமானர்.

வாசற்படியில் நின்றுகொண்டிருந்த எல்லம்மா கண்ணீர் வழியும் நயனங்களுடன் அவரைப் பார்த்தாள்.

''பெண்ணே கவலைப்படாதே. பொன்னம்மா காலையிலே வேலைக்கு வர முடியவில்லையென்றால் நீங்கள் யாராவது வந்து செய்துவிட்டுப் போங்கள்'' என்றார் எசமானர், கருணை மிகுந்த குரலில்.

''சரிங்க'' என்று கூறிவிட்டு அவர் காலைத் தொட்டுக் கும்பிட்டு எழுந்தாள் எல்லம்மா.

வீட்டுக்குச் செல்லும் வழியில் எசமானர் தம் மகனிடம் கூறினார்: ''பார்த்தாயாடா, ஒரு தாயின் மனசை? இன்றைக்கு அவள் உயிர்கூடப் போய்விட்டிருக்கலாம்'' என்றார்.

''சரிதான், அப்பா. ஆனாலும் அவர்களை நீங்கள் அப்படி விட்டிருக்கக் கூடாது!'' என்றான் மகன்.

''சே, சே! அப்படிச் சொல்லாதே. இன்று நரக சதுர்த்தசி அல்லவா? பகவான் ஓர் அரக்கனுக்கே கருணையுள்ளம் காட்டவில்லையா? இன்றைக்குப் பொன்னம்மாவைக் குடிசையில் பார்த்தமாதிரி இல்லை. தேவியின் சந்நிதானத்தில் இருப்பதுபோல இருந்தது. மயிர்க் கூச்செறிந்துவிட்டது. அன்னையைத் தெய்வம் என்று கூறுவதில் என்ன தவறு?'' என்றார் பெரியவர்.

அப்பொழுது வானத்தில் அழகிய மின்னல் ஒன்று கோடிட்டது. அவர் மொழிகளை ஆமோதித்து முறுவலிப்பதுபோல இருந்தது. உடனே மழையும் தொடர்ந்து பெய்தது.

—நவம்பர், 1958

# இதயக் கதவு

நா. ராமரத்னம் எம்.ஏ.

அவன் ஒரு கிழவன். அவன் தலைமயிர் நரைத்து, ஒட்டின பஞ்சைப் போலத் தனியாக இராமலும், ஒரே சடையாகப் போகாமலும் நாலு புறமும் பறந்துகொண்டிருந்தது. அவன் முகத்தில் காலத்தின் சின்னங்களாகிய மேடுபள்ளங்கள் அமைந்திருந்தன. காலதேவன் உழுத படைச்சாலைப் போல நெற்றியில் வரிகள் விளங்கின. கண்கள் ஒளிமறைந்து மங்கலாயிருந்தன. வாயில் பல பற்களைக் காணவில்லை. அவன் சிரிப்பதுண்டு; ஆனால் அதைச் சிரிப்பென்று சொல்லக் கூடாது; பழகிப் போன ஓர் அசட்டுத்தனம் அந்தச் சிரிப்பிலே பொங்கி வழியும். இவ்வளவும் சேர்ந்த அந்த முகத்தோற்றத்தில் ஏதோ ஒரு பொலிவு, விசனகரமான பொலிவு இருந்தது; பார்த்த முதல் முறையிலேயே இரக்கத்தை அது உண்டாக்கும்.

அவன் தேகம் வயசினால் அரிவாள் போலக் கூனிக் குறுகி வளைந்திருந்தது. இடுப்பிலே ஒரே ஒரு கிழிந்த துணி. அதில் தான் எத்தனை அழுக்கு! அந்த அழுக்கு, அவ்வாடையை இடுப்போடு பசை வைத்தாற்போல ஒட்டச் செய்தது.

காலில் புழுதி படிந்திருந்தது. அவன் நாடெங்கும் சஞ்சாரம் செய்பவன்.

அவன் ஏழை; பரம ஏழை. அவன் தொழில் பிச்சை எடுப்பது; வீடுவீடாகச் சென்று பிச்சை எடுப்பது.

அன்று மத்தியான்ன வேளையில் எங்கள் வீட்டு வாசற்கதவைத் தட்டினான். கதவைத் திறந்தேன். உடனே தள்ளாடித் தள்ளாடிச் சிறிது உள்ளே வந்து உட்கார்ந்தான். அப்படி உட்கார்ந்த அளவிலே ஓர் ஆனந்தம் அவனுக்கு இருந்தது போலும்.

அவனைப் பார்த்ததும் என்னை அறியாமலே என் உள்ளத்தில் அவன் மேல் இரக்கம் ஏற்பட்டது.

மெல்லிய குரலில், ''ஐயா!'' என்றான். அந்த உடலிலிருந்தா தொனி கிளம்புகிறதென்று நான் பிரமித்துப் போனேன். அந்த ஒரு வார்த்தையிலே அவனுடைய தைரியம் அவ்வளவும் பொதிந்திருந்தது.

''ஒரு வாய்ச் சோறு கொடுப்பீர்களா? உங்கள் பிள்ளைகுட்டிகள் நன்றாக இருக்க வேண்டும்.''

அப்புறம் ஒரு பெருமூச்சு விட்டான். அவன் ஏழைமைக் கோலத்திலே என் கண்கள் இரண்டும் பதிந்திருந்தன. அவன் கெஞ்சும் குரல் என் காது வழியே புகுந்து உள்ளத்தை வசப்படுத்தியது.

''நான் சாப்பிட்டு எவ்வளவோ காலம் ஆச்சு.''

அந்தத் தொனியிலே, அவன் பார்வையிலே, அவனது நடுக்கத்திலே, அவன் தோற்றத்திலே அந்த வாக்கியத்தின் வியாக்கியானம் அடங்கியிருந்தது.

மறுபடியும் ஒரு பெருமூச்சு.

''என்மேல் மனமிரங்குங்கள்.''

இதை அவன் சொல்லவேண்டிய அவசியமே இல்லை. என் மனம் முன்பே உருகி அவனிடம் ஐக்கியப்பட்டிருந்தது.

இந்த ஐக்கியத்தைக் கலைப்பதற்காகவே இவள் வந்தாளோ! என் மனைவி, பேச்சுக் குரலைக் கேட்டு உள்ளே இருந்து ரேழிக்கு வந்தாள். ''ஐயோ! இவனை யார் உள்ளே விட்டார்கள்!....போ, போ! உனக்கு இங்கே என்ன வேலை?'' என்று படபடவென்று வார்த்தைகளைக் கொட்டிக்கொண்டே அவள் பிரஸன்னமானாள்.

அவன் நிமிர்ந்து பார்த்தான். அந்தக் கூனலுடம்பை நிமிர்த்திப் பார்ப்பதுகூட அவனுக்குக் கஷ்டமாகத்தான் இருந்திருக்கும்.

''அம்மா! ஒரு கவளம் சோறு போட்டால் சாப்பிட்டுவிட்டுப் போவேன். சற்றே மனமிரங்க வேண்டும். உங்களுக்குப் புண்ணியம் உண்டு, அம்மா!''

அவ்வளவு பேச்சையும் ஒரேடியாகப் பேசிவிட்டானே! ஆனால் பிறகு இரண்டு நிமிஷநேரம் பெருமூச்சு வாங்கி இளைப்பாறினான்.

''உன்னை யார் உள்ளே விட்டது?'' என்று அவள் உறுமினாள்.

அந்தக் கர்ஜனைக்கு முன் அவனுடைய வேதனைக் குரல் விளக்கமாக என் காதில் ஒலித்தது.

''இவர் கருணையால்தான் அம்மா நான் உள்ளே வந்தேன்; நான் ஓர் ஏழை, அம்மா! பிச்சைக்காரன், அம்மா!''

ஏழை, பிச்சைக்காரன் - இந்த இரண்டு வார்த்தைகளும் என் உள்ளத்தில் என்ன என்னவோ உணர்ச்சிகளை எழுப்பிவிட்டன.

''பிச்சைக்காரனா! நீ பிச்சைக்காரனும் இல்லை; ஒன்றும் இல்லை: நீ ஒரு பைத்தியக்காரன் இல்லையா?'' என்று சொன்னவள் என்னைப் பார்த்து, ''முந்தா நேற்று அலமேலு வீட்டுக்கு வந்து கண்டதையெல்லாம் பிதற்றினாளும். பிச்சைக்காரனுக்கும் பைத்தியக்காரனுக்கும் வித்தியாசம் தெரியாதோ உங்களுக்கு?'' என்றாள்.

நான் இன்னும் என் மௌனத்தினின்றும் கலையவில்லை.

அவனோ, அந்த வார்த்தைகளைக் கேட்டுச் சிரித்தான்; அவனது அசட்டுச் சிரிப்பிலே அவளுக்குப் பதில் அளித்தான். அந்தச் சிரிப்புக்கு அர்த்தம் இன்னதென்று அவளுக்கு விளங்கியிருக்குமா?

ஏழை, பிச்சைக்காரன் - இந்த இரண்டோடு அவள் சொன்ன ஒரு வார்த்தையும் சேர்ந்து கொண்டது - 'பைத்தியக்காரன்'.

என் உள்ளத்தில் பொங்கிய இரக்கம் வழியத் தொடங்கியது. அதை அடக்கமுடியவில்லை. என் மௌனம் கலைந்தது.

''போகிறது; அவனுக்குக் கொஞ்சம் சாதம் போடேன்? நமக்குப் புண்ணியந்தானே?'' என்று அவனுக்காகப் பரிந்து பேசினேன்; அவனுக்காகக்கூட அல்ல; அப்படிச் சொல்லாவிட்டால் என் மனம் உறுத்திக் கொண்டே இருக்கும்; என் உள்ளம் உடைந்து போயிருக்கும். அத்தனை வலிமையோடு அந்தப் 'பைத்தியக்காரன்' என்னைக் கவர்ந்தான்.

என்ன ஆச்சரியம்! அவளுக்கும் மனம் இளகிவிட்டது. 'ஆகட்டும்' என்றாள். அந்த இடத்தில் யார் புகுந்தாலும் அவர் உள்ளத்தில் கருணை சுரக்குமென்பதில் சிறிதும் சந்தேகம் இல்லை. அவள் ஒரு நிபந்தனையைப் போட்டாள்: ''அப்படியானால் நீங்கள் அவனுடன் பேச்சுக் கொடுக்காதீர்கள். அவன் பைத்தியக்காரன். அவன் வாயைக் கிளப்பினால் பிதற்றக் கிளம்பி விடுவான்; ஜாக்கிரதை!'' என்று சொல்லிவிட்டு அவள் உள்ளே சென்றாள்.

அவள் போகும்போது சிறிது தூரம் அவன் பார்வை அவளை ஆவலுடன் தொடர்ந்தது; அதனை அவன் மீட்டுக்கொண்டான். அதற்கு மேல் போக அதற்குச் சக்தி இல்லை. அவ்வளவு தளர்ச்சி போலும்!

அவன் மறுபடியும் புன்னகை செய்தான். அவன் சிரித்தது அவளைப் பார்த்தா? என்னைப் பார்த்தா?

அவள் அவனைப் பைத்தியக்காரன் என்றல்லவா சொன்னாள்? அவன் பைத்தியமா? அவள் பைத்தியமா? எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டு நின்ற நான் பைத்தியமா?

மறுபடியும் பேசத் தொடங்கினேன்; அவனைப் பார்த்துத்தான் பேசினேன்.

''நீ எங்கே அப்பா இருக்கிறாய்?''

''நானா? எனக்குத் தங்கக் கூரை ஏது? இருக்க இடமேது?''

அந்த வார்த்தைகள் என் கண்களிலிருந்து மளமளவென்று சில நீர்த்துளிகளை வெளிப்படுத்தின. பேசமுடியவில்லை. நிதானித்துக் கொண்டேன்.

''அப்படியானால், நீ இப்போது எங்கே இருந்துதான் வருகிறாய்?'' என்ற கேள்வியைக் கேட்டேன்.

''எனக்கே தெரியவில்லை; நான் எங்கிருந்தாயினும் வருவேன். இங்கிருந்துதான் என்று எப்படிச் சொல்ல முடியும்?'' என் கேள்விக்கு அவன் வேறொரு கேள்வியைப் பதிலாகக் கேட்டான். நான் அதற்குப் பதில் எங்கிருந்து கண்டுபிடிப்பேன்?

''ஜனங்கள் உன்னிடம் மனம் இரங்குகிறார்களா?''

''இரக்கம் வரவரக் குறைகிறது, ஐயா!''

''அப்படியானால் எதற்காக ஊர் ஊராகத் திரியவேண்டும்?''

இந்தக் கேள்வியைக் கேட்டுக்கொண்டே உட்பக்கம் பார்த்தேன். மனைவி சிவகாமி இன்னும் வரவில்லை.

''ஐயா, மனிதர்கள் இதயக் கதவை மூடிவிடாமல் இருப்பதற்காகத்தான். தயையும் இரக்கமும் உலகிலிருந்து மறைந்துபோனால் அப்புறம் ஜீவர்கள் வாழமுடியாது.''

'இதென்ன இப்படிப் பேசுகிறான்! இவனா பைத்தியம்!' அவனை ஏற இறங்கப் பார்த்தேன். அவனுடைய முதுமையை என் பார்வை ஒருவாறு அளந்து பார்த்தது.

''ஆமாம்; உனக்கு வயசு என்ன? ரொம்ப வயசு ஆகியிருக்கும் போல் இருக்கிறதே!''

அவன் அந்தப் பழைய அசட்டுச் சிரிப்போடு விடை கூறினன்: ''ஆமாம் ஐயா, ரொம்ப ஆகிவிட்டது; கணக்குக்கூட விட்டுப் போயிற்று; மனிதர்கள் உண்டான காலமுதல் இருந்து வருகிறேன்.''

என் கண்கள் பிரமிப்பினல் மலர்ந்தன. என் மனைவி வரும் காலடிச் சப்தமும் கேட்டது; எனக்கு அவன் பெயரைக் கேட்டுவிட வேண்டுமென்ற வேகம் உண்டாயிற்று.

''உன் பெயரென்ன? சொல்லவில்லையே?'' என்று கேட்டேன்.

''வறுமை'' என்ருன்.

நான் என்னை மறந்தேன்.

* * * *

என் மனைவி வந்துவிட்டாள். ''இந்தப் பைத்தியத்தோடே பேச ஆரம்பித்துவிட்டீர்களோ, இல்லையோ!'' என்று சொல்லிக்கொண்டே அவனுடைய விரிந்த கைகளில் பிசைந்த சாதத்தைப் போட்டாள். அவள் பேச்சு என்னை மீண்டும் இந்த உலக நினைவுக்குக் கொண்டு வந்தது.

அவன் மிக்க ஆவலுடன் வாயை ஆவெனத் திறந்து அந்தச் சோற்றை விழுங்கினன். அவஞ விழுங்கினன்? நானே விழுங்குவது போல் இருந்தது. அவன் உடம்பில் ஏற்படும் ஒவ்வோர் அசைவையும் நான் கவனித்தேன்—இல்லை, இல்லை; அப்படிக் கவனிக்கும்படி அவன் செய்து விட்டான்.

ஒரு பருக்கைகூட இல்லாமல் விழுங்கிவிட்டு உள்ளங்கையை யும் புறங்கையையும் நக்கினன். பிறகு ஒரு சிறிய மூச்சு விட்டான். இதிலேதான் எத்தனை திருப்தி! அதைக் காட்டிலும் எனக்கு ஆயிர மடங்கு திருப்தி.

அவனுக்கு வயிறு நிரம்பியதோ இல்லையோ, எங்கள் செல்வம் இப்போதுதான் நிரம்பி நிற்பதுபோன்ற உணர்ச்சி எனக்கு ஏற்பட்டது; ஏன்? வளர்ச்சி அடைந்துவிட்டதுபோன்ற ஆனந்தமே உண்டாயிற்று.

அவன் சாப்பிட்டுவிட்டு ஒரு செம்பு நிறையத் தண்ணீர் வாங்கி மடக்கு மடக்கென்று குடித்தான். என் மனத்தில் உண்டான சாந்தி மயமான சங்கீதத்துக்கு அந்த இனிய ஒலி லயமாக அமைந்தது.

அவன் வாழ்த்திவிட்டுச் சென்ருன்; அவன் வார்த்தைகளால் வாழ்த்தியது மிகைதான்.

என் மனைவியைப் பார்த்தேன்; ''நீ சொன்னது சரி; அவன் ஒரு பைத்தியக்காரன்தான்'' என்றேன். அவள் புன்னகை பூத்தாள்.

* * * *

உங்கள் இதயக் கதவைத் திறக்க அவன் ஒரு நாள் உங்கள் வீட்டுக்கு வந்தாலும் வருவான்; வாசற் கதவைச் சாத்திவிடாதீர்கள்.

—ஜூன், 1940

# பாம்புக்குப் பால்

எஸ். வி. ரமணி

"சுவாமி!?"

பவ்வியமும், அடக்கமும், ஒருவித ஏக்கமும் கலந்த அந்தத் தொனி, நிர்மானுஷ்யமான அந்தப் பிரதேசத்தில் கணீரென்று ஒலித்தது. எதிரொலியும் கிளம்பியது. ஆனால் அந்த ஒலி சுவாமி பவானந்தரின் காதில் விழுந்ததாகவே தெரியவில்லை. அவர் தம் நிலை மறந்து தியானத்தில் லயித்து, அதன் பயனாய்க் கிடைக்கப் பெறும் அநுபூதி நிலையில் அமர்ந்திருந்தார்.

ஒலியின் சலனம் பத்து நிமிஷத்தில் அடங்கி, அங்கே அமைதி நிலவத் தொடங்கியது.

"சுவாமி!"

மறுபடியும் அதே குரல் சற்று எடுப்பாக எதிரொலித்தது.

சுவாமி பவானந்தர் ஆழ்ந்த நித்திரையிலிருந்து எழுந்திருப்பவரைப் போல், மெல்லக் கண் விழித்தார். ஆனாலும் அவர் உள்ளுணர்வு ஆண்டவனைத் தரிசிக்கும் பேரானந்தத்திலே திளைத்திருக்க, அவர் வெறும் புறக் கண்ணை மட்டுமே திறந்தார் என்பதை அவர் நிஷ்களங்கமான முகம் எடுத்துக் காட்டியது. கண்களைத் திறந்துதான் பார்த்தார்; ஆனால் அந்தத் திருஷ்டியில் விழுந்த அந்த இளைஞனை அவர் புலன் உணர்ந்ததாகவே தெரியவில்லை.

"சுவாமி, தங்களைச் சரணாக அடைகிறேன். ஏற்று ரட்சிக்க வேண்டும்!"

உலகில் எந்தப் பற்றுக்கோடுமே கிடைக்காமல் ஏங்கித் தவிக்கும் நிராதரவான ஒருவனுக்குக் கடைசியில் ஒரு பெரிய உதவி கிடைத்தால் எவ்வளவு மன நெகிழ்ச்சியுடன் அதை அடைவானோ அதே நெகிழ்ச்சியுடன் அந்த இளைஞன் நெடுஞ்சாண்கிடையாக அவர் கால்களில் விழுந்தான்.

சுவாமி பவானந்தரின் உள்ளுணர்வை இளைஞனின் அந்தச் செய்கை தொட்டது. சின்முத்திரையாக இருந்த அவர் வலக்கரம் அநுக்கிரக சின்னமாக மாறி, அந்த இளைஞனை ஆசீர்வதித்தது. அவர் இதழிலும் புன்னகை அரும்பிட்டு நின்று இளைஞனுக்கு நம்பிக்கை அளித்தது; அகன்ற பெரிய கண்கள், முன்பிருந்த வெறிச்சோடிய தன்மை நீக்கி, அருட் பிரவாகத்தைப் பொழிந்தது.

''இளைஞ, எழுந்திரு! இறைவனைப் பற்றுக்கோடாக அடை? அவன் ரட்சிப்பான்.''

இளைஞன் மெதுவாக எழுந்தான். அவர் பாத கமலங்களைத் தன் கண்களில் ஒற்றிக்கொண்டான். பிறகு அவர் முன் குனிந்த தலையுடன் கைகட்டி நின்ருன்.

''அன்ப, உனக்கு யாது வேண்டும்? எங்கே இந்தத் தவசியைக் காண வந்தாய்?'' அன்பு கனியக் கேட்டார் அவர்.

மிகவும் மெல்லிய குரலில், ''தங்களைத் தரிசித்து உய்யும் பேறு பெறவே ஓடோடியும் வந்தேன். நீங்கள்தாம் என் கண்கண்ட தெய்வம்'' என்று உருக்கமாகப் பேசினன் அவன்.

''செல்வ, உன் திருநாமம் என்ன? ஆண்டவனைத் தரிசித்தாலாவது உன் ஆசைகள் நிறைவேறும். நான் ஆண்டவனைக் காண மனித சஞ்சாரமற்ற இவ்விடத்தில் நாட்களைச் செலவழித்துக்கொண்டு இருக்கிறேன். நான்....''

அவர் சற்றே இடையில் நிறுத்தினர்.

''சுவாமி, என் பெயர் தில்லைநாதன்: உலகத்தில் என் தாய் தந்தையருக்கு ஒரே புதல்வனுகப் பிறந்தேன். ஆனல் பெற்றேர்களின் அரவணைப்புக்கு ஆளாகாமல் ஒரு வயதிலேயே அவர்களை இழந்த பாவி நான். முன் ஜன்மத்தில் எந்தச் சிசுவை அதன் பெற்றேர்களிடமிருந்து பிரித்தேனே? என் சொத்துக்களையும் எடுத்துக்கொண்டு கதறக் கதற என் சிற்றப்பா வளர்த்தார்: இல்லை, சாகடித்தார். நான் உலகில் பிறந்து வளர்ந்து, அனுபவித்த இன்பங்கள், துன்பங்கள் போதும்! இந்திர வாழ்வும் வேண்டாம்.''

தன் கசப்பான வாழ்க்கை அநுபவங்களை அவரிடம் சொல்லிக் கதற வேண்டும் என்ற அவன் துடிப்பு அவன் சொற்களில் பிரதிபலித்தது.

''ஆனந்த தாண்டவம் புரியும் தில்லைநாதனுடைய பெயரைக் கொண்டவன் நீ. உலக வாழ்வில் இன்பமும் துன்பமும் மாறி மாறி வண்டியின் சக்கரம்போல் வரத்தான் செய்யும். இன்பத்தைக் கண்டு மகிழ்ந்தவன் துன்பத்தை ஏற்று அநுபவிப்பதுதான் மெய்யறிவாகும். அவனைத்தான் கடவுளும் அதிகம் விரும்புகிருர். நாங்கள் எல்லாம் இல்லறத்தைத் துறந்து, மனித நடமாற்றமற்ற இப் பிரதேசத்தில் தவம் புரிகிறேம். இதைவிட உலகத்தில் பிறந்த நாம், அதிலேயே வாழ்ந்து, சமுதாயத்தில் ஒன்றி, இல்லறம் நடத்தி, நன்மக்களைப் பெற்றுப் பேணி, எப்பொழுதும் ஆண்டவனை வழிபட்டு, கடைசியில் அவனடி சேர்வதே பூரண வாழ்வு. இளைஞ, துன்பத்தைக் கண்டு மருளாதே! ஆண்டவனை நினை. மனம் தெளிவடையும். அவன் புகழ் சொல்லிச் செயலில் ஈடுபடு. உனக்கு வெற்றியைக் கொடுக்கும்; உற்சாகம் பிறக்கும்.''

உலகப் பற்றை அறவே துறந்த அவர், அவனை உலகத்தில் ஒட்டி வாழும்படி புத்திமதி கூறினர்.

''சுவாமி, உலகத்தில், சமுதாயத்தில் ஒன்றி வாழும்படி சொல்லும் எந்தப் புத்திமதியும் என் செவியில் ஏருது. மன்னிக்க வேண்டும்: சென்ற பௌர்ணமியன்று தங்களைக் காணும் பாக்கியம் பெற்றேன். பக்கத்துக் கிராமத்தில் கிடைத்த தங்கள் முகதரிசனமே என் அலுத்த உள்ளத்துக்கு அமைதியை அளித்தது. உயிரை வெறுத்து மாய்த்துக்கொள்ளச் சென்ற என் தீர்மானத்தை நெகிழச் செய்தது: தங்கள் அருட்பார்வை—தங்களைப் பற்றுக்கோடாக அடையும்படி

உள்ளுணர்வு என்னை உந்தியது. தங்கள் அருட் பார்வையும் ஆசீர் வாதமும் கிடைக்கும் பேறு பெற்றேன். தங்களுடனே இருந்து தங்களுக்குக் குற்றேவல் புரிந்து, என் பழைய பாவமூட்டையைப் போக்க வேண்டும் என்று முடிவு செய்துவிட்டேன். என்னை ஏற்றுக்கொள்ள வேண்டும்.''

சுவாமி பவானந்தர் அவனைக் கூர்ந்து பார்த்தார். கொஞ்சம் வாய்விட்டுச் சிரித்தார். ''அன்ப, நீயோ இளைஞன்—வாழ்வின் இன்பப் படிகளில் காலெடுத்து வைக்க வேண்டிய பருவத்தினன். வாழ்வில் ஏற்பட்ட கசப்பான அநுபவத்தைத் தாளாமல் உன் மனம் பேதலித்திருக்கிறது. கொஞ்ச நாள் போனதும் நீயே அதை உணர்வாய். என் ஆசீர்வாதங்கள் எப்போதும் உண்டு. ஆண்டவனை நம்பு. திரும்பிச் செல்.'' அவன் பருவத்தைச் சுட்டிக் காட்டிச் சாந்தமாகப் பேசினார் சுவாமி பவானந்தர்.

அவன் சித்தம் கலங்கவில்லை. மேலும் உறுதி தொனிக்கும் குரலில், ''தங்களையே பற்றுக்கோடு என்று அடைந்த என்னை நிராகரிக்காதீர்கள். என் பருவத்தைக் கண்டு சந்தேகப்படாதீர்கள். என் பருவம் உருவத்தில்தான் இருக்கிறது, உணர்ச்சியில் இல்லை. மரத்துக் கருகிச் சாம்பலாகப் போய்விட்டது. நான் துறவறத்தை மேற்கொண்டேனே என்று வருந்தும் ஆத்மா உலகில் இல்லை. நான் இறக்காமல் வாழ்கின்றேனே என்று கலங்கும் ஜீவன்களே அனந்தம். ஆகையால் தாங்களே என்னை ஏற்று ரட்சிக்க வேண்டும்'' என்றான்.

''பருவம் பொல்லாதது, அப்பா!'' என்றார் பவானந்தர்.

''தாங்கள் அதை வெல்லவில்லையா?'' பட்டென்று கேட்டான் தில்லைநாதன்.

''வென்றேன்; ஆனால் இந்த நிர்மானுஷ்யமான பிரதேசத்தில்!'' என்றார், ஆழ்ந்த தொனியில்.

''நானும் உங்களுடன், இங்கேயே உங்கள் காலடியில் தான் கிடக்கப் போகிறேன்'' என்று திடமாகச் சொன்னான்.

''இருந்தாலும் பருவக் கொந்தளிப்புகள் உண்டான பிறகும் உலகத்தில் நீ வாழ்ந்திருக்கிறாய். பழைய நினைவு உனக்கு உண்டானால்....?''

''தாங்கள் அதைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம். பருவம் முளைவிட்டது. ஆனால் சூழ்நிலை அதை முளையிலேயே பிய்த்துக் கருக்கி விட்டது.'' சுவாமி பவானந்தரின் சங்கைகள் தீரும் வகையில் தீர்மானமாகப் பேசினான் அவன். எப்படியும் அவர் சிஷ்யனாக வாழ்வது, இல்லையேல் இறப்பது என்ற அவன் முடிவு அவன் பேச்சில் தொனித்தது.

பவானந்தர் சற்று நேரம் பேசாமல் தில்லைநாதனைப் பார்த்தபடி உட்கார்ந்திருந்தார். பிறகு அவன்மேல் தம் திருஷ்டியைச் செலுத்தினார். அவன் முகத்தில் நிழலாடிய அசைக்க முடியாத தீர்மானத்தின் உச்ச நிலையை உணர்ந்தார்.

''இதுதான் உன் திட்டமான முடிவா, அப்பா? கடினமான இந்த வாழ்வுதான் உனக்குப் பிடித்திருக்கிறதா?'' கடைசியாகக் கொஞ்சம் உரத்த தொனியில் கேட்டார்.

''ஆமாம், எந்தக் கடினமும் தங்களுடன் வாழும் பேறு பெற்றால் பரிதியைக் கண்ட பனிபோல மறைந்துவிடும்; சத்தியமாகத் தங்கள் புனிதத் தன்மைக்குப் பங்கம் விளையும் விதத்தில் நடக்கமாட்டேன்.

என்னை நம்புங்கள்!'' அவன் விழிகளில் நீர் திரண்டு வழிய ஆரம்பித்தது.

''எல்லாம் இறைவன் திருவிளையாடல். சரி, அதோ அந்தக் குடிலில் நீ இரு. அதில் இன்னும் இரண்டு சிஷ்யர்கள் இருக்கிறார்கள். அவர்கள் இங்குள்ள நியதிகளைச் சொல்வார்கள்'' என்று சொல்லிக் கொஞ்ச தூரத்தில் இருந்த ஒரு குடிலைக் காட்டினார்.

''உய்ந்தேன். உய்ந்தேன்!'' என்று கூறியபடி, அவர் பாதத்தில் மறுபடியும் விழுந்து வணங்கினான் தில்லைநாதன். அவர் பாதத் தாமரைகளைப் பக்தியுடன் நயனங்களில் ஒற்றிக்கொண்டான்.

''சரி, போ. அவர்கள் பிட்சைக்குப் போயிருப்பார்கள். வந்துவிடுவார்கள். எதைக் கண்டும் மனம் தளராமல், ஆண்டவனையே சதா தியானம் செய். அவன் கருணையாளன்'' என்று ஆசீர்வதித்து அனுப்பினார்.

மாலைச் சூரியன் மனமோகனமாகச் செவ்வொளி பரப்பிக் கொண்டிருந்தான். தாயைத் தேடி ஆண் குஞ்சுகளும், பேடையை நாடி ஆண் பறவைகளும், குஞ்சுகளுக்கு உணவைச் சேகரித்துக்கொண்டு தாயும் கூட்டை நோக்கிப் பறந்தன. பக்கத்துக் கிராமத்திலிருந்து அங்கே மேயவந்த ஆவினங்கள் தங்கள் மடிகளில் சுரந்த பாலைத் தம் கன்றுக்குக் கொடுக்க நாற்கால் பாய்ச்சலில் ஓடின.

''குருசிரேஷ்ட, சரணம்!'' தன் தோளிலிருந்த மூட்டையை அப்பால் வைத்துவிட்டு, கணீரென்ற குரலில் சொல்லி, நமஸ்கரித்தான், சுவாமி பவானந்தரின் பிரதம சிஷ்யன் கருணானந்தன்.

மாலை நியமத்துக்கு ஆரம்பித்த பவானந்தர் சிஷ்யனை நோக்கி, ''கருணானந்தா, ஏன் இன்று இவ்வளவு தாமதம்? சஞ்சீவி எங்கே, இன்னும் காணோம்?'' என்றார்.

''மன்னிக்க வேண்டும். சஞ்சீவி காலையில் சமித்துப் பொறுக்கப் போனபோது தவறி விழுந்து, காலில் கொஞ்சம் காயம். பச்சிலை எடுத்துக் கட்டியிருக்கிறேன். பிறகுதான் நான் போனேன். அதனால் திரும்பிவர நேரமாகிவிட்டது'' என்று அடக்கமாகச் சொன்னான்.

''சரி, இன்று புதிதாக ஓர் இளைஞன் வந்திருக்கிறான். அவனையும் அந்தக் குடிலில்தான் தங்கியிருக்கச் சொல்லியிருக்கிறேன். ஆசிரம நியமங்களை அவனுக்குச் சொல்லிக் கொடு. ஆளுக்கொரு நாள் கிராமத்துக்குப் பிட்சைக்குச் சென்று வாருங்கள்.''

''புதிதாகவா...?''

''ஆமாம். இளைஞன்தான். ஆனால் அவன் மனசு முற்றும் உலகைத் துறந்து, துறவறத்துக்கு ஏற்ப அமைந்திருக்கிறது. இருக்கட்டும், பார்க்கலாம். நான்கு பௌர்ணமிகள் கவனிக்கலாம். சரி, நீ சென்று வா'' என்று அவனை அனுப்பினார்.

ஆனால் உடனே அவனை அழைத்து, ''கருணானந்தா, இன்று சர்ப்பன் வந்தானா?'' என்று கேட்டார்.

''வந்தான்; ஆனால் அந்தத் தாய் இன்று வரவில்லை. பால் மட்டும் அனுப்பியிருந்தாள். சர்ப்பன் உண்டு போனான், குருதேவா!'' என்றான் அடக்கமாகக் கருணானந்தன்.

மறு நாள் பொழுது விடிந்தது. கருணானந்தன், சஞ்சீவி இருவருடனும் தில்லைநாதனும் அருவிக்குச் சென்றான். பல்லைக் கிட்டுவிக்கும் நீர்; அந்தக் காலை வேளைக் குளிரில் அருவி பனிக்கட்டியிலும் பன்மடங்கு குளிர்ச்சியாக இருந்தது. ஆனால் கொஞ்சங்கூடத் தயங்காமல் அவன் அவர்களுடன் நீராடினான். உடல் குளிரில் வெடவெடத்தது. ஆனால் அவன் மனம் ஆடாமல் கல்லாக இருந்தது. வரும்பொழுதே அவர்களுடன் சமித்துக்களைப் பொறுக்கி எடுத்துக் கொண்டான். வழி நெடுக அவர்கள் இருவரும் சொல்லிய ஆண்டவன் தோத்திரங்களை அவனும் சேர்ந்து சொன்னான்.

குடிலுக்கு வந்ததும் அவர்களைப் போலவே நடந்துகொண்டான். அவர்கள் பூஜை புரஸ்காரங்கள் செய்வதைப் பக்தி சிரத்தையுடன் கவனித்தான். உடனே மற்றவர்களுடன் சுவாமி பவானந்தரைப் போய்த் தரிசித்துவிட்டு வந்தான். வெகுநாள் துறவற வாழ்க்கையில் பழக்கப்பட்டவன் மாதிரி எல்லாக் காரியங்களையும் அவர்களைப் போலவே செய்தான்.

அன்றும் சஞ்சீவிக்கு உடல் சரியாகாததால் கருணானந்தனே பிட்சைக்குச் சென்றான்.

* * * *

பகல் மணி ஒன்றிருக்கும். சஞ்சீவி ஒரு தூணில் சாய்ந்து உட்கார்ந்திருந்தான். தில்லைநாதன் ஏதோ ஒரு புத்தகத்தை வைத்துப் படித்துக்கொண்டிருந்தான். திடுதிப்பென்று வெளியில் 'சரசர' வென்று சப்தம் கேட்டது.

திடுக்கிட்டவனாகத் தில்லைநாதன், வெளியே வந்து பார்த்தான். பக்கத்தில் இருந்த புதர் இடுக்கிலிருந்து ஒரு நாகப் பாம்பு விருவிரு வென்று குடிலை நோக்கி வந்துகொண்டிருந்தது. பளபளவென்று மினுக்கும் அதன் மேனி தில்லைநாதனை ஒரு கணம் திடுக்கிட வைத்தது.

"பாம்பு....சர்ப்பம்....பாம்பு!"

தன்னையும் மீறிய உத்வேகத்துடன் கத்தினான் தில்லைநாதன்.

"சகோதரா, பயப்படாதே! சர்ப்பம் இங்கே பழக்கமாக வருவது தான். இந்த இடத்தின் புனிதத்தைக் காப்பாற்றும் ரட்சகன். ஆண்டவனை நாடி வந்த நம் குருதேவருக்கு வழிகாட்டிய குரு" என்று சொல்லியபடி மெல்ல வெளியே வந்தான் சஞ்சீவி.

அந்தச் சர்ப்பம் சப்தம் கேட்டதும் சற்று நேரம் அப்படியே நின்றுவிட்டது. பிறகு தன் தலையை மட்டும் தூக்கி, அகல விரித்துப் பார்த்தது.

சஞ்சீவி அதற்குள் கொஞ்ச தூரத்தில் இருந்த பால் கிண்ணத்தை நகர்த்தி அதனிடம் வைத்தான். சர்ப்பம் பாலை அருந்தியது. அவ்வளவுதான். உடனே தான் வந்த வழியே போகாமல் அந்தக் குடிலை ஒரு சுற்றுச் சுற்றிக்கொண்டு வேகமாகச் சென்றது. அது சென்ற திக்கையே பார்த்துக்கொண்டிருந்தான் தில்லைநாதன். அது குருதேவரின் குடிலை நோக்கிப் போவதாகப் பட்டது.

அவனுக்கு ஆச்சரியம் தாங்கவில்லை.

"நம் குருதேவருக்குக் குருவா?" என்று கேட்டான் தில்லைநாதன்.

"ஆம் தில்லைநாதா! இந்தச் சர்ப்பம் இன்று நேற்றல்ல, இங்கு வந்து பால் அருந்துவது. நான் இங்கே வந்து நான்கு ஆண்டுகள்

ஆகின்றன. அதற்கு முன்பிருந்தே இதே வழக்கத்தான். ஆனால் முன்பெல்லாம் நாங்கள் யாராவது பிட்சை வாங்கச் செல்லும்போது பாலும் வாங்கிவருவோம். பக்கத்துக் கிராமத்தில் இருக்கும் ஒரு தனவந்தர்க்கு நம் குருதேவர் மேல் பக்தி அதிகம். அவர் வீட்டில் எல்லாரும் நம் குருதேவரின் பௌர்ணமி விசேஷ பூஜைக்கு வருவார்கள். அத்துடன் அவருடைய கடைசிப் புதல்விக்குக் கண் தெரியாமல் இருந்தது. நம் குருநாதரே அதை நிவர்த்தி செய்தார். அதனால் அந்தத் தாய் நிதம் பூஜைக்காகப் பழங்கள், மலர்கள் எல்லாம் எடுத்து வந்துகொண்டிருந்தாள். நம் குருதேவர் அவற்றில் ஒன்றையும் ஏற்பதே இல்லை. ஆனால் நம் குருவின் விருப்பத்திற்கிணங்க நாள்தோறும் அந்தத் தாய் இங்கே வந்து, இந்தச் சர்ப்பத்துக்குப் பால் வார்த்துவிட்டுப் போவாள். அதுதான் இந்தப் பால்....'' என்று சொல்லிச் சற்று நிறுத்தி, தில்லைநாதனின் முகத்தைப் பார்த்தான் சஞ்சீவி.

தில்லைநாதன் முகம் ஆச்சரியத்தால் கொஞ்சம் மலர்ந்திருந்ததே ஒழிய வேறு எவ்வித உணர்ச்சியும் புலப்படவில்லை. அவன் படபடப்புடன், ''அது சரி, இந்தச் சர்ப்பம் நம் குருதேவரின் கருணைக்குப் பாத்திரமானது, எப்படி?'' என்று கேட்டான்.

''அதுவா, நம் குருதேவர் சாந்தியை நாடி அவர் கால்போன போக்கில் போய்க்கொண்டிருந்தார். குருதேவர் இப்பொழுது வசிக்கும் இடத்தில், அவர் போகும் வழியில் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு முன்பு இதே சர்ப்பம் வந்து படுத்திருந்ததாம். குருதேவர், கையால் தட்டிச் சப்தம் செய்தார். ஆனால் சர்ப்பம் தலையைத் தூக்கிச் சுவாமிகளைப் பார்த்துவிட்டு மீண்டும் அப்படியே படுத்துவிட்டதாம். குருதேவர் ஆச்சரியமுற்றவராய் மறுபடியும் கைதட்டிச் சப்தம் எழுப்பினாராம். அப்பொழுது இந்தச் சர்ப்பம் தலையைத் தூக்கி மூன்று முறை பூமியில் அடித்துவிட்டு நகர ஆரம்பித்ததாம். குருதேவர் சற்று அப்பால் ஒதுங்கிக் கொள்ளவே, அது அவரை விடாமல் ஒதுங்கிப் பக்கமாக அவரைச் சுற்றிக்கொண்டு, புதருக்குள் ஓடி விட்டதாம். ஆண்டவன் அடியார்களை ரட்சிக்கும்போது இது மாதிரி ஓர் அதிசயத்தை ஏற்படுத்தி, அதன் மூலம் அடியார்களின் சித்தத்தைத் தெளிய வைப்பானும். இதே நிகழ்ச்சி தான் நம் குரு தேவருக்கும் நேர்ந்தது. இந்தச் சர்ப்பத்தைத் தான் அவர் ஆண்டவனாக எண்ணுகிறார். அதே இடத்தில் உட்கார்ந்து தவம் செய்யவும் ஆரம்பித்தாராம்.

''இப்பொழுதும் பௌர்ணமி பூஜையன்று இரவு இரண்டு ஜாமத்துக்கு மேல் ஆகும். அதுவரை இந்தச் சர்ப்பமும் அங்கே தான் இருக்கும். இந்த இடத்தின் புனிதத்துக்கு ஏதாவது பங்கம் ஏற்பட்டால் அன்று முழுவதும் சர்ப்பம் இந்தப் பாலை அருந்தாது. பட்டினிதான் கிடக்கும்'' என்று விரிவாகச் சொன்னான் சஞ்சீவி.

தில்லைநாதன் ஆச்சரியத்தினால் கல்லாய்ச் சமைந்துவிட்டான். அந்த இடத்தின் புனிதம் கைலாயத்தைவிட உயர்ந்தது என்பது போன்ற நினைவுகள் அவன் மனத்தில் உதித்தன. சுற்றுமுற்றும் பார்த்தான். புனிதமே உருக்கொண்டதுபோல் அவன் திருஷ்டியில் தெரிந்தது.

அன்று பௌர்ணமி. சுவாமி பவானந்தரின் சிஷ்யர்கள் எல்லாரும் பரபரப்புடன் காணப்பட்டார்கள். ஒவ்வொரு நிமிஷமும் துடித்துக்கொண்டிருந்தார்கள். அதுவும் மாலைப் பொழுது நெருங்க நெருங்க அவர்களின் வேகம் அதிகமாகியது. தில்லைநாதனும் அவர்கள் சொல்வதைக் கேட்டுப் பயபக்தியுடன் செயலில் ஈடுபட்டான்.

இரவு மணி ஒன்பது இருக்கும். சுவாமி பவானந்தர் உடலெல்லாம் வியர்வை ஆறுகப் பெருக, குகைபோன்ற அந்தக் குடிலில் மெய்ம்மறந்து பூஜை செய்துகொண் டிருந்தார். கருணனந் தனும் சஞ்சீவியும் அந்த அந்தச் சமயத்துக்குத் தேவையான சாமான்களை எடுத்துக் கொடுத்தார்கள். எந்தவித மனிதனையும் அந்தச் சூழ்நிலை அந்தப் புனித கைங்கரியத்தில் லயிக்கச் செய்யும். தில்லைநாதன் மனமுருகி, மெய் விதிர்க்க, உணர்ச்சி பெற்ற சடலமாய், கைகட்டி நின்றிருந்தான்.

அந்தச் சமயத்தில் அந்தச் சர்ப்பமும் வந்தது. நேராகச் சென்று பவானந்தர் தயாராக வைத்திருந்த பாலை அருந்தியது. சற்று நேரம் அப்படியே சுருண்டு படுத்திருந்தது.

இந்த நிகழ்ச்சியில் வியப்படைந்திருந்த தில்லைநாதன் அடுத்த கணம் திகைப்படைந்தான்.

இருபது வயசு இருக்கும், ஓர் இள மங்கை, கையில் பழம், பூ நிரம்பிய தட்டுடன் உள்ளே வந்தாள். அவளுடன் ஒரு பெரியவரும் வந்தார்.

உடனே கருணனந்தன் பயபக்தியுடன், ''தாயே, அமர வேண்டும். இப்படிக் கொடுங்கள்'' என்று அந்தத் தட்டை வாங்கிக் கொண்டு, குருதேவரின் அருகில் வைத்தான்.

அந்த மங்கை பவ்வியமாக நமஸ்கரித்துவிட்டு, ஒரு பக்கத்தில் அடக்க ஒடுக்கமாக அமர்ந்தாள். இவை எல்லாம் வெகு சாதாரண நிகழ்ச்சிகளாக அங்கே நடந்தேறின.

பூஜை முடிந்தது. எல்லாரும் பிரசாதங்கள் வாங்கிக்கொண் டார்கள். அந்தப் பெண்ணும் பெரியவரும் விடைபெற்றனர், சுவாமி பவானந்தரிடம். அப்போது, சுவாமி பவானந்தர், ''அன்ப, உங்கள் தொடர்ந்த சேவையைக் கண்டு மகிழ்கிறேன். ஆண்டவன் அருள் புரிவார். இனிமேல் தங்கள் புத்திரி நிதம் இங்கே வரவேண்டியதில்லை. புதிதாக ஓர் இளைஞன், உலக ஆசாபாசங்களைத் துறந்துவிடச் சித்த மாகி, என்னிடம் வந்திருக்கிறான். ஆகையால் இவர்களில் யாராவது ஒருவர் வந்து, பாலையும் வாங்கி வந்துவிடுவார்கள். இவன்தான்'' என்று தில்லைநாதனை அழைத்துச் சொன்னார்.

தில்லைநாதன் குனிந்த தலை நிமிராமல் நின்றுகொண் டிருந்தான். பெரியவர் அவனை ஏறிட்டுப் பார்த்தார்.

''குழந்தாய், ஊர்மிளா, இனிமேல் நீங்கள் பௌர்ணமி பூஜைக்குமட்டும் வந்தால் போதும்'' என்று அந்தப் பெரியவரின் பெண் ஊர்மிளாவை அழைத்துச் சொன்னார்.

தன் தொண்டைச் செய்யப் போகும் இளைஞனை ஏறிட்டுப் பார்த்தாள் ஊர்மிளா. அதே சமயத்தில் எதனாலோ தலையைச் சற்று உயர்த்தினான் தில்லைநாதன். விழிகள் நான்கும் மின்னல் அடித்தாற் போலச் சந்தித்தன.

''சரி, போய் வாருங்கள். இறைவன் அருள் புரிவாராக!'' என்று ஆசீர்வதித்து அனுப்பினார் பவானந்தர்.

மனத்தில் எந்தவிமான சலனமுமின்றிப் பூஜையறையைச் சுத்தம் செய்வதில் மற்ற இரு சிஷ்யர்களைப் போல் ஈடுபட்டான் தில்லைநாதன்.

''சகோதர! இன்று முதல் உன்னைப் பிட்சைக்கு அனுப்பச் சொல்லி ஆக்ஞாபித்தார் குருமூர்த்தி. நம் வழக்கப்படி ஒரு வீட்டி னுள்ளும் வாயிற்படி தாண்டிப் போகாதே. பிற மாதர்களைத்

தாயாக நினை: மனத்தில் எந்தவிதமான பேதலிப்புக்கும் இடம் கொடுக்காதே. ஆண்டவனையே சதா மனத்தால் ஸ்மரி. வரும்பொழுது அன்று வந்த அம்மணியின் வீட்டுக்குப் போய்ப் பாலையும் வாங்கிவா!'' என்று புத்திமதி சொல்லி அனுப்பிவைத்தான் கருணானந்தன்.

''ஆக்ஞைப்படியே நடக்கிறேன்'' என்று பணிவாகச் சொல்லிப் பிட்சைக்குக் கிளம்பினான் தில்லைநாதன்.

கருணானந்தன் சொல்லியபடியே ஒரு வீட்டினுள்ளும் நுழையாமல், பிட்சை கேட்காமல், தாங்களாகவே கொடுத்தவர்களிடம் மட்டும் வாங்கிக்கொண்டான் தில்லைநாதன். கடைசியாக அந்தப் பெரியவரின் வீட்டுக்கும் வந்தான். வெளியில் யாரையும் காணவில்லை. ஒருகணம் அழைக்கலாமா, கூடாதா என்று சற்று நேரம் நின்று பார்த்தான். ஒருவரும் வருவதாகத் தெரியவில்லை.

பிறகு மெதுவாக, ''இவ்வீட்டினுள் உறையும் பெரியோய்!'' என்று அழைத்தான்.

அவன் அதை எதிர்பார்க்கவில்லை. ஊர்மிளாதான் கையில் பால் கிண்ணத்துடன் அவன் அழைப்பைக் கேட்டு வந்தாள். தில்லைநாதன் தலை நிமிராமல் தன் கையில் இருந்த செம்பை மட்டும் நீட்டினான்.

''தாங்கள் இன்றுதான் முதல் முதலாகப் பிட்சைக்கு வருகிறீர்களோ?''

இந்தக் கேள்வி தில்லைநாதனைத் திடுக்கிடச் செய்தது. ஒன்றும் பதில் பேசாமல் நின்றிருந்தான்.

''பெரியீர், பதில் அளித்தால் பங்கம் விளைந்துவிடுமோ? பவானந்த சுவாமிகளும் மற்றச் சிஷ்யர்களும் பேசுவார்கள்'' என்றாள் ஊர்மிளா விடாமல்.

'நஞ்சு இருக்கும் பாம்புதான் கரந்துறையும், நஞ்சு இல்லாதது கண்ட இடத்தில் உறையும்' என்பதைச் சுட்டிக் காட்டி அவள் பேசுவதுபோல் பட்டது தில்லைநாதனுக்கு. பிறகு, ''ஆம், தாயே!'' என்றான்.

''வந்து வெகு நேரமாகக் காத்திருந்தீர்களோ? உடனே அழைத்தால் என்ன?'' என்று அநுதாபம் கலந்த தொனியில் கேட்டாள் ஊர்மிளா.

''இல்லை.''

''எது இல்லை, சுவாமி?'' டக்கென்று கேட்டாள் ஊர்மிளா. பிறகு அவளே ஏன் அப்படிக் கேட்டோம் என்று நினைத்துக் கொண்டாள்.

ஊர்மிளா பாலை அந்தச் செம்பில் ஊற்றினாள். ''சற்றுப் பொறுங்கள், சுவாமி!'' என்று சொல்லிவிட்டு விடுவிடுவென்று உள்ளே போனாள்.

கையில் ஒரு தட்டில் இரண்டொரு பழங்களுடன் வந்து,''தாங்கள் முதல் முதல் வந்திருக்கிறீர்கள். இவற்றை ஏற்றுக்கொள்ள வேண்டும்'' என்று தட்டை நீட்டினாள்.

''மன்னிக்கவேண்டும், தாயே!''

தில்லைநாதன் அங்கே நின்றுகொண்டு இந்த வார்த்தைகளைச் சொல்லவில்லை. அந்த வீட்டைவிட்டு விலகிப் போய்க்கொண்டேதான் சொன்னான். அவன் மனத்தில் எந்தவிதச் சலனமும் இருந்ததாக அவன் நடையிலும் முகத்திலும் சாயை தெரியவில்லை. நம் காரியம் ஆயிற்று, போகிறோம் என்ற உணர்வுதான் மிகைபட்டிருந்தது. அவன் செல்லும் திக்கையே பார்த்துக்கொண்டிருந்தாள் ஊர்மிளா.

அடுத்த பௌர்ணமி நெருங்கிக்கொண்டிருந்தது. தில்லைநாதன் பக்கத்துக் கிராமத்துக்குச் சென்றிருந்தான். சஞ்சீவி மலர்களைச் சேகரிக்கப் போயிருந்தான். கருணானந்தனும் சுவாமி பவானந்தரும் சம்பாஷித்துக்கொண்டிருந்தனர்.

இடையில், ''கருணானந்தா; நம் தில்லைநாதனைத் தினம் கவனித்து வருகிறாயா? ஏதாவது மாறுதல் புலப்படுகிறதா?'' என்று கேட்டார்.

கருணானந்தன் சாந்தமாக, ஆனால் ஆணித்தரமாகப் பதில் சொன்னான்:

''பிரபு, தாங்கள் கூறியபடி அவன்தான் நிதம் பிட்சைக்குப் போய் வருகிறான். அந்தத் தாயிடமிருந்து பாலும் வாங்கி வருகிறான். எந்தவித மாறுதலும் அவன் உள்ளத்தில் ஏற்பட்டிருப்பதாகத் தெரியவில்லை. முன்னைவிட இப்பொழுது அவன் நடை, உடை, பேச்சு, பார்வை இவற்றில் எல்லாம் ஞானத்தின் பிரகாசம் ஒளிர்கிறது. அவன் பெரிய யோகியாக விளங்க முடியும் என்றே தோன்றுகிறது.''

''ஆம். எனக்கும் அப்படித்தான் பட்டது. அவன் உள்ளம் பண்படைந்து வருகிறது. அந்தப் பெரியவரின் புத்திரியைக் கண்டு அவன் உள்ளம் கலங்குமோ என்றுதான் யோசித்தேன். அதற்காகத்தான் அவனைப் பிட்சைக்கு அனுப்பும்படி கூறினேன். அந்தப் பரீட்சையிலும் வெற்றிபெற்றுவிட்டான்'' என்று கூறினார் பவானந்தர்.

''ஆம். குருதேவா! தில்லைநாதன் உள்ளம் இனிமேல் உலக ஆசாபாசங்களில் ஈடுபடாது. வைரம் ஏறிவிட்டது'' என்று உறுதிப்படுத்தினான் கருணானந்தன்.

''சரிதான். அப்படியானால் அடுத்த பௌர்ணமி இரவு அவனுக்கும் துறவாசிரமம் கொடுத்துவிடலாம். 'விமலன்' என்ற நாமம் அளிக்கப் போகிறேன். ஆண்டவன் திருவிளையாடலின் மகிமையே மகிமை!'' என்று சொல்லிக் கண்ணை மூடி ஒரு கணம் தம்மை மறந்திருந்தார்.

இரவு மணி பத்து இருக்கும். பௌர்ணமி பூஜை முடிந்து எல்லாருக்கும் பிரசாதங்கள் அளித்தார் பவானந்தர். ஊர்மிளாவும் அவள் தகப்பனாரும் பவானந்தரின் திருவடியைச் சேவித்து, பிரசாதங்களைப் பெற்றனர்.

''ஆண்டவன் ரட்சிப்பாராக!'' என்று ஆசிவதித்தார், பவானந்தர் அவர்களை.

பெரியவர் கிளம்பினார். ஊர்மிளாவும் கிளம்பினாள். ஆனால் திடீரென்று என்னவோ நினைத்துக்கொண்டவள்போல விடுவிடுவென்று போய், ''ஆசீர்வதிக்க வேண்டும்'' என்று சொல்லித் தில்லைநாதனை வணங்கினாள்.

தில்லைநாதன் அப்படியே வெலவெலத்துப் போய்விட்டான்.

''தாயே, அபசாரம் செய்யாதீர்கள். நீங்கள் என் தாய்!'' என்றான் மெய் உதற.

ஊர்மிளா எழுந்தாள். அருகில் நின்றிருந்த கருணானந்தன், சஞ்சீவி இருவரையும் நமஸ்கரித்தாள். இருவரும், ''தாயே, ஏது என்றுமில்லாத இந்த அபசாரம் புரிகிறீர்கள்? ஆண்டவனையும் குருதேவரையும் வணங்குதல்தான் முறை. நாங்கள் உங்கள் புதல்வர்கள்'' என்று தடுத்தார்கள்.

''உங்களுக்கு அல்ல! இந்தப் புனித இடத்துக்கு'' என்றாள்.

பிறகு தகப்பனுருடன் கிளம்பிப் போய்விட்டாள். எல்லாருக்குமே அவள் செய்கை வியப்பைக் கொடுத்தது. காரணம் புரியாமல் தில்லைநாதனைத் தவிர, எல்லாரும் எதையோ மனத்தில் கொண்டு உளைந்தார்கள். தில்லைநாதன் எப்பொழுதும் போலவே காணப்பட்டான். தாயைப் போன்று மதிக்கும் அந்த மங்கை தன்னைப் பணிந்ததைக் கண்டதும் அந்த ஒரு கணந்தான் அவன் மனம் அதிர்ச்சி அடைந்தது. அதைத் தொடர்ந்து மற்ற இருவர்களையும் பணிந்தவுடன் அந்த அதிர்ச்சியும் தணிந்தது.

மூன்றுவது பௌர்ணமி, தில்லைநாதன் தன் பூர்வாசிரமப் பெயரைக் களைந்து, துறவுக்கு அடையாளமாகக் குருதேவர் வைக்கப் போகும் நாமத்தைப் பெறக்கூடிய நாள். அன்று விசேஷமாக அலங்காரங்களுக்கும் பூஜைகளுக்கும் ஏற்பாடு ஆகியிருந்தது.

தில்லைநாதன் அன்று விசேஷ அநுஷ்டானத்துடன், காலையிலிருந்து விரதத்துடன் இருந்தான். மனத்தில் எல்லையில்லாத மகிழ்ச்சி தில்லைநாதனுக்கு: இன்றிலிருந்து தானும் சுவாமி பவானந்தரின் சிஷ்யனுக ஆகப் போகிறும் என்று எண்ணிப் பெருமிதம் அடைந்தான்.

மணி ஏழிருக்கும். தில்லைநாதன் பூஜைக்குத் தயாராகக் குளித்துவிட்டுக் கிளம்பிக்கொண் டிருந்தான். கருணனந்தனும் சஞ்சீவியும் சுவாமி பவானந்தருக்கு உதவி செய்தார்கள்.

அந்தச் சமயத்தில் கன்றைத் தேடிவரும் ஆவின் குரலைப் போன்று பாசமும் பரிவும் தொனிக்க "அன்ப!" என்ற தொனி குடிலின் வெளியிலிருந்து வந்தது.

தில்லைநாதன் திடுக்கிட்டுப் பார்த்தான். மறுகணம் அவன் முன் ஊர்மிளா நின்றுகொண் டிந்தாள்; அவள் அணிந்திருந்த அணியும் ஆடையும் கண்ணைப் பறித்தன. பதற்றத்துடன் மறுபடியும், "அன்ப" என்றுள்.

தில்லைநாதன் வெலவெலத்துப் போய், "தாயே, எங்கே இங்கே வந்தீர்கள்? இந்தப் பொழுதில் நீங்கள் பூஜைக்கல்லவா செல்ல வேண்டும்!" என்று பதறியபடி கேட்டான்.

"அன்ப, நான் உங்களுக்குத் தாயல்லவே!" குழைவும் அதே சமயத்தில் அடக்கமும் ஒலிக்கச் சொன்னுள்.

"தாயே! துறவியாகப் போகும் எனக்கு உலகில் உள்ளவர்கள் எல்லாம் தாய் தந்தையர்தாம். எனக்கு நேரமாகிவிட்டது. சற்று விலகுங்கள்; நான் செல்கிறேன்" என்று வெளியே போகத் துடித்தான் தில்லைநாதன்.

"நீங்கள் வெளியே செல்லத் துடிக்கிறீர்கள். ஆனுல் என் மனம் உங்களுடன் செல்லத் துடிக்கிறது. அமைதி நிலவும் உங்கள் வதனம், கருணை வீசும் கண்கள், அமுதம் பொழியும் வாய், காந்தியான உடல் என்னை இழுக்கின்றன, அன்ப!"

"என்னைத் தவருக நினைக்கிறீர்கள், தாயே! தவறு தவறு! ஈசா காப்பாற்று!" என்று இரைந்து கத்தினுன் தில்லைநாதன்; அவள் முகத்தையும் பார்க்காமல் நின்றுன். உடல் படபடத்தது.

"இல்லை. நீங்கள் இன்னும் துறவியாகவில்லை; இன்றுதான்-இனிமேல்தான் ஆகப்போகிறீர்கள்; ஏன் - ஆக்கப்படப் போகிறீர்கள். இயற்கை அளிக்கும் உலக இன்பத்தைத் துய்க்காமல் ஏன் இந்தக் கோலம் புனைகிறீர்கள்? என்னிடம் நிறையச் சொத்து இருக்கிறது. நாம் மணம் புரிந்து வாழலாம். அன்ப! பவானந்தர் நம் மணத்தைத் தடுக்கமாட்டார்; என் ஆவலைப் பூர்த்தி செய்யுங்கள், அன்பரே!

அதுதானே முதலிலேயே உங்களைக் கேட்டேன்'' என்று கல்லும் கரையும்படி கூறி, அவன் கால்களைப் பாய்ந்து பிடித்தாள் ஊர்மிளா.

அவ்வளவுதான், எங்கிருந்து அவ்வளவு துணிவு வந்ததோ! தில்லைநாதன், ''விடுங்கள், தொடாதீர்கள்!'' என்று கதறிக்கொண்டே, அவள் பிடியிலிருந்து விடுபட்டு, வெளியே பாய்ந்துவிட்டான். அவன் உடல், உள்ளம் எல்லாம் ஆட்டம் கண்டன.

''போகாதீர்கள். என்னை ஏற்றுக்கொள்ளுங்கள்'' என்ற அவள் கூப்பாடு தூரத்தில் போய்க்கொண்டிருந்த தில்லைநாதன் காதுகளில் விழுந்தது. நாராசம் காதில் பாய்வதுபோல் காதைப் பொத்திக் கொண்டு ஓடினான், பூஜையை நோக்கி.

சுவாமி பவானந்தரின் குடிலை அடைந்தான் தில்லைநாதன். அங்கே பூஜை நடந்துகொண்டிருப்பதைப் பார்த்தான். அங்கே போய் அந்த ஜோதி வெள்ளத்தில் கலந்துகொண்ட தில்லைநாதனுக்கு எல்லாம் மறந்து விட்டது. அதில் ஒன்றிப் போய்விட்டான். நேரம் போய்க் கொண்டிருந்தது.

சரசரவென்று சர்ப்பம் வந்தது. வழக்கம் போல் அந்தப் பால் கிண்ணத்தின் அருகில் சென்றது. எல்லாரும் அவரவர்கள் செயலில் ஈடு பட்டிருந்தார்கள்.

பாலில் வாயை வைத்த சர்ப்பம் அடுத்த நிமிஷம் தலையை வெளியே எடுத்தது. சுவாமி பவானந்தரைச் சுற்றி வந்தது. ஏனோ தரையில் ஓங்கித் தன் தலையை அடித்துக் கொண்டது. அவ்வளவுதான்.

சுவாமி பவானந்தர் திடுக்கிட்டுத் தொட்டுப் பார்த்தார். அதன் ஆத்மா பிரிந்து விட்டதென்று தெரிந்தது. கருணானந்தன், சஞ்சீவி, தில்லைநாதன் எல்லாரும் ஒன்றும் புரியாதவராய்த் திகைத்தனர்.

பாதிப் பூஜையிலேயே எழுந்துவிட்டார் பவானந்தர். ''எங்கோ அபசாரம் நேர்ந்துவிட்டது.'' என்று அவர் தமக்குத் தாமே சொல்லிக் கொண்டார். அந்தப் பாலைப் பார்த்தார். நீல நிறமாக மாறியிருந்ததைக் கண்டார். அவர் உடல் எல்லாம் பதறியது. கண்களில் நீர் தாரை தாரையாக வழிந்தது. பவானந்தர் தம் சிஷ்யர்களைப் பார்த்தார். அவர்களும் ஒன்றும் புரியாமல் விழித்தனர்.

கடைசியாகத் தில்லைநாதன் ஆவேசம் வந்தவனைப் போல அவர் பாதங்களில் விழுந்தான். ''குருதேவா, அபசாரந்தான் நடந்துவிட்டது. என்னை ஓர் இளமங்கை தீண்டி விட்டாள். ஆனால் உணர்வற்ற என் உடலைத்தான். உள்ளத்தை அன்று. ஆண்டவன் செய்த சோதனை போலும்! ஊர்மிளா அன்னைக்கு என்மேல் அன்பு பிறந்துவிட்டதுபோல் இருக்கிறது. என்னைத் தனியாகக் குடிலில் சந்தித்து மணம் புரிந்துகொள்ள வேண்டும் என்று கெஞ்சினார்கள். நான் அவர்களை உதறித் தள்ளிவிட்டு வந்து விட்டேன். அடியேனால் நேர்ந்த அபசாரந்தான்...'' மேலே அவனால் பேசமுடியவில்லை; திணறினான்.

''அப்படியா?'' வாய்விட்டு இரைந்து கேட்டார் பவானந்தர்.

மறுநிமிஷம் எங்கோ வெளியில் ஓடினார். சிஷ்யர்களும் பின் தொடர்ந்தனர். தில்லைநாதனும் தன்னைச் சமாளித்துக்கொண்டு ஓடினான்.

கொஞ்ச தூரத்தில் பௌர்ணமி நிலவில் தெரிந்த பொருளைக் கண்டதும் எல்லாரும் அலறினர்; விம்மினர்; ஆறாகக் கண்ணீரைப் பெருக்கினர். உலகப் பந்தத்தைத் துறந்த பவானந்தரே ஒரு கணம் திகைத்து மெய் சோர்ந்தார்.

ஆம்; ஊர்மிளா அங்கே கிடந்தாள், உயிரற்று!

புனிதத்துக்குப் பங்கம் விளைவித்தாள் பாவை; பால் குடித்த பாம்பு செய்ந் நன்றியை மறக்கவில்லை!

—ஆகஸ்ட், 1955

# பாறையும் பாட்டும்

எச். வி. ஆர். ஐயங்கார்

திருப்பதிக்குப் போய்க்கொண்டிருந்த காரில் நாங்கள் ஐந்து பேர் இருந்தோம். என்னை அழைத்துச் சென்ற சம்பந்தம், அவருடைய மனைவி அலமேலு, அவருடைய சகோதரி நளினி, மாமா ராஜகோபாலன், நான்.

சம்பந்தமும் அவருடைய மனைவியும் சென்னையில் பணக்காரக் குடும்பத்தில் பிறந்தவர்கள்; நன்றாகப் படித்தவர்கள். அவர்களுக்கு நல்ல அதிர்ஷ்டம் இருந்தது: புத்திசாலிகளான இரண்டு குழந்தைகளும் நிறைய நண்பர்களும் இருந்தார்கள். இலக்கியத்திலும் சங்கீதத்திலும் நல்ல ரஸிகர்கள். பொதுவாக அவர்களுடைய வாழ்க்கை அமைதியாகவும் செப்பம் உடையதாகவும் இருந்தது. துன்பம் காரணமாக அவர்களுக்குச் சமயப்பற்று உண்டாகவில்லை. வேங்கடேசுவரர் ஆலயத்துக்கு வந்து வழிபட வேண்டும் என்ற விஷயத்தில், அவர்கள் இருவரில் யாருக்கும் குழந்தைப் பருவத்திலிருந்தே சிறிதளவும் உள்ளத்தில் சந்தேகமோ ஒளிமறைவோ இல்லை. அவர்களுடைய குடும்பத்தினரிடம் பரம்பரையாக இருந்துவரும் வழக்கம், குழந்தைப் பருவத்தில் அவர்கள் கோயிலுக்குப் போன சமயங்களில் அவர்களுடைய உணர்ச்சியை எழுப்பி நம்பிக்கையை நிலையாக நிற்கச் செய்த நிகழ்ச்சிகளின் நினைவு, நல்ல ஆரோக்கியம், செல்வம், பண்பாட்டில் ஈடுபாடு முதலியவற்றை அருளியிருப்பதனால் உண்டாகிய நன்றியறிவு—ஆகிய இந்தக் காரணங்கள் எல்லாம் சேர்ந்து அவர்களை அடிக்கடி திருப்பதிக் கோயிலுக்குப் போகச் செய்தன: யாரோ தங்களை அழைப்பது போன்ற உணர்ச்சி அவர்களுக்கு அடிக்கடி ஏற்படும்; உடனே சில நிமிஷ நேரத்தில் எல்லாவற்றையும் விட்டுவிட்டுக் காரில் ஏறிக்கொண்டு திருப்பதிக் கோயிலுக்கு விரைவார்கள். அந்தக் கோயிலுக்குப் போய் வணங்கும் விஷயத்தில் அவர்களுக்கு உண்டாகும் வேகத்தைப் பற்றிச் சம்பந்தத்துடன் நான் விவாதித்திருக்கிறேன்.

''திருமலைக்குப் போய் வழிபடுவது அவசியமா? சென்னையில் இருக்கிற ஒரு கோயிலில் வழிபட்டால் போதாதா?'' என்று கேட்பேன். அதற்கு மேலும் ஒரு படி போய், ''கோயிலுக்குத்தான் ஏன் போக வேண்டும்? வீட்டிலேயே வணங்கினால் ஆத்மார்த்தமான நன்மை ஏற்படாதா?'' என்று கேட்பேன். நான் சொல்வதை எல்லாம் கேட்டுக்கொண்டு சம்பந்தம் தலையை ஆட்டுவார்: ''இதைப்பற்றி நான் விவாதம் செய்ய முடியாது. நீங்கள் சொல்கிறதெல்லாம் அறிவுக்கு மிகவும் பொருத்தமானவைகளே. ஆனால் இது பகுத்தறிவைப்

பொறுத்த விஷயம் அல்ல. ஒவ்வொரு மனிதனும் தான் உஜ்ஜீவனம் அடைய ஒவ்வோர் உபாயத்தை தேடிக்கொள்ள வேண்டும்; இதுதான் என்னுடைய உபாயம்'' என்பார்.

நளினியின் மனோபாவம் அவளுடைய அண்ணா, அண்ணி இருவர்களுடைய கருத்தினின்றும் வேறுபட்டது. அவளுக்குக் குடும்ப வாழ்க்கையில் சங்கடம். முக்கியமாக அவளுடைய புருஷர் நோயாளி; நெடுநாளாக அவருக்கு இருதய நோய். இதனால் நளினிக்கு மிகவும் கவலை. எத்தனையோ ஜோசியர்களையும் ரேகை நிபுணர்களையும், நாடிச் சாஸ்திரம் சொல்கிறவர்களையும் அணுகி ஜோசியம் கேட்டாள். இந்தத் துயரம் காரணமாக, போக முடிகிற கோயிலுக்கெல்லாம் போய் வணங்கினாள். யாராவது அவள் இது வரையிலும் போகாத ஒரு கோயிலைப்பற்றிச் சொல்ல வேண்டியதுதான்; உடனே, அந்தக் கோயிலுக்கு ஓடுவாள். தன் வீட்டில் நோயாளியின் அறையில் இருப்பது, பலபல கோயில்களுக்குச் சென்று வணங்கிக் கர்ப்பூரம் காட்டுவது-மாறி மாறி இந்த இரண்டு வகையிலும் அவள் வாழ்வு கழிந்து கொண்டிருந்தது. திருமலையின் மேலுள்ள கோயிலுக்கு அவள் போன போது அவள் தன் கணவருடைய சௌக்கியத்துக்காகப் பிரார்த்தனை செய்தாள்; அதற்காகவே அவள் போனாள்.

மாமா ராஜகோபாலனோ, முற்றும் வேறுபட்ட பேர்வழி. அவரை யாரும் - அவருடன் சம வயசினர்கூட - மாமா என்றே அழைத்தார்கள். அவர் பிறவியிலிருந்தே சுகமாக வாழ்கிறவர். பள்ளிக்கூடத்திலும் கல்லூரியிலும் நன்றாகப் படித்துப் பிறகு லாயரானார். தொழிலில் உயர்ந்தோங்கிப் பெருஞ் செல்வத்தை ஈட்டினார். இவையெல்லாம் தம்முடைய இயல்பான திறமையினாலே கிடைத்தன என்பதில் அவருக்குச் சிறிதும் சந்தேகம் இல்லை. பல பேர் அவர் கருவம் பிடித்தவர் என்று எண்ணினார்கள்; அது உண்மைதான். வாழ்க்கையில் அவருக்கு வேண்டியவையெல்லாம் கிடைத்தன; அவற்றைப் பெறும் உரிமை தமக்கு உண்டென்றே அவர் நினைத்தார். பிறகு துன்பங்கள் வந்தன. அவருடைய மனைவி பிரசவத்தில் மாண்டாள்; அதனால் மிகுதியாகக் கோபமும் வெறுப்பும் கொண்டார். மதத்தில் அவருக்கு ஆறுதல் கிடைக்கவில்லை. அவர் தம்முடைய இளம்பிராயத்தில் வழக்கமான சில அநுஷ்டானங்களைச் செய்து வந்தார். அவருடைய தகப்பனார் செய்து வந்தாரென்று அவற்றை வெறும் சம்பிரதாயத்துக்காகவே செய்து வந்தார். வயசானபிறகு அவற்றை விட்டு விட்டார். உண்மையில் அவற்றைக் கண்டு அருவருத்தார்.

அவர் வக்கீல்களின் தலைவராக இருந்தபோது யாரோ ஒருவர் அவரைத் திருப்பதிக்குப் போகச் சொன்னார். ''என்ன? கோயிலில் நடக்கும் பைத்தியக்காரத்தனத்தில் கலந்துகொள்வதா? நான் அப்படிச் செய்பவன் அல்ல'' என்றார் மாமா. அவருடைய மனைவி சாகக் கிடந்தபோது, ''இவள் பிழைத்துக் கொண்டால் கடவுளை நம்புவேன்'' என்று தமக்குள் சொல்லிக் கொண்டார். அவள் பிழைக்கவில்லை. ஆகவே அவர், ''கடவுள் என்று ஒருவர் இல்லை. அப்படி இருந்தால் அவர் ஏன் இந்தத் துன்பத்தை எனக்கு விதிக்க வேண்டும்?'' என்று நினைத்தார். சொந்த விஷயத்தில் துயரம் உண்டாகும்போது அறிவுடைய உள்ளங்கள்கூட இப்படி இருண்டு போவது ஆச்சரியமாக இருக்கிறது. மாமா ராஜகோபாலன் அறிவுச் சிறப்புடையவர். கர்வமுடையவர், மத விஷயங்களில் அருவருப்புள்ளவர், முக்கியமாகச் சம்பிரதாயக் கிரியைகளில் அவருக்கு விருப்பம் இல்லை என்பது அவரைச் சேர்ந்தவர்களுக்கு நன்றாகத் தெரியும்.

ஆனால் சம்பந்தத்துக்கு அவர் பெரிய நண்பர்; அவருடைய மனைவியிடம் வாத்ஸல்யம் உடையவர். தம்முடைய இதயம் இரும்பு

போன்றதெனப் பிறர் நினைக்க வேண்டுமென்பது அவர் விருப்பம்; ஆயினும் அது நளினிக்காக உருகியது. ஆகவே அவர்கள் போகும் போதெல்லாம் அவருடன் போவார். "சும்மா காரில் சவாரி செய்யப் போகிறேன்" என்பார். அதோடு, "ராத்திரி முழுதும் சீட்டாடச் சந்தர்ப்பம் கிடைக்கிறது" என்பார். சம்பந்தம் அவர் மனைவி இரண்டு பேருக்கும் ரம்மி ஆடுவதில் மிகப் பிரியம்; எனக்கும் அப்படித்தான். நாங்கள் நாலு பேரும் நடுராத்திரி ஒரு மணி வரையில் ஆடுவோம். அப்புறம் சிறிது நேரம் நன்றாகத் தூங்குவோம். மூன்று மணிக்கு எழுந்து நீராடிவிட்டுக் கோயிலுக்குச் சுப்ரபாதத்துக்குப் போவோம். நாங்கள் கோயிலிலிருந்து வருகிற வரைக்கும் ராஜகோபாலன் தூங்குவார். பல சமயங்களில் ஏதாவது படித்துக்கொண்டிருப்பார். அவர் நிறையப் புத்தகங்களை வாசிக்கிறவர். காலையில் சிற்றுண்டி ஆனவுடன் எல்லாரும் சென்னைக்குத் திரும்புவோம்.

நாங்கள் திருமலையின் மேல் போய்க்கொண்டிருந்த அன்று மாமா ராஜகோபாலன் அவ்வளவு சரியான நிலையில் இல்லையென்று தோன்றியது. எப்போதையும்விட அதிகமாக வெறுப்புணர்ச்சியுடன் இருந்தார். குழந்தையாக இருந்தது முதலே அலமேலுவை அவருக்குத் தெரியும்; ஆகவே அவளிடம் அவருக்குப் பிரியம். நளினியிடம் அவருக்கு மிக்க பரிவு. அவளுடைய உணர்ச்சிகளைப் புண்படுத்த அவருக்கு விருப்பம் இல்லை. ஆனாலும் அவருடைய பரிசாசம் கார் போய்க்கொண்டிருந்தபோது அடிக்கடி வெளியாயிற்று. "நான் மலைக்குப் போக விரும்புகிறதற்குக் காரணம் அங்கே சென்னையை விடச் சிறிது குளிர்ச்சியாக இருக்கிறது என்பதனால்தான். அதோடு ரம்மி ஆட அங்கே கிடைக்கிற அளவுக்குச் சென்னையில் நேரம் கிடைக்கிறதில்லை" என்பார். எம். எஸ். சுப்புலக்ஷ்மி பாடியிருக்கும் சுப்ரபாத சுலோகங்களைப்பற்றி அலமேலு இடையில் ஒரு முறை சொன்னாள். "அவர் பாடும்போது உங்களுக்கு உருக்கமாக இல்லையா?" என்று கேட்டாள். "ஆமாம்; என்னை மிகுதியாக அந்தப் பாட்டு உருக்குகிறது. ஆனால் அந்த வார்த்தைகளோ, சுலோகங்களின் அர்த்தமோ அல்ல; அவருடைய குரலைக் கேட்டே உருக்கம் உண்டாகிறது. அந்த வார்த்தைகளுக்கு அர்த்தமே இல்லாமல் போனாலும், அல்லது பஜ்ஜியும் பச்சடியும் செய்வது எப்படி என்று சொல்லுபவையாக இருந்தாலும் அப்போதும் எனக்கு உருக்கம் உண்டாகும். அவருடைய குரலில் ஒரு மந்திரம் இருக்கிறது. அவர் பாடும்போது அவர் முகத்தைப் பார்த்தால் அவரே எவ்வளவு உருகிப் பாடுகிறார் என்பது தெரிகிறது. அத்தகைய உணர்ச்சி அவரிடம் பொங்குவதற்கு என்ன காரணம் என்பதைப்பற்றி எனக்குக் கவலை இல்லை" என்றார் ராஜகோபாலன். இந்தப் பேச்சில் நாங்கள் யாவருமே புகுந்துகொண்டோம். "மாமா, நீங்கள் அர்த்தமில்லாத பேச்சைப் பேசுகிறீர்கள் என்பது உங்களுக்கே தெரியும்; நிச்சயமாகச் சுலோகங்களிலுள்ள வார்த்தைகளின் பொருள், பக்தி உணர்வு, கடவுளுடைய துதி என்ற நினைவு ஆகியவை அந்தச் சங்கீதத்தின் சிறப்புக்குக் காரணமாக இருக்கவேண்டும். கத்திரிக்காயை எப்படிச் சமைப்பது என்பதைப் பற்றிப் பாடினால் சுப்புலக்ஷ்மி ஆத்மாவின் எழுச்சிக்குரிய இந்த உள்ள நிலையைத் தொடக்கூடும் என்று என்னால் நினைக்க முடியாது" என்று சம்பந்தம் கூறினார்.

"என்னால் முடியும்" என்றார் மாமா ராஜகோபாலன்.

இரவு எட்டு மணி சுமாருக்கு நாங்கள் திருமலையை அடைந்தோம். சிறிதளவு உணவு உண்டபிறகு ரம்மி ஆடத் தொடங்கினோம். ஆனால் என்னவோ எங்களுக்கு அதில் சுவாரசியம் உண்டாகவில்லை. காரில் வந்தபோது நாங்கள் பேசின பேச்சின் நினைவே

எல்லாரையும் குழப்பியது போலும்! மாமா ராஜகோபாலன் இந்த நிலையைத் தெரிந்து கொண்டாரென்று தோன்றியது. சீக்கிரம் படுத்துக் கொள்ளலாம் என்று தீர்மானித்தோம். அரசியலமைப்புச் சட்டம் பற்றிய சில புத்தகங்களைக் கொண்டுவந்திருந்தார் ராஜகோபலன். அவற்றை அந்த இரவில் படித்து முடித்துவிடுவதாகச் சொன்னார். "நீங்கள் சாமி கும்பிடப் போங்கள்; நான் என் சட்டப் புத்தகத்தைப் படிக்கிறேன்" என்றவர், ஏளனமாகச் சிரித்துக்கொண்டே, "நிச்சயமாகச் சட்டந்தான் எனக்கு வரும்படியைத் தருகிறது. உங்களுக்கு வேங்கடேசுவரர் என்ன தருகிறாரோ; எனக்கு அவ்வளவு நம்பிக்கை இல்லை. அவர் நல்ல தூங்குமூஞ்சி; உலகத்தில் என்ன நடக்கிறதென்பது அவருக்குத் தெரியுமென்று தோன்றவில்லை" என்றார்.

சுப்ரபாதம் ஆனவுடனே சம்பந்தம், அலமேலு, நளினி மூவரும் விடுதிக்குப் போனார்கள். எனக்கு மனஅமைதி இல்லை; ஏனென்று தெரியவில்லை. கொஞ்ச தூரம் நடந்து போய்விட்டுப் பிறகு வருகிறேன் என்று அவர்களிடம் சொன்னேன். கோயிலை விட்டுப் புறப்பட்டு விடுதியையும் தாண்டி மாலையில் குஷியாக இருந்த ஒரு தனி இடத்துக்குப் போனேன். நல்ல இருட்டு. நான் மட்டும் தனியே இருப்பதாக எண்ணினேன். பிறகு யாரோ இருமும் சத்தம் கேட்டது. சுற்றிலும் பார்த்தேன். மாமா ராஜகோபாலன் ஒரு பாறையில் உட்கார்ந்திருந்தார். அந்த அவ வேளையில் அங்கே ஏன் வந்தாரென்று கேட்டேன். "மிகவும் விநோதமாக இருக்கிறது. எனக்குத் தூக்கமே வரவில்லை. காலார நடந்துவிட்டு வரலாமெனறு வந்தேன். சுப்ரபாதம் காதில் விழுந்தது. ஆனால் அதைக் கவனிக்கவில்லை. பிறகு இங்கே வந்து இந்தப் பாறையில் அமர்ந்தேன். உடனே எனக்கு ஒரு புதிய உணர்ச்சி ஏற்பட்டது. எனக்குள்ளே அமைதி உண்டாவதை உணர்ந்தேன். அது இன்னதென்று தெரியவில்லை. இதை விட்டுச் சிறிது தூரம் போனாலும் இதே சங்கீதம் என்னிடம் எந்த உணர்ச்சியும் உண்டாக்கவில்லை; ஆனால் இந்த இடத்தில் அந்தச் சங்கீதத்தின் அநுபவம்—இது எனக்குப் புரியவில்லை. இங்கே அமர்ந்து அந்தச் சுலோகங்களைக் கேட்கும்போது எனக்கு அபூர்வமான உணர்வு உண்டாகிறது. அந்தக் கணத்தில் என்னுடைய குழப்பம் போய்விடுகிறது. இது விநோதமாக இல்லை?" என்றார்.

நாங்கள் எங்கள் விடுதிக்குச் சென்றோம். போகும்போது மாமா ராஜகோபாலன் மௌனமாகவே இருந்தார். நாங்கள் சென்னைக்குத் திரும்புவதற்கு முன் அவர் தம்முடன் அந்தப் பாறைக்கு என்னை வரும்படி சொன்னார். நாங்கள் போனோம். அவர் பாறையின்மேல் உட்கார்ந்தார். "இதில் ஒன்றும் இப்போது இருப்பதாகத் தெரியவில்லை. இது வெறும் பாறை. நாளைக்குக் காலையில் மறுபடியும் சோதித்துப் பார்க்கலாம்" என்றார். சம்பந்தம் சென்னைக்குப் போக வேண்டியிருந்தது. நாங்கள் சுலபமாக மற்றொரு காருக்கு ஏற்பாடு செய்துவிட்டோம். ராஜகோபாலனும் நானும் தங்கினோம். அவர் அரசியல் அமைப்புச் சட்டப் புத்தகத்தைப் படித்து முடித்து விட எண்ணினார். எனக்குப் பொழுது போவதுபற்றி எப்போதுமே சிரமம் இல்லை.

அடுத்த நாள் விடியற்காலையில் சுப்ரபாதம் பாடிக்கொண்டிருந்தபோது ராஜகோபாலன் வெளியில் போனார். அவர் வெவ்வேறு இடங்களில் நின்று பார்த்தார். "இல்லை, இல்லை; இதில் ஒன்றும் விசேஷம் இல்லை. அந்தத் தரித்திரங்கள் சுலோகங்களைச் சொல்வது தெரிகிறது. அவர்கள் க்ஷவரம் பண்ணிக் கொள்ளவில்லை. அவர்கள் ஆடைகள் சுத்தமாக இல்லை. அவர்களில் ஓர் ஆசாமியை ஒருவர் அறிமுகப்படுத்தினபோது அவன் மூஞ்சியைப் பார்க்கவே

எனக்குப் பிடிக்கவில்லை; பேராசை பிடித்த முகம்; பொறுமையையும் கொடுமையையும் நினைப்பூட்டும் முகம் அது. ஆகவே இந்தச் சுப்ரபாதத்தில் எனக்கு ஒரு மண்ணும் இல்லை'' என்றார். பிறகு அவர் முதல் நாள் அமர்ந்திருந்த பாறைக்குப் போய் உட்கார்ந்திருந்தார். சிறிது நேரம் கழித்து, ''எனக்கு இன்னதென்றே புரியவில்லை. அவர்கள் பாடுவதைக் கேளுங்கள். சங்கீதம் எவ்வளவு அழகாக இருக்கிறது! அதை கேட்கிறபோது சந்திரனும், நட்சத்திரங்களும், கடலலைகளும், மலரின் மணமும், குழந்தைகளின் முகமும் நினைவுக்கு வருகின்றன. இந்த இடத்தில் மாத்திரம் இப்படித் தோன்றுவானேன்?'' என்று கேட்டார்.

''என்ன பதில் சொல்வதென்று தெரியவில்லை'' என்றேன். அறிவினால் புரிந்துகொள்ள முடியாத பல அற்புதங்களில் ஒன்று அது. ''இதற்கு இன்னது காரணம் என்று தெரிந்துகொள்ள வேண்டுமா என்ன? இதை அதிசயமான பாக்கியம் என்று நீங்கள் ஏன் ஒப்புக்கொள்ளக்கூடாது?'' என்று கேட்டேன். ராஜகோபாலன் தலையை அசைத்தார்; பிறகு நாங்கள் சென்னைக்கு வந்து சேர்ந்தோம்.

அவர் இன்னும் கர்வம் பிடித்தவராகத்தான் இருக்கிறார். சம்பந்தத்தையும் மற்றவர்களையும் பார்த்து இன்னும் பரிகாசம் செய்யத்தான் செய்கிறார். ஆனால் ஒவ்வொரு முறையும் திருமலைக்குப் போகும்போது அவர் கோயிலுக்குப் போகமாட்டார்; சுப்ரபாதம் நடைபெறும்போது அந்தப் பாறைக்குப் போய் உட்கார்ந்துகொள்வார்.

ஒரு நாள் நளினி தன் கணவரை இழந்தாள்: முதலில் சில நாட்கள் அவள் துயரத்தில் ஆழ்ந்திருந்தாள்; பிறகு அமைதி பெற்றாள். ''அது கடவுள் திருவுள்ளம்'' என்று சொல்லிக்கொண்டுதான் இருந்தாள்! ஒரு நாள் அவள் ராஜகோபாலனுக்கும் எனக்கும் போன் பண்ணித் தானும் தன் பிள்ளைகளும் திருமலைக் கோயிலுக்குப் போவதாகச் சொல்லி, எங்களை வரமுடியுமா என்று கேட்டாள். ராஜகோபாலன் உடனே வருவதாக ஒப்புக்கொண்டார். அப்போதும் அவர் கோயிலுக்குப் போகவில்லை. இரவு முழுதும் அந்தப் பாறையில் உட்கார்ந்துகொண்டிருந்து, சுப்ரபாதம் பாடி முடிந்தபிறகு விடுதிக்கு வந்து சேர்ந்தார். வந்தவர் வாத்ஸல்யத்துடன் தம் கைகளை நளினியின் தோளின்மேல் வைத்து, ''இங்கே என்னை வரச் சொன்னாயே. அதற்காக உனக்கு நன்றி. கடவுள் உனக்குத் துணை செய்யட்டும்'' என்றார்.

—ஜனவரி, 1970

# ஆழ் கடல்

**கா. ஸ்ரீ. ஸ்ரீ.**

நீண்ட கடல் அமைதியாக அலைகளை வீசிக்கொண்டிருந்தது. வைகறையின் மங்கிய ஒளியில் வானத்து வெண்முகில்கள் அந்த அலைகளில் நிழலிட்டன. குப்பத்திலே பலர் இன்னமும் தூக்கத்தில் ஆழ்ந்திருந்தார்கள்.

டீ விற்பவனும் இடியாப்பக்காரியும் தெருக்கோடியில் தங்கள் வியாபாரத்தைத் தொடங்கியிருந்தார்கள். எதிர் வீட்டில் இரண்டு பெண்கள், சட்டத்துக்குப் புறம்பான சம்பவம் ஒன்று இரவில் நிகழ்ந்ததுபற்றித் தம்மிடையே காரசாரமாகச் சச்சரவிட்டார்கள்.

வேலு, பொன்னனுடைய குடிசைக்குப் போய் அவனை எழுப்பினான். பொன்னன் ஆடையை இழுத்துக் கட்டிக்கொண்டு எழுந்தான். அவனுடைய தூக்கம் நன்றாகக் கலையவில்லை; கண்களைத் துடைத்துக்கொண்டு, கொட்டாவிவிட்டுச் சோம்பலை முறித்தான். அவனுடைய மனைவி, மீன்கூடைகளை ஒழுங்காக எடுத்துவைத்து, மார்க்கெட்டுக்குப் புறப்படுவதாக இருந்தாள். ''இதோ வந்துடுவாரு; நீங்க போங்க!'' என்று அவள் குரல் கொடுத்தாள்.

வேலு தெருக்கோடிக்குப் போய் இரண்டு தோசைகளை விண்டு வாயில் போட்டுக்கொண்டு, டீயை வாங்கிக் குடித்தான். அதற்குள் பொன்னனும் வந்து சேர்ந்தான். அவர்கள் தலை, எண்ணெயைக் கண்டு பல நாளாயின. கடற்காற்றில் குடிசைக் கீற்றோடு அவர்கள் கேசமும் புஸ-புஸு-வென்று பறந்தது.

வேலு கட்டுமரத்தை ஒழுங்காகக் கட்டித் தயாராக வைத்திருந்தான். பொன்னன் வலையையும் சோற்றுக் கலயத்தையும் அதில் வைத்தான். இரண்டு பேரும் இரண்டு மூலைகளில் அதைக் கயிற்றினால் தாங்கிக்கொண்டு மெதுவாகச் சுழற்றினார்கள். மணலில் அந்த ஓசையைக் கேட்டதும் நண்டுகள் விர் விர்ரென்று பதுங்கின. கட்டுமரம் லேசாக நழுவி, அலைகளில் மிதந்தது. அலைகள் புரளப் புரள, அது ஒய்யாரமாகக் கிழக்கு நோக்கிப் போயிற்று.

சிறிது தூரத்தில் செம்படவக் குழந்தைகள் நீரில் துளைந்தன. ஆரோக்கியத்துக்காகக் கடலில் குளிக்க வந்த இரண்டொரு நாகரிக மனிதர்களும் இருந்தார்கள். வேலுவின் ஐந்து வயசான சிறுவனும் அங்கே விளையாடிக்கொண்டிருந்தான். கட்டுமரம் போன திசையிலே அவன் தண்ணீரை வாரி வாரி இறைத்தான். அவனைப் பார்த்தபடியே வேலுவும் பொன்னனும் நகர்ந்தார்கள்.

கதிரவன் மெதுவாகத் தலைநீட்டி நகைத்தான். கடல்நிறம் தொலைவிலே பசுமையும் நீலமும் கலந்து தென்பட்டது. நகரம் பையப் பைய மறைந்தது. கீழே பரந்த கடல்; மேலே அகன்ற வானம்; இரண்டு மகாபூதங்களுக்கு நடுவில் அந்தக் கட்டுமரம் நகர்ந்தது. பொன்னன் ஆனந்தமாக வலையை வீசினான்.

வேலுவுக்கு இந்த வாழ்க்கையில் ஒரு சுவையும் தோன்றவில்லை. சில காலமாக அவன் மிகவும் அலுத்துப் போயிருந்தான். நாளுக்கு நாள் அவனுக்கு வருமானம் குறைந்து வந்தது. போர் நிகழ்ந்த காலத்தில் அவன் சம்பாதித்ததோடு சரி. அப்போதெல்லாம் அவன் கொண்டுவரும் மீன்களுக்கு நல்ல கிராக்கி. ஒரு தடவை தண்ணீரில் போய்வந்தால் பதினைந்து ரூபாய்க்குக் குறையாமல் சம்பாதிப்பான். ஆனால் அந்தப் பணமெல்லாம் எங்கே போயிற்று?

செல்லாயியை மணந்தபோது, அவன் கரையாளரிடம் முந்நூறு ரூபாய் கடன் வாங்கினான். அதை அடைக்கவே அந்தப் பணம் சரியாகப் போய்விட்டது; போரும் அதனுடன் நின்றுவிட்டது. பிறகு வருமானக் குறைவோடு, சோம்பலும் அவன் உடலில் ஏறியது. எப்போதும் சிரித்துப் பேசுகிறவன் உம்மணாமூஞ்சி ஆனான். அதே போரில்தான் கரையாளரின் மகன் படையில் போய்ச் சேர்ந்தான். அவன் இப்பொழுது சுபேதார் ஆகிவிட்டான். பணத்தோடுதான் பணம் சேருகிறது. அவனுக்கு மனைவியும் பணக்காரியாக வாய்த்தாள். அவனும் தானும் பள்ளிக்கூடத்துக்குப் போன நாட்கள் வேலுவின் நினைவுக்கு வந்தன. வேலுவுக்கு அப்போதெல்லாம் படிப்பு என்றாலே கசக்கும். கடலில் நீந்துவதில் அவனுக்கு எதிர் யாரும் இல்லை. மாசி மகத்தன்று கடலில் சாவதற்கு இருந்த எத்தனையோ சிறுவர்களை அவன் காப்பாற்றியிருக்கிறான். இதனால் அவன் பெற்ற பெருமிதத்தைக் கண்டு, பள்ளியில் நன்றாகப் படித்துப் பரிசு பெற்ற மாணவர்கள் கூடப் பொறாமைப்பட்டிருக்கிறார்கள், ஆனால் அந்தக் காலத்திலே கரையாளரின் மகனோடு இவனும் ஒழுங்காகப் படித்திருந்தால்..? சுபேதார் என்ன, கர்னலாகக்கூட இவன் வந்திருக்கலாமே!

செல்லாயி வந்த வேளைதான், தனக்குப் பணம் பெருகுகிறது என்று அவன் முதலில் நினைத்தான். மீன்களை மார்க்கெட்டில் கொண்டு போய் விற்று அவள்தான் கைநிறையக் காசு கொண்டு வருவாள். கடனும் பரபரவென்று அடைந்தது. வரவர வாரிதியிலே வளம் குறைவதாக வேலுவுக்குத் தோன்றிற்று. அவன் கொண்டுவந்த சரக்குக்கும் விலை மலிவாயிற்று. வருமானம் குறைந்ததும் மனைவியிடமும் அவன் சிடுசிடுத்தான். கடலைக் கண்டாலே அவனுக்கு எரிச்சலாக இருந்தது.

'இந்தத் தொழிலை விட்டுத் தொலைத்துக் கொத்து வேலைக்காவது போகலாமே!' என்று செல்லாயி இரண்டொரு தடவை சொல்லிப் பார்த்தாள்; அவள் தகப்பனார், கிழவனார், அந்தத் தொழிலில்தான் பிழைத்துவந்தார்; வயசாகிவிடவே அவர் நீண்ட நாளாகக் கட்டுமரத்தில் ஏறுவதில்லை. எப்போதாவது கரையில் நின்றபடியே தூண்டிலை வீசி எறிவார்; வேலுவுக்குக் கொஞ்சம் கொத்து வேலை தெரியும்; ஆயினும் தன்னைக் குத்திக் காட்டுவதற்காகவே அவள் அப்படிச் சொல்வதாக நினைப்பான். உடனே அவளிடம் சினந்து கொண்டு பேராழியிலே பாய்ந்துவிடுவான்.

இந்தச் செல்லாயிதான் எப்படி மாறிவிட்டாள்! மணமான புதிதில் அவனோடு தாராளமாகப் பேசுவதற்கே அவள் வெட்கப்

படுவாள். ஒரு நாள் இரவு, கடலிலே வெண்மதி பாலை ஊற்றியது. குப்பம் முழுவதும் தூக்கத்தில் ஆழ்ந்திருந்தது. அவளோடு சிறிது தூரம் கட்டுமரத்தில் போகவேண்டும் என்ற ஆசை அவனுக்கு உண்டாயிற்று. அதைச் சொன்னவுடனே, அவள் எவ்வளவு பயந்து விட்டாள்! அப்படியும் அவனுடைய பிடிவாதத்தைச் சமாளித்துக் கொண்டு, அவன் படகிலே அவளை அழைத்துப் போய் வந்தான். அவளுடைய அந்த உல்லாசமும் அந்தப் பயமும்! இப்போது அதை நினைத்தபோது அவன் நெஞ்சில் அமுத ஊற்றுப் பாய்ந்தது.

வேலு தலையை நிமிர்ந்து பார்த்தான். இதுவரை அவன் கற்பனையில் கண்ட உலகம் அங்கே இல்லை. அமுதம் விஷமாக மாறி யிருந்தது. நடுப்பகல் நீங்கி, எங்கும் ஒரே இருள் சூழ்ந்திருந்தது. வானத்து முகிலும் கடல் நீரும் ஒரே நிறமாகக் கலந்தன. அலைகள் மேன்மேலும் மலையத்தனை உயரம் எழும்பின. வேலு கடலிலேயே பழகி வாழ்ந்தவனாயினும், இந்தக் காட்சி அவனுக்குப் புதியதாக இருந்தது. அலைகள் சுழன்று சுழன்று வீசவே அவை இன்ன திசையில் செல்கின்றன என்பதுகூட அவனுக்குத் தெரியவில்லை. ஊழிக்கூத்தின் பயங்கரமான ஒலி அவன் காதிலே விழுந்தது. சிவபெருமான் கை கொட்டிக் கொடுகொட்டியாடி, எலும்புகளைத் தாங்கி நின்று கபாலக் கூத்து ஆடி, திருநடம் புரியும் களமாகக் கடல் விளங்கியது. உமா தேவியின் வெண்முறுவல் போலத் தொலைவிலே அலைகளின் நுரை பொங்கியது.

தன் கண்ணெதிரே அந்தக் கட்டுமரம் சுக்கல் சுக்கலாகித் திசைக்கு ஒன்றாகச் சிதறுவதை வேலு கண்டான். எதையாவது ஒரு சுக்கலைப் பிடித்துக்கொண்டு கரை சேர்ந்துவிட்டால் போதும் என்று அவனுக்குத் தோன்றிற்று. கட்டுமரத்தின் ஒரு துணுக்கைப் பற்றிக் கொள்வதற்கு அவன் பாய்ந்தான். அதே சமயத்தில் ஒரு பெரிய சுறாமீன் அந்த அலைச் சுழலில் சுழன்றுகொண்டே ஆவென்று வாயைத் திறந்தது. தன் நண்பன் பொன்னன் அதன் வாய்க்குள் மெல்ல மெல்ல நழுவுவதை வேலு பார்த்தான். அவனுக்கு உடல் வெடவெடவென்று நடுங்கியது. ஒன்றுமே தோன்றவில்லை. கட்டுமரத்தின் துணுக்கு அவன் கைக்கு அகப்படவில்லை. தன் உள்ளம் உறைந்துபோனதாகவும், இனி மேல் இந்த விபத்திலிருந்து தப்புவதற்கு வழியே இல்லை என்றும் அவனுக்குத் தோன்றிற்று.

அலைகளின்மேல் மிதக்க அவன் முயன்றான். மோதி மோதி வந்த அலைகள் அவனைக் கடலுக்குள் செருகின. ஏதோ ஒரு சுழல் தன்னை இழுப்பதை அவன் உணர்ந்தான். கடலின் ஆழத்துக்கு அவன் சென்றான். புலனற்று, உணர்வற்று, அவன் எல்லாவற்றையும் மறந்து போனான்.

குழந்தையின் உடல் நெருப்பாகக் கொதித்தது. செல்லாயிக்கு அதைப்பற்றிய கவலையே இல்லை. தண்ணீரின்மேல் போன கணவன் இன்ன கதியானான் என்று தெரியவில்லை; அவனோடு சென்ற பொன்னனும் வரவில்லை. பொன்னனின் மனைவி வாழ்வே அற்றுக் கண்ணும் கண்ணீருமாகக் கிடந்தாள். இந்த நிலையில் ஜுரத்தைத்தானா கவனிப்பது? குழந்தை ஓயாமல் கடல்நீரில் அளைகிறான்; வெயில் நெருப்பாகக் கொளுத்துகிறது. உடலில் வெப்பம் மிகுதியாகக் காட்டுகிறது; நான்கு நாள் ஆனால் தானாகக் குறைந்துவிடுகிறது என்று அவள் நினைத்தாள். கிழவனார் தரும ஆஸ்பத்திரிக்குப் போய்த் திரும்பி வந்து பெருமூச்சு விட்டபோதுதான் இதுவும் பெரிய விஷயம் என்ற அறிவு அவளுக்கு உண்டாயிற்று.

''அவன்தான் போயிட்டான்னு பாத்தேன்; உன் தலைவிதி எப்படி இருக்குதோ?'' என்று சொல்லியபடி சுருங்கிப் போன ஆழ்ந்த கண்களிலிருந்து முத்துக்களை உதிர்த்தார் கிழவர். வேலு போன நாளிலிருந்து இந்தக் குடும்பத்தின் பளுவைத் தம் பலவீனமான தோள்களில் சுமந்துவருகிறார். அந்த வருத்தமும் அவர் குரலில் ஒலித்தது.

''ஒண்ணும் கவலைப்படாதீங்க. சரியாப் போவும். கடவுள் உங்களுக்கு ஒண்ணும் கொறை வைக்கமாட்டாரு!'' என்று, அப்போது தான் அங்கே வந்த பொன்னன் மனைவி அவர்களுக்கு ஆறுதல் சொன்னாள். அவள் தன் பெருந்துன்பத்தை இந்தக் குடும்பத்தின் துயரத்தோடு எப்பொழுதோ ஐக்கியப்படுத்திவிட்டாள். அவளைப் பார்க்கப் பார்க்கச் செல்லாயிக்கு அழுகை அழுகையாக வரும்; ஆனால் அவள் பைத்தியம்போலச் சிரிப்பாள். துன்பம் அவளுக்கு மரத்துப் போயிருந்தது.

''குழந்தை எங்கே?'' என்று செல்லாயி, எதையோ நினைத்துக் கொண்டவள்போல, கிழவரைக் கேட்டாள்.

''அது ஏதோ விஷ ஜுரமாம். இருபது இருபத்தஞ்சு நாளு ஆஸ்பத்திரியிலேயே கிடக்கணுமாம். அவுங்க கொளந்தையை நல்லா வச்சுக்குவாங்க; கவலைப்படாதே!'' என்று கிழவர் தேற்றினார்.

செல்லாயி தினமும் இரண்டு வேளையும் ஆஸ்பத்திரிக்குப் போய்க் குழந்தையைப் பார்த்து வந்தாள். பொன்னனின் மனைவியும் அவளுக்குத் துணையாக வருவாள். மாலையில் இரண்டு பேரும் கடற்கரைக்குப் போய், கர்ப்பூரம் கொளுத்தி வைப்பார்கள். ''என் புருஷன் திரும்பி வந்ததும் உனக்குத் தேங்காய் உடைக்கிறேன், காளியம்மா!'' என்று வேண்டிக் கொள்வார்கள்.

பெரிய கடற்கரை. அறலையுடைய மணற்பரப்பு கண்ணுக்கு எட்டாமல் பரவிக்கிடக்கிறது. கொத்துக் கொத்தாக ஞாழல் மலர்கள்; தேன்பாயும் புன்னைப் பூக்கள். தலையவிழ்ந்த தாழையிலும் செருந்தியிலும் வண்டும் தும்பியும் ஆரவாரிக்கின்றன.

கயற்கண்கள் இரண்டு ஓர் இளைஞனை விழுங்கியபடியே இருந்தன. அவன் மெதுவாகக் கண்ணைத் திறந்தான். சூடான திரவம் ஒன்று, அவன் நெஞ்சில் உறைத்தது. அது பாலாகவோ கஞ்சியாகவோ இருக்கவேண்டும். அதன் சூட்டையும் இனிமையையும்விட, அவளுடைய மடி அவனுக்கு இதமாக இருந்தது.

அவன் வியப்போடு அவளைப் பார்த்தான். அவள் கண்ணில் குறும்பும் துணிச்சலும் விளையாடின. அத்தகைய மஞ்சள் மேனியை அவன் இதுவரைக்கும் இவ்வளவு நெருக்கத்திலிருந்து பார்த்ததில்லை.

''எப்படி இருக்கிறது?'' என்று அவள் கேட்டபோது, நாம் இன்ன உலகத்தில் இருக்கிறோம் என்றே அவனுக்குத் தெரியவில்லை.

''இது எந்த இடம்?'' என்று அவன் பதிலுக்குக் கேட்டான்.

''பாதுகாப்பான இடம்!'' என்று அவள் முறுவல் பூத்தாள்.

''உன் பெயர்?''

''காளி!''

அவளுடைய இனத்துக்கும் செய்கைக்கும் தொடர்பு இல்லாதது போலவே, அவளுடைய வடிவுக்கும் பெயருக்கும் தொடர்பு இல்லை.

''உங்கள் பெயர்?''

அவன் சிந்தித்துப் பார்த்தான். தன் பெயர் அவன் ஞாபகத்துக்கு வரவில்லை. ''சொக்கன்!'' என்று சொல்லி வைத்தான்.

''வாருங்கள், நம் குடிசைக்குப் போகலாம்'' என்று அவள் அவனை அழைத்துச் சென்றாள்.

''இந்தக் குடிசையில் யாரையும் காணவில்லையே!''

''ஏன், நான் இல்லையா?''

''நீ மட்டும் எப்படி இதில் தனியாக இருக்கிறாய்?'' என்று சொல்லிக்கொண்டே, சொக்கன் சுற்றுமுற்றும் பார்த்தான். சிறிது தள்ளி, நிறையக் குடிசைகள் இருந்தன. உலர்த்தியிருந்த மீன்களின் நாற்றம் குப்பென்று வீசியது. காகங்கள் கரைவது தொலைவில் கேட்டது.

''இங்கே எவனும் என் ஜோலிக்கு வரமாட்டான். ஒரு தடவை அந்த நாகப்பட்டினத்தான் மகன் என்னைச் சீண்டினான். சும்மா ஓர் அறை வைத்தேன், ரத்தம் கக்கிவிட்டான். அதுமுதல் என்னை எல்லாரும் காளி என்று கூப்பிடுகிறார்கள்.''

''என்னையும் நீ அப்படித்தானே செய்வாய்?'' என்று அவன் பயந்தவன் போலக் கேட்டான். அவள் கலகலவென்று நகைத்தாள்.

''எனக்கு வள்ளுவனார் சாட்சியம் சொல்லியிருக்கிறார்: 'கடலிலே ஆபத்தில் சிக்கிக்கிட்டு ஒருத்தர் வருவார். அவரை நீ காப்பாற்றுவாய். அவர்தாம் உம் புருசன்' என்று. நீங்கள் கடவுள்!''

சொக்கன் தன்னை மறந்தவனாய் அவள் இட்ட சோற்றை வயிறாரப் புசித்தான். ஒரு நீரரமகளோடு தான் பழகுவதாக நினைத்தான்.

மாலை மறைந்து, மதியம் முளைத்தது; கடலலை வெள்ளியோடை ஆயிற்று. வட்டமாகவும் மெதுவாகவும் நீலவானிலே அந்தத் திங்கள் ஊர்ந்தது; பால் வெளிச்சத்திலே தாரகைகளின் மெல்லொளி மறைந்தது.

ஒரு சிறு படகிலே காளி சொக்கனை ஏற்றிக்கொண்டாள். படகு நகர்ந்தபோது, சொக்கன் துடுப்புகளை எடுத்துக்கொண்டான். ''உனக்குக் கடலிலே படகு விடத் தெரியுமா?'' என்று கேட்டு விட்டு, அவள் கடகடவென்று நகைத்தாள்.

''ஓ! நன்றாகத் தெரியும்!''

''என்ன தெரியும்! ஒரு பெண்ணை மயக்கத் தெரியும். நீங்கள் சும்மா இருங்கள்!'' என்று அவள் அதட்டினாள்.

அவள் நடுவழியிலே அவனை அழவைத்தாள்; சிரிப்பு மூட்டினாள்; அவன் மனத்தைச் சுக்கு நூறாகக் கிழித்தாள்; அவனுக்கு மகிழ் ஊட்டினாள். அவள் இன்ன இன்ன செய்தாள் என்பதை வருணிக்கவே முடியாது. அவளோடு அவன் ஒரு புதிய உலகிலே இருந்தான்.

அவர்கள் திரும்பிவந்தபோது வெண்மதி நடுவானத்துக்கு வந்துவிட்டான். மோன இரவின் அழகு மேன்மேலும் வளர்ந்தது. எல்லை கடந்த பேராழியும், வெள்ளித் திங்களும், வைரமணித் தாரகைகளுமே அவர்களோடு விழித்திருந்தன.

சொக்கனோடு அவளும் கடலில் போய் மீன் பிடிப்பாள். இருவரும் சேர்ந்தே பக்கத்து நகரத்துக்குப் போய் விற்று வருவார்கள்.

ஒவ்வொரு கட்டிலாகத் தாண்டிக்கொண்டே தன் குழந்தையின் கட்டிலண்டை வந்தாள் செல்லாயி; நர்ஸுகள் கவலையோடு டாக்டர் சொன்ன வேலைகளைச் செய்துகொண்டு இங்கும் அங்கும்

ஓடினார்கள். டாக்டர் குழந்தையைப் பார்த்தபடியே சிந்தித்தபடி நின்றார். பிறகு நர்ஸை ஊசி மருந்து கொண்டுவரச் சொன்னார்.

செல்லாயி துணையாக நின்று குழந்தையைப் பார்த்தாள். அருகில் நின்ற பொன்னன் மனைவி, "குழந்தை பிழைத்துவிடுமா, டாக்டர்?" என்று கண்ணீர் வடித்தவண்ணம் கேட்டாள்.

"நாங்கள் மருந்து கொடுக்கிறோம். எல்லாம் ஆண்டவன் விட்ட வழி!" என்று டாக்டர் ஊசியில் மருந்தை ஏற்றினார்.

இரவு முழுவதும் அந்தப் பெண்கள் இருவரும் ஆஸ்பத்திரியிலேயே தூங்கினார்கள். காலையில் டாக்டர், "இனிமேல் பயமில்லை!" என்றார்.

செல்லாயி ஒரு பெருமூச்சு விட்டு, வானை நோக்கினாள். ஆனால் பொன்னனின் மனைவிக்கு அப்பொழுதே தாங்கமுடியாத தலைவலி வந்து விட்டது. டாக்டர் அவளை வேறு வார்டுக்கு அனுப்பினார்; குழந்தையைக் கொல்ல வந்த ஜுரம் அவளைப் பற்றிக்கொண்டது.

குழந்தைக்கு முற்றும் குணமாகி வீட்டுக்கு அழைத்துவந்த அன்றைக்கு, செல்லாயிக்குத் துளியும் மகிழ்ச்சி இல்லை. ஏனென்றால், அவள் வீட்டுக்கு வந்த சிறிது நேரத்துக்கெல்லாம், கிழவனார் செய்தி கொண்டு வந்தார்: "பொன்னன் மனைவிக்கு உடம்பு சரியாயிடுச்சு; டாக்டர் கிராமத்தில் இருந்தால் நல்லதுன்னாரு! அவ அண்ணன் வந்து இப்பத்தான் அவளை ஊருக்கு அழைச்சிண்டு போச்சு!"

செல்லாயிக்கு, தனக்குத் துணையாக இருந்தவளும் போய் விட்டாளே என்று வருத்தமாக இருந்தது. தன் கணவனைக் கொண்டு போன கடலின் கரையிலே அவள் வந்து நின்றாள். அலையின் உவர்ப்பும் அவள் கண்ணீரின் உவர்ப்பும் கலந்தன. வாழ்வே ஒரு கடல் என்று அவளுக்குத் தோன்றிற்று,

நகரத்துக்குச் சென்ற காளி, அன்று வழக்கப்படி தனக்கு வேண்டிய பல பொருள்களை வாங்கிக்கொண்டாள். சிங்காரச் சேலைகள், வர்ணச் சீப்புகள், மணிமாலைகள் - இப்படிப் பல.

அவள் கடையில் பேரம் செய்துகொண்டிருந்தபொழுது, சொக்கன் அருகில் இருந்த ஹோட்டலுக்குப் போனான். சாம்பாரையும் தோசையையும் கலந்து தின்றுகொண்டிருந்த அவன் காதில் ரேடியோப் பாட்டு விழுந்தது;

"உன்னை நம்பி நான் இருக்க ஏலேலோ ஐலஸா, ஐலஸா.."

மேலே ரேடியோ நிகழ்ச்சியை அவனுக்குக் கேட்கத் தோன்றவில்லை. இந்தப் பாட்டைத் தான் எங்கோ முன்னமே கேட்டிருப்பது அவன் நினைவுக்கு வந்தது.

ஆம்! முழுநிலா வீசிய அன்று இரவு அவனும் செல்லாயியும் படகில் சென்றபொழுது அவள் அவன் காதோடு, "உன்னை நம்பி நான் இருக்க.." என்று பாடினாள்.

மெதுவாக இப்போது அவனுக்குப் பழைய வாழ்க்கை முழுவதும் ஞாபகம் வந்தது. தன் பெயர் வேலு என்பதும் தெரிந்தது. 'எப்படி நம்மை நாமே இவ்வளவு நாள் அடியோடு மறந்துவிட்டோம்?' என்பது அவனுக்குப் புதிராகவும் வியப்பாகவும் இருந்தது.

ஹோட்டலிலிருந்து வெளியே வந்தபோது எதிரே ஒரு பெரிய பலகை தொங்கியது: டாக்டர் விஜயம், அம்னேஷியா (மறதிக் கோளாறு) நோய் நிபுணர்.

வேலு உள்ளே போய் டாக்டரைப் பார்த்தான். "உனக்கு அம்னேஷியா இருந்திருக்கிறது. இந்த வியாதியில் மூளை தூங்கும்;

மனிதன் தன்னையே மறந்துவிடுவான். இனி உனக்குச் சரியாகி விடும்'' என்று அவர் ஒரு மருந்தைத் தந்தார்.

காளி தான் வாங்கிய பண்டங்களை அவனிடம் காண்பித்தாள்; கொஞ்சினாள்.

''இனி என்னைத் தொடாதே!'' என்றான் வேலு.

''ஏன்?''

''இத்தனை நாளும் என் நினைவு எனக்கு இருக்கவில்லை. இனி-''

''இனி என்ன? கடலிலிருந்து உங்களைக் கரைக்கு எடுத்து வந்து காப்பாற்றியதற்கு, இது சரியான தண்டனைதான்!''

''இனிமேல் என்னை நான் ஏமாற்ற முடியாது.''

''வள்ளுவனார் ஜோஸ்யம் சரியாகப் போய்விட்டது. 'உன் புருஷன் உன்னிடம் சில நாளே இருப்பான்' என்று சொன்னார்.''

அதற்குமேல் அவள் பேசாமல் தன் ஊரை நோக்கி நடந்தாள்; வேலு அவளைத் தொடர்ந்தான்.

இரவு ஊரடங்கியதும் அவனுடைய படகு புறப்பட்டது. அவள் தன் ஞாபகார்த்தமாக ஒரு பொருளை அவனிடம் கொடுத்தாள். அவன் ஆவலோடு அதைப் பார்த்தான்; எலுமிச்சம் பழ அளவு பெரிய முத்து!

''இது என் பாட்டனார் காலத்திலிருந்து எங்கள் வீட்டில் இருக்கிறது. இதைப் பத்திரமாக வைத்துக்கொள்ளுங்கள்'' என்று அவள் அவனுக்கு விடை கொடுத்தாள்.

படகு மறையும் வரைக்கும் அவள் கடற்கரையிலேயே அசையாமல் நின்றாள். பிறகு தன் குடிசைக்குள் சென்றாள். ஒன்றுமே நடக்காததுபோல, தன் பழைய வாழ்க்கையைத் தொடங்கினாள்.

அலைகளோடு ஆடியபடியே படகு கரையை நோக்கி வந்து கொண்டிருந்தது. ஒரு பெண் கடலுக்குக் கர்ப்பூரம் கொளுத்தி ஏதோ வேண்டிக்கொள்வதை வேலு கவனித்தான். உற்றுப் பார்த்தான்: செல்லாயி! ஆம், செல்லாயிதான்!

'நாம் கொண்டுவந்த இந்தப் பெரிய முத்தை அவளுக்குக் காண்பிக்கலாம். இதைப் பார்த்ததும் அவள் தன் துன்பத்தையெல்லாம் மறந்துவிடுவாள். அவ்வளவேன்? இனிமேல் நாம் இந்தக் கடல் தொழிலையே விட்டுவிடலாம். இந்த முத்தை விற்று ஒரு பெரிய வீடு கட்டிக்கொண்டு சௌக்கியமாக வாழலாம்' என்று நினைத்தபடியே அவன் கரையை நெருங்கினான்.

அவனைப் பார்த்ததுமே செல்லாயியின் கண்கள் களித்தன. நாணத்தோடு அவள் தரையைப் பார்த்தபடி நின்றாள்.

''சமுத்திரத்தில் திக்குத் திசை தெரியாமல் போய்விட்டேன், செல்லாயி! திரும்பிவர இவ்வளவு நாள் ஆகிவிட்டது. ஆனால் உனக்கு எவ்வளவு மதிப்புள்ள பொருள் கொண்டுவந்திருக்கிறேன், பார்!'' என்று சொல்லித் தன் இடுப்பில் இருந்த முடிச்சை அவிழ்த்தான்.

அடுத்த கணம் அவன், ''அடடா! அதை விற்க நினைத்தேனே! அது போய்விட்டதே!'' என்று வருத்தத்தோடு கூவினான்.

அவன் பேச்சு அவளுக்கு விளங்கவில்லை. ஆழ்கடல் அவனைப் பார்த்துச் சிரித்தது; வானத்தின் கோடியில் ஒரு தாரகையும் கண்ணைச் சிமிட்டியது.

—ஜூலை, 1953

# காணாத மனைவி

## ஜெகசிற்பியன்

அந்துப் பூச்சி அரித்துவிட்ட அரிசியைப் போல் இருந்த அவன் கண்கள் அந்த வார்த்தைகளைக் கேட்டதும் அகல விரிந்து நீரைக் கொட்டின. எதிரே அமர்ந்திருந்த தன் தாயின் கரங்களைத் துழாவிப் பற்றி இழுத்து நெஞ்சோடு நெஞ்சாக வைத்துப் புதைத்துக் கொண்டு, மகிழ்ச்சியும் வியப்பும் குதிபோடும் குரலில், ''உண்மைதானா அம்மா? அவள் என்னைச் செய்துகொள்கிறேனென்று சொல்லிவிட்டாளா?'' என்று கேட்டான் ரகுநாதன்.

''இப்போது தான் உன் அப்பா வந்து இந்தச் செய்தியைச் சொன்னார், ரகு. மஞ்சுளா மட்டுமல்ல, அவள் பெற்றோரும் இதற்குப் பூரணமாகச் சம்மதித்து விட்டார்களாம். வருகிற வாரத்தில் கல்யாணத்தை முடித்துவிடுவதற்கான காரியங்களைச் செய்ய இன்று முதலே உன் அப்பாவும் பெண் வீட்டாரும் ஆரம்பித்து விட்டார்கள்'' என்று மகிழ்ச்சி பொதிந்த குரலில் சொன்னாள் பார்வதியம்மாள்.

புத்துயிர் பெற்றவன் போலச் சட்டெனத் தன் இருப்பிடத்தை விட்டு எழுந்து நின்ற ரகுநாதன், ''அம்மா, தயவுசெய்து என்னை மாடி அறைக்கு அழைத்துப் போய்விடு. கொஞ்சநேரம் அங்கு நான் தனிமையில் இருக்க விரும்புகிறேன்'' என்றான்.

ஐம்பது வயசான பார்வதியம்மாள் தட்டுத் தடுமாறி எழுந்து, இருபத்தாறு வயசு நிரம்பிய வாலிபனான தன் மகனின் கையைப் பிடித்து அழைத்துக்கொண்டு மாடிப் படிகளில் ஏறிப் போகும்போது அவள் மனம் சொல்லொணா வேதனையடைந்தது.

மாடியறை ஜன்னலோரம் அமைதியாக உட்கார்ந்திருந்தான் ரகுநாதன். அவன் மனத்தில் பொங்கி வழிந்த குதூகலத்தை மிகையாக்கிக் கொண்டிருந்தது தண்ணெனத் தவழ்ந்து வந்த தென்றல் காற்று.

பசுமை நிறம் பாய்ந்திருந்த வான்வெளியில், செம்மறியாட்டு மந்தை மேய்வது போன்ற எழில் சித்திரத்தைத் தீட்டி வைத்திருந்தாள் இயற்கையன்னை. இந்த அழகுக் காட்சியைக் கண்டு களிக்க அவனால் இயலவில்லை- பார்வைப் புலனை அடக்கிப் பக்தி மோனத்தில் ஆழ்ந்திருக்கும் மகாஞானியைப் போல அமர்ந்திருந்தான் அவன். இரவையும் பகலையும் அறிய முடியாத ஒரு விசித்திர உலகில் வாழும் பரிதாபப் பிரகிருதியான அவன், தட்பவெட்ப நுகர்ச்சியைக் கொண்டும் ஓசை ஒலி நயங்களைக் கொண்டும் காலப் பாகுபாட்டைக் கணித்தறியப் பழகியிருந்தான்.

தன்னுள் - தனக்கு நேர்ந்த இந்த மகத்தான இழப்பை எண்ணி மனம் சுருங்கிக் கொண்டிருந்த ரகுநாதன் மஞ்சுளாவின் நினைவு வரவே சட்டென நிமிர்ந்து உட்கார்ந்தான். அவளைப்பற்றிய நினைவு மனத்தில் முளைத்ததுமே, அவனிடம் இருந்த அயர்வும் வேதனையும் பனிச் சென விடுபட்டு மறைந்தன. ஓராயிரம் கண்கள் கொண்டு உலகத்தின் கோடிவரை ஊடுருவிப் பார்க்கும் சக்தி பெற்றவனைப் போல உற்சாகத் துடன் எழுந்தான்; நாற்காலியில் அமர்ந்தான். 'நிலவின் ஒளியையும் இருளின் கருமையையும் கண்டு உணர முடியாத என்னை மஞ்சுளா மணந்துகொள்ளச் சம்மதித்து விட்டாளாம். காலமெல்லாம் இந்தக் கபோதியின் கைகளுக்கு ஊன்றுகோலாக இருக்க அவள் ஒப்புக்கொண் டாளாம். உலகத்தில் நடக்கக்கூடிய காரியமா இது? உண்மைக் காதல் என்ற ஆணிவேரால் தான், தியாகம் என்ற அடிப்பகுதி மண்ணைப் போய்த் தொடமுடியும்.'

மஞ்சுளாவைப் பற்றி நினைக்கும் போதெல்லாம் அவனுக்கு அந்தச் சம்பவமும் நினைவுக்கு வந்துவிடும். இப்போதும் அந்தப் பயங்கர அவல சம்பவத்தைத்தான் நினைத்துக்கொண்டான் ரகுநாதன்.

ரகுநாதன் அப்போது கல்லூரியில் பி.எஸ்ஸி. கடைசி வருஷம் படித்துக் கொண்டிருந்தான். படிப்பில் மகா கெட்டிக்காரன். விஞ்ஞான வகுப்பில் அந்தக் கல்லூரியிலேயே அவன்தான் முதல் மாணவனாக விளங்கினான். எதிர்கால விஞ்ஞான உலகில் பல புதிய அற்புதங்களை நிகழ்த்திக் காட்டப் போகும் ஒரு நிபுணனை மாணவனாகப் பெற்றது பற்றி அந்தக் கல்லூரிப் பேராசிரியர்கள் பெரிதும் பெருமை கொண்டனர். சகல வசதிகளும் கொண்ட குடும்பத்தில் பிறந்த ரகுநாதன் அறிவுத் திறனும் வாய்ந்தவனாய் இருந்தான். தம் பிள்ளையின் புத்திக் கூர்மையை அறிந்த பெற்றோர், படிப்பு முடிந்து பட்டம் பெற்றதும், அவனை மேல் நாட்டுக்கு அனுப்பி வைத்து விஞ்ஞானத் துறையில் ஒரு மேதையாக்கி விட வேண்டிய ஏற்பாடுகளைச் செய்ய ஆரம்பித்திருந்தனர்.

ரகுநாதன் அறிவு முனைப்புள்ளவனாக இருந்தது போலவே ஆணழகனாயும் இருந்தான். அவனுடைய நற்குணமும் நன்னடத்தையும் அதற்கு மேலும் எழிலைக் கூட்டின.

அந்த அழகேறிய கண்களுக்கு அடிமையாகிவிடத் துடிதுடித்த பெண்கள் அக்கல்லூரியில் ஏராளமாக இருந்தார்கள். அந்த அடிமைக் கூட்டம், நாளுக்கு நாள் அதிகப்பட்டுக் கொண்டே போயிற்று. அந்தப் பெண்களில், ரகுநாதனின் அகத்தில் 'அடிமை'யாவதற்குரிய ஆற்றல் பெற்றவள் ஒருத்தி மஞ்சுளாதான் இருந்தாள்.

மஞ்சுளா அந்தக் கல்லூரியில் பி. ஏ. ஆனர்ஸ் படிக்கும் மாணவி. நல்ல குடும்பத்துப் பெண் அவள். செல்வத்திலும் அந்தஸ்திலும் ரகுநாதனுக்குச் சமதையானவள். கல்லூரியில் சேர்ந்தது முதல் இந்தக் கடைசி வருஷம் வரை படிப்பு ஒன்றிலேயே தன் முழுக் கவனத்தையும் செலுத்தி வந்த ரகுநாதனைக் காந்தம் போல் கவர்ந்து தன்னுள் ஐக்கியமாக்கிக் கொண்டாள் மஞ்சுளா. கொஞ்ச நாட்களுக்கெல்லாம் அவளும் அவனும் பிறர் பார்த்துப் பொறாமைப்படும் அளவுக்குப் பழகத் தலைப்பட்டனர்.

மறைக்க முயல்வதும், மறைக்க முடியாததுமான விஷயம் ஒன்று உலகில் உண்டென்றால் அது காதல் என்பதுதானே? கல்லூரிச் சுவர் களுக்கு உள்ளே உற்பத்தியாகி அங்கேயே சிறிது காலம் சஞ்சரித்துக் கொண்டிருந்த ரகுநாதனின் காதல் விஷயம், குபீரென ஒரு நாள் வெளி யுலகத்துக்குத் தாவி, அவன் வீட்டையும் அவள் வீட்டையும் போய்த் தொட்டுவிட்டது.

மஞ்சுளாவின் பெற்றோர் முதலில் இந்த விஷயத்தைக் கேள்விப் பட்டதும் பயந்து விட்டனர். பிறகு ரகுநாதனைப் பற்றியும் அவன்

குடும்பத்தைப் பற்றியும் சிறுகச் சிறுக விஷயம் சேகரித்து அறிந்தபின் மகிழ்ச்சி அடைந்தனர்.

ரகுநாதனின் தந்தைக்கும் இவ்விஷயத்தில் பூரணத் திருப்தியே. ஆனால், அவன் அன்னை பார்வதியம்மாள் இதை ஏற்கத் தயங்கினாள். இதற்குக் காரணம் இதுதான்: பார்வதியம்மாளுக்கு ஒன்றுவிட்ட தம்பி ஒருவர் இருக்கிறார். இளமையிலேயே மனைவியை இழந்து விட்ட அவருக்கு மாலினி என்று ஒரே ஒரு மகள். தாயற்ற அந்தப் பெண், எட்டு ஒன்பது வயசுவரை பார்வதியம்மாளின் வீட்டிலேயே வளர்ந்தவள். பார்வதியம்மாள் மாலினியின் மீது எல்லையற்ற அன்பு வைத்திருந்தாள். அவளைத் தன் சொந்த மகள் போலப் பாவித்து வளர்த்து வந்தாள். ரகுநாதன் சிறுவனாக இருந்தபோது அவனுடைய ஆட்டம் பாட்டத்துக்கெல்லாம் முதல் தோழியாக இருந்தவள் மாலினியே.

மாலினிக்கு வயசு பத்தானதும் பல காரணங்களை உத்தேசித்து அவளைத் தன் தம்பியின் வீட்டில் கொண்டு போய் விட்டுவிட்டாள், பார்வதியம்மாள். தந்தையிடம் போய்ச் சேர்ந்த மாலினி, இரண்டாம் வருஷம் பெண்மை எய்தினாள். அதோடு அவள் பள்ளிப் படிப்புக்கும் முற்றுப்புள்ளி வைக்கப்பட்டது. மூன்றும் படிவத்தோடு தன் படிப்பை முடித்துக்கொண்டு வீட்டோடு உட்கார்ந்து விட்டாள் மாலினி. அவள் தந்தை தன் மகளை மேலும் படிக்க வைக்க விரும்பினார். ஆனால் பார்வதியம்மாள் இதற்குச் சம்மதிக்கவில்லை. சம்மதிக்காததற்குக் காரணம், மாலினியைத் தன் மகனுக்குச் செய்து வைத்து, அவளிடம் தன் குடும்பப் பொறுப்பை ஒப்படைத்து விடவேண்டுமென்று நெடுநாள் திட்டமிட்டுக் கொண்டிருந்தது தான். குடும்ப பாரம் ஏற்கப் போகும் பெண், புத்தக பாரம் ஏற்கக் கூடாதென்பது பார்வதியம்மாளின் வைதிக உள்ளத்தின் முடிவு.

மாலினி அழகி அல்ல; ஆனால் குரூபியும் அல்ல. சராசரிப் பெண்களுக்குள்ள சர்வ லட்சணமும் கொண்டவள்; அவ்வளவே! தன் அத்தையின் வீட்டுக்கு இரண்டு மூன்று மாதத்துக்கு ஒரு முறை வருவாள். இருக்கும் இடமே தெரியாமல் இரண்டொரு நாள் தங்கியிருந்துவிட்டுப் போய்விடுவாள். ரகுநாதன் பள்ளியில் படித்துக் கொண்டிருந்த வரையில், அவள் வீட்டுக்கு வந்தால் அவளுடன் ஏதாவது பேசுவான்; சிறுபிள்ளை போல் கேலி செய்வான். அவளும் பதிலுக்கு இவனைக் 'கோட்டா' செய்வாள். ரகு கல்லூரிக்குப் போனது முதல் இந்தக் கேலி கிண்டல் எல்லாம் அவனிடமிருந்து துப்புரவாக மறைந்து விட்டன. அவளும் இவனைப் போலவே முழுதும் மாறிவிட்டாள். ரகுநாதன், கூடத்துத் தரையிலோ வராந்தாவிலோ இருந்தால் மாலினி சமையல் கட்டை விட்டு வெளியே தலை காட்டவே மாட்டாள். அவள் வெளியே ஏதாவது வேலை செய்து கொண்டிருந்தாளானால் அவன் தன் அறையிலேயே அடைந்து கிடப்பான்; தப்பித் தவறி இருவரும் நேருக்கு நேர் சந்தித்துக் கொண்டால் அவள் பயந்தபடி ஓடிவிடுவாள்.

கடைசியில் மாலினியின் செவிகளுக்கு அந்த விஷயம் எட்டி விட்டது. அதாவது, ரகுநாதன் மஞ்சுளா காதல் விஷயம். அது முதல் அவள் தன் அத்தையின் வீட்டுக்கு வருவதே இல்லை. அடிக்கடி ஜுரமென்றும் தலைவலி என்றும் படுத்துப் படுத்து எழுந்தாள் மாலினி.

ரகுநாதனுக்குக் கடைசி வருஷப் பரீட்சை நெருங்கிக் கொண்டிருந்தது. படிப்பில் அவன் முழுக் கவனத்தையும் செலுத்த அவன் தந்தை ஒரு யுக்தி செய்தார். மஞ்சுளாவின் பெற்றோரிடம் கலந்து ஆலோசித்துப் பரீட்சைக்கு முன்னால் நிச்சயதார்த்தச் சடங்கை நிறைவேற்றி விட வேண்டும் என்பது தான் அந்த யுக்தி. நிச்சயதார்த்தம் நடந்து விட்டால் ரகுநாதனும் மஞ்சுளாவும் அடிக்கடி சந்தித்துக் கொள்ள

மாட்டார்கள்; தங்கள் காதல் உறுதிப்பட்டுவிட்டது என்ற நம்பிக்கையில் சந்திப்பைக் குறைத்து, இருவரும் படிப்பில் கவனம் செலுத்துவார்கள். வாலிப மனத்தின் கூறுபாடுகளை, ஒரு காலத்தில் வாலிபராக இருந்த ரகுநாதனின் தந்தை இன்னும் மறக்கவில்லையே!

நிச்சயதார்த்தத்துக்கு இன்னும் ஒரு வாரமே இருந்தது.

ரகுநாதனுக்கு அன்று வகுப்பில் விசேஷப் பயிற்சிப் பாடமொன்று நடந்தது. ரசாயன ஆராய்ச்சிக் கூடத்தில் ஒவ்வொரு மாணவனும் தனித்தனியே அமர்ந்து, ரசாயன திராவகக் கலவைகளை வைத்து ஆராய்ந்து குறிப்பெழுதிக் கொண்டிருந்தான். நிலக்கரியிலிருந்து ஒருவகை அமிலத்தைப் பிரித்தெடுக்கும் ஆராய்ச்சிப் பாடம் அன்று நடந்தது. ரகுநாதன் மிகுந்த உற்சாகத்துடனும் முழுக் கவனத்துடனும் இவ்வாராய்ச்சியில் ஈடுபட்டிருந்தான். அவனெதிரே இருந்த மேஜையில் பல விதமான திராவகங்கள் ஜாடிகளில் நிரப்பி வைத்திருந்தன. இடதுபுறம் இருந்த மற்றொரு சிறு மேஜைமீது, எரியும் ஸ்டவ்வில் ஒரு திராவகம் கொதித்துக் கொண்டிருந்தது. கொதிக்கும் திராவகத்தில் அவ்வப்போது ஏற்படும் மாறுபாடுகளைப் பார்த்துப் பார்த்து, தன் குறிப்புப் புத்தகத்தில் எழுதிக்கொண் டிருந்தான் ரகுநாதன்.

இந்தச் சமயத்தில் வகுப்பு நேரம் முடிந்து விட்டதற்கு அறிகுறியாக மணி அடித்தது. எல்லா மாணவர்களும் செய்து கொண்டிருந்த ஆராய்ச்சிகளை அப்படியப்படியே விட்டு எழுந்து போய்விட்டனர். ரகுநாதன் மட்டும் தன் இருப்பிடத்தை விட்டு எழுந்திருக்கவில்லை. மணி அடித்த சப்தமே அவன் காதில் விழவில்லை. ஸ்டவ்வில் கொதித்துக் கொண்டிருந்த திராவகத்தையே உன்னிப்பாகக் கவனித்துக் குறிப்பு எழுதிக் கொண்டிருந்தான் அவன்.

பாடம் முடிந்து வெளியே வந்த மஞ்சுளா, நேரே ரகுநாதன் இருக்கும் அறையை நோக்கிப் போனாள். அவள் வருவதைக்கூடக் கவனியாமல், ஸ்டவ் அருகில் குனிந்து ஏதோ எழுதிக்கொண் டிருந்தான் ரகுநாதன். திராவகம் முழுச் சூடேறி முறியும் கட்டத்தை நெருங்கியது. பரபரப்புடன் ரகு கொதித்த திராவகப் பாத்திரத்தைக் கீழே இறக்கி வைக்கக் கையை உயர்த்தினான்.

இந்தச் சமயத்தில் மஞ்சுளா, "இன்னும் என்ன செய்து கொண் டிருக்கிறீர்கள் ரகு?" என்று கேட்டபடி அருகில் வந்தாள்.

தன்னை மறந்த நிலையில் இருந்த ரகுநாதன், திராவகப் பாத்திரத்தை ஸ்டவ்விலிருந்து இறக்கிக்கொண்டே சட்டென நிமிர்ந்து, "யார்? என் மஞ்சுளாவா?" என்று கேட்டான். அதே சமயம், அவன் கையில் இருந்த பாத்திரம் படீரென்று பேரொலியுடன் வெடித்து அதில் இருந்த திராவகம் நாலுபுறமும் தெறித்துச் சிதறியது. 'ஹா! மஞ்சுளா!' என அலறிக்கொண்டே குப்புறக் கவிழ்ந்து புரண்டான் ரகுநாதன். துள்ளித் துடித்து நிமிர்ந்தபோது அவன் கண்கள் இரண்டிலும் அந்தத் திராவகக் கலவை ஈயக் குழம்புபோல் அப்பிக்கொண் டிருந்தது. அதன் பிறகு அங்கு என்ன நடந்ததென்பது அவனுக்குத் தெரியாது.

மூன்று மாதங்கள் ஓடி மறைந்தன. ரகுநாதன் அன்றுதான் சுயப் பிரக்ஞையோடு படுக்கையிலிருந்து எழுந்து உட்கார்ந்தான். கண்களை அகலத் திறந்து பரக்கப் பரக்கச் சுற்றி வளைத்துப் பார்த்தான். எங்கும் ஒரே பயங்கர இருள் கவிந்து கிடந்தது. அவன் பார்வையை இழந்தான்.

திராவகப் புண்களெல்லாம் ஆறிப் படுக்கையை[விட்டு ரகுநாதன் எழுந்திருப்பதற்கு ஆறு மாத காலமாகி விட்டது. எரி அமிலத்தால் வெந்துபோன அவன் கண்களைச் சொஸ்தப்படுத்தி, இழந்த பார்வையை ஸ்டும் கொண்டுவர எத்தனையோ டாக்டர்கள் பிரம்மப் பிரயத்தனம்

செய்து பார்த்தனர். ரகுநாதனின் தந்தை, பணத்தைப் பணமென்று பாராமல் தண்ணீராகச் செலவழித்தார். ஆனால் பலன் மட்டும் கடுகளவும் கிட்டவில்லை. ரகுநாதன் தன் பார்வையைத் துப்புரவாக இழந்தேவிட்டான்.

இரவும் பகலும் மாறி மாறி வந்து நாட்களை உருவாக்கி விரட்டிக் கொண்டிருந்தன.

பார்வையை இழந்த ரகுநாதனுக்கு அது பழைய விஷயமாகி விட்டது. அவன் பெற்றோரும் அவனைப் போல அதை மறந்து தங்கள் மனத்தைத் தெம்பாக்கிக் கொண்டனர். தம் பிள்ளை வேளைக்குச் சாப்பிட்டு விட்டோடு சுகமாக உட்கார்ந்திருப்பதே அவர்களுக்குப் பரம திருப்தியாக இருந்தது. ஓகோ எனச் செலவு செய்தாலும் மூன்று தலைமுறைகளுக்கு வரக்கூடிய சொத்து இருக்கிறது; சம்பாத்தியம் தேவை என்ற கவலை இல்லை.

ஆனால்?—

வம்சாவளி விருத்தி நியதி என்னவது? பார்வதியம்மாளின் குடும்பம் ரகுநாதனேடு பூண்டற்றுப் போய்விட வேண்டியது தானு? இப்போதே அவளுக்கும் அவள் கணவருக்கும் ஐம்பது அறுபது என்று வயசாகி விட்டது. இன்னும் ஐந்தாறு அல்லது ஏழெட்டு வருஷங்கள் அவர்கள் இவ்வுலகில் ஜீவித்திருக்கலாம். பிறகு?

குடும்ப விருத்தி வேண்டாம். ஆனல் அவர்களுக்குப் பின் ரகுநாதனுக்குத் துணை யார்? கண் இல்லாதவனும், பச்சைப் பாலசனும் ஒன்ருயிற்றே! தாயின்றிக் குழந்தை வாழ முடியாது; துணையின்றிக் குருடன் ஜீவிக்க முடியாது. அப்படியானல், கண்ணை இழந்து விட்டிருக்கும் ரகுநாதனின் கதி? அவனுடைய எதிர்கால வாழ்க்கை?

பார்வதியம்மாளும் அவள் கணவரும் பலநாள் இதே சிந்தனையில் ஆழ்ந்து கிடந்தார்கள். கடைசியில் அவர்களுக்கு ஒரு யோசனை தோன்றியது. ரகுநாதனுக்குக் கல்யாணம் செய்து வைத்து விட வேண்டும் என்ற யோசனைதான் அது.

இந்த யோசனையை ஒரு நாள் ரகுநாதனிடம் வெளியிட்டாள் பார்வதி. இதைக் கேட்ட ரகுநாதனுக்குச் சிரிப்பதா அழுவதா என்று தெரியவில்லை. "குருடனுகி விட்ட நான், ஒரு பெண்ணின் வாழ்க்கையையும் குருடாக்க வேண்டுமென்று நீ விரும்புகிருயா அம்மா?" என்று மட்டும் கேட்டுவிட்டு மௌனமாகி விட்டான் ரகுநாதன். ஆனல் பார்வதியம்மாள் தன் முயற்சியைக் கைவிடவில்லை. கல்யாண விஷயமாகத் தினமும் ரகுநாதனை நச்சரித்துக் கொண்டே வந்தாள்.

ரகுநாதனுக்குத் தர்மசங்கடமாகி விட்டது. தன் பெற்றோரை எப்படிச் சமாதானப் படுத்துவதென்றே அவனுக்குத் தெரியவில்லை. திருமணத்தைப் பற்றியே எப்போதும் பேச்சு நடந்ததால் அவன் உள்ளத்தின் அடித்தளத்தில் மறைந்து கிடந்த பழைய காதல் சம்பவங்களெல்லாம் மீண்டும் தலை தூக்கி அவன் மனத்தை அலைக்கழித்தன. மஞ்சுளாவைப் போன்ற ஒரு தெய்விகக் காதலியை மீண்டும் இந்த ஜன்மத்தில் அவன் அடைய முடியுமா? அவளை வைத்துப் பூசித்த அவன் மனக்கோயிலில் இன்னெருத்தி வந்து குடியேறத்தான் முடியுமா? கண்ணை இழந்த பிறகும் அவன் இதுவரையில் உயிர் வாழ்ந்து கொண்டிருக்கிருன் என்ருல், அது மஞ்சுளாவைப் பற்றிய நினைவு என்ற சஞ்சீவியால் அன்ருே? அவளைத் தவிர அவன் இன்னெருத்தியைக் கனவிலும் கருத முடியாதே! உள்ளத்தின் வாஞ்சையெல்லாம் கொட்டி உண்மை

யாக நேசித்த அவளை விட்டு, வேறொருத்தியை அவன் சுண்டு விரலாலும் தீண்டமுடியாது. முடியவே முடியாது!

ஒரு நாள் தன் எண்ணத்தை வாய்விட்டுச் சொல்லி விட்டான் ரகுநாதன்: ''அம்மா, உன் விருப்பப்படி நான் கல்யாணம் செய்து கொள்கிறேன். ஆனால், மஞ்சுளாவைத் தவிர வேறு எந்தப் பெண்ணையும் கண்டிப்பாகச் செய்து கொள்ளமாட்டேன். என் விருப்பப்படி செய்ய முடியுமானால், கல்யாண ஏற்பாட்டைத் துவங்கு.''

பார்வதியம்மாள் இதைக் கேட்டதும் வாய் திறக்கவே இல்லை. அன்று மட்டுமல்ல. பல நாட்கள் வரை அவள் கல்யாணப் பேச்சை எடுக்கவே இல்லை.

கடைசியில் இன்று எதிர்பாராமல் அந்தச் செய்தியைச் சொன்னாள் பார்வதியம்மாள்: 'ரகுநாதனை மஞ்சுளா மணந்துகொள்ளச் சம்மதித்து விட்டாள்.'

நீண்ட நேரச் சிந்தனையிலிருந்து விடுபட்டு நிமிர்ந்த ரகுநாதனின் செவிகளில், அவன் தாயும் தந்தையும் தொலைவில் நின்று ஏதோ தணிந்த குரலில் பேசிக் கொண்டிருப்பது தெளிவில்லாமல் கேட்டது.

திருமணம் முடிந்த மூன்றும் நாள் மாலை. ரகுநாதன் மாடியறையில் தனியே உட்கார்ந்திருந்தான். கண்ணற்றவனின் முகத்தில் சதா கவிந்திருக்கும் துன்பச் சாயை கொஞ்சமும் இன்றி, எல்லையற்ற மகிழ்ச்சி போதையுடன் அமர்ந்திருந்தான் அவன்.

கீழே, கூடத்து அறையில் ரகுநாதனின் தந்தை சாய்வு நாற்காலியில் சாய்ந்தபடி அன்றைத் தினப் பத்திரிகையைப் படித்துக் கொண்டிருந்தார். சமையலறையில் பார்வதியம்மாள் உட்கார்ந்திருந்தாள். அவள் எதிரே மாலினி முதுகுப்புறமாகத் திரும்பி உட்கார்ந்திருந்தாள். அவளுடைய அழகிய கருங்கூந்தலை வாரிப் பின்னலிட்டுப் பூச்சூட்டிக்கொண் டிருந்தாள் பார்வதியம்மாள்.

தலையலங்கார வேலை முடிந்தது. மாலினி மெல்ல எழுந்து நின்றாள். பார்வதியம்மாளும் அவளுடனேயே தரையில் கைகளை ஊன்றி மெதுவாக எழுந்து நின்று தணிந்த குரலில் சொன்னாள்: ''மாலினி, நான் சொன்னதெல்லாம் நினைவு இருக்கிறதா?''

''நன்றாகக் கவனத்தில் பதிய வைத்துக்கொண் டிருக்கிறேன்' மாமி. ஒரு வார்த்தையைக்கூட ஒரு கணமும் மறந்து விட மாட்டேன்'' என்று கம்மிய குரலில் சொன்னாள் மாலினி.

''மிக மிக ஜாக்கிரதையாக நடந்துகொள். ரகு மகா புத்திசாலி. கொஞ்சம் ஏமாந்தாலும் உன்னை இன்னாரென்று கண்டுபிடித்து விடுவான். மாலினி என்ற பிரக்ஞையே உனக்கு இருக்கக் கூடாது. மஞ்சுளாவாக நீ புனர்ஜன்மம் எடுத்துவிட வேண்டும். அவளாகவே வாழ்ந்து, அவளாகவே சாக வேண்டும். எங்களுடைய வாழ்க்கையையும், என் அருமை மகனுடைய வாழ்க்கையையும் உன் ஒருத்தியின் கையில் முழுசாக ஒப்படைத்திருக்கிறோம். இதை ஒப்பேற்றி வைப்பது இனி உன் பொறுப்பு'' என்று கூறி முடிப்பதற்குள் பார்வதியம்மாளின் கண்கள் குளமாகிவிட்டன.

இந்தச் சமயத்தில், ''மஞ்சுளா! மஞ்சுளா!'' என்று அழைத்துக்கொண்டே மாடிப்படிக் கட்டைச்சுவரைப் பற்றியவாறு மெதுவாக, நிதானமாக, தட்டித் தடுமாற்றமின்றி அழகாக இறங்கி வந்தான் ரகுநாதன்.

மாலினி இனிமையான குரலில் சிரித்துக்கொண்டே, ''இதோ வந்துவிட்டேன், அத்தான்!'' என்றபடி மாடிப்படிகளை நோக்கி ஓடினாள்.

கீழே இருந்த பார்வதியம்மாளும் அவள் கணவரும், மாலினி ரகுநாதனின் கரங்களை அன்புடன் மிருதுவாகப் பற்றி மாடி அறைக்குத் திருப்பி அழைத்துப் போவதைக் கண்கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தனர்.

''மஞ்சுளா, உனக்குப் பசிக்கவில்லை? இன்னும் சாப்பிட எழுந்து போகாமல் இருக்கிறாயே!''

''உங்கள் அருகில் இருந்தால் எனக்குப் பசி, தாகம் எதுவுமே எடுப்பதில்லை.''

''அப்படியானால், இனிமேல் நான் சாப்பிடும் இலையில் இரண்டு ஆள் சாதம் பரிமாறும்படி என் அம்மாவிடம் சொல்லப் போகிறேன்!''

''ஏன் அப்படி?''

''ஒவ்வொரு கவளமாகச் சாதத்தை உருட்டி என் கையில் வைக்கும்போது, நீயும் ஒவ்வொரு கவளம் உருட்டி உன் வாயில் போட்டுக்கொள்ள வேண்டும். இப்படிச் செய்தால் ஒரே சமயத்தில் நாம் இருவரும் சாப்பிட்டு எழுந்துவிடலாம் அல்லவா?''

''போங்கள் அத்தான், நீங்கள் என்னை ரொம்பவும் கேலி செய்கிறீர்கள்.''

''மஞ்சுளா, ஒரு சிறு சந்தேகம்.''

''கேளுங்கள் அத்தான்.''

''இப்போதெல்லாம் என்னை ஏன் நீ பெயர் சொல்லி அழைப்பதில்லை? அத்தான் என்று கூப்பிட யார் உனக்குக் கற்றுக் கொடுத்தது?''

''அதுவா? .. வந்து .. வந்து ..''

''என்ன தயக்கம்?''

''ஒன்றும் இல்லை. காலேஜில் படிக்கும்போது நீங்கள் என் காதலராய் இருந்தீர்கள்; ஆகையால் அப்போது 'ரகு, ரகு' என்று வாய் எல்லாம் இனிக்கச் செல்லமாக அழைத்தேன். இப்போது நீங்கள் என் கணவர்; அதனால் என் ஆத்மா புனிதமடைய 'அத்தான், அத்தான், என்று அழைக்கிறேன். இது சரிதானே அத்தான்?''

''பொல்லாத போக்கிரிப் பெண்ணடி நீ!''

''ஐயையோ! கையை விடுங்கள். மாமி வரப் போகிறாள்!''

''மாமியாருக்குப் பயப்படும் பி.ஏ. படித்த பெண் உன்னைத் தவிர வேறு யாரும் இருக்க முடியாது.''

''அவள்தான் என் கண்கண்ட தெய்வம். அவளால்தானே உங்களை நான் அடையும் பாக்கியம் பெற்றேன்?''

''ஆமாம் மஞ்சுளா. நானும் அதைப்பற்றி உன்னிடம் கேட்க வேண்டுமென்று இருந்தேன். இரு கண்களையும் இழந்துவிட்ட என்னை மணந்துகொள்ள நீ எப்படிச் சம்மதித்தாய்? என்னை மணந்துகொள்ளும்படி யார் உன்னிடம் கேட்டது?''

''இது என்ன கேள்வி? உயிரை உடல் அடைய விரும்பியது ஆச்சரியம் இல்லையே! சென்ற ஓராண்டுக் காலமாக உங்களைக் காணுமல்

பிரிந்திருந்தபோது நான் எத்தகைய நிலையில் இருந்தேன், தெரியுமா? நெருப்பில் விழுந்த புழுவுங்கூட, நான் அநுபவித்த வேதனையைவிடக் குறைவாகத்தான் அநுபவிக்கும். இன்று இப்படி நீங்கள் உட்கார்ந்திருப்பதற்கு நான்தானே காரணம்? அன்று அந்தத் திராவகத்தை இறக்கி வைக்கும்வரை நான் அழைக்காமல் இருந்திருந்தால் இன்று உங்களுக்கு இந்தக் கதி நேர்ந்திருக்குமா? என்னுடைய அந்தப் பிழைக்குப் பிராயச்சித்தமாக, என் உயிருள்ளவரை உங்களுடனே இருந்து ஊழியம் செய்ய ஒவ்வொரு நாளும் துடித்துக்கொண்டிருந்தேன். கடைசியில் ஒரு நாள் என் விருப்பம் சித்தியடையக்கூடிய அந்தச் செய்தியை வந்து உங்கள் அம்மா சொன்னாள். அதைச் சொல்ல அவள் எப்படித் தயங்கித் தவித்தாள் தெரியுமா? ஆனால், எனக்கு அந்தச் செய்தி சொர்க்க அழைப்புப் போல இருந்தது. பிறகு நடந்ததுதான் உங்களுக்குத் தெரியுமே!''

''மஞ்சுளா, இந்த உலகத்தில் என்னைப் போன்ற பாக்கியசாலி இருக்கவே மாட்டான்.''

''நம்மைப் போல என்று சொல்லுங்கள், அத்தான்!''

''மஞ்சுளா, இப்போது உன் குரல் ரொம்பவும் மாற்றமடைந்திருக்கிறதே. ஏன்?''

''எல்லையற்ற மகிழ்ச்சியில் திளைத்துக்கொண்டிருக்கும் எந்தப் பெண்ணுடைய குரலும் மாறித்தான் போகும்.''

''நான் இதுவரை படிக்காத புதிய விஞ்ஞானத் தத்துவம் இது.''

''இரவு பகலாக நீங்கள் விழுந்து விழுந்து படித்த 'குவான்டம் தியரி'யில் இது இருக்காது. இது எனது சொந்தப் புதிய தத்துவம்.''

''குறும்புக்காரி!''

ரகுநாதனும் மாலினியும் சேர்ந்து கலகலவெனச் சிரித்தது அந்த அறை முழுவதும் சுற்றிச் சுழன்று எதிரொலித்தது.

* * *

டாக்டர் ராமதுரை நர்ஸிங் ஹோமில் பிரத்தியேகச் சிகிச்சை பெறுபவனாக ரகுநாதன் போய்ச் சேர்ந்து ஏறத்தாழ மூன்று மாதமாயின.

கண் வைத்தியத்தில் நிபுணரான டாக்டர் ராமதுரை சமீபத்தில் வியன்னாவுக்குச் சென்று இந்தத் துறையில் மேலும் பயிற்சி பெற்றுத் திரும்பி வந்திருந்தார். இளைஞரான அவருக்கு, சென்ற சில மாதங்களுக்கு முன்புதான் திருமணம் நடந்தது.

டாக்டர் ராமதுரையின் திறமையைப்பற்றிக் கேள்விப்பட்ட ரகுநாதனின் தந்தை அவரை நேரில் போய்ப் பார்த்துத் தம் மகனின் கண்ணிழப்பு விவரத்தை விளக்கிச் சொன்னார். டாக்டரும் உடனே வந்து ரகுநாதனின் கண்களைச் சோதித்துப் பார்த்தார். மேல் நாட்டில் கற்றுவந்த ஒரு புதிய ஆபரேஷன் முறையினால், அவன் கண் பார்வையை மீட்டுத் தரலாம் என்ற நம்பிக்கை அவருக்கு ஏற்பட்டது. ''மூன்று மாதம்வரை ரகுநாதன் என் நர்ஸிங் ஹோமிலேயே தங்கியிருக்கட்டும். மூன்றும் மாதம் ஒரு சிறு மைனர் ஆபரேஷன் செய்கிறேன். பெரும்பாலும் என் முயற்சியில் வெற்றி காணலாம். பிறகு ஆண்டவன் சித்தம்'' என்றார் டாக்டர்.

டாக்டரின் யோசனைப்படி ரகுநாதனை அன்றே நர்ஸிங் ஹோமில் கொண்டு போய்ச் சேர்த்தார் அவன் தந்தை. மாலினி இரவு

பகல் எந்நேரமும் ரகுநாதனின் அருகிலேயே இருந்து அவனுக்கு வேண்டிய சகல தேவைகளையும் விழிப்புடன் செய்துவந்தாள். பார்வதியம்மாள் இரவு நேரங்களில் மட்டும் தன் மருமகளுக்குத் துணையாக நர்ஸிங் ஹோமில் வந்து தங்கியிருந்துவிட்டு, விடிந்ததும் வீட்டுக்குப் போய்விடுவாள். இந்த நாட்களில் மாலினி ரகுநாதனிடம் காட்டிய அன்பும் பரிவும் அவனைத் திணற அடித்துவிட்டன. ஓயாமல் 'மஞ்சுளா, மஞ்சுளா' என்று ஸ்மரித்துக்கொண்டே கிடந்தான் அவன்.

ரகுநாதனுக்குக் கண் ஆபரேஷன் செய்ய இன்னும் ஒரு வாரமே இருந்தது. இதற்கிடையில் ஒரு துரதிர்ஷ்டமான சம்பவம் நடந்துவிட்டது. மாலினி திடீரென டைபாயிடு ஜுரத்தால் பீடிக்கப்பட்டுப் படுத்த படுக்கையாகிவிட்டாள். இப்படி அவள் ஆவாள் என யாருமே எதிர்பார்க்கவில்லை. பார்வதியம்மாள் ரகுநாதனிடம் இருக்கவேண்டியிருந்ததால், மாலினியை அவள் தந்தை வீட்டுக்கு அனுப்பிவைத்து அங்கேயே அவளுக்குச் சிகிச்சை அளிக்கப்பட்டு வந்தது. மஞ்சுளா ஜுரமாகித் தன் தாய் வீட்டுக்குப் போய்விட்டாள் என்று அறிந்த ரகுநாதன் புழுவாகத் துடித்தான். ''அவளின்றி என்னால் இங்கு ஒரு நிமிஷமும் இருக்கமுடியாது. என்னையும் அவள் வீட்டுக்கே கொண்டு போய்விடுங்கள்'' என்று அரற்றினான். ''ஆபரேஷன் செய்யவேண்டிய நாள் நெருங்கிவிட்டதால், அநாவசியமாக மூளை நரம்புகளுக்கு வேலை கொடுத்து, உருவாகிவரும் கண்ணின் நாளங்களை மலினமடையச் செய்யக்கூடாது'' என்று டாக்டர் கண்டித்த பிறகுதான் அவனுடைய அரற்றல் சற்று அடங்கியது.

ஒரு வாரம் ஓடி மறைந்தது.

அன்று மாலை ஐந்து மணிக்கு ரகுநாதனின் கண்ணை ஆபரேஷன் செய்து கட்டுக் கட்டிப் படுக்கவைத்துவிட்டு வெளியே வந்தார் டாக்டர் ராமதுரை. வராந்தாவில் கையைப் பிசைந்துகொண்டு நின்றிருந்த பார்வதியம்மாளும் அவள் கணவரும் தம் பிள்ளையின் நிலையைக் கேட்டறிந்துவிட்டு, மாலினியின் உடல் நிலை வரவர மோசமாகி வருகிறது எனக் கூறிப் பொருமினர். டாக்டரின் ஆறுதல் மொழியைக் கேட்டபிறகுதான் அவர்களுக்குச் சற்று நிம்மதி பிறந்தது.

ஆபரேஷன் செய்யப்பட்ட மூன்றாம் நாள் காலை:

அன்று ரகுநாதனின் கண்களுக்குப் போட்டிருந்த கட்டுகளை அவிழ்க்கத் தயாராகிக்கொண்டிருந்தார் டாக்டர் ராமதுரை. பார்வதியம்மாளும் ரகுநாதனின் தந்தையும் இன்னும் கொஞ்ச நேரத்தில் தம் செல்வ மகனின் ஒளி பெற்ற கண்களைப் பார்க்கப் போகிறோம் என்ற மகிழ்ச்சியில் தம்மை மறந்த நிலையில் உட்கார்ந்திருந்தனர். 'இதயராணி மஞ்சுளாவை இன்று என் இரு கண்களாலும் முழுசாகப் பார்த்து ஆனந்தவாரிதியில் அமிழப் போகிறேன்' என்ற எக்களிப்பில் படுக்கையைவிட்டு எழுந்து உட்கார்ந்திருந்தான் ரகுநாதன்.

கண்ணொளி பெறப் போகும் ரகுநாதனுக்கும் அவனைப் பார்த்து மகிழப் போகும் அவன் பெற்றோருக்கும் தம் வீட்டில் முதலில் ஒரு சிற்றுண்டி உபசரிப்பை நடத்த ஏற்பாடு செய்துவிட்டு வந்த டாக்டர் ராமதுரை, நேரே ரகுநாதன் இருக்கும் அறையை நோக்கி நடந்தார்.

சென்ற அரை மணி நேரங் கழித்து அறைக் கதவைத் திறந்து கொண்டு அவர் வெளியே வந்தார். அவருக்குப் பின்னால், யாருடைய துணையுமின்றி, தட்டுத் தடுமாறாமல், தன் அழகிய விழிகளை அகலத் திறந்து சுற்றுமுற்றும் பார்த்தவாறே மெல்ல நடந்து வந்தான் ரகுநாதன்.

தன் மகனின் ஒளியேறிய கண்களைப் பார்த்த பார்வதியம்மாள் சிறு குழந்தைபோல் ஒரே ஓட்டமாக ஓடிப் போய் அவனை அப்படியே சேர்த்தணைத்துக் கட்டிக்கொண்டு ஆனந்தக் கண்ணீர் வடித்தாள்.

டாக்டரின் அழைப்பின்பேரில் சிற்றுண்டி அருந்த எல்லாரும் அவர் வீட்டுக்குச் சென்றனர்.

அழகிய மேஜையொன்றின்மீது மேல்நாட்டு நாகரிக முறையில் வர்ணவாரியான தட்டுக்களில் சிற்றுண்டி பரிமாறப்பட்டிருந்தது. பார்வதியம்மாளும் ரகுநாதனும் அருகருகாக அமர்ந்துகொண்டனர். அவர்களுக்கு எதிரே டாக்டரும் ரகுவின் தந்தையும் உட்கார்ந்தனர். டாக்டரின் பக்கத்தில் இன்னும் ஓர் ஆசனம் இருந்தது; அது காலியாக இருந்தது.

எல்லாரும் சாப்பிட ஆரம்பித்த நேரத்தில், டாக்டர் திடீரென எழுந்து நின்றுகொண்டு வீட்டின் உள்ளே பார்த்தவாறு, ''மஞ்சுளா இன்னும் என்ன செய்கிறாய்? விருந்தினர்கள் வந்து எவ்வளவு நேரமாகிறது! என் தொழில் வெற்றிச் சின்னமான ரகுநாதனின் புதுக் கண்களை நீ இன்னும் பார்க்கவில்லையே? அலங்கரித்துக்கொண்டது போதும். சீக்கிரம் வெளியே வா!'' என்று அன்பும் கேலியும் மகிழ்ச்சியும் கலந்த குரலில் பொரிந்து தள்ளினார். ரகுநாதனும் அவன் பெற்றோரும் டாக்டரின் இந்தப் பேச்சைப் புரிந்துகொள்ள முடியாமல் விழித்துக் கொண்டிருந்தனர்.

சற்று நேரங் கழித்து வீட்டினுள்ளிருந்து ஓர் அழகிய பெண் வெளியே வந்தாள். அவள் வந்ததும் வராததுமாக அவளுடைய கையைப் பிடித்து நாற்காலியில் உட்காரவைத்த டாக்டர் ராமதுரை, எதிரே இருந்த ரகுநாதனைப் பார்த்து, ''மிஸ்டர் ரகுநாதன், இவள் தான் என் மனைவி, இவள் பெயர் மஞ்சுளா. நீங்கள் படித்த கல்லூரியில்தான் இவளும் படித்ததாக என்னிடம் பலமுறை சொல்லியிருக்கிறாள். உமக்கும் இவளைத் தெரிந்திருக்கலாம். உனக்கு இவரைத் தெரியுமா மஞ்சுளா?'' என்று சொல்லி முடிப்பதற்குள், ரகுநாதன் சட்டெனத் தன் இருப்பிடத்தை விட்டுத் துள்ளியெழுந்து, ''யார்? மஞ்சுளாவா? என் மஞ்சுளாவா? என் மனைவி மஞ்சுளாவா?'' என்று உள்ளடங்கிய குரலில் கேட்டுக்கொண்டே அவளை உற்றுப் பார்த்தான். பார்வதியம்மாளும் அவள் கணவரும் பீதியால் முகம் கறுத்துப் பேயறைபட்டவர்கள்போல உட்கார்ந்திருந்தனர்.

எதிரே உட்கார்ந்திருந்த அந்தப் பெண் புன்முறுவல் பூத்தவாறே ரகுநாதனைப் பார்த்து, ''ஆமாம், மிஸ்டர் ரகுநாதன், நான் மஞ்சுளாதான். உங்கள் மனைவி மாலினி சுகமாக இருக்கிறாளா?'' என்று இனிய குரலில் கேட்டாள்.

ரகுநாதனின் மூளை குழம்பியது; உடல் கிடுகிடுவென ஆடியது; ''யார் என் மனைவி? மாலினியா என் மனைவி? என்ன சொல்கிறாய், மஞ்சுளா?'' என்று கேட்டுக்கொண்டே ஓரடி முன்னால் வந்தான் ரகுநாதன்.

இந்தச் சமயத்தில், தலைவிரிகோலமாக அங்கு ஓடிவந்த பார்வதியம்மாளின் தம்பி, ''ரகு, உன் மனைவி கண்ணை மூடிவிட்டாளடா!'' என்று கதறினார்.

*ஸெப்டம்பர், 1965*

* * * * * * * * * * *



# பொன்விழாக் கதம்பம்

## நாடகம்

## 1932 – 1981

* * * * * * * * * * *

# வில் எங்கே?

'கரிச்சான்குஞ்சு'

இடம்: தண்டகாரணியத்தில், பல குடில்கள் குவியலாக அமைந்துள்ள முனிவர் ஆசிரமங்களில் ஒன்றின் முன்புறம். பந்தல் போல் இருக்கும் பர்ணசாலை. பின்னணியாக மலைச்சாரலும், மரம் செடி கொடிகளும், நீர்ச்சுனைகளும், நீராடும் துறைகளும் தெரிகின்றன. அந்தப் பர்ணசாலைப் பந்தலின் உள்ளே பின்புறம், சுவர் போல் அமைந்த நீண்ட தட்டி! இடையில் ஒரு தட்டிக்கதவு திறந்தே இருக்கிறது. பந்தலின் வலப் புறத்தையும் இடப்புறத்தையும் பிரித்துக் கட்டியிருக்கும் ஒரு தட்டி. இரு பக்கத்துத் தரைகளும் நன்கு மெழுகப்பட்டவை. இரண்டு இடங்களிலும் பல தர்ப்பாசனங்களும் ஓலைத் தடுக்குகளும் கிடக்கின்றன.

பாத்திரங்கள்: ஸ்ரீராமன், லட்சுமணன், சீதாதேவி, ஓர் ஆசிரமப் பெண் (மங்கைப் பருவத்தவள்), சில முனிவர்கள்.

பந்தலின் வலப்புறத்தில் முன்பக்கமாய்ச் சில முனிவர்கள் தர்ப்பாசனங்களில் அமர்ந்திருக்கின்றனர். ஸ்ரீராமனும் லட்சுமணனும் அடக்கமே உருவாக நின்று முனிவர்களுடன் உரையாடுகின்றனர்.

இடப்புறத்தில், பின்தள்ளிச் சீதாதேவியும் அந்த ஆசிரமப் பெண்ணும் அப்பால் இருப்பவர்களுடைய கண்ணில் படாமல் உட்கார்ந்துகொண்டு, மிகவும் கவனமாகவும், தம் உள்ளுணர்ச்சிகளுடனும் இடையிடையே தமக்குள் பேசிக்கொண்டும் இருக்கின்றனர்.

காலம்: விடியற்காலை.

ஆசிரம மங்கை: தேவி, ஏன் இப்படி உங்கள் கையும் காலும் பதறுகின்றன? பயத்தால் உங்கள் மங்கள முகத்தில் இந்தக் குளிர்ந்த வேளையில்கூட வேர்வை துளிக்கிறதே! நாம் இருவரும் சேர்ந்து, வில்லைத் தூக்க முடியாமல் தூக்கிச் சென்றபோது நீங்கள் காட்டிய தைரியமும், தெம்பும் இப்போது எங்கே தேவி?

சீதாதேவி: எங்கே, நானா பயப்படுகிறேன்? இல்லையே! (முயன்று சிரிப்பை வரவழைக்கப் பார்த்து முடியாமல் போகிறது.)

மங்கை: அதோ, உங்கள் கண்மலர்கள்கூட மிக வேகமாய்க் குவிந்து குவிந்து மலர்கின்றனவே!

சீதை: பெண்ணே, ஏதோ வேகத்தில் செய்துவிட்டேன் அதை. நான் உன்னிடம் சொன்ன அதற்கான காரணங்கள் இன்னமும்

பொய்த்து விடவில்லை. என் உறுதியும் தளரவில்லை; கடைசிவரை என் எண்ணம் நியாயமானது என்றே வாதாடப் போகிறேன்.

மங்கை: பின் ஏன் எப்படியோ இருக்கிறீர்கள்?

சீதை: முன்பு ஒரு முனிவர் என்னையும் எதிரில் வைத்துக் கொண்டு, அவரிடம் சொன்னது ஒன்று திடீரென நினைவுக்கு வந்தது. என்னையும் அறியாமல் ஒருகால் தவறு செய்கிறேனோ என்ற எண்ணம் எழுந்தது; அதனால்தான் சற்று......

மங்கை: என்ன சொன்னார் முனிவர்?

சீதை: என்னைப் பத்திரமாகப் பார்த்துக்கொள்ளும்படியும், விராதனிடம் ஏமாந்ததுபோல் ஏமாறக்கூடாதென்றும் சொன்னார்.

மங்கை: உண்மைதானே? இந்தக் காட்டில் உங்கள் மூவருக்குமே ஆயுதந்தானே பாதுகாப்பு? தற்காப்பைச் சொல்லுங்கள்.

சீதை: அதுவும் சரிதான். என்ன சொன்னேன்? இல்லை; அது சரியல்ல. நீ ஏன் அதையே கிளறுகிறாய்? எனக்கு நினைவுக்கு வந்தது அதுவன்று.

மங்கை: பின் எது என்று சொல்லுங்கள் தேவி?

சீதை: நான் இவருடன் காட்டுக்கு வந்தது பெரிய தியாக மாம். பொதுவாகப் பெண்களின் மனப்போக்கு மின்னலைப் போல நிலையில்லாததாம். பெண்கள் அம்பு போலக் குத்துவார்களாம். பேச்சினால் கருடன் மாதிரி பறந்தும் காற்றைப் போல விரைந்தும் செயல் புரிவார்களாம். ஆனால், நான் என் குணங்களால் பெண் குலத்திலேயே அபூர்வப் பிறவியாம். இப்படியெல்லாம் சொன்னார் அந்த முனிவர். ஆனால் இப்போது நான்....

மங்கை: உம், உம்.

சீதை: என்னடி இது? (சிணுங்கி) வாயைத் திறக்காமல்....

மங்கை: தேவி!..தேவி (மெல்லச் சிரிக்கிறாள்.)

சீதை: இந்தச் சிரிப்புக்கு என்ன பொருள்?

மங்கை: ஒட்டிப் பேசினாலும், இதற்கு நான் சொல்லக்கூடிய மறுமொழி எதுவாயினும், அதை....அதைக் கிளறுவதாக முடியுமே தவிர....முனிவர்களும் ஸ்ரீராமசந்திரனும் பேசுவதைக் கேட்டுக் கொண்டிருந்தேன்.

சீதை: நானுந்தான் அதைக் கேட்கிறேனே? இப்போதும் நேற்றும் கேட்டேன். எப்போதும் கேட்கிறேன். அதோ பாரேன், ஒரே பாட்டுத்தான் திரும்பத் திரும்ப. பழைய பாட்டு; அரக்கர், அரக்கர், கொல்லு, கொல்லு - இதைத் தவிர ஒன்றையும் காணேன்.

[முன்புறம் பேசும் முனிவரில் ஒவ்வொருவர் மாறி மாறிப் பேசுவதாக, அதாவது ஒவ்வோர் உரையாடலை ஒவ்வொருவர் கூறுவதாகக் கொள்க.]

முனிவர்: ஸ்ரீராமா, அரக்கர் தொல்லை அறவே தாங்க முடிய வில்லை. நாங்கள் சாபம் கொடுத்துக் கொடுத்து, எங்கள் தவத்தின், ஆற்றலை இழந்துகொண்டே இருந்தால், எப்போது கடைத்தேறுவது? தவிர, குழந்தைகள், அதிலும் பால்மணம் மாறாமல் தம் தாயின் வயிற்றடியில் உதைத்துக்கொண்டு கிடக்கும் குழந்தைகள், தம் எதிரிகளைத் தாமாகத் தாக்குமா? தாக்கலாமா?

ஸ்ரீராமன்: முனிவர்களே, போதும் போதும். நான் ஏற்கனவே மிகவும் வெட்கப்பட்டுக்கொண் டிருக்கிறேன். நானே வந்து வணங்கி வழிபட வேண்டிய நீங்கள் என்னைத் தேடி வந்ததே என்னைத் தலைகுனிய வைத்துவிட்டது. என் கடமைகளை நான் மறந்துவிடவில்லை; இதுவரை நடந்தவற்றுக்காக என்னைப் பொறுத்தருளுங்கள். இனிமேல் அரக்கர்களை அழித்து உங்கள் தவத்தைக் காப்பேன்.

முனிவர்: நன்றி, நன்றி ஸ்ரீராமசந்திரா. பெரும் பேறு பெற்றோம். சென்று வருக. அதிகாலையில் புறப்படுகிறீர்கள்; நல்ல முகூர்த்தம் இப்போது. வெயில் ஏறுவதற்குள் நடக்கும் வழி போதும்.

ஸ்ரீராமன்: என் வனவாசம் இப்போதுதான் ஆரம்பமாகிறது. நான் சித்திரகூடத்தையும் கங்கைக் கரையையும் விட்டு இந்தக் காட்டில் புகுந்ததே, தீய அரக்கர் செருக்கை அடக்கத்தான்.

சீதை: செருக்கை அடக்குவதற்காமே! கேட்டாயா, தோழி? கொலைக்கூத்து ஆடத்தான் என்று சொன்னாலன்றோ பொருந்தும்? ஆகா, கங்கைக் கரையை நினைத்தால் இப்போதும் புல்லரிக்கிறது. இடமும் அழகு; இவரும் அழகாக இருந்தார்.

மங்கை: இப்போதும் அழகாகத்தானே இருக்கிறார் எங்கள் ஸ்ரீராமசந்திரன்?

சீதை: அதைச் சொல்லவில்லையடி. அங்கு இவருக்கு இவ்வளவு சினமும் சீற்றமும் பொங்கவில்லை. என் உடலை விரசமாகத் துன்புறுத்திய காகாசுரனைக்கூட என்னைப் பார்த்துக்கொண்டே பிழை பொறுத்துப் போகவிட்டார். இப்போது யாருக்காகவோ, யார் யாரையோ . . . .

மங்கை: அம்மா, கொடியவன் காகாசுரன்; அவனுக்குமா கருணை! பிரம்மாஸ்திரம் துரத்தத் துரத்த, உலகமெல்லாம் ஓரிடம் விடாமல் சுற்றி, தாயும் தந்தையும் உற்றாரும் உறவினரும் இனத்தாருங்கூடக் கைவிட்டதனால், ஸ்ரீராமன் காலிலேயே வந்து விழுந்த அவனைத் தாங்கள்தாம், குற்றுயிரும், குலையுயிருமாய் இருந்த நிலையில் மெல்ல எடுத்து ஸ்ரீராமன் திருவடியில் இட்டதாகவும் கூறுவார்களே, தாயே.

சீதை: குற்றமில்லாதவர்களே இல்லை என்பது என் கருத்து.

மங்கை: தேவி, தாங்கள் கருணையின் வடிவம். ஸ்ரீராமசந்திரனோ கருணையும் வீரமும் கொண்ட முழு வடிவம். முனிவர்களுக்காக. . .

சீதை: அதற்காக, எங்கள் அமைதியை, அமைதியில் பூத்து மணக்கும் அகத்தின் பெருமகிழ்ச்சியைக் குலைத்துக்கொள்ளலாமா?

மங்கை: தேவி, அதோ ரகுகுலத்தின் வீரச்சிங்கம் கம்பீரமாகக் கர்ஜிப்பதைக் கேளுங்கள்.

ஸ்ரீராமன்: முனிவர்களே, மீண்டும் எனக்குத் தாங்கள் எதையும் நினைவுபடுத்தத் தேவையில்லை. என் உயிரை விட நேர்ந்தாலும், என் உயிருக்கு உயிரான சீதையையே விட நேர்ந்தாலும், உடன்பிறந்த லட்சுமணனையும் பிரிய நேர்ந்தாலும் அரைகுலையத் தலைகுலைய ஓடியோடி உங்களுக்குத் தந்த உறுதிமொழியைக் காப்பேன்.

சீதை: பார்த்தாயா, அவர் உறுதியை? கடுமையான மனப்போக்கைக் கவனித்தாயா? எனக்கு மிகவும் பயமாக இருக்கிறது.

மங்கை: சத்தியமே குரல் கொடுக்கிறது: இவர் கானகம் வந்ததே சத்தியத்தைக் காக்கத்தானே?

சீதை: தம் சொற்களின் ஒவ்வோர் எழுத்தையும் நிறைவேற்றத் துடிப்பவர் இவர். என்னையும் விட்டொழிப்பேன் என்கிறாரே? நான் செய்ததில் என்ன தவறு? இவர்தாமா என்னைச் சித்திர கூடத்தில் அப்படிக் கொஞ்சிக் குலாவியவர்? அரண்மனையை விட்டு வந்தோமே என்ற ஏக்கம் எனக்குச் சிறிதும் ஏற்படாமல் இருக்க வேண்டுமென்று, என்ன என்ன பேசினார்! என்ன என்ன செய்தார்! அப்பப்பா! புருஷர்கள் பொல்லாதவர்கள்.

மங்கை: உண்மையில் உங்களுக்கும் அந்த ஏக்கம் இருந்ததா, தேவி? அல்லது இப்போது இந்த ஏக்கம் மீதூர்கிறதா?

சீதை: தோழி, எங்கள் திருமணத்துக்குப் பிறகு, அயோத்திக்குச் சென்று, உப்பரிகையில் ஏறியதுதான் எனக்கு-எங்களுக்கு நினைவிருக்கிறது. அதன் பிறகு பன்னிரண்டு ஆண்டுகள், பல ருதுக்கள், ருதுக்களின் ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு புதுமையான போகங்களைக் கண்டு துய்த்துச் சுவைத்து வாழ்ந்தோம். எங்களைப்பற்றிய கவலைகள் முழுவதையுமே எங்கள் அன்னை கோசலா தேவியார் ஏற்றுக்கொண்டு நடத்த, நாங்கள் எங்களையும் மறந்து இன்ப விளையாட்டுக்களிலேயே காலம் கழித்தோம்; உனக்குப் புரியுமோ புரியாதோ?

மங்கை: தேவி, நிறையப் படித்திருக்கிறேன்; புரிந்துகொள்வதற்கு! அநுபவம் இன்றியமையாதது என்பதில்லையே! சொல்லுங்கள்.

சீதை: காட்டுக்கு வர நேர்ந்ததும் சொல்லிவைத்தாற்போலத் தம்பி லட்சுமணர் சொன்னார்: காட்டில் வாழும் பதினான்கு நீண்ட ஆண்டுகளையும் நாங்கள் இருவரும் விளையாடிக்கொண்டே கழிக்க வேண்டும் என்றும், தந்தை சக்கரவர்த்தியும் தாயார் கோசலா தேவியும் ஏற்றிருந்த கவலைகளைத் தாமே ஏற்றுக்கொள்வதுடன், பணியாட்கள் அத்தனை பேருடைய கடமைகளையும் ஏற்றுக்கொள்வதாகக் கூறி எங்களுடன் வந்திருந்தார். அநேகமாக அப்படியே, பழைய தொடர்ச்சி அறாமல் நாங்கள் இருவரும்....

மங்கை: இனியும் நீங்கள் கணமும் பிரியாத கானக வாழ்வின்பம் கைகூடும், தேவி, கவலைப்படாதீர்கள்.

சீதை: இவர்தாம் அதைக் குலைக்கப் பார்க்கிறார். அதனால்தான் நான், உன்னுடன் சேர்ந்து, அதை....

மங்கை: தேவி, இப்போது அதைக் கிளறுவது நிச்சயமாக நான் அல்லவே! (சிரிக்கிறாள்.)

சீதை: நமக்குள்ளேதான் பேசிக்கொள்கிறோம்!

மங்கை: அதுவும் நீங்கள்தாமே பேசினீர்கள்?

முனிவர்: ஸ்ரீராமசந்திரா, நேரம் ஆகிறது; புறப்படுங்கள், தென்திசைக்குச் செல்ல. வெயில் ஏறுகிறது.

ஸ்ரீராமன்: லட்சுமணா, கிளம்புவோமா? குடிப் பெருமை இல்லாதவன் தவறான வழியில் பெரும் செல்வத்தையும் பெற்றுவிட்டால், எப்படி உலகத்தோரைத் தம்பிக்கச் செய்வானோ, அதுபோலச் சூரியன் புறப்படும்போதே உலகை எரித்துவிடுவான்போலக் கிளம்புகிறான்.

முனிவர்: நீங்கள் சூரியகுலம் என்பதைக்கூட அவன் மறந்தாலும் அதில் ஆச்சரியம் இல்லை. ஆனால் நீங்கள் சூரியனுக்கும் சூரியன் ஆயிற்றே!

ஸ்ரீராமன்: முனிவர்களே, தசரத குமாரன் ராமன், இதோ உங்களைக் கைகூப்பித் தொழுது, கால்களில் விழுந்து வணங்குகிறான். லட்சுமணனும் வணங்குகிறான்.

முனிவர்: செல்வழி முழுவதும் சேமமே அமைக; வெல்க நும் வில்லும் அம்பும்; வாழ்க நும் வெற்றி; அறம் விளங்குக.

ஸ்ரீராமன்: உங்கள் ஆசிச் சொற்களே எங்களுக்கு அரிய பாதுகாப்பு. ஆயுதம் வெறும் துணையே.

சீதை: வெறும் துணைதானும். பார்த்தாயா, பெண்ணே? இந்த வெறும் துணை எதற்கு? வீண் சுமை என்பது என் கட்சி, கரும்பு பிடித்த கையும் இரும்பு பிடித்த கையும் சும்மா இருக்குமா? நீயே சொல்.

மங்கை: முன்பு கடித்த கரும்பை நீங்கள் நினைத்து ஏங்குகிறீர்கள்; பிடித்த இரும்பைப் பயன்படுத்தித் துயரமுறுவோர் துயரத்தைக் களைய விரும்பி முற்படுகிறார் பிரபு.

சீதை: அருமை அருமை. மிகவும் அழகாகப் பேசிவிட்டாயடி. நான் சுவைத்த கரும்பு கட்டிக் கரும்பு; ஆம், சக்கையே இல்லாத கட்டிக் கரும்பு இது; அலுக்காத கரும்பு.

மங்கை: தேவி, இதில் சந்தேகம் என்ன? ஆராவமுதான அந்தப் பிரபுவையும், அனங்கன் அமுதத்தால் தீட்டிய ஓவியமான தங்களையும் கண்முன்னே காணும் எங்களுக்கு இதில் சந்தேகமே இல்லை.

[முனிவர்கள் விடைபெறுகின்றனர். லட்சுமணன் குனிந்த தலையுடனும் குவித்த கைகளுடனும் பின்னே வர, ஸ்ரீராமன், சீதை இருக்கும் இடம் நோக்கி வருகிறான்.]

ஆசிரம மங்கை: தேவி, ஜாக்கிரதை; நழுவவிடாதீர்கள். நழுவியும் விடாதீர்கள். நான் அப்புறம் வருகிறேன்.

சீதை: பெண்ணே, சற்று எனக்குத் துணையாக நிற்கக்கூடாதா? எனக்கு எப்படியோ இருக்கிறது. நீ இருந்தால் தைரியமாக இருக்கும்.

[மங்கையின் தோள்களை இடித்துக்கொண்டும் உராய்ந்து கொண்டும் ஒட்டிக்கொண்டும் நிற்கிறாள். இரண்டு மூன்று மான்களும் இரண்டொரு மான்குட்டிகளும் ஓடிவந்து மூவரையும் ஒட்டி நிற்கின்றன. சீதை அவற்றைத் தடவிக் கொடுத்துக் கொண்டே நிமிர்கிறாள்.]

ஸ்ரீராமன்: சீதே, தோழியான ஆசிரம மங்கையிடம் பிரியா விடை பெறுகிறாயா? எளிதில் பிரியமுடியாது; மிகவும் துயரம் தரும் பிரிவு. இருவருக்குந்தான். இதோ, நம்மைச் சுற்றி, நம் உடலோடு ஒட்டி, நம் உள்ளங்கைகளில் நாவாற்றிக்கொண் டிருக்கும் இந்த மான்களை விட்டு எப்படிப் பிரியப் போகிறோம்? பிரிவே துயரம் தருவதுதான்.

சீதை: இப்பொழுதே புறப்படவேண்டுமா?

ஸ்ரீராமன்: வேண்டாமா! லட்சுமணா, நம் வில்லையும் பிற வற்றையும் கொண்டுவா; கூடையில் இருக்கும் தானியத்தையும் புல்லையும் கொண்டுவா, மான்களுக்கு இடுவோம்.

[சீதாதேவி மங்கையைப் பார்க்கிறாள். அவளும் நெகிழாமல் இருக்கும்படி ஜாடை காட்டுகிறாள். லட்சுமணன் குனிந்த தலை நிமிரவில்லை. ராமன் பார்த்துவிடமாட்டான் என்ற உறுதியில், வெளிப்படையாகவே அந்த ஆசிரம மங்கை தன்

புருவங்களையும் கண்களையும் அசைக்கிறாள். ராமனும் சீதையும் மான்களைக் கொஞ்சுகிறார்கள். லட்சுமணன் திரும்பிவந்து குனிந்தபடியே நிற்கிறான்.]

ஸ்ரீராமன்: தம்பி, வில் எங்கே?

லட்சுமணன்: நானும் அதைத்தான் கேட்க நினைக்கிறேன். எங்கே வில்?

சீதை: வில், வில், வில்; கொல், கொல், கொல்! வேறு வேலையே இல்லையா? எதற்கு வில்?

ஸ்ரீராமன்: இது என்ன கேள்வி?

சீதை: மறுமொழி சொல்லியே ஆகவேண்டிய கேள்வி. சற்று இந்தப் பக்கம் வருகிறீர்களா? (அப்பால் அடிபெயர்கிறாள்; ராமனும் அவளைத் தொடர்கிறான்; அதற்குள் மங்கை, பின்புறத்துத் தட்டிக் கதவு வழியாக மறைந்துவிடுகிறாள். லட்சுமணனும் பந்தலுக்கு அப்பால் போய்விடுகிறான்.)

ஸ்ரீராமன்: சீதே, உன்னால் வெயிலில் வழி நடக்கமுடியாதே என்றுதான் ....

சீதை: ஏன், உங்கள் வில்லையும் அம்பையும் கொண்டு சூரியனையே பொசுக்கமுடியாதா என்ன? கை தினவெடுத்துத் துறு துறுக்கிறது உங்களுக்கு.

ஸ்ரீராமன்: என் ஆருயிரே, மன்மதன் வில், உன் புருவ வில் இவற்றைத் தவிர, என் வில்லால் நான் வெல்லமுடியாதது எதுவுமே இல்லை.

சீதை: நிற்கிறீர்களே, சற்று உட்காருங்கள்.

ஸ்ரீராமன்: நீயும் உட்காருவாய் அல்லவா?

சீதை: இல்லை. இதெல்லாம் பொய்யான உபசாரம்; நின்று தான் கேட்கப் போகிறேன்.

ஸ்ரீராமன்: கேட்கப் போகிறாயா? எதைப்பற்றி?

சீதை: இல்லை, விசாரிக்கப் போகிறேன்.

ஸ்ரீராமன்: அப்படியானால் குற்றவாளி நின்றுதான் மறுமொழி தரவேண்டும்.

சீதை: வேண்டாம். உட்கார்ந்தபடியே சொல்லுங்கள். நமக்கு ஏன் வீண் வம்பும் வெட்டிச் சண்டையும்? அரக்கர் இப்போது, இந்த இடத்தில் நமக்கு என்ன செய்துவிட்டார்கள்? வீண் பகை எதற்கு என்கிறேன் நான்.

ஸ்ரீராமன்: வீண்பகை என்றால், அதுகுற்றந்தான்; ஆனால்....,

சீதை: ஆனால் என்று தொடங்கும் எதுவுமே கோணல் கட்சி. இதைக் கேளுங்கள்: உலகத்தில் மனிதர்கள் தம்மை அறியாமலே அதாவது கிட்டத்தட்ட இயல்பாகவே, அமைந்துவிட்ட ஒரு பழக்கம் காரணமாக, மூன்று குற்றங்களுக்கு ஆளாகிறார்கள்; உங்களுக்கும் தெரியும்.

ஸ்ரீராமன்: தெரியாது, தெரியவே தெரியாது, எனக்குத் தெரியாதென்று நிச்சயமாய்த் தெரிந்துகொண்டுதானே, நீ எனக்குச் சொல்லிவருகிறாய்?

சீதை: ஆத்திரப்படுகிறீர்கள்;

ஸ்ரீராமன்: யார்? நானா?

சீதை: இல்லை, நான்தான். கேள்விக்கு மறுமொழி தராமல்..

ஸ்ரீராமன்: இன்னும் கேள்வியே வெடிக்கவில்லையே!

சீதை: காரணம் இல்லாமலே பொய் சொல்வது, பிறர்மனை நோக்காத பேராண்மையைப் பேணுமல் வண்ணத்தில் ஏமாந்து போவது, பகை இல்லாமலே பிறரைத் துன்புறுத்துவது ஆகிய இந்த மூன்றும் அதிகப் பழக்கத்தால் இயல்பாகவே ஆகி, பெரிய அதர்மத்தில் கொண்டுபோய்விடுகின்றன; சில நல்ல மனிதர்களையும் இவை விடுவதில்லை.

ஸ்ரீராமன்: சீதே, முன்னுரையின் நீளம், மேலே வரும் பேருரையின் நீளத்தைப் பயங்கரம் ஆக்குகிறதே?

சீதை: இதோ முடிவுரை: நீங்கள் பொய்யே பேசமாட்டீர்கள்; பேச வராது உங்களுக்கு.

ஸ்ரீராமன்: அப்பா! பிழைத்தேன்.

சீதை: பிறர்மனைபற்றிய இரண்டாம் குற்றம்...

ஸ்ரீராமன்: என் சிற்றன்னை கைகேயி....

சீதை: ஆமாம், உண்மையிலேயே, கைகேயி அம்மா அதை மிக அழகாகவே பறையறைந்துவிட்டார். எனக்கும் தெரியுமே. அது நூற்றுக்கு நூறு உண்மை. 'ராமன் பிறர்மனையைக் கண்களால்கூடப் பார்க்கமாட்டான்' என்றாரே தாயார் கைகேயி!

ஸ்ரீராமன்: அந்தக் கண்டமும் தாண்டிவிட்டது! அப்புறம்....

சீதை: அடுத்தது....பகை இல்லாமல் பிறரைக் கொல்லக் கிளம்புகிறீர்களே இது ஏன்? நாட்டுக்குத் திரும்பிப் போனபிறகு, இந்த அம்பும் வில்லும், அடிடா பிடிடாவும் ஓடியா போய்விடும்? ஜடையும் கிடையும், மரவுரியும் மான்தோலுமாய் இருப்பது எங்கே? இந்த அம்பும் வில்லும் எங்கே? பொருத்தம் வேண்டாமா? நாம் காட்டுக்கு வந்தது....

ஸ்ரீராமன்: (எதிர்பாராத கடுமையும் அழுத்தமும் ஆழமும் ஆத்திரமும் மிக்க குரலில்) சீதே, நாம் காட்டுக்கு வந்தது, அயோத்தியில் அந்தப்புரத்தில் நடந்த இன்ப நாடகத்தின் தொடர்ச்சியை இங்கே காட்டிலும் இயற்கையன்னையின் மடியில் தவழ்ந்துகொண்டே நடிப்பதற்காக அன்று. நாம் காட்டுக்கு வந்தது..

சீதை: முன்பு சித்திரகூடத்தில் என்னை உங்கள் மடியில்..

ஸ்ரீராமன்: (சீற்றமே ஏறிவிட்ட குரலில், செவ்வரி படர்ந்த கண்கள் மேலும் சிவப்பு ஏற) சீதே, என் உயிரை, ஏன் என் உயிருக்கும் உயிரான உன்னையே இழக்க நேர்ந்தாலும்....

சீதை: (அஞ்சித் தழுதழுத்துக் கைகூப்பி) வேண்டாம், வேண்டாம்; முனிவர்களிடம் தாங்கள் இதைச் சொல்லும்போதே நடுநடுங்கிப் போனேன். மறுபடியும் அந்தக் கடும் சொற்களால் சபதம் கூறுகிறீர்கள். தம்பியை வரச் சொல்லுங்கள்; வில்லை எடுத்துவரலாம். (கெஞ்சுகிறாள் கடைக்கண் ஓட்டி. ராமனும் தெளிந்து இனியன் ஆகிறான்.)

ஸ்ரீராமன்: வில்லை எடுத்துவரவேண்டுமா? வில் எங்கே?

சீதை: (பின்புறத்துக் கதவைப் பார்த்துக்கொண்டு, தோழி? (அதற்குள் ஆசிரம மங்கை வெளிப்படுகிறாள்.)

சீதை: பெண்ணே, இளையவருடன் போய்ச் சுனையிலிருந்து வில்லை எடுத்து வருவோமா?

மங்கை: (சிரித்துக்கொண்டே) போவோமே.

ஸ்ரீராமன்: சுனையிலா கிடக்கிறது என் வில்? நானும் வருகிறேன்.

லட்சுமணன்: நீங்கள் எல்லாருமே இங்கு இருங்கள். எந்தச் சுனை என்பதைச் சொல்லுங்கள்; எடுத்துவருகிறேன்.

மங்கை: குதிரைவாய்ச் சுனைக்குள்.

ஸ்ரீராமன்: ஐயோ! அது மிகவும் ஆழமாயிற்றே? தூரத்தில் தள்ளி வேறு இருக்கிறது. அத்தனை தூரம் அந்த வில்லை யார் தூக்கிக் கொண்டு வந்தார்கள்? நல்ல வேளை, வில்லின் கனத்துடன் நீங்களும் சரிந்து சாயாமல் இருந்தீர்களே!

சீதை? (பூச்சி பறப்பதுபோல் இமைத்து இமைத்துக் கண்கள் மலரக் குழந்தைச் சிரிப்புடன்) நாங்கள் இருவரும் அதைத் தூக்கவில்லை; என்னுடைய அசட்டு முடிவின் வெறியும், இவளுடைய பைத்தியக்காரத் தனமான அநுதாப ஆவேசமும் சேர்ந்து செய்த சாகசச் செயல் அது.

ஸ்ரீராமன்: இதையே, பெண்கள் சாகசக்காரிகள் என்று நாங்கள் சொன்னால் சிணுங்கிச் சீறுகிறீர்கள்.

சீதை: புருஷர்கள் மட்டும் நல்லவர்களோ? குற்றம் ஒன்று கிடைத்துவிட்டால், உமியைக் குற்றுவதுபோல, அதையே சொல்லிச் சொல்லி....

ஸ்ரீராமன்: தேவி, சமாதானம் மறுபடியும் சண்டையாய்விடப் போகிறதே! முனிவர்களிடம் விடை பெற்றுவிட்டோம்; புறப்பட்டு விடுவதுதான் கௌரவம்.

சீதை; இதோ, தம்பி வந்ததும் கிளம்பவேண்டியதுதான். வந்து..உம்..வந்து..சொல்லலாமே என்று சலுகையிலும், நமக்குள் ஒருவருக்கொருவர் வைத்துள்ள நன்மதிப்பினாலும், ஏதோ ஞாபகப் படுத்தலாம் என்று சொன்னேனே தவிர, நிஜமாகவே உங்களுக்குத் தெரியாததையா சொன்னேன்? நியாயமே இல்லாமலா சொல்லி விட்டேன்?

ஸ்ரீராமன்: அதனால் என்ன? நீ சொன்னதும் நியாயந்தான்; சொன்னதை உடனே கேட்டது அதைவிட நியாயம். அதோ லட்சுமணன் சொட்டச் சொட்ட....

[நனைந்த சடையுடனும் மரவுரியுடனும், ஈரம் காயாத வில்லைத் தூக்கிக்கொண்டு வந்து சிரித்துக்கொண்டே ராமன் எதிரில் கிடத்துகிறான் லட்சுமணன். குனிந்துகொண்டு, சிரிப்பை அடக்க முடியாமல், வாயைப் பொத்திக்கொண்டு சிரிக்கிறான். மற்றவர்களும் சிரிக்கின்றனர்.]

—ஜனவரி, 1971

# செந்தாமரை

விமலா ரமணி

**பாத்திரங்கள்**

பாண்டிமா தேவி - ராணி
செந்தாமரை - தாதிப் பெண்
குலசேகர பாண்டியன் - அரசர்
சுந்தர பாண்டியன்-அரசரின் மகன்
வீர பாண்டியன் - அரசரின் மகன்
மாலிக்காபுர் - வடநாட்டிலிருந்து வந்த டில்லி சுல்தானின் தளபதி

**காட்சி-1**

*[இடம்: குலசேகர பாண்டியனின் இருப்பிடம்; படுக்கையில் படுத்த மன்னன்; அருகில் இளைய ராணி இருக்கிறாள்.]*

*கு. பாண்டியன்:* (இருமிய வண்ணம்) தேவீ, ஏனோ தெரிய வில்லை. இன்னும் சில நாட்களில் இந்தப் பாண்டிய நாடு தன் அன்புத் தலைவனை இழந்துவிடுமென அஞ்சுகிறேன். இளைய ராணியான உனக் குத்தான் இனிப் பொறுப்புக்கள்.

*ராணி:* (வேதனையுடன்) பிரபு, வேண்டாத எண்ணங்களுக்கு இடம் அளிக்காதீர்கள். (உணர்ச்சியுடன்) நம் பாண்டிய நாடு பேரரசாக விரிந்து பரந்து கிடக்கிறது. சேர, சோழ நாடுகள்கூட நமக்குப் பணிந்து நடக்கின்றன. திருநெல்வேலியைத் தலைநகராகக் கொண்டு தாங்கள் திறம்பட, ஆனால் அமைதியுடன் ஆட்சி செலுத்தி வந்தீர்கள். விரைவில் முழு நலம் பெற்று மீண்டும் சிங்காதனத்தில் அமரத்தான் போகிறீர்கள்.

*அரசர்:* (நிதானமாக) நோய் வாய்ப்பட்ட நிலையிலும் என்னால் அரசு செலுத்த முடிவது உன்னால்தானே? உன் திறமையில் எனக்கு நம்பிக்கை உண்டு. (பெருமூச்சு விட்டபடி) மூத்த ராணி மட்டும் இப்போது உயிருடன் இருந்திருந்தால் உன் சிரமங்கள் பாதியாவது குறைந்திருக்கும். அவள் மகன் வீர பாண்டியனையும், உன் மகன் சுந்தர பாண்டியனையும் நீயே அல்லவா இப்போது கவனிக்கவேண்டியிருக்கிறது?

*ராணி:* (அமைதியுடன்) சுவாமி, தங்களுக்கு அக்காவின் நினைவு வந்துவிட்டதுபோலும்! அதற்காக என்மீது ஏதேதோ பழி சுமத்து கிறீர்கள். இல்லையா?

*அரசர்:* தேவீ, இப்போதெல்லாம் அடிக்கடி உன் அக்கா என் கனவில் தோன்றி முறுவல் பூக்கிறாள். என்னை 'வா' என்று அழைக்கிறாள். ஒரு வேளை....

ராணி: (பதறியபடி) பிரபோ, அப்படியெல்லாம் சொல்லாதீர்கள். மஞ்சள், குங்குமத்துடன் சென்ற அன்பு அக்கா, என் திலகத்தை ஒருபோதும் அழிக்கமாட்டாள்.

அரசர்: (வேதனைச் சிரிப்புடன்) ராணி, நீயா இப்படித் துடிக்கிறாய்? வெம்மை வாய்ந்த வீறுகொண்ட பெண்புலியான நீயா இப்படிப் பதைக்கிறாய்? (இருமுகிறார்.)

ராணி: (விரைந்து) யார் அங்கே? செந்தாமரை, சீக்கிரம் காய்ச்சிய பால் கொண்டுவா! (செந்தாமரை செல்கிறாள்.)

அரசர்: (நிதானமாக) செந்தாமரை, நல்ல பெயர்! பெயருக்கேற்ற அழகும், மனமும் உள்ளவள். உம். (பெருமூச்சுடன்) மூத்த ராணியின் அன்புக்குகந்த அருமைத் தாதியின் ஆசைப் பெண்.

ராணி: (அன்புடன்) அக்காளின் மறைவுக்குப் பின் எனக்கும் அன்புக்குகந்த தாதியாகிவிட்டாள், பிரபு. நல்ல பெண்.

அரசர்: அது சரி. எனக்குப் பின் பட்டம் யாருக்குக் கட்டப் போகிறாய், ராணி?

ராணி: (பொய்க் கோபத்துடன்) இதென்ன பேச்சு, சுவாமி! தங்கள் கட்டளைப்படி அடிபணிந்து நடக்க இரு மைந்தர்களும் காத்துக் கிடக்கின்றனர். நான் பட்டம் கட்டுவதாவது? தாங்கள் முடிவு செய்யுங்கள். அதனை மகிழ்ச்சியோடு நிறைவேற்றக் காத்திருக்கிறேன்.

அரசர்: வீரபாண்டியன், மூத்தாளின் மகன்; முதல் உரிமை உண்டு. ஆனால் வயதில் இளையவன். சுந்தர பாண்டியன், உன் மகன்; இளையவளின் மகன். ஆனால் மூத்தவன். தேவி, பட்டத்து ராணிக்குப் பலகாலம் ஆகியும் பிள்ளை பிறவாததால் நான் மனச் சலிப்புடன் உன்னை மணந்துகொண்டதும், வெகு விரைவில் உனக்குச் சுந்தர பாண்டியன் பிறந்ததும், பிறகு மூத்தவளுக்கு வீரபாண்டியன் பிறந்ததும்... அப்பாடா! பழங்கதைகள்தாம். எனினும் பாண்டி வரலாற்றுக்கு அவசியமான நிகழ்ச்சிகள்; இல்லையா, தேவி?

ராணி: பிரபோ, ஏன் இந்த நேரத்தில் பழைய நினைவுகளைக் கிளறுகிறீர்கள்?

அரசர்: பழைய நினைவுகளைக் கிளறிப் பார்ப்பதிலும் ஒரு தனிச்சுவை இருக்கிறது.

ராணி: (சத்தம் கேட்டு) யார் அங்கே, ஓ, செந்தாமரையா? வா; பால் கொண்டுவந்து விட்டாயா?

செந்: உம். இதோ!

ராணி: செந்தாமரை!

செந்: உம்.

ராணி: அடாடா! இவ்வளவு கொதிக்கிறதே! சற்று ஆற்றிக் கொண்டு வா.

செந்: சரி, தேவி!

(போகிறாள். அதே சமயம் வேகமாக வந்த சுந்தரபாண்டியன் மீது மோதிக்கொள்ள இருவரும் நிலைகுலைந்து நிற்கின்றனர். கீழே பாலாறு ஓடுகிறது.)

ராணி: அடாடா! பார்த்துப் போகக் கூடாது? காய்ச்சிய அத்தனை பாலையும் கீழே கொட்டிவிட்டாயே! சுந்தரபாண்டியா, உனக்கும் இத்தனை அவசரம் கூடாது.

செந்: (தயக்கத்துடன்) மன்னியுங்கள், தேவி! கை தவறி....

சுந். பாண்டி: (சிரிப்புடன்) அதெல்லாம் ஒன்றும் இல்லை. நான் வந்த வேகம் அப்படி. என் மீதுதான் தவறு.

ராணி: (இடையில் குறுக்கிட்டு) செந்தாமரை, ஏன் விழித்துக் கொண்டு நிற்கிறாய்? போய் வேறு பால் கொண்டுவா, சீக்கிரம்.

அரசர்: (சிரிப்புடன்) உம். வா, சுந்தரபாண்டியா! பாலை பாலை நழுவவிட்டாள். அதுவும் நல்லதுதான். முடிசூட்டும் விழாவைப் பற்றிப் பேசும் சமயத்தில் பால் சிதறினால் நல்ல நிமித்தந்தான். உனக்குப் பட்டம் கட்டுவதென்று தீர்மானித்துவிட்டேன்; சம்மதந் தானே?

சுந்: (அவசரமாக) எனக்குப் பட்டமா? நன்றாய் இருக்கிறது. எனது அன்புக்குகந்த பெரிய தாயின் மைந்தன் வீரபாண்டியன் இருக்கும்போது நான் அரசபதவி பெறுவதா? அம்மாவுமா சம்மதித் தார்கள்?

ராணி: (சிரிப்புடன்) எனக்கு நீங்கள் இருவருமே குழந்தைகள். யார் ஆண்டால் என்ன? நாடு அமைதியாய் நல்லரசு பெற்று வாழ வேண்டும். அவ்வளவுதான்.

வீர. பா: (அவசரமாய் வந்துகொண்டே) அம்மா?

ராணி: யார், வீரபாண்டியனா? வா, வா.

வீ. பா: அப்போதே வந்துவிட்டேன். அம்மா, தாங்கள் செய்வது தவறு. பட்டம் வேண்டும் என்று கைகேயி பரதனுக்காக வாதாடி வரம் வாங்கினாள். தாங்களோ தந்தை தரும் பட்டத்தையும் உதறித் தள்ளுகிறீர்கள். நான் மூத்த பட்டத்து ராணியின் மகனாக இருந்தாலும் அண்ணன் சுந்தரபாண்டியனுக்குத் தம்பிதான். எனவே எனக்குப் பட்டம் தருவது எவ்விதத்திலும் தகாது. (செந்தாமரை வருகிறாள்.)

ராணி: (சிரிப்புடன்) செந்தாமரை, வந்துவிட்டாயா? சரி, இப்போதாவது பாலை நழுவவிடாமல் வந்தாயே! அன்பு மைந்தர்களே, நீங்கள் இப்படிப் பட்டம் வேண்டாம், வேண்டாம் என்றால் இந்தச் செந்தாமரையைச் சிங்காதனத்தில் ஏற்றிவிடுவேன் ஜாக்கிரதை!

வீ. பாண்:<br>சு. பாண்: } (தற்செயலாய்ச் சேர்ந்தாற்போல்) அப்படி யானால் எனக்குச் சிங்காதனம் வேண்டும்.

(பிழையை உணர்ந்து இருவரும் சட்டென நிறுத்தி விடுகின்றனர். ஒரு விநாடி அங்கு மௌனம் நிலவுகிறது.)

ராணி: (சமாளித்தபடி) உம்., செந்தாமரை, நீ போகலாம். இனி நான் அழைக்கும்போது வந்தால் போதும். (செந்தாமரை போகிறாள்.)

ராணி: (அமைதியுடன்) சுந்தர பாண்டியா, உங்கள் இருவரின் திருமணத்துக்கான ஏற்பாடுகள் நடந்து வருகின்றன. பிறகு தந்தை யார் உங்களிடம் விவரம் தெரிவிப்பார். நீங்கள் இருவரும் போக லாம்.

(செந்தாமரையின் இருப்பிடம்; தனிமையில் அமர்ந்த செந்தாமரை ஏதோ யோசனையில் இருக்கிறாள். அப்போது அவளை நாடிச் சுந்தர பாண்டியன் வருகிறான்.]

சுந். பா: செந்தாமரை!

செந்: (திடுக்கிட்டுத் திரும்பி) யார்? இளவரசர் சுந்தர பாண்டியரா? பிரபோ, இந்த ஏழைத் தாதியை நாடி..?

சுந். பா: ஏன் இந்தப் பாண்டிய நாட்டு வருங்கால வேந்தன் வருகிறுன் என்று பார்க்கிறுயா, செந்தாமரை? அன்று என்னுல்தானே பாலே நழுவ விட்டுவிட்டாய்? அதற்கு மன்னிப்புக் கேட்க வந்தேன்.

செந்: (வியப்புடன்) மன்னிப்பா? நன்றுய் இருக்கிறது! இம் மாதிரி சிறு தவறுகள் எல்லாவற்றுக்கும் மன்னிப்புக் கேட்க கிளம்பி விட்டால் பிறகு உங்களுக்கு நாடாளவே விருப்பம் இராது.

சு. பா: நாடும் வேண்டாம்; ஒன்றும் வேண்டாம். நீ என் அருகில் இருந்தால் போதும். இந்த நாட்டின் தொல்லேகளேக் கட்டிக்கொண்டு வீரபாண்டியனே அழட்டும்.

செந்: (சிரிப்புடன்) ஓ, அவ்வளவு ஆற்றலா எனக்கு?

சு. பா: உண்மைதான், செந்தாமரை. ஏனோ தெரியவில்லே, என் உள்ளம் உன்னேக் காணும்போதெல்லாம் தடுமாறித் தவிக்கிறது.

செந்: இளவரசே, அரசு கட்டில் ஏறும் தங்களும் இந்த அடிமைப் பெண்ணும் என்றும் ஒன்றுகிவிடமுடியாது. வீணை எண்ணங்களே விட்டொழியுங்கள், இளவரசே!

சு. பா: உன்னே மறப்பது ஒன்றுதான் எனக்கு வேதனே, செந்தாமரை. உனக்காக அரச போகத்தையும் துறப்பேன்.

செந்: பிரபோ, யாரோ வரும் சத்தம் கேட்கிறது. (தொலேவில் யாரோ நடந்துவரும் ஒலி.) என் இருப்பிடத்தில் தங்களேக் கண்டால் யாராவது வீணுகச் சந்தேகம் கொள்வார்கள். சென்று விடுங்கள்.

சு. பா: போகிறேன், தாமரை. உன் அன்பு....

செந்: கமல மலரின் அன்பு என்றும் கதிரவனுக்குச் சொந்தந்தான். கலங்காதீர்கள், போய் வாருங்கள்.

[போகிறுன். சற்று நேரத்தில்]

வீ. பா: செந்தாமரை!

செந்: யார் அது, இளவரசர் வீரபாண்டியரா? பிரபோ, தாங்கள் இங்கு இந்த நேரத்தில்..?

வீ. பா: (புன்முறுவலுடன்) செந்தாமரை, பூவிடம் வண்டு ஏன் வருகிறது? தென்றலேக் கண்டு மலர் ஏன் சிரிக்கிறது?

செந்: (திகிலுடன்) இளவரசே, என்ன சொல்கிறீர்கள்?

வீ. பா: (சிரிப்புடன்) எனக்கு இந்த அரச போகமே வேண்டாம். செந்தாமரை, உன் அன்பு ஒன்றே போதும். இந்த அரச போகத்தையும் அரண்மனேயையும் சுந்தரபாண்டியனே கட்டிக்கொண்டு அழட்டும்.

செந்: (இரைந்து சிரித்து) நல்ல வேடிக்கை! இளவரசே! என் இதயம் குழம்பிக் கிடக்கிறது. தயவு செய்து என்னே அமைதியாக இருக்க விடுங்கள். இங்கு நம்மை யாராவது பார்த்துவிட்டால் வீண் வேதனே. தயவு செய்து இங்கிருந்து போய் விடுங்கள், இளவரசே!

வீ. பா: செந்தாமரை, போகிறேன்; உன் முடிவு....?

செந்: (சிரிப்புடன்) இந்தச் செந்தாமரை என்றும் சூரியனுக்குத்தான் சொந்தம்; கவலேப்படாதீர்கள், போங்கள். (போகிறுன்.)

செந்: (இரைந்து சிரிக்கிறாள்.) நல்ல வேடிக்கை இது. ஆண்டவனே, ஏன் இந்தச் சோதனை? வீரபாண்டியன், சுந்தர பாண்டியன் இருவரும் என் விளையாட்டுத் தோழர்கள். இருவரும் நல்லவர்கள்தாம்.

(தனக்குள் சிரிக்கிறாள்.)

## காட்சி-3

(செந்தாமரை தனிமையில் அமர்ந்திருக்கிறாள். அவள் முன் இளைய ராணி வந்து நிற்கிறாள்.)

செந்: யார், ராணியா?

இ. ராணி: (அமைதியுடன்) ஆம், செந்தாமரை, நான்தான். உனக்கு உடம்பு சுகம் இல்லையாமே? அதனால்தான் சில தினங்களாய் அரண்மனைக்கு வரவில்லையாமே; உண்மையா?

செந்: (தடுமாற்றத்துடன்) ஆம், தேவீ! இன்று தேவலே. வந்து..

இ. ராணி: (கண்டிப்பான குரலில்) செந்தாமரை, நீ ஒரு தாதிப் பெண் என்பதை நினைவில் வைத்துக்கொள். அரண்மனைத் தாதி நீ; உனக்கு அரச குடும்பத்தில் உறவு அவசியம் இல்லை என்பதைக் கூறவே வந்தேன்.

செந்: (திகிலுடன்) ராணி, தாங்கள் கூறுவது....?

இ. ராணி: எனக்குத் தெரியும் செந்தாமரை. உனக்கு வேண்டிய மருந்து தருவார் அரண்மனை வைத்தியர்; இந்நாட்டு இளவரசன் அல்ல.

செந்: தேவீ! நான்....

இ. ராணி: (கோபத்துடன்) இரண்டு இளவரசர்களுக்கும் ஏன் காதல் வலை விரிக்கிறாய்? அவர்கள் இருவரும் உன்னை நாடி அடிக்கடி இங்கு வருவது உண்மையா?

செந்: (விம்மலுடன்) நான் வரச் சொல்லவில்லை. அவர்கள்....

இ. ராணி: அவர்கள் வருவது உண்மையா?

செந்: (தடுமாறியவண்ணம்) ஆம்!

இ. ராணி: (கோபத்துடன்) உன் அன்னை மூத்த ராணியின் அன்புக்குகந்த தாதி என்று அவர்கள் உன்னை இந்த அரண்மனை மேல் மாடத்தில் சுதந்தரமாகத் திரிய அநுமதி தந்தார்கள். அவர்கள் மறைவுக்குப் பின்னும் நான் மதிப்புக் கொடுத்தேன். ஆனால் நீ உன் நிலை மறந்து அலைவதைப் பற்றிக் கேட்டதும் என் உள்ளம் கொதித்தது. உன்னைக் கடைசி முறையாக எச்சரிக்கிறேன். நீ ஒரு பணிப் பெண். பாண்டிய நாட்டு அரசியல் புயலைக் கிளப்பாதே. அரசியலில் அடிமைப் பெண்கள் தலையிட்டால் அவர்களின் முடிவு மிக வருந்தத்தக்கதாகவே அமையும். இதை மறவாதே. நீயும் என்னைப் போன்ற பெண் இனம், தாய்க்குலம் என்பதால்தான் உன்னை இத்துடன் விட்டு வைத்திருக்கிறேன். இல்லையேல், இத்தனை நேரம் நீ நாடு கடத்தப்பட்டிருப்பாய். நான் வருகிறேன். இனியாவது ஜாக்கிரதையுடன் நடந்துகொள். (போகிறாள்.)

செந்: (தனக்குள்) பணிப் பெண், நான் அநாதை; எல்லாரின் ஏளனப் பேச்சுக்கும் ஏச்சுக்கும் இலக்காகி அல்லல்படும் பேதை. (விம்முகிறாள்.) அம்மா, என்னை ஏனம்மா இக்கதிக்கு ஆளாக்கிவிட்டுப்

போய்விட்டாய்? மகளை அடிமைப் பெண்ணாக்கிவிட்டு அமைதியுடன் சென்றுவிட்டாயே! (திடீரென்று சிரிக்கிருள்.) அடிமைப் பெண்ணுக்கு அரச குடும்பத்தில் உறவு ஆகாதாம்! இளையராணி, இந்த அரச குடும்பத்தையே, ஏன் இந்த அகிலத்தையே ஆட்டிப் படைக்கும் திறன் ஒரு பெண்ணுக்குண்டு என்பதை நீ அறிய மாட்டாய். இந்தப் பாண்டியப் பேரரசையே பஞ்சாய்ப் பறக்கவிடுவேன், ராணி. என் உள்ளத்தில் ஏதோ ஒரு வெறி என்னை, 'பழிவாங்கு' என்று அடிக்கடி கூக்குரலிடுகிறது. இதோ, அதற்கு ஒரு சந்தர்ப்பம். பழி வாங்குவேன்; ராணி! உன்னையே பழி வாங்குவேன். உன் இரு குமாரர்களையும் உண்மையில் நான் விரும்பவேயில்லை. ஆம், விரும்புவதாக நடிக்கப் போகிறேன். (இரைந்து சிரிக்கிருள்.) பாண்டி மாதேவி, உன் இரு குமாரர்களும் அரசுரிமைக்காகச் சச்சரவிட்டுக் கொள்ளும்போது என்னை இகழ்ந்து பேசிய நீ என் காலில் விழுந்து மன்னிப்புக் கேட்கப் போகிருய். அப்போது தெரியும் உனக்கு, இந்தச் செந்தாமரையைப்பற்றி. இப்போது நீ சிரிக்கிருய்; நான் அழுகிறேன். அப்போது நீ அழுவாய்; நான் சிரிப்பேன்; சிரித்துக்கொண்டே இருப்பேன்.

### காட்சி-4

[குலசேகர பாண்டியன் மறைந்துவிடுகிறுன். தந்தையின் இறப்புக்குப் பின் மனம் நொந்து இளைய ராணியும் சுந்தரபாண்டியனும் அமர்ந்திருக்கின்றனர்.]

இ. ரா: (அழுதுகொண்ட) பிரபு, என்னைத் தனிமையில் தவிக்கவிட்டுப் போய்விட்டீர்களே. தாங்கள் மறைந்து ஒரு திங்கள் ஆகிவிட்டதே!

சு. பா: (எரிச்சலுடன்) அம்மா, மறைந்த மன்னர் மீண்டும் உயிர்பெற்று வரப்போவதில்லை. இனி மேலே ஆகவேண்டியதைக் கவனியுங்கள்.

இ. ரா: (வேதனையுடன்) மேலே ஆகவேண்டியதா? என்ன சொல்கிருய், மகனே? மஞ்சளும், குங்குமமும் இழந்து தவிக்கும் அன்னைக்கு ஆறுதல் கூற ஒரு பிள்ளையும் இல்லை.

சு. பா: அம்மா, உடனே எனக்கு முடிசூட்ட வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யுங்கள்.

இ. ரா: (வியப்புடன்) பட்டம் உனக்கா?

வீ. பா: (வந்துகொண்டே) உரிமை முரசு கொட்டுகிருன் அம்மா, உங்கள் பிள்ளை. அவனுக்குப் பட்டம் வேண்டுமாம். மூத்த ராணியின் மகன் இருக்க, அவனுக்குப் பட்டமாம்!

இ. ரா: (திகிலுடன்) யார்? வீரபாண்டியனு? நீயா இப்படிப் பேசுகிருய்?

சு. பா: (எரிச்சலுடன்) ஏன் பேசமாட்டான்? சொந்த மகனைவிட அவன்தானே உனக்கு உயர்வு? நீ கொடுத்த ஊட்டம் அவனை இப்படிப் பேச வைக்கிறது. அண்ணன் என்று துளியாவது மரியாதை செலுத்துகிருனு பார். பட்டம் வேண்டுமாம் பட்டம்!

வீ. பா: அண்ணு, அநாவசியமாகப் பேசாதே. எனக்குத்தான் பட்டம்.

சு. பா. நானும் உன்னை எச்சரிக்கிறேன். எனக்குத்தான் பட்டம்!

இ. ரா: (அழுதவண்ணம்) ஐயோ நிறுத்துங்கள். இதென்ன புதுச் சோதனை? இதென்ன வேதனை? சுந்தரபாண்டியா, வீர பாண்டியா, போங்கள். நீங்கள் இருவரும் போய்விடுங்கள் இங்கிருந்து. (இருவரும் செல்கின்றனர்.) (தனக்குள்) பிரபோ, பார்த்தீர்களா, தங்கள் பிள்ளைகள் பட்டத்துக்கு அடித்துக் கொள்வதை? அவர்களிடையே இருந்த அன்பு வற்றிவிட்டதே, பிரபு! (அழுகிருள்.)

## காட்சி-5

(செந்தாமரையின் இருப்பிடம்; அரசியலில் நேர்ந்த குழப்பத்தை அறிந்து அவள் மனம் மகிழ்கிருள்.)

செந்: (தனக்குள்) பாவம், அரசியார் அல்லும் பகலும் அழுதுகொண்டே இருக்கிருர்களாம். உன் காதல் மயக்கம் இளவரசர்களை நன்கு ஆட்டி வைக்கிறது. 'பட்டத்து அரசன் யாரோ அவனுக்குத்தான் செந்தாமரை' என்று நீ சொன்னலும் சொன்னய். ஒற்றுமை நிறைந்த அண்ணன் தம்பிகள் வாழ்வு இன்று அமர்க்களமாகிவிட்டது. (சிரிக்கிருள்.) பாவம்? வீரபாண்டியன் அரண்மனையை விட்டே வெளியேறிப் படை திரட்டிச் சுந்தரபாண்டியன்மீது போர் தொடுக்கப் போகிருனும்; சபாஷ்! போர்முரசு ஒலிக்கட்டும். அது போர் முரசல்ல, செந்தாமரையின் வெற்றி முரசு. ஹா..ஹா!

## காட்சி-6

[மகாராணி ஆடு புலி கட்டம் ஆடிக்கொண்டிருக்கிருள், தனியாக. அவசரமாகச் சுந்தரபாண்டியன் உள்ளே நுழைகிருன்.]

இ. ர: (அன்புடன்) வா சுந்தரா, தனிமையில் பொழுது போகவில்லை. வருகிருயா, என்னுடன் விளையாட? (இளவரசன் சிரிக்கிருன்.)

சுந். பா: நல்ல நேரம் பார்த்தாய் அம்மா விளையாட. போர்க் கோலம் பூண்டு வந்திருக்கும் என்னைப் பார்த்தால் எப்படித் தெரிகிறது?

இ. ரா: (திகைப்புடன்) என்ன சொல்கிருய் நீ?

சு. பா: (ஏளனமாக) வீரபாண்டியன் என் மீது படை எடுத்து வருகிருனும், அம்மா. பார்த்துவிடுகிறேன் ஒரு கை!

இ. ரா: (வியப்புடன்) சுந்தரா, நீயா இப்படிப் பேசுகிருய்? இந்த ஆடு புலிக் கட்டத்தைப் பார்த்தாயா, மகனே? ஆடுகள் ஒன்றுக்கொன்று இணையாக உலவி வரும்போது இந்த மூன்று புலிகளாலும் ஒன்றும் செய்ய முடியவில்லை. ஆனுல் ஆடுகள் மூலைக்கொன்ருய்ச் சிதறிஞல் ஒரு புலி போதுமடா அவற்றைக் கொல்ல. வேண்டாமடா, மகனே! சொல்வதைக் கேள். உனக்கென்ன பைத்தியம் பிடித்திருக்கிறதா? அல்லது பண்பை இழந்து விட்டாயா? படையெடுக்கக் கிளம்பிவிட்டாயே உடன் பிறந்தவனுக்கு எதிராக. இது தர்மமா?

சு. பா: (எரிச்சலுடன்) அம்மா, அரசியலில் அண்ணன், தம்பி என்ற பாசத்துக்கே இடம் இல்லை. வீரபாண்டியன் படையெடுத்துக் கோட்டை வாசலில் வந்து நிற்கும்போது கைகளைக் கட்டிக்கொண்டு என்னை நிற்கச் சொல்கிருயா? முடியாதம்மா, முடியாது!

இ. ரா: உயர் நிலையில் உருவாகி நிற்கும் பாண்டிய அரசு உட்பகையால் பாழ்பட்டுச் சிதைந்துவிட்டால், சமயத்தை எதிர்நோக்கி நிற்கும் சேர, சோழ அரசர்கள் எதிர்த்து நிற்பார்கள். உன் தந்தை பாடுபட்டு நிறுவிய பாண்டிய அரசு மண்டலமே பாழ்பட்டுக் குலைந்துவிடும். தம்பிதான் அறிவின்றி ஏதோ செய்கிருன் என்ருல் நீயும் அதே தவருன பாதையில் நடவாதே. இரும்புக் கவசம் அணிந்து போருக்கு வந்த அவனை அன்புடன் அணைத்துக்கொள்.

சு. பா: அம்மா, வீண் பேச்சு வேண்டாம். போருக்குக் கிளம்பிவிட்டேன். வெற்றியுடன் திரும்ப வீரத்திலகமிட்டு அனுப்பு, தாயே!

இ. ரா: (அழுதவண்ணம்) எப்படியடா ஆசி கூறி அனுப்புவேன், மகனே? ஒரு கொடியில் உதித்த இரு மலர்களில் எதை வாழ்க என்று போற்றுவேன்? எதை வீழ்க என்று தூற்றுவேன்? பிரபோ, பாண்டிமா தேவியின் கதியைப் பார்த்தீர்களா? இதுவா பாண்டிய நாட்டின் தலைவிதி?

சு. பா: நான் வருகிறேன், அம்மா. (போய்க்கொண்டே) செந்தாமரை, நீ எனக்குத்தான், நீ எனக்குத்தான்!

இ. ரா: (வியப்புடன்) செந்தாமரை, ஒருவேளை அப்படியும் இருக்குமோ? இந்தப் பிளவின் சூத்திரதாரி ஒரு வேளை அவள்தானோ?

[இளையராணி ஒருகணம் யோசனையில் ஆழ்ந்தபின் ஒரு முடிவுக்கு வந்தவளாய் அந்த இடத்தை விட்டு அவசரமாக அகலுகிறாள்.]

## காட்சி-7

(செந்தாமரையின் தனியிடம்.)

செந்: (தனக்குள்) அண்ணன், தம்பிகளின் போர் முடிந்து விட்டது. வீரபாண்டியனுக்கு வெற்றியாம். சுந்தரபாண்டியன் தோற்று விட்டானாம். மகாராணியையும் அவனையும் அரண்மனையில் காணவில்லையாம். யார் ஜயித்தால் எனக்கு என்ன? என் ஆசை, இளைய ராணி என்னிடம் மன்னிப்புக் கேட்க வேண்டும். என் காலில் விழுந்து கதறியழ வேண்டும். என் வஞ்சம் தீர்ந்துவிட்டது!

(அப்போது யாரோ வருகிறார்கள்.)

செந்: (திடுக்கிட்டு) யார் அது?

இ. ரா: நான்தான், செந்தாமரை.

செந்: (ஏளனமாக) ஓ இளைய ராணியா! ஏது இவ்வளவு தூரம்? அடிமைப் பெண் நான். அரசி இந்த அடிமைப் பெண்ணைத் தேடி இங்கே வரக் காரணம்? (சிரிக்கிறாள்.)

இ. ரா: (வேதனையுடன்) பேதைப் பெண்ணே, உன் வஞ்சம் உன்னையே அழித்துவிடும். நினைவுபடுத்திக்கொள். வினை விதைத்திருக்கிறாய். தினை அறுத்துவிட முடியாது.

செந்: (கோபமாக) ராணி, போய் விடு இங்கிருந்து. வீரபாண்டியனின் பட்டத்து ராணி நான். உன் அறிவுரை எனக்குத் தேவை இல்லை.

இ. ரா: செந்தாமரை, நீ பெண்குலத்தில் பிறந்தது உண்மையானால் உன் உள்ளத்தில் இரக்கத்தின் ஊற்றுச் சுரக்காமல் போகாது. அன்று நான் உன்னைக் கண்டித்தது உண்மை. எதற்காக? அரச குடும்பத்தின் நலனுக்காக. பாண்டிய நாட்டின் நன்மைக்காக. உனக்கும் தாய்நாட்டுப் பற்று வேண்டும். உன் சொந்த விருப்பு வெறுப்புக்காக அரசியலை ஆட்டிப் படைக்கக்கூடாது. உனக்கு என்னைப் பழிவாங்க வேண்டுமானால் வாங்கு. அதற்காகத்தான் வந்திருக்கிறேன். இந்தா கத்தி, என்னைக் கொல். ஆனால் உன் வெறியை அரசியலில் காட்டாதே. முடியுமானால் முன்போல் அன்புள்ள தாதியாக அரண்மனையில் உலவி வா. இல்லையேல் பொருள்

தருகிறேன்; நாட்டைவிட்டு ஓடிவிடு. வீணாக இளவரசர்களைப் பிரிக்காதே.

செந்: பொருள்! உன் பொருள் யாருக்கு வேண்டும்? என்னைக் கொலைகாரியாக்கி என் மீது பழி சுமத்தப் பார்க்கிறாயா? ராணி, நீ கால்களைப் பிடித்து மன்னிப்புக் கேட்க வேண்டும். கேட்பாயா? (சிரிக்கிறாள்). கேட்பாய். உனக்கு நாடுதானே வேண்டும்?

இ. ரா: (வெறுப்புடன்) செந்தாமரை, உன் மனநிலையைப் புரிந்துகொண்டேன். நீயும் ஒரு பெண்ணா? மன்னிப்பு யார் யாரிடம் கேட்பது? நாட்டின் ஒற்றுமையைக் குலைத்த நீதான் ஆண்டவன் முன்னிலையில் ஒரு நாள் மன்னிப்புக் கேட்க வேண்டும். நான் உன் காலடியில் கிடக்கமாட்டேன். நீதான் ஒரு நாள் கண்ணீரால் என் கால்களைக் கழுவப் போகிறாய். பலி வாங்கக் காத்திருக்கும் பேய், அரக்க மனம் படைத்த ஆணவக்காரி. பாண்டிய நாடு அழியும் காலம் நெருங்கிவிட்டது. தோற்றுவிட்ட என் மகன், சுந்தரபாண்டியன் வெற்றியை எப்படியாவது கண்டு விடவேண்டும் என்ற வெறியில், உன்னை அடைய வேண்டும் என்ற வெறியினால் உந்தப்பட்டு டில்லி சுல்தானின் தளபதி மாலிக்காபுரை உதவிக்கு அழைக்கப் போகிறான். மாற்றானை நம்பி மனைக்கு அழைக்கலாமா? 'வீரபாண்டியன் ஆண்டால் பாண்டிய வம்சமாவது நிலைத்து நிற்கும். அந்நியன் ஆண்டால் அனைத்தும் நாசமாகி விடும்!' என்று ஆயிரம் முறை அவனிடம் வாதாடிப் பார்த்தேன். கேட்கவில்லை. உன் மீது அவன் கொண்ட கண் மூடிக் காதல் அவன் அறிவுக்குத் திரையிட்டிருக்கிறது. நல்லது; நடப்பது இனி நிற்கப் போவதில்லை. பாண்டிமா தேவி இந்த அரண்மனையில்தான் உயிரின் கடைசி மூச்சை விடுவாள். நான் வருகிறேன், செந்தாமரை.

செந்: (சிரிப்புடன்) அழியட்டும், பாண்டிய நாடு அழியட்டும்!

இ. ரா: அப்படிச் சொல்லாதே! நீயும் அழிந்து போவாய்!

(பரபரப்புடன் போகிறாள்.)

## காட்சி 8

[டில்லி சுல்தான் தளபதி மாலிக்காபுரைச் சுந்தரபாண்டியன் அழைத்து வருகிறான். போர் நடக்கிறது. ஊரெல்லாம் கொள்ளை போகிறது. பாண்டிய நாடு பதறித் தவிக்கிறது. தோற்றுவிட்டான், வீரபாண்டியன். ஆனால் சுந்தரபாண்டியனையும் அவனையும் மாலிக்காபுர் சிறை வைக்கிறான்.]

சு. பா: (சிறையில் தனக்குள்) நன்றாக வேண்டும் எனக்கு. அன்று அம்மா ஆயிரம் முறை மன்றாடினார்கள், அயலானை அழைக்காதே என்று. இன்று? சுந்தரபாண்டியா, வேண்டுமடா உனக்கு, நன்றாக வேண்டும். டில்லி - சுல்தானின் தளபதி உனக்குத் தந்த இந்தச் சிறை வாசம் போதாது. போதவே போதாது.

(பக்கத்துச் சிறையில் வீரபாண்டியன்.)

வீ. பா: (அழுதவண்ணம்) அண்ணா!

சு. பா: யார் அடுத்த சிறையில் யார்? தம்பி..! தம்பி.. வீரபாண்டியா நீயா?

வீ. பா: ஆம் அண்ணா. உன் மீது வெஞ்சினம் கொண்டு படையெடுத்த பாவி வீரபாண்டியன் தான்.

சு. பா: ஐயோ தம்பி, அப்படிச் சொல்லாதே! பாவியிலும் படுபாவி நான். உன் மீது கொண்ட கோபத்தில் அந்நியனை உள்ளே

அநுமதித்து நாட்டுக்காக அவலத்தைத் தேடிக் கொண்டேனே. இன்று அதே அந்நியன் என்னை நம்பாமல் என்னைச் சிறை வைத்திருக்கிறான். சகோதரனை நம்ப மறுத்து மாற்றானை நம்பினேன். சந்தியில் நிற்கிறேன். எனக்கு ஏற்ற தண்டனையை நான் அநுபவித்துக்கொண்டிருக்கிறேன். இன்று உறவுகளை மறந்து உரிமைகளை இழந்து தன்னந்தனியாய் நாம் இருவருமே திண்டாடுகிற அவலத்தைப் பார்த்தாயா? யாரோ வருவது போல் இருக்கிறதே, யார்?

(பாண்டிமா தேவி மாற்றுடை தரித்து வருகிறாள்.)

சு. பா: யார் அது?

பா. தே: உஸ். சத்தம் போடாதே. நான் பாண்டிமாதேவி.

சு. பா. - வீ. பா: (இருவரும் ஏக காலத்தில்) அம்மா!

பா. தே: பேச இது நேரம் அல்ல. எத்தனையோ கஷ்டங்களுக்கிடையில் இந்தச் சிறைக் கூடத்தை அடைந்திருக்கிறேன். சுந்தரா, நீ அழைத்து வந்த விருந்தாளி பாண்டி நாட்டையே சூறையாடி விட்டானடா. நம் அரண்மனைப் பொக்கிஷங்கள் மட்டும் அல்ல; பெண்களின் கற்பையும் சேர்த்து அவன் கொள்ளையடித்துவிட்டான். பாண்டிய நாடே இன்று சூறையாடப்பட்டுக் கொள்ளைபோன நிலையில் இருக்கிறது. இதற்கெல்லாம் காரணம்......

சு. பா: (கோபத்துடன்) அந்தச் செந்தாமரைதான் அம்மா.

பா. தே: (சிரித்து) இல்லை. உங்கள் இருவருக்குள் இருந்த வேற்றுமை. காதல் போதை.

வீ. பா: இப்போது எல்லாமே தெளிவடைந்து விட்டன அம்மா.

(பாண்டிமாதேவி இருவரையும் விடுதலை செய்கிறாள்.)

பா. தே: (பரபரப்புடன்) சுந்தர பாண்டியா, வீரபாண்டியா, உங்கள் இருவரையும் நீண்ட நாட்களுக்குப் பிறகு அருகருகே பார்க்கும் போது எத்தனை மகிழ்ச்சியாக இருக்கிறது தெரியுமா? இந்த மகிழ்ச்சி நீடிக்க வேண்டும். அந்த அந்நியன் தலை குனியவேண்டும்.

இருவரும்: (ஒரே குரலில்) கண்டிப்பாய் இனி பாண்டிய நாட்டுக்குத் தலைகுனிவு ஏற்படாமல் பார்த்துக்கொள்வோம்.

பா. தே: சரி, சீக்கிரம் கிளம்புங்கள்.

வீ. பா: அம்மா நீங்கள்....?

பா. தே. என்னைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம். நான் காவலாளிகளுக்கு மயக்க மருந்து தந்திருக்கிறேன். அவர்கள் மயக்கம் தெளியுமுன் நீங்கள் இங்கிருந்து தப்ப வேண்டும். எனக்கு இன்னும் சில கடமைகள் இருக்கின்றன. என்னைப் பற்றிக் கவலைப்படாமல் போங்கள். வெற்றி உங்களுடையதாக இருக்கட்டும்.

(வீரபாண்டியனும், சுந்தரபாண்டியனும் அவசர அவசரமாகச் செல்கின்றனர். அவர்கள் போவதைப் பார்த்துக்கொண்டிருக்கிறாள் பாண்டிமாதேவி. அவள் கண்களில் நீர் வழிகிறது.

## காட்சி-9

(மாலிக்காபுரின் அக்கிரமத்தாலும், அட்டூழியத்தாலும் பாண்டிய நாடே சீர்குலைகிறது. விபரீத விளையாட்டால் பாண்டிய நாட்டுக்கு ஏற்பட்ட கொடுமைகளைக் கண்ட செந்தாமரை

நடுங்குகிறாள். எப்படியோ தப்பி அவள் அரண்மனையை விட்டு வெளியேற நினைக்கும் சமயத்தில், வெற்றிப் பெருமிதத்துடன் வீறு நடை போட்டுக் கொண்டு வந்த மாலிக் கபூரின் கண்களில் அவள் பட்டு விடுகிறாள்.)

மாலிக் காபூர்: யார் அங்கே?

(செந்தாமரை பயந்து ஓடுகிறாள்.)

மா. கா: ஓ! அழகான பொண்ணு, ஏய், பொண்ணு இப்படி வா!

செந்: (அலறியபடி) விலகி நில், மிருகமே. என்னைத் தொடாதே! எட்ட நில்! ஐயோ ராணி. ஆண்டவா! (டில்லி சுல்தானின் தளபதி அவளைப் பிடிக்கிறான். திமிறிக்கொண்டு செந்தாமரை ஓடுகிறாள். மறைவிடத்திலிருந்து இதைப் பார்த்த ராணி அவன் மீது கத்தியை எறிகிறாள்.)

மா. கா: (கையைப் பிடித்துக்கொண்டே) யார் அது என் மேலே கத்தி எறிஞ்சது? பிடி, பிடி. ஐயோ, உயிர் போகுதே.

இ. ரா: (வந்துகொண்டே) நான்தான். வெறி பிடித்த மிருகமே. உன் அபரிமிதமான வெறியின் கோரப்பசிக்கு ஒரு பெண் கூடத் தப்பக் கூடாதா?

செந்: (வியப்புடன்) தேவி, பாண்டிமாதேவி, தாங்களா? தாங்களா என் கற்பைக் காப்பாற்றியது? எந்த முகத்துடன் தங்களுடன் பேசுவேன்? என்னை மன்னித்து விடுங்கள். இந்தப் பேருதவிக்கு என்ன கைம்மாறு செய்யப் போகிறேன்?

இ. ரா. எல்லாமே நடந்து முடிந்துவிட்டது. இனிச் செய்வதற்கு ஒன்றுமில்லை. சீக்கிரம் ஓடித் தப்பித்துக்கொள்.

[செந்தாமரைக்குப் பழைய நினைவுகள் வருகின்றன. 'என்னிடம் மன்னிப்புக் கேள்' என்று தான் சொன்ன ஆணவ வாசகங்கள் நினைவுக்கு வருகின்றன. 'நான்தான் ராணியிடம் மன்னிப்புக் கேட்கவேண்டும்' என்ற கழிவிரக்கத்தில் செயலற்று நிற்கிறாள் அவள்.]

இ. ரா: செந்தாமரை, யோசிக்க நேரம் இல்லை. சீக்கிரம் போ.

மா. கா: ஏய், யாரங்கே? இந்த ரெண்டு பொம்பளையையும் பிடியுங்க. ஓடருங்க. பாண்டி நாட்டுப் பெண்களே தைரியசாலிகள் தான். என்ன, ஒருத்தரும் இல்லையா? இந்தக் கத்தியை அவங்க மேலே எறியறேன்.

(கத்தியை வீசுகிறான். செந்தாமரை இடையில் குறுக்கிடுகிறாள்.)

செந்: (அலறியபடி) ஐயோ, அம்மா!

இ. ரா: செந்தாமரை, ஐயோ, உனக்கா இந்தக் கதி?

செந்: தேவி, ஓடிவிடுங்கள்; இந்த அரக்கன் வருமுன் தப்பி ஓடிவிடுங்கள். இனி நான் பிழைக்கமாட்டேன். போங்கள் தேவி. உம்! என் ஆத்மா சாந்தியடையவேண்டும். யாரோ வரும் சப்தம் கேட்கிறது. உம்..(ராணி வேதனையுடன் செல்கிறாள். மாலிக்காபுர் தடுமாறியபடி வருகிறான்.)

மா. கா: (திகைப்புடன்) ஏய் பொண்ணு, அந்தக் கிழவி மேலே கத்தி எறிஞ்சா நீ ஏன் வழியிலே வந்து விழறே? டேய், அந்தக் கிழவியைப் பிடியுங்கள் சீக்கிரம். (போன ஆட்கள் வருகின்றனர்.)

ஆட்கள்: எஜமான், அவளை எங்கே தேடியும் காணவில்லை.

செந்: (திணறலுடன்) காணவில்லை. என் தேவி தப்பிவிட்டார்கள். அரசியார் தப்பிவிட்டார்கள். இனி நான் நிம்மதியாக இறப்பேன். ஆண்டவன் சந்நிதியில் நான் மனநிறைவோடு நுழைவேன். ஆண்டவா, என் கற்பைக் காப்பாற்றிய இளைய ராணிக்கு என் உயிரையே காணிக்கை செலுத்திவிட்டேன். இனிப் பாண்டிய நாடு மீண்டும் அமைதியுடன் வாழும். வஞ்சகி செந்தாமரை மடிந்துவிட்டாள். இனி அரசியல் புயல் கிளம்பாது. அம்மா வந்து விட்டேனம்மா, இதோ....

(விழுகிறாள்)

மா. கா: இந்தச் சவத்தை மரியாதையுடன் அடக்கம் செய்யுங்கள். (தனக்குள்) வீணே ஒரு மலர் மலராமலேயே கருகிப் போச்சு.

(அப்போது ஒருவன் ஓடி வருகிறான்.)

வந்தவன்: பிரபோ, சிறையிலிருந்து அண்ணனும் தம்பியும் தப்பிவிட்டார்களாம். இருவரும் படை திரட்டி வருகிறார்களாம்.

மா. கா: ஓ! ஒற்றுமை வந்திடுச்சா? அப்போ இனி இங்கே வேற்றுமைக்கு இடமில்லை. உடனே கிடைச்சதையெல்லாம் சுருட்டிக்கிட்டு வந்த வழியே திரும்ப வேண்டியதுதான். கிளம்புங்கள், சீக்கிரம்....!

(அனைவரும் ஓடிவிடுகின்றனர்.)

## கடைசிக் காட்சி

[மாலிக்காபுர் தோல்வியடைந்து ஓடுகிறான்- மீண்டும் அண்ணன் தம்பிகளுக்குள் அன்பும் அமைதியும் நிலவுகின்றன. ராணியின் கட்டளைகளை ஏற்று நடக்கும் நிலைக்கு இருவருமே வருகின்றனர், இறந்த செந்தாமரையின் நினைவாக அவளுக்கு ஒரு சமாதி கட்டப்படுகிறது. அங்கே....)

இ. ரா: (ஆழ்ந்த பெருமூச்சுடன்) செந்தாமரை இறந்து போய்விட்டாளென்பதை என்னால் நம்ப முடியவில்லை. தன் இறப்பின் மூலம் அவள் உங்கள் இருவருக்கும் ஒற்றுமை என்ற நல்லதொரு நீதியைப் போதித்து விட்டாள். இது இறப்பல்ல; தியாகம்! மாலிக்காபுர் மட்டும் நம்மை விட்டுப் போகவில்லை, மைந்தர்களே, அத்துடன் நம் அறியாமை, ஆணவம் எல்லாமே போய்விட்டதாகவே நான் நினைக்கிறேன்.

சு. பா: அம்மா, இனிப் பாண்டிய நாடு அப்பா காலத்தில் வலிமை பெற்றதைப்போல் வலிமை அடையும். இனி எங்களுக்குள் வேறுபட்ட எண்ணங்கள் தோன்றுவதற்கு இடமே இல்லை.

வீ. பா. செந்தாமரையின் தியாகம் எங்களுக்குள் எப்போதும் விழிப்புணர்ச்சியைத் தந்துகொண்டே இருக்கும்.

இ. ரா: இது போதும்; இது போதும். (தனக்குள் மெதுவாக) செந்தாமரை, நீ செய்த தவறுகளுக்குப் பிராயச்சித்தமாகப் பாண்டிய நாட்டை மீண்டும் வாழ வைத்துவிட்டாயம்மா; வாழ வைத்து விட்டாய்!

அக்டோபர், 1974

# கடவுளின் வடிவம்

பூர்ணம் விசுவநாதன்

1

[பாவம் கிச்சாமி! கம்பெனியில் ஏதோ காரணங்களைச் சொல்லி நோட்டீஸ் கொடுத்துவிட்டார்கள். இதை நினைத்துக் கண்ணீர் வடிக்கவோ, வருங்காலத்தைப்பற்றி மனைவியுடன் ஆலோசனை நடத்தவோ அவகாசம் கொடுக்காமல், தூரத்து உறவினர் கங்காதரன் வந்து உட்கார்ந்து கொண்டிருக்கிறார். வந்தவர் வெறுமே உட்கார்ந்திருக்கக்கூடாதா? தொண தொணவென்று குதர்க்க வாதம் செய்து அவனை வதைக்கிறார்.

நாலு நாட்களாக நடக்கிறது என்றாலும் இன்று ஏனோ கிச்சாமிக்குத் தாங்க முடியவில்லை: வீட்டு ஹாலில் சோபாவின் மத்தியில் உட்கார்ந்திருந்த அவனை அதன் விளிம்புவரை விரட்டி வந்து துளைத்துத் தள்ளுகிறார் கங்காதரன்.]

கங்காதரன்: . . . அதான் இல்லேன்னேன்?

கிச்சாமி: எது ஸார்?

கங்கா: (ரோசத்துடன்) ஸாரா? எதுக்கு 'ஸார்?' நான் ஒன்னைக் 'கிச்சாமி'ன்னுதானே கூப்படறேன்! என்னையும் நீ 'கங்காதரன்'னே கூப்பிடு, போரும். மீனாட்சிக்கு அண்ணன் மொறைதானே ஆறது?

கிச்: (அசட்டுச் சிரிப்புடன்) அதெப்பிடிக் கூப்பிடறது? . . ஹி ஹி ஹி . . என்னன்னாலும் மரியாதைன்னு ஒண்ணு இருக்கோல்லியோ?

கங்கா: மரியாதையா? அப்படின்னா என்ன? நெஜமாவே கேக்கறேன், மரியாதைங்கறது என்ன?

கிச்: (மென்று விழுங்கி) மரியாதை உம் . . அது வந்து . .

கங்கா: (எக்களிப்புடன்) அடிச்சான் அடி! . . ''மரியாதைன்னா . . உம் அது வந்து'' . . ஹூம்! கடசீல 'எது எங்கே வந்து'ன்னு கேட்டாத் தெரியாது! நீ சொல்லலாம், 'மரியாதைன்னா பெரியவாகிட்டச் சின்னவா காமிக்கிற ஒண்ணு'ன்னு. இன்னம் ஆயிரம் விதத்துல நீ வர்ணிக்கலாம். ஆனா கடசீல 'மரியாதை'ங்கறது என்ன? எனக்கு அதுன்னா தெரியணும்!

கிச்: (மழுப்பலாக) அதான் நீங்க இப்பச் சொன்னேனே....

கங்: பேசப்படாது. அதான் இல்லேன்னுட்டேனே! நீ என்ன வேணும்னாலும் சொல்லிப் பாரு, உருப்படியா ஒண்ணும் தேருது. கடசீல என்ன ஆறது? இன்னதுன்னே தெரியாத ஒரு விஷயத்தை நாம் காரியத்துல காமிக்கக் கௌம்பறோம். விஷயம் தெரிஞ்சவன் ரெண்டொருத்தன் டக்கின்னு கேட்டான்னா, தத்துபித்துங்கறோம்:

[கிச்சாமியின் நிலைமை கவலைக்கிடமாகும் சமயத்தில் அவன் மனைவி மீனாட்சி உள்ளிருந்து வருகிறாள். கிச்சாமி அவளைப் பரிதாபமாகப் பார்க்கிறான்.]

மீனாட்சி: என்ன, சர்ச்சை பலமாயிருக்கு?

கங்கா: வேறொண்ணும் இல்லே, நாமள்ளாம் பெரிய பெரிய வார்த்தைகளைப் பேச்சுல தூக்கிப் போடறோமே ஒழிய அதுகளோட முழு அர்த்தத்தையும் புரிஞ்சுண்டு பேசறதில்லேங்கறதைச் சொல்லிண்டிருக்கேன். (கிச்சாமியைப் பார்த்து) 'மரியாதை'ங்கற வார்த்தையை ஒபயோகிக்கறதுக்கு முன்னால அந்த வார்த்தையைத் துருவித் துருவி ஆராயேன்! "ஏன் அந்த வார்த்தை? வேற வார்த்தையை ஏன் போடப் படாது? படாதுன்னா ஏன்? போடலாம்னா ஏன்?...." இப்பிடிக் கேட்டுண்டே ஆதிகாரணத்துக்கு ஓடு: அஸ்திவாரத்தைச் சீர்படுத்தாம, மூணாவது மாடியில இருக்கிற குண்டு குழிகளையெல்லாம் அடைக்கக் கௌம்பறதுல என்ன புண்ணியம்?

கிச்: (வார்த்தை ஏதும் தோன்றாமல்) இதுல என்னன்னா....

கங்கா: (கண்களை இறுக மூடிக்கொண்டு) ஊஹூம், நீ என்ன தான் சொல்லேன், நான் ஒப்புத்துக்கவேண்டாமா? நானா நான் இல்லே; ஒலகம்னே வச்சுக்கோயேன்! எதுக்காகச் சொல்ல வரேன்னா, நீங்க நாலு பேர் சரின்னு நெனச்சுண்டு செய்யற காரியத்தை நாங்க நாலு பேர் தப்புங்கறோம். எங்க அபிப்பிராயத்தை எப்பிடி மாத்த முடியும்? அதான் அடிப்படையில பேதமாய்ப் பேச்சே! (வெடுக்கென்று எழுந்து) சரி, இப்பிடிப் போயிட்டுவரேன்.

மீனா; (உபசாரமாக) எங்கே கௌம்பிட்டேள், அண்ணா?

கங்கா: எங்கேன்னு திட்டமா ஒரு எடத்தையும் சொல்றதுக்கில்லே. கால் போற எடத்துக்கெல்லாம் விடவேண்டியது சவாரி. இங்கே தங்கியிருக்கிற பத்து நாள்ள வேறென்ன வேலே?

மீனா: சாப்பிட வந்துடுங்கோ.

கங்கா: பின்னே?..(திடீரென்று) ஒனக்கென்ன தொண்டை கட்டியிருக்கா? என்னவோ மாதிரிப் பேசறயே!

மீனா: இல்லையே, சரியாத்தான் இருக்கு தொண்டை.

கிச். (ஏதாவது சொல்லவேண்டுமே என்பதற்காக) அவளுக்கு என்னிக்குமே கொரல் குயில்மாதிரி இனிமையா இருந்ததில்லே. இது தான் அவளோட மாமூல் கொரல் (செயற்கையாகச் சிரிக்கிறான்.)

கங்கா: (வெகுண்டு) குயில்மாதிரி இனிமையா? உருப்பட்டுது போ! குயிலோட கொரல் இனிமைன்னு நீ கண்டயா?

கிச்: (பதறி) அதுன்னா..குயில் வந்து....

கங்கா: குயில் வந்தாலும் சரி, போனாலும் சரி, நான் கேட்ட கேள்விக்குப் பதில் சொல்லுன்னேன். குயிலுக்குக் கொரல் இனிமைன்னு கவிகளெல்லாம் சொல்லிட்டான்கள், ஒடனே நாம நம்பிடணும், இல்லே? என்னைப் பொறுத்தமட்டுல, குயிலுக்கு அழகுதான் ஜாஸ்தி,

கொரல் கெடையாது; மயிலுக்குக் கோரல் நன்னாருக்கே ஒழிய, நேர்ல பாக்கறதுக்கு என்னமோ இமிடேஷன் ஸில்க்மாதிரி, பல கலர்களைக் காண்பிச்சிண்டு, ரொம்ப அருவருப்பா இருக்கு. என் ஒபினியன் அப்பிடி! (மீனாட்சியும் கிச்சாமியும் வாயடைத்து நிற்க) அதையெல்லாம் எவனும் அசைச்சுக்க முடியாது. (விடுவிடுவென்று புறப்பட்டுச் செல்கிறார்.)

கிச்: (அவர் தலை மறைந்தவுடன்) கடவுளே, எங்கேருந்தோ திடீர்னு வந்து குதிச்சி என்ன அட்டகாசம் பண்றான், மகாபாபி!

மீனா: (ரோசத்துடன்) என்னது, எங்கண்ணாவை மகாபாபிங் கறேள்?

கிச்: பிரமாத அண்ணா மொறை! அவன் சொல்லிண்டு வந்த லக்ஷணத்தைப் பாத்தா, எத்தனையோ நூற்றாண்டுகளுக்கு முன்னாலேயே அவன் குடும்பமும் ஒங்க குடும்பமும் வெவ்வேற பாதையில பிரிஞ்சு போக ஆரம்பிச்சாச்சுன்னு தெரியறது. இப்பிடி எதையுமே ஏத்துக்காம விதண்டாவாதம் பண்ற ஜன்மத்தை ஒனக்கு ஒறவுன்னு வேற சொல்லிக் கறயே! நேத்திக்கி ஏதோ பேச்சுல 'அஞ்சும் மூணும் எட்டுத்தா'ன்னு சொல்லிட்டேன். ஒடனே அதை வச்சிண்டு என்னைக் கொதறிப் போட் டுட்டான்.

மீனா: அதுல என்ன சொல்லமுடியும்? அஞ்சும் மூணும் எட்டுத்தானே?

கிச்; நமக்கும் ஒலகத்துக்கும் எட்டுத்தான்; ஆனா அவனுக்கு எட்டு இல்லையாம். "அஞ்சும் மூணும் சேந்தா வர தொகைக்கு எட்டுன்னு எவனோ பேர் குடுத்துட்டாங்கறதுக்காக நாம ஏன் அதை ஒப்புத்துக்கணும்? நான் அதையே 'தட்டு'ன்னுதான் சொல்லுவேன்; ஒலகம் என்ன வேணும்னாலும் சொல்லிக்கட்டும்" அப்பிடின்னு அடிச்சுப் பேசறான், என்ன பண்ணுவே நீ இவனை?

['கிச்சாமி' என்று கூப்பிட்டுக்கொண்டு ஆபீஸ் நண்பன் பாலு வருகிறான்.]

கிச்: (ஆவலுடன்) என்ன பாலு, பாத்தியா ஆதிசேஷனை நேத்திக்கி?

பாலு: (உற்சாகமின்றி) பாத்தேன், பாத்தேன். ஆபீஸ் சம்பந்தப்பட்ட மத்த விஷயங்களைப் பேசிட்டு, மெதுவா ஒன் சமாசா ரத்தை எடுத்தேன்; ஒடனே ஆத்திரத்தோடு, "அந்தக் கிச்சாமி பேச்சையே எங்கிட்ட எடுக்கவேண்டாம்"னு கத்தினான்.

கிச்: ஐயையோ! அப்பிடின்னா இந்த நோட்டீஸ் காலம் முடிஞ்ச ஒடனே நான் வேலையை விட்டு வெலகவேண்டியதுதானா?

பாலு: அப்படித்தான் தோணறது.

மீனா: ரொம்ப அழகுதான்! (கிச்சாமியிடம்) கோர்ட்டுல கேஸ் போட்டுட்டா ஒலகமே நம்ம கால்ல வந்து விழுந்துடும், இல்லே? ஹும். போறுக்கொறைக்கி இங்கே வீட்டுல ஒரு கிராதகன் வந்து ஒக்காந்துண்டு சும்மா அடிச்சுப் பேசியே என்னை உருத்தெரியாமக் கொதறிப் போட்டுண்டிருக்கான்.

பாலு: யாரு அது?

கிச்: யாரோ கங்காதரனாம். மீனாட்சிக்கி ஏதோ சுத்து வழியில் அண்ணா மொறையாம். பத்து நாள் தங்கறேன்னு வந்து ஒக்காந்துண்டு நித்தியப்படி உத்சமவா என்னைப் பிச்சுப் போட்டுண்டிருக்கான்.

பானு: இதுலகூடக் கிச்சாமி, ஆதிசேஷன் தன்னோட மாப்ளேயை ஒன் சீட்டுல கொண்டுவந்து ஒக்காத்தத்தான் இப்பிடிச் சூழ்ச்சி பண்ணியிருக்கார்னு பேசிக்கறுங்களே! அது நெஜமாயிருக்குமோ?

கிச்: அது அவ்வளவு லேசில்லேன்னேன். இவன், கம்பெனி மானேஜராயிருக்கலாம்; ஆனு டைரக்டர்கள் கண்ணுல மண்ணைத் துவிட்டு மாப்ளேயை இழுத்துவிடறதுமட்டும் நடக்காது. யாரையாவது டிஸ்மிஸ் பண்றதுன்னுத்தான் டைரக்டர்களுக்குக் கொக்கரிப்பா இருக்குமே தவிர, மானேஜரோட ஆள் வர்ரதுக்குச் சம்மதிக்கமாட்டான்கள்.

பானு: ஒன் சமாசாரம் இன்னம் டைரக்டர்கள் காதுக்குப் போகலே. அப்படிப் போறபோது நீ அவங்களேயே நேரில பாத்துப் பேசிடு. விடாதே.

கிச்: அதெல்லாம் ஒண்ணும் நடக்காது. நான் ஏதோ கடவுள் விட்ட வழின்னு இருக்கேன். ஓங்கிட்ட ஆதிசேஷனுக்கு நல்ல மதிப்பு உண்டு. ஒன் வார்த்தையையே அவர் லட்சியம் பண்ணலேங்கறபோது எனக்கு நம்பிக்கையில்லே..ஹூம், பார்ப்போம்.

## 2

[குளக்கரை: கால் போன போக்கில் அந்தப் பக்கம் வந்த கங்காதரனுக்கு அங்கேயும் அடித்துப் பேச ஓர் ஆள் அகப்படுகிறுர். குளக்கரைப் பெஞ்ச் ஒன்றில் மாட்டிக் கொண்டவர் கிச்சாமியின் கம்பெனி மானேஜர் ஆதிசேஷன் என்பது தற்செயலாக ஏற்பட்டதுதான். கங்காதரனைப் பொறுத்தமட்டில் யாராவது சிக்கவேண்டுமே தவிர, அது யார் என்பது முக்கியம் அல்ல. ஆகவே, ஆதிசேஷனை அணு அணுவாகத் துளைக்கிறுர்.]

கங்கா: ஆல்ரைட்! இன்னொண்ணு கேக்கறேன்; அதுக்காவது ஒழுங்காப் பதில் வரதா, பாப்போம்.

ஆதிசேஷன்!....?

கங்கா: கம்பெனியில் வேலே பாக்கறதாச் சொன்னீரே! என்ன வேலே? கிளார்க்கா?

ஆதி: (கோபத்தை அடக்கிக்கொண்டு) இல்லே..மானேஜர்.

கங்கா: மானேஜரா? அடி சக்கை! உம்ம், ரொம்ப முக்கியமான புள்ளிதான்..ஆனு மானேஜரா இருக்கணும்னு அதுக்கு ஏகப்பட்ட தகுதி வேணுமே! அந்தத் தகுதி ஒமக்கு இருக்கா?

ஆதி, (ரோசத்துடன்) இல்லாமே?

கங்கா: யாரு சொன்னது?

ஆதி: யாரு சொல்லணும்? தகுதியிருக்கறதனுலதானே மானேஜர் ஆயிருக்கேன்?

கங்: ஆங், இந்த எடத்துலதான் நமக்குள்ள தகராறு ஆரம்பிக்கறது. மானேஜர் பதவிக்கு வரவா எல்லாரும் தகுதியோடுதான் வராளோ?

ஆதி: பின்னே?

கங்கா: கெடையவே கெடையாதுன்னேன்! சரியானபடி பாக்கப் போனு, முக்காவாசிப்பேர் தகுதியில்லாததுனுலதான் மானேஜர் பதவிக்கு வரா; சும்மா ஒரு 'ஆர்க்யுமென்'டுக்குச் சொல்றேன். நீர்

மானேஜர் பதவிக்கு லாயக்கில்லேன்னு, ஒங்க ஆபீஸ்ல இருக்கற வங்கள்ள நூத்துக்கு எண்பது பேரைச் சொல்லவைக்கறேன். நீர் ஒடனே கீழே இறங்கத் தயாரா?

ஆதி: ஹும்! என்னைத் தகுதியில்லாதவன்னு எவனாவது சொன்னா டிஸ்மிஸ் பண்ணிடமாட்டேனா? எவனும் துணிஞ்சு சொல் லிடுவானா?

கங்கா: ஓஹோ, ஒங்களுக்கு டிஸ்மிஸ் பண்ணக்கூடப் 'பவர்' உண்டோ?

ஆதி: (வீறாப்புடன்) பின்னே? இந்தக் கையால உத்தரவு போட்டு எத்தனை பேரைத் தொலைச்சிருக்கேன் தெரியுமா? ஏன், இப்போகூட ஓர் ஆளுக்கு நோட்டீஸ் குடுத்திருக்கேன்-ஒரு மாச நோட்டீஸ்!

கங்கா: அப்பிடியா? என்ன காரணமோ?

ஆதி: ஹூம், என் குணம் தெரியாம வாலை ஆட்டினான்; ஒட்ட நறுக்கிப்பிட்டேன். வேறென்ன?

கங்கா: ஏன் ஸ்வாமி, ஒரு மனுஷன் வந்து ஒம்மகிட்டத் தன் வாலை ஆட்டினதாவும், நீர் ஒடனே ஒரு பட்டாக்கத்தியை எடுத்துச் 'சரக்'ன்னு அதை ஒட்ட நறுக்கிவிட்டதாவும் என்னை நம்பச் சொல் றீரா? மனுஷ வாலை நறுக்கறதுல நீர் நிபுணராயிருக்கலாம். ஆனா 'ஆக்ச்சுவலா' என்ன நடந்ததுங்கறதைக் கொஞ்சம் சொல்லக்கூடாதா?

ஆதி: நடக்கறதென்ன? என்னை எதுத்துப் பேசினான்; தொலைச்சுப்பிட்டேன்.

கங்கா: அப்பிடியா? சாதாரணமா இந்தமாதிரிக் கம்பெனிகள்ள டைரக்டர்கள்னு உண்டே; ஒங்க இதுல கெடையாதோ?

ஆதி: (அலட்சியமாக) உண்டு, உண்டு.

கங்கா: அவா ஒமக்கு மேலதானே?

ஆதி: மேலதான். ஆனா நான் பாத்து ஒத்தனை டிஸ்மிஸ் பண்ணிட்டேன்னா அவா அதை ஒப்புத்துக்காம இருக்கறதில்லே; அவ்வளவு நம்பிக்கை எம்பேர்ல.

கங்கா: நம்பிக்கை கெடக்கறது. டிஸ்மிஸ் ஆனவன் டைரக் டர்கள்கிட்ட அப்பீல் பண்ணமாட்டானா?

ஆதி: (வெகுண்டு) அப்பீல் பண்ணிடுவனோ? காலை முறிச்சுப் புடமாட்டேனா?

கங்கா: (கேலியாகச் சிரித்து) அடாடாடா, ஒரு மனுஷனோட வாலையும் ஒட்ட நறுக்கிக் காலையும் முறிச்சுப்பிட்டா, அவன் கையை ஊணி நடந்தே வீடு திரும்பவேண்டியதுதானா? வேற வழியில்லாமப் போயிடுமே, ஸ்வாமி!

ஆதி: (எழுந்திருந்து அலட்சியமாக) அவன் எப்பிடி வேணும்னா லும் வீடு திரும்பட்டும், நான் இப்போ வீடு திரும்பறேன்.

கங்கா: அதுக்குள்ளயா? (தாமும் எழுந்து) நானும் கௌம்ப றேன், நாளைக்கி இங்கே வருவீரோல்லியோ? பாப்போம்.

ஆதி: நாளைக்கி எங்கேயும் வரமாட்டேன்; எனக்கு வேற வேலை இருக்கு.

கங்கா: அப்பிடியா? (ஏமாற்றத்தைக் காட்டிக்கொள்ளாமல்) வாரும், பேசிண்டே நடக்கலாம். என்னோட பாயிண்ட் என்னன்னா..

[வேறு வழியின்றி ஆதிசேஷன் உடன் செல்கிறார்.]

## 3

[மறுநாள் மாலை. கால்போன போக்கில் சவாரி விடும் கங்காதரன், இன்று குளக்கரைக்குச் செல்லாமல் முனிசிபல் பார்க்குக்கு வந்தவர், அங்கே ஆதிசேஷனைப் பார்த்துத் திகைக்கிறார். ஆதிசேஷனும் அவரைப் பார்த்துத் திகைக்கிறார். முந்தின நாள் விட்ட இடத்திலிருந்து இப்போது பிடித்துக்கொள்கிறார் கங்காதரன்.]

கங்கா: என்னோட பாயிண்ட் என்னன்னா, எதுத்துப் பேசறது குத்தமா? குத்தம்னா ஏன் குத்தம்? குத்தமில்லேன்னா ஏன் குத்தமில்லே?

ஆதி: எதுத்துப் பேசறது குத்தந்தான்; இல்லையா பின்னே?

கங்கா: நான் இல்லேங்கறேன். நான் சொல்றது தப்புன்னு நிரூபிச்சுடும்? அது போரும்.

ஆதி: (திணறி) இப்பிடி நீங்க விதண்டாவாதம் பண்றதுன்னு ஆரம்பிச்சா....

கங்கா: விதண்டாவாதமே இல்லே. வெறும் ஆர்க்யுமென்ட்: ஒரு ஆள் எதுத்துப் பேசிட்டான்ங்கறதுக்காக அவனை வேலையை விட்டுத் தள்ள முடியுமா?

ஆதி: முடியும்; ஏன்னா....

கங்கா: முடியாதுங்கறது என்னோட கட்சி. தள்றது நியாயந் தான்னா ஏன் நியாயம்? நியாயமில்லேன்னா, ஏன் தள்ளணும்? நான் ஒரு (திடீரென்று) இன்னொரு கேள்வி: இப்போ நான்தான் வேலை பாத்துண்டிருக்கேன்; ஆபீஸ் மானேஜர் என்னை வேலையிலேருந்து தள்ளப் பாக்கறார். தனக்குப் பிடிச்சவன் ஒத்தனை என்னோட எடத்துல ஒக்காத்தி வைக்கறதும் அவருக்கு நோக்கமாக இருக்கலாம் இல்லையா?

ஆதி: (வெகுண்டு) மிஸ்டர் கங்காதரன்: நீங்க பேசறது கொஞ்சங்கூட....

கங்கா: அடாடாடா, கோவிச்சுக்கறேரே! மானேஜர் எத்தனை நியாயமாச் செஞ்சாக்கூட இந்தமாதிரியும் பேச்சு வரலாமேங்கறதுக் காகன்னா சொல்றேன்? எனக்கு எதையும் மேலெழுந்தவாரியா ஆராயத் தெரியாது: துருவித் துருவிக் கேள்விமேல் கேள்வியாப் போட்டு....

ஆதி; (சட்டென்று எழுந்து) ஒங்க கேள்விக்கெல்லாம் பதில் சொல்ல நான் தயாராயில்லே, (நடக்க ஆரம்பிக்கிறார்.)

கங்கா: (தாமும் எழுந்து நடந்துகொண்டே) நீர் தயாரா யிருந்தாலும், இல்லாவிட்டாலும் கேள்வி போடவேண்டியது என்னோட பொழுதுபோக்கு. என்னோட கேள்விகளுக்கு ஒவ்வொருத்தர் சொல்ற பதிலையும் வச்சிண்டே ஆளை எடை போட்டுடுவேன்.

## 4

[ஐந்தாறு நாட்கள் ஓடிவிடுகின்றன, விளையாட்டுப் போல். இந்த ஐந்தாறு நாட்களிலும் ஆதிசேஷன் பட்ட பாட்டை என்னவென்று சொல்ல? ஒரு நாளுக்கு ஓர்

இடமாக அவர் மாலை வேளைகளில் ஓடி ஒளிந்தும் கங்காதரன் தற்செயலாகவே அவரை அங்கங்கே வந்து பிடித்துக் கொண்டு பேசிப் பேசிப் பிழிந்தெடுத்துவிட்டார். இன்று ஆதிசேஷன் தமது வழக்கமான மாலை வேளை 'வாக்கிங்'கை விட்டு வீட்டிலேயே தங்கிவிட்டார். (கங்காதரன் தவிக் கட்டும்!) வீட்டில் அவரைப் பாலு சந்திக்கிறான்.

ஆதிசேஷனுடன் நெடுநேரம் பேசிக்கொண் டிருந்து விட்டுப் பாலு பரபரப்புடன் கிச்சாமியின் வீட்டுக்கு ஓடி வருகிறான். அவன் சொல்லும் செய்தி கிச்சாமியையும் மீனாட்சியையும் துக்கிவாரிப் போடுகிறது.]

மீனு: போயும் போயும் அண்ணா சந்திச்சது மானேஜரா இருந்து தொலைக்கணுமா? நம்ம வேளை....

பாலு: மானேஜர் சொல்ல ஆரம்பிச்சபோதே எனக்கு ஒங்க வீட்டு விதண்டாவாதியைத்தான் சொல்றாரோன்னு தோணித்து; அப்புறம் மானேஜரே 'கங்காதரன்'ங்ற பேரைச் சொன்ன ஒடனே பூராவும் நிச்சயப்பட்டுப் போச்சு எனக்கு.

கிச்: கங்காதரன் எங்க வீட்டுக்கு வந்திருக்கறதங்கறது மானேஜருக்குத் தெரிஞ்சுடுத்தோ?

பாலு: அது கொஞ்சங்கூடத் தெரியலேங்றது ஒன் அதிர்ஷ் டந்தான்.

கிச்: (அலட்சியமாக) இதுல என் அதிர்ஷ்டம் என்ன இருக்கு? அந்த ஆதிசேஷனுக்குத் தெரிஞ்சுட்டா என் தலையை வாங்கிடுவனோ?

பாலு: அட போடா அசட்டுப் பயலே! விஷயத்தைப் புரிஞ் சுக்காமப் பேசறயே? ஆதிசேஷனுக்கோ சாயங்கால வேளையில் வாக்கிங் போகாட்டா உசிரே போயிடும். ஆனா ஊர்லே அவர் எங்கே போனாலும் கங்காதரன் எப்பிடியோ மோப்பம் பிடிச்சிண்டுவந்து கொத்த ஆரம்பிச் சுடறாரே; அதனாலதான் தவிக்கிறார் மானேஜர். இதுல கங்காதரன் ஒன் வீட்டுல தங்கியிருக்கறதாத் தெரிஞ்சா மானேஜருக்கு ஒம்மேல துவேஷம் ஜாஸ்தியாயிடுமே!

கிச: (அலட்சியமாக) இனிமேத்தான் ஜாஸ்தியாகணுமாக்கும்.

மீனு: எப்பிடியோ அண்ணாதான் நாளைக்கிப் புறப்பட்டுடறாரே! அதை மானேஜர்கிட்டச் சொன்னா சந்தோஷப்படுவார்.

பாலு: என்ன, கங்காதரன் நாளைக்கிக் கௌம்பிடறாரா? எப்பிடித் தெரியும்?

கிச்: எப்பிடித் தெரியுமா? அவன் இன்னிக்கு டிக்கெட் வாங்கி, மூட்டை கிட்டையெல்லாங்கூடக் கட்டிவைச்சுட்டான். டிக்கெட்டை எங்கிட்டத்தான் குடுத்து வச்சிருக்கான். நாளைச் சாயங்காலம் சவாரி!

பாலு: டேய் கிச்சாமி, கதையிலயே இது ஓர் அற்புதமான திருப்பம்டா.

கிச்: எப்பிடி?

பாலு: ஆதிசேஷன் இந்தக் கங்காதரன் தொல்லையிலேருந்து விடுபடறதுக்காக என்ன வேணும்னாலும் செய்யத் தயாராயிருக்கார். இதுதான் சரியான சந்தர்ப்பம். நாளைக்கிக் காலம்பர நீ எங்கூட ஒரு எடத்துக்கு வரமுடியுமா? ஏன், எதுக்குன்னு கேக்காதே.

கிச்: எதுக்குன்னுதான் சொல்லேன்.

பாலு: இப்போ கேக்காதேன்னு சொன்னேனு இல்லியா? நாளேக்குச் சொல்றேன்.

மீனு: (கிச்சாமியிடம்) சொன்னு சரின்னு விடுங்கோளேன்! ஒங்க நன்மைக்காகத்தானே சொல்றுர்?

கிச்: சரியப்பா சரி.

பாலு: அப்போ நாளேக்கிக் காலம்பற ஏழு மணிக்கு வரேன். ஆதிசேஷனே ஒனக்குத் தெரியும்னு கங்காதரன்கிட்டக் காட்டிக்காதே. (புறப்பட்டவன், திரும்பிவந்து) இன்னொரு விஷயம்: ஆதிசேஷனுட மாப்ளேக்கி எங்கேயோ மைசூர்ல பெரிய வேலேயாக் கெடைச்சுடுத்தாம். அவரே சொன்னுர்.

கிச்: அப்பிடியா! (பாலு பதில் சொல்லாமல் வெளியேறு கிறுன்.) இந்தப் பய மனசில என்ன இருக்குன்னே தெரியலியே!

மீனு: அது என்னவாயிருந்தாலும் ஒங்க நன்மைக்காகத்தான் இருக்கும்.

[வெளியிலிருந்து களேத்த முகத்துடன் கங்காதரன் வருகிறுர்.]

கங்கா: (வரும்போதே) ஹூம், தெனம் நான் போன எடத்துலெல்லாம் கால்ல எடறிண்டிருந்தான்! ஊருக்குப் போறுமே, சொல்லிக்கலாம்னு பாத்தா இன்னிக்கி ஆளேக் காணவே காணும்.

கிச்: யாரைச் சொல்றேள்?

கங்கா: யாரோ ஒத்தன், ஏதோ கம்பெனியில மானேஜர்னு சொல்லிண்டான். இந்த ஒரு வாரமா நான் சாயங்காலம் எந்தத் தெசையில போனுலும் தட்டுப்பட்டுண்டிருந்தான். இன்னிக்கின்னு காணும். அவன் அட்ரஸும் தெரியாது. ஒனக்குத் தெரியுமோ என்னமோ? கறுப்பா.. குட்டையா....

கிச்: (வெடுக்கென்று) தெரியாதே!

[மீனுட்சி சிரிப்பை அடக்கிக்கொண்டு உள்ளே போகிறுள்.]

## 5

[மறுநாள் காலே.
மானேஜர் ஆதிசேஷன் வீட்டில். கிச்சாமியும் பாலுவும் அவர் எதிரே உட்கார்ந்து பேசிக்கொண்டிருக்கிறுர்கள்.]

ஆதி: அந்த ஆள் இன்னிக்கி வண்டியேறப் போறது நிச்சயந்தானு?

பாலு: கிச்சாமி அதைச் சர்வ நிச்சயமாய் முடிச்சதுக்கப்புறந்தான் நாங்க ரெண்டு பேரும் இங்கே வந்திருக்கோம், ஸார்.

கிச்: இதோ பாருங்கோ ஸார். டிக்கெட்டைக்கூடக் கொண்டு வந்திருக்கேன். டிக்கெட்டுல கங்காதரன்கற பேர் இருக்கு.

ஆதி: (வாங்கிப் பார்த்துவிட்டுப் பெருமகிழ்ச்சியுடன்) ஏ அப்பா! நம்பவே முடியலே. இது எப்பிடி நடந்தது?

பாலு: நேத்திக்கி ஒங்ககிட்டப் பேசிண்டிருந்ததை வருத்தத்தோடே கிச்சாமிகிட்டச் சொல்லிண்டிருந்தேன். கங்காதரன்கற பேரைக் கேட்டதும் கிச்சாமி துள்ளிக் குதிச்சான். ஏன்னு....

கிச்: (குறுக்கிட்டு) எங்க சுத்துவழிச் சொந்தக்காரர் ஒத்தர் இந்த ஊர்ல இருக்கார். அவர் வீட்டுக்கு இந்தக் கங்காதரன் வந்திருக்கறது எனக்குத் தெரியும்; நானே அவர்கிட்ட ஒரு நாள் அகப்பட்டுண்டு திண்டாடியிருக்கேன். இப்போ ஒங்களுக்குக் கஷ்டம்னு தெரிஞ்ச ஒடனே எனக்கு மனவேதனை தாங்கமுடியலே.

பாலு: (குறுக்கிட்டு) 'நம்ம மானேஜருக்காக நான் என்ன வேண்டுமானாலும் செய்வேன்'னு சொல்லிட்டுக் கிச்சாமி ராவோடு ராவா அந்தச் சுத்துவழிச் சொந்தக்காரரைப் போய்ப் பாத்து, டிக்கெட் கெடைக்கலேங்கறதுக்காகக் கங்காதரன் கௌம்பாமலே இருக்கார்ங்கற உண்மையை அவர்கிட்டேருந்து தெரிஞ்சிண்டு, அந்த க்ஷணமே ரெயில் வேயில் தெரிஞ்சவர் ஒத்தர் கால்ல விழுந்து டிக்கெட்டை வாங்கி யிருக்கான். கங்காதரனும் இன்னிக்கிக் கௌம்பச் சம்மதிச்சுட்டார்.

ஆதி: சபாஷ் கிச்சாமி! இந்த ஒதவிக்காக நான் ஒனக்கு என்ன வேணும்னாலும் செய்யத் தயாராயிருக்கேன். கொஞ்ச நாளா என் உசிர் அணு அணுவா என்னை விட்டுப் பிரிஞ்சிண்டிருந்தது. இப்போதான் எனக்கு மூச்சுச் சரியா வரது.

கிச்: அப்பிடியெல்லாம் சொல்லாதேங்கோ, ஸார். நான் ஒங்க கம்பெனியிலேயிருந்து வெலகப் போறவன்தான்னாலும், இதுவரைக்கும் எனக்குச் சோறு போட்ட ஸ்தாபனமாச்சே; அந்த நன்னியை நான் மறந்துடுவேனா? அதனாலேதான்....

ஆதி: (குறுக்கிட்டு) என்னது? கம்பெனியிலிருந்து வெலகப் போறவனா? பேசப்படாது. நான் ஏதோ முன்கோபத்துல நோட்டீஸ் குடுத்துட்டேனே ஒழிய, அப்புறம் என்ன காரணத்தைச் சொல்லி அதை வாபஸ் வாங்கிக்கறதுன்னு தெரியாம முழிச்சிண்டிருந்தேன். இப்போ இதைவிட அருமையான காரணம் வேறே இருக்கமுடியுமா?

கிச்: (வியப்புடன் எழுந்து நின்று) ஸார், நீங்க என்ன சொல்றேள்?

பாலு: (பெருமகிழ்ச்சியுடன்) ஸார், அப்பிடின்னா கிச்சாமியை மறுபடி....

ஆதி: ஆமாம், அதேதான்; அவன் செஞ்சிருக்கற ஒதவி சாமான்யமானதா?

[பாலுவும் கிச்சாமியும் பாய்ந்து சென்று ஆதிசேஷனின் கைகளை நன்றியுடன் பிடித்துக்கொள்கிறார்கள்.]

## 6

[அன்று மாலை.

ரெயில்வே ஸ்டேஷன். கங்காதரன் ரெயில் வண்டிக்குள் உட்கார்ந்திருக்கிறார். பிளாட்பாரத்தில் கிச்சாமி, மீனாட்சி, பாலு ஆகிய மூவரும் நின்றுகொண்டிருக்கிறார்கள். வண்டி புறப்படும் நேரம் நெருங்கிக்கொண்டிருக்கிறது.]

மீனா: (கிச்சாமியிடம்) அந்த டிக்கெட்டை அண்ணாகிட்டக் குடுத்துட்டேளா?

கங்கா: அவன் குடுக்கறவரையிலயும் நான் காத்துண்டிருக்கலேன்னேன். குதிரை வண்டியில ஏர்றத்துக்கு முன்னாலேயே வாங்கிண்டுட்டேன்.

மீனு: அண்ணு, வண்டி கௌம்பப் போறது. நீங்க செஞ்சிருக்கற ஒபகாரத்தை நானும் இவரும் ஒரு நாளும் மறக்கமாட்டோம். அது என்னதுங்கறதை இவர் அப்புறமா லெட்டர்ல எழுதுவார்.

கங்கா: என்ன சொல்றே, மீனு? என்ன, கிச்சாமி?

பாலு: லெட்டர்ல எழுதுவானேன்? நேர்லயே சொல்லிடேன், கிச்சாமி!

கிச்: ஆமாம்; அதுவும் நியாயந்தான். (கங்காதரனிடம்) நீங்க இந்த ஒரு வாரமா, சாயங்கால வேளையில சந்திச்சுப் பேசிண்டிருந்தவர் எங்க கம்பெனி மானேஜர்தான். ஆதிசேஷன்னு பேரு.

கங்கா: ஆ! அப்பிடியா?

பாலு: ஆமாம். அவர் யாரையோ டிஸ்மிஸ் பண்ணி நோட்டீஸ் குடுத்துட்டதா ஒங்ககிட்ட சொன்னரே, அந்த நோட்டீஸை வாங்கிண்டது இந்தக் கிச்சாமிதான்.

கங்கா: (துள்ளி எழுந்து) ஆ! அப்பிடின்னு, கிச்சாமிக்கு வேலை போயிடுத்தா?

கிச்: போயிடுத்து. ஆனு இப்போ ஒங்களாலே மறுபடியும் கெடைச்சுடுத்து.

கங்கா: (பொறுமையின்றி) அடாடாடா, நீங்க பேசறது ஒண்ணும் புரியலியே! வண்டி கௌம்பறத்துள்ளே சொல்லிடுங்கோ யாராவது....

பாலு: வேறொண்ணுமில்லே, ஸார். நீங்க பத்து நாளைக்கி முன்னுல் இந்த ஊருக்கு வந்து சேந்தப்போ, கிச்சாமிக்கு நோட்டீஸ் வந்து கொஞ்ச நாளாயிடுத்து. இன்னம் மூணு வாரத்துல வேலை போயிடும்ங்கற நெலைமை. அப்போதான் நீங்க எங்க கம்பெனி மானேஜர் ஆதிசேஷனைச் சந்திக்க ஆரம்பிச்சேள்....

கங்கா: இரு, இரு. சந்திக்க நானு ஆரம்பிச்சேன்? நான் ஒவ்வொரு நாள் ஒவ்வொரு எடத்துக்குப் போயிண்டிருந்தேன்? அந்த எடங்களில் எல்லாத்துலயும் அவன்தான் தட்டுப்பட்டான். அதனுல் அவனையே அடிக்கடி சந்திக்கவேண்டியதாயிடுத்து.

கிச்: அப்பிடிச் சந்திச்சபோதெல்லாம் நீங்க என்னோட நோட்டீஸைப்பத்தி அவர்கிட்டே விளாசித் தள்ளியிருக்கேள். இதுல அவருக்கே என்ன தோணித்தோ தெரியலே. இன்னிக்கிக் காலம்பற என்னைக் கூட்டனுப்பி நோட்டீஸை வாபஸ் வாங்கிண்டுட்டார்.

கங்கா: அடடே, அப்பிடியா? நோட்டீஸ் ஒனக்குத்தான் குடுத்திருந்தாங்கறது தெரியாமலே, நான் அவன்கிட்ட அடிச்சு வாதாடறதுக்கு அதை ஒரு விஷயமா வச்சிண்டேன். அதுவும் தற்செயலா நடந்ததுதான். அதுக்கு இப்பிடி ஒரு பலனு?

கிச்: அதான். எனக்கு மறுபடி வேலை கொடுத்ததுக்காக நான் ஆதிசேஷனுக்குத் 'தாங்க்ஸ்' சொன்னேன்; ஒடனே அவர் ஒங்களைப் பத்திச் சொல்லி, ஒங்களைத் 'தாங்க்' பண்ணச் சொன்னுர். எல்லாத்தையும் ஒங்களுக்கு விஸ்தாரமாக் கடுதாசியில எழுதணும்னு நெனச்சேன். ஆனு....

கங்கா: மீனுட்சி, வேலை போயிருக்கற ஒரு சந்தர்ப்பத்துல நான் ஒங்க வீட்டுக்கு வந்திருக்கேன். அதைக் கொஞ்சங்கூட வெளியில

காட்டிக்காம ரெண்டு பேரும் நடந்துண்டேளே! எவ்வளவு சிரமமான காரியம்! (வண்டி கிளம்புகிறது.) ஆதிசேஷன்கிட்டச் சொல்லுங்கோ.

கிச்: ஓ! நிச்சயமா.

[வண்டி பிளாட்பாரத்தைக் கடந்து விரைந்து மறைகிறது.]

மீனு: பாவம்! அண்ணுவுக்கு நல்ல மனசு!

கிச்: அதெல்லாம் தெரியாது எனக்கு. பாலுவோட அருமையான யோசனைப்படி ஆதிசேஷன்கிட்ட ஒருமாதிரியாவும், கங்காதரன் கிட்ட ஒரு மாதிரியாவும் புளுகி, ரெண்டு பேரையும் திருப்தி பண்ணி வேலையைத் தக்கவச்சிண்டாச்சு. பாலுவுக்குத்தான் 'தாங்க்ஸ்' சொல்லணும்.

பாலு: போடா போடா! யாரால இது நடந்துதுன்னு சொல்லவே முடியாத ஒரு கதையா இது முடிஞ்சுபோச்சு. அதனுல எல்லாருக்கும் 'தாங்க்ஸ்' சொல்லிட்டு, கூடவே ஆண்டவனையும் நன்றியோடு நெனச்சுப்போம். கடவுளே கங்காதரன் வடிவத்துல வந்து ஒனக்கு நன்மை பண்ணிட்டுப் போனதா வச்சுக்கோ, கொழப்பம் இருக்காது.

[மூவரும் ரெயில் வண்டி சென்ற திசையைப் பார்க்கிருர்கள். வண்டி விட்டுச் சென்ற புகைப்படலந்தான் அங்கே நிறைந்திருக்கிறது.]

—அக்டோபர், 1967

# மூன்று விஷயங்கள்

கூவிப் பறக்குமொரு—கிளியினைக்
கூட்டி லடைத்துவைத்தால்
தேவ ருலகமெல்லாம்—அதுசினத்
தீயை எழுப்பிடுமே.

மன்னிய சோலையிலே—ஒருகுயில்
வாடி வருந்துமெனில்
கின்னரர் கிம்புருடர்—தளர்ந்துதம்
கீத மிழைப்பாரையோ!

சிட்டுக் குருவிக்கேனும்—ஒருசிறு
தீங்கினைச் செய்பவரை
நட்டநல் நண்பராக—உலகமும்
நம்பிக்கை கொள்வதுண்டோ?

—கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை

செப்டம்பர், 1935

# வேண்டுதல்

எங்குநிறை அன்பறிவே எண்ணுமனம் வேண்டும்.
எவ்வுயிர்க்கும் எஞ்ஞான்றும் இனிமைசெயல் வேண்டும்.
பொங்கியற்கை வழிநின்று புவிஇயங்கல் வேண்டும்.
பொய்சூது பகைசூழ்ச்சி பொருந்தாமை வேண்டும்.
மங்கையர்கள் உரிமையுடன் வாழ்வுபெறல் வேண்டும்.
மக்களெலாம் பொதுவென்னும் மதிவளரல் வேண்டும்.
தங்குமுயர் தாழ்வென்னும் தளையறுதல் வேண்டும்.
சமதர்மச் சன்மார்க்கத் தாண்டவம் வேண்டுவனே!

கடவுள்நெறி யொன்றென்னுங் கருத்துநிலை வேண்டும்.
கட்டுமதக் களைகளெலாங் கால்சாய்தல் வேண்டும்.
நடமாடுங் கோயிலுக்கு நலம்புரிதல் வேண்டும்.
'நான்' அழிந்து தொண்டுசெயும் ஞானமதே வேண்டும்.
கொடியகொலை புலைதவிர்க்கும் குணம்பெருகல் வேண்டும்.
கொலைநிகர்க்கும் வட்டிவகை குலைந்திறுதல் வேண்டும்.
இடமொழியுங் கலையுமென்றும் இயங்கிடுதல் வேண்டும்.
இயற்கைவனப் புளங்கவரும் இனிமையும் வேண்டுவனே!

காடுமலை சென்றேறிக் கவியெழுதல் வேண்டும்.
கடுநரக நகர்ச்சந்தை கருதாமை வேண்டும்.
பாடுகடல் மணலிருந்து பண்ணிசைத்தல் வேண்டும்.
பாழான பட்டணத்தைப் பாராமை வேண்டும்.

நாடிவயல் கதிர்குளித்து நாஞ்சிலுழ வேண்டும்.
நகையடிமைக் கோலுருட்டல் எண்ணுமை வேண்டும்.
ஆடுமனம் ஒன்றராட்டை ஆட்டிடுதல் வேண்டும்.
ஆவிகொல்லும் இழிதொழில்கள் அடங்கவும் வேண்டுவனே!

ஒருவன்பல மனைகொள்ளும் முறையொழிதல் வேண்டும்.
ஒருவனொரு மகள்கொள்ளும் ஒழுங்குநிலை வேண்டும்.
தருமமிகக் காதல்மணந் தழைத்தோங்கல் வேண்டும்.
சாதிமணக் கொடுமைகளின் தடையுடைதல் வேண்டும்.
பெருமையின்ப இல்லறமே பிறங்குநலம் வேண்டும்.
பெண்தெய்வம் மாயையெனும் பேயோடல் வேண்டும்.
உரிமையுற ஆண்கற்பை ஓம்பொழுக்கம் வேண்டும்.
உத்தமப்பெண் வழியுலகம் ஒளிபெற வேண்டுவனே!

**—திரு. வி. க.**
*ஆகஸ்ட், 1943*

# மின்னலுக்கு...

மேகத்திரையைப் பிளந்து விரைகின்றாய் மின்னலே—ஒரு
மோகன மின்சாரம் காட்டி மறைகின்றாய் மின்னலே.
வெளிச்சங் காட்டி இருட்டை விரட்டுவாய் மின்னலே—உடன்
பளிச்சென் றென்கண் பறித்துக்கொண் டேகுவாய் மின்னலே!

நில்லுநீ நில்லெனக் கெஞ்சிடு வேனுன்னை மின்னலே—இங்கு
நில்லா உலகியல் வாழ்வெனச் சொல்லுவாய் மின்னலே.
காண உன்னையென் கண்ணைத் திறக்குமுன் மின்னலே—நீ
நாணிக் கோணி நடித்தெங்குச் செல்கின்றாய் மின்னலே?

சிற்றிடை துவளச் செங்கால் வீசுவாய் மின்னலே—உன்னைப்
பற்றிக்கொள் வேனென் றோபயந் தோடினாய் மின்னலே?
தடதட வென்றிடி முரசம் ஆர்த்திட மின்னலே—நீ
நடன மாடும் நயமென்ன சொல்லுவேன் மின்னலே?

''மண்ணுல கில்வந் தென்னை அணை'' என்பேன் மின்னலே—''அடா,
என்னைப்போ லத்தான் இவ்வுடல் வாழ்''வென்பாய் மின்னலே!
ஞான வேட்கைகொண் டேயுன்னை நச்சுவேன் மின்னலே—அது
மோனம் என்று மொழியொன் றெழுதுவாய் மின்னலே!

**—யோகி சுத்தானந்தபாரதி**
*ஜனவரி, 1941*

## ஏமாற்றம்

மின்னெனத் துள்ளித் துவண்டெழுந் தேபசும்
மென்கொடி மேனியைத் தொட்டவுடன்
வஞ்ச மனத்தினை நஞ்சில் உமிழ்ந்திடும்
வன்னெடும் பாம்பு நிமிர்ந்ததடா.

தாக விடாயைத் தவிர்த்திடும் தாரகம்
தண்சுனை யென்று தொடர்ந்து சென்றேன்;
போகப்போ கமணற் பொட்டல் படர்ந்தது;
பொய்கையும் கானல் மயக்கமடா.

கொம்பிற் பழுத்துக் குலுங்கிய மாதுளைக்
கோலத்தி லாழ்ந்ததைப் போய்ப் பறித்தேன்;
செம்பவ ளத்துடல் கீண்டவுடன் உள்ளே
செம்புழுக் கூட்டம் நெளிந்ததடா.

அன்றொரு நாளவள் கன்னி அழகினில்
அன்புள தென்றவள் கைப்பிடித்தேன்;
இன்றவள் என்னை நரகத் திலேயிடும்
எச்சிற் கலமென் றுணர்ந்தேனடா!

—'நாணல்'
ஜூலை, 1946

## மனத் தொட்டில்

என்சிறு கருப்பையில் இடம்குறை வென்றே
என்னிரு கைகளில் உனை எடுத் தேனே;
என்னிரு கைகளும் இடம்குறை வென்றே
என்னுடை மடியினில் உனைவைத் தேனே;
என்னுடை மடியிலும் இடம்குறை வென்றே
என்னிரு தோள்களில் உனைச்சேர்த் தேனே;
என்னிரு தோள்களும் இடம்குறை வென்றே
என்மனத் தொட்டிலில் உனைவிட் டேனே.
என்மனத் தொட்டிலும் இடம்குறை யாதே;
என்சிறுவா இனிக் கண்வளர் வாயே!

—'லெமன்'
ஜூலை, 1960

# கண்ணா, என் பிரபு!

சித்தியப் பேற்றினில் தழைத்தமெய் யடியவர்
தம்மடி வணங்கும்என் கைகள்;
நித்தியத் தவம்புரி நிமலனின் நேயர்கள்
நிழலையே காணும்என் கண்கள்;
பத்தியச் சுவைபடப் பாடிய புலவர்தம்
பரம்பரை வணங்குமென் இதயம்;
சித்தியிங் கெனக்கருள் சிந்தனை உன்பதச்
சேவையே, கண்ணபி ரானே!

கூட்டிளங் கன்னியர் கைவலைக் குட்படும்
காதலும் கண்டனன் ஓர்நாள்;
பொட்டிளம் பூவையர் பொய்ம்மயக் காழ்த்துமோர்
போதையும் கொண்டனன் ஓர்நாள்;
கெட்டநாள் கெட்டபின் கேலியும் தொண்டபின்
கீழ்மையை உணர்ந்தனன் இந்நாள்;
பட்டபின் தேர்ந்தன பகவநின் கீதையைப்
பாடினன், கண்ணபி ரானே!

செய்தவை குற்றமோ? செய்பவை குற்றமோ?
தேறுமோர் அறிவிலேன் பேதை;
கொய்தஎன் மலர்களைக் குப்பையில் மூடினேன்;
குற்றமென் றறிகிலேன் ஏழை;
கைதவழ் பேரருள் காற்றிடை வீசினேன்;
காரணம் காண்கிலேன் பாவி!
மைதவழ் மேனியாய்! மயக்கினைத் தீர்ப்பதுன்
வார்த்தையே, கண்ணபி ரானே!

நன்றியில் லாமல்யான் நடந்திருந் தேனெனில்
நாயினும் கீழெனப் படுவேன்;
அன்றியான் செய்தவை அறமெனப் படுமெனில்
அரசனுக் கரசனாய் மகிழ்வேன்;
வென்றியான் கொண்டவை மேன்மையான் கண்டவை
வியத்தகும் மதியினா லல்லேன்;
அன்றென தன்னையும் தந்தையும் செய்ததோர்
அறத்தினால், கண்ணபி ரானே!

நீண்டதோர் ஆயுளும் நிறைந்ததோர் செல்வமும்
நீதரக் கேட்டிலேன், தலைவா!
வேண்டுமோர் வரமெலாம் வேதனை யற்றதோர்
மெய்ம்மைசேர் வாழ்க்கையே, இறைவா!
தோண்டுமோர் கைக்கெலாம் சுரப்பதால் உன்னடி
தொழுகிறேன், என்னுயிர்க் கண்ணா!
ஈண்டுநான் ஆண்டுநீ என்செயக் கூடுமோ,
என்னுயிர்க் கண்ணபி ரானே?

முட்டையில் என்னை நான் மூடினேன் அன்றுனை
முழுமையாய்க் கண்டிலேன், ஐயா!
பெட்டையாய்ச் சேவலாய்ப் பிறந்தபின் ஞானம்
பெற்றவர் சொல்வதும் பொய்யா?
கட்டையாய் வாழ்க்கையைக் கழித்தபின் இன்றுனைக்
காண்கிறேன் என்னையே நானே;
அட்டையாய் ஒட்டினேன்; அண்ணலே! இன்றெனக்கு
அருள்புரி, கண்ணபி ரானே!

—கண்ணதாசன்
அக்டோபர், 1973

# வேலியில் பூத்தது

காட்டுக் கொடிவழி வேலியிலே—கரம்
காட்டி அழைத்ததோர் வாசமலர்;
நீட்டிய மின்னல் தலைத்ததென—ஒளிர்
நின்மலப் புன்னகை கண்டுநின்றேன்.

வேலியிற் பூத்த இரண்டுமலர்,—கண்டு
விம்மி அவிழ்ந்ததென் உள்ளமலர்;
மூல மிரண்டு மிணைந்து நின்றே—அன்பு
மூட்டிய சக்தியைக் கண்டுநின்றேன்.

காடு கழனியில் தாம்பிறந்து—வயற்
காட்டு வரப்பில் நடைபயின்று
கூடு கடந்தறி யாதவிரண்—டிளங்
கோதைய ருள்ளெழும் புன்னகையோ?

சோலை நொடியினில் பேச்சுமிழ்ந்து—தனிச்
சஞ்சலம் பூண்டுயிர் வாழ்க்கை யெலாம்
பாலை வனமென்று பேசிவரும்—இந்த
மாந்தரைக் கண்டு நகைத்ததுவோ?

முள்ளுப் புதரினில் வாழ்ந்திடினும்—குல
மோகனம் சற்றும் மறந்திடுமோ?
தள்ளி அலைத்தது காற்றெனிலும்—துயர்
தாங்கி நகைத்திடக் கற்றதுவோ?

தொட்டுப் பறித்ததன் தூய்மையினை—சிறு
தும்புதும் பாக்கிடக் கூசியுள்ளம்
பட்டுக் கனத்தது போதுமென்றே—எட்டிப்
பார்த்தவண் ணம்நடை கட்டிவிட்டேன்!

—துறைவன்
ஜூன், 1945

# ரேணுகா

ஆற்றில் குளித்திட்டு நானிருந்தேன்—அவன்
ஆகாய மீதிற் றவழ்ந்து சென்றான்;
வேற்றுரு வொன் றுதண் ணீரினிலே—விழ
வேட்கை யுடன்சற்றே பார்த்துவிட்டேன்.

கான மிசைத்தந்தக் கந்தருவன்—நீல
வான வெளியினில் வட்டமிட்டான்.
மோன நிலைதடு மாறிவிட்டேன்—முழு
மோசம்போ னேன்என்ன பாசமிது?

பெண்ணாய்ப் பிறந்து வளர்ந்திட்டநாள்—முதல்
பேதையான் இத்தகைப் பேரழகைக்
கண்ணாரக் கண்டு களித்ததில்லை—இது
கனவோஎன் றெண்ணிக் களித்துவிட்டேன்!

காட்டி லமைத்த குடிலுக்குள்ளே—என்றன்
காதல் கணவனைக் கைப்பிடித்தேன்;
கூட்டி நெருப்பிற் சமித்தினை யிட்டுக்
குழைந்திட லன்றிவே றொன்றறியேன்!

நிஷ்டையில் மூழ்கி அவனிருப்பான்—யான்
கஷ்டத்தி லாழ்ந்து கரைந்திடுவேன்.
அஷ்ட திசையிலும் என்னை நிகர்த்தஓர்
ஆரணங்கு மில்லை ஆ! கொடிதே!

மணலிற் குடம் செய்து நீர்கொணர்வேன்—நிதம்
மாமுனி யின்தூய நேமத்திற்கே
கணநேர மாயினும் காலனைப்போல்—அவன்
கண்ணை யுருட்டிச் சினந்திடுவான்.

அன்று மணல்குட மாகவில்லை—என்றன்
ஆகம் நடுங்கி யழுதுவிட்டேன்.
என்று மிலாத பழிவந்து சூழ்ந்ததை
எண்ணித் தேம்பியழு தேங்கிவிட்டேன்.

இடையிற் குடத்தினை ஏந்தவில்லை—ஆனால்
இதயத்தி னில்துயர் ஏந்திவிட்டேன்!
உடைபட்ட நெஞ்சை உணர்ந்துவிட்டான்—முனி
ஓங்கிய கோபக் கனல்சொரிந்தான்.

மாதக் கணக்கில் சுமந்து பெற்றேன்—என்
மடியில் கிடத்திப்பா லூட்டிவிட்டேன்.
காதல் மொழிபல கொட்டி வளர்த்தஎன்
கண்மணி யேகொடுங் காலனானான்.

—வித்துவான் வி. துரைசாமி

மே, 1944

# வெளுப்பு

கண்ணீர்ப் படகினிலே—என்
காலக் கனவுகளின்
பண்ணை அனுப்புகிறேன்—ஊமைப்
பல்லவி பாடுகிறேன்.

திசைகள் இலாநாட்டில்—என்
சிந்தனை யாத்திரைதான்
கசங்கிய மொட்டுக்கள்மேல்—கால்
கடுக்க நடக்கிறது.

வெறுமை விரல்களென்றன்—மன
வீணை நரம்புகளாம்
பிறவி கொடுத்தனுப்பும்—ஒலிப்
பின்னலில் சிக்குகிறேன்!

நெய்தல் விழிவயலில்—சுடு
நெருப்பு மலர்களை நான்
கொய்து முடியவில்லை—இனிக்
கோக்கவும் நேரமில்லை.

துடிக்கும் இதயத்தை—துயில்
தொட்டுப் பிடிக்கிறது;
விடியல் பிறக்கிறது—வான்
வெளுப்பு வளர்கிறது!

—தமிழன்பன்
ஏப்ரல், 1970

# மோகினி

காலையிலே இளங்கதிரோன் வரவு கூறிக்
காரிருளை வழியனுப்பிக் காட்சி தந்து
சோலையிலே பூத்தமலர் தேனைச் சிந்தச்
சொக்குநகை புரிந்திடுவாள் கிழக்குத் திக்கில்.

கன்னியவள் பேரெழிலில் கருத்திழந்தேன்.
காதல்தீ உளம்எரிக்கக் கண்ட பின்னும்
புன்முறுவல் செய்திடுவாள் பக்கம் வாராள்.
போய்மறைவாள் அந்தரத்தில் புலன்க வர்ந்தே.

விந்தைபல செய்திடுவாள் வானில் நின்று
வியப்பூட்டும் சித்திரங்கள் வரைந்த ளிப்பாள்.
அந்தியிலே அவள்புரியும் ஜாலந் தன்னை
அறிந்துரைக்க எவராலும் ஆகு மோதான்?

நீலநிற வானத்தில் நெருப்பைக் கக்கி
நின்றபொருள் அத்தனையும் பொன்னாய்ச் செய்வாள்.
மாலையிலே கள்ளியவள் வனப்பில் யானும்
மதிமயங்கிக் கள்ளுண்டோன் போல நிற்பேன்.

கங்குலெனும் துகிலதனைப் புனைந்து கொண்டு
கதிரொளியைத் தின்றிருளாம் வடிவம் தாங்கித்
திங்களெனும் கிண்ணத்தில் மதுவை ஏந்திச்
சேர்ந்திடுவாள் என்னுளத்தில் களிப்புப் பொங்க.

மீன்போன்ற விழிநோக்கால் மையல் ஊட்டி
மனவெளியில் நடஞ்செய்து மறைந்து செல்வாள்.
தேன்போன்ற கவிதையொன்று சொல்லிச் செல்வாள்.
தெவிட்டாத இன்னமுதம் அதுவே யன்றோ!

—ரா. பு. தங்கராஜன்
ஜூன், 1946

# வறுமைப் புலி

டாக்டர் உ. வே. சாமிநாதையர்

மதுரைப் பக்கத்திலுள்ள ஒரு சிற்றூரில் சங்கர சிந்தாமணிப் புலவரென்ற ஒரு கவிஞர் இருந்தார். எளிய நடையிற் செம்பாகமான கவிகளை இயற்றுவதில் அவர் வல்லவர். அவருடைய உள்ளம் கல்வியறிவினால் உவப்புற்று நிறைவடைந்ததெனினும் அவர் இல்லம் வறுமைக்கு இருப்பிடமாக இருந்தது. தம் தாய் தந்தையர், மனைவி மக்கள், உற்றார் உறவினர் முதலியவர்கள் வறுமையால் மிக்க தளர்ச்சியை அடைந்து துன்பப்படுவதை அறிந்து அந்நிலையை அவர் மாற்ற நினைத்தார்.

ஆனாலும், பிறரிடத்துத் தம் வறிய நிலையை எடுத்துக் கூறி உதவி பெறுவதற்கு அவர் மனம் துணியவில்லை. அவருடைய நிலையைக் குறிப்பினாலறிந்து உதவி புரியும் பிரபுக்களும் அவ்வூரிலும் அயலிடங்களிலும் அக்காலத்தில் இல்லை.

எவ்வாறேனும் பசிப்பிணியைப் போக்கிக் கொள்ளத்தானே வேண்டும்? பிறர்பாற் சென்று கேட்பதற்கு அவர் நாணம் கொண்டாரெனினும், உறவினர் படும் பசித்துன்பத்தினைப் பார்க்கையில் உண்டான இரக்கம் அந்நாணவுணர்ச்சியை வென்றது. பிறருடைய நலத்தின் பொருட்டு எத்தகைய முயற்சியையும் செய்யும் நினைவு அவருக்கு உண்டு. அருமையறியாதவர்களிடம் சென்று துன்புறுதலை அவர் விரும்பவில்லை. எனவே தமிழ்ப் புலவர்களை உள்ளுவப்போடு பாராட்டி ஆதரிக்கும் உபகாரி யாரென்று விசாரித்து வந்தார்.

போடிநாயக்கனூரில் அக்காலத்தில் இருந்த ஜமீன்தார் தமிழ்ப் பயிற்சியும், தமிழ்ப் புலவர்களை எப்பொழுதும் உடன் இருக்கச் செய்து அவர்களுடன் சல்லாபம் செய்யும் தன்மையும் உடையவரென்று அவர் கேள்வியுற்றார். அன்றியும் புலவர்களை உயிர் நண்பர்களாகக் கருதி அளவளாவும் இயல்பு அந்த ஜமீன்தார்பால் மிக்கிருந்ததென்றும் அறிந்தார். அவர்பாற் சென்று தம் வறுமைப் பிணியைப் போக்கிக்கொள்ளலாமென்னும் எண்ணம் புலவருக்கு உண்டாகவே ஒரு நாள் புறப்பட்டு அவர் போடிநாயக்கனூர் சென்றார்.

அவர் சென்ற அக்காலத்தில் ஜமீன்தார் ஒரு பிரார்த்தனையை நிறைவேற்றுவதற்காகப் பழனிக்குத் தம் பரிவாரங்களுடன் சென்றிருந்தார். புலவர் தாம் பேரார்வத்தோடு ஜமீன்தாரைப் பார்க்க வந்தும் உடனே காணக்கிடையாமைக்கு வருந்தினார். ஜமீன்தாருடைய உயர் குணங்களைப் பின்னும் பல பேர் வாயிலாக அங்கே கேட்டு

இன்புற்றூர். அவ்வாறு கேட்கக் கேட்க அப்பிரபுவை விரைவிற் பார்க்க வேண்டும் என்ற எண்ணம் அவருக்கு மிக்கது. ஜமீன்தார் பழனியி லிருந்து திரும்பிவரும் காலமாக இருந்தமையின் எதிர்சென்று காண லாம் என்று நினைத்தார். அவ்வாறே சென்று, ஜமீன்தார் பரிவா ரங்களுடன் திரும்புங்காலத்தில் இடைவழியில் சந்தித்தார்.

புலவர்களோடு நட்புமுறையிற் பழகிவருபவரென்று ஜமீன்தா ரைப்பற்றிக் கேள்வியுற்றிருந்தாராதலின், தம்முடைய வறுமை நிலை யைச் சாதுரியமாகத் தெரிவிக்க வேண்டுமென்று நினைத்து, ஜமீன் தார்முன் ஓடிச் சென்று, ''கூ, கூ, புலி துரத்தி வருகிறது!'' என்று கூவினர். அவருடைய சொல்லைக் கண்டு திடுக்கிட்ட ஜமீன்தார், ''என்னையா பயமுறுத்துகிறீர்? நீர் யார்? புலி எங்கே இருக்கிறது?'' என்று கேட்டார். புலவர், ''ஐயோ! பாழும் புலி துரத்துகின்றது. அதைக் கொன்று என்னைக் காப்பாற்றவேண்டும்!'' என்று மீண்டும் ஓலமிட்டு விட்டு,

'பையா டாவணி சொக்கேசர் கூடற் பதியைவிட்டு
வையா புரிக்கு வரும்வழி யேவழி தான்மறித்து
மெய்யா வறுமைப் புலிதான் மிகவும் வெருட்டுகின்ற
தையாதென் போடை யதிபா புலவர்க் கருணிதியே!''

என்ற பாடலைக் கூறினர். ஜமீன்தார் தமது சாதுர்யத்துக்குத் தக்க பரிசும் உபசாரமும் அளிப்பாரென்று புலவர் நம்பினர்.

ஜமீன்தார் ஒரு கணப்பொழுது பேசாமல் இருந்தார்; பின்பு அருகில் இருந்த ஒரு வேலையாளை அழைத்து அதிகாரத் தொனியில், ''இந்த மனுஷரை அழைத்துச் சென்று பந்தோபஸ்தில் வைத்திருந்து நாம் ஊர் வந்து சொல்லியனுப்பும்போது நம்மிடம் அழைத்துவா!'' என்று கட்டளையிட்டார். புலவர் அவ்வாறே அழைத்துச் செல்லப் பட்டார். அவருடைய் மனநிலை அப்பொழுது எவ்வாறிருக்கும்!

''ஐயோ! வஞ்சகர்கள் இந்த ஜமீன்தாரைப்பற்றி இல்லாத குணங்களையெல்லாம் ஏற்றிக் கூறி நம்மை ஏமாற்றிவிட்டார்களே! இவர் நமது செய்யுளைக் கேட்டுச் சந்தோஷிக்கக் கூடுமென்றல்லவோ சொன்னோம். கிணறு வெட்டப் பூதம் புறப்பட்டது போலவன்றோ ஆயிற்று! இவர் சிறந்த அறிவாளியென்றும் குறிப்பறிந்து கொடுப் பவரென்றும் நம்மிடத்திற் சிலர் சொன்னர்களே. அந்த இயல்பு இவரிடத்திற் சிறிதும் காணப்படவில்லையே. நம்முடைய செய்யுளைக் கவனிக்கவில்லையே. முகமலர்ச்சியையும் காணோம்; இன்சொல்லையும் காணோம். நம்மை என்ன செய்ய நினைத்திருக்கிருரோ தெரியவில்லை. முன்பின் தெரியாமல் இவரிடம் வந்து அகப்பட்டுக் கொண்டோமே. நம்முடைய வறுமைக்குப் பயந்து இவரிடம் வந்தது தேளுக்குப் பயந்து பாம்பின் வளையிற் கையிட்டதுபோலாயிற்றே. நமக்கு ஏதா வது ஆபத்து நேர்ந்தால் நம் தாய்தந்தையர் முதலியவர்கள் என்ன செயவார்களோ தெரியவில்லை. கடவுளுடைய சித்தம் எப்படியோ?'' என்று நினைந்து நினைந்து ஏங்கினர்.

அவரை அழைத்துச் சென்றவர் அவரைத் தனியாக ஓரிடத் தில் இருக்கச் செய்து சரியான வேளைகளில் உணவு அளித்துவந்தார். ஒருவரும் அவரோடு பேசவில்லை. அவர் தூக்குத் தண்டனையை எதிர் பார்த்து நிற்கும் குற்றவாளியைப் போல் உயிர் உடம்பு உள்ளம் எல்லாம் நடுங்கிக்கொண் டிருந்தார்.

ஜமீன்தார் தம் அரண்மனை வந்து சேர்ந்தார். கவனிக்க வேண்டிய காரியங்களைக் கவனித்துவிட்டு ஆஸ்தான மண்டபத்தில் வந்து அமர்ந்தார். பின்பு புலவரை அழைத்துவர உத்தரவிட்டார்.

சிறிது நேரத்தில் வாடிய முகமும் நடுங்கிய உடம்பும் கந்தைத் துணியும் கொண்ட வறுமைத் திருக்கோலத்தோடு புலவர் ஜமீன்தார் முன்னே நிறுத்தப்பட்டார். அவர் தம் கண்களால் ஒருமுறை அந்த ஆஸ்தான மண்டபத்தினைப் பார்த்தார். ஜமீன்தாரின் இருபக்கத்திலும் கத்தி, தடி, துப்பாக்கி முதலிய ஆயுதங்களையுடைய சேவகர்கள் வரிசையாக நின்றுகொண்டிருந்தனர். யாவரும் கைகளைக் கட்டிக்கொண்டு நின்றனர். ஜமீன்தாரோ மீசையை முறுக்கிக்கொண்டிருந்தார். அவருடைய முகத்தில் கோபக்குறிப்புத் தாண்டவமாடியது. இவற்றை யெல்லாம் பார்த்த புலவருக்குச் சிறிதளவு இருந்த தைரியமும் போய்விட்டது. உடம்பெல்லாம் அச்சத்தால் வேர்த்துவிட்டது.

ஜமீன்தார் ஒரு கனைப்புக் கனைத்தார். அருகிலிருந்த உத்தியோகஸ்தரைப் பார்த்து, ''நாம் பழனிக்குப் போய்விட்டு வருகையில் நமக்கும் பிறருக்கும் பயமுண்டாகும்படி வழிமறித்துக் கூ கூவென்று சத்தம் போட்ட மனுஷர் இவரல்லவா?'' என்றார். அவர், ''ஆம்'' என்றார். ''ஓய்! நீர் அப்படிச் செய்யலாமா?'' என்று புலவரை நோக்கி ஜமீன்தார் கேட்கவே புலவருக்கு நா எழவில்லை. தம்முடைய கருத்தைச் சொல்ல ஆரம்பிக்கையில் வார்த்தைகள் குழறி வந்தன.

கடைசியில் ஒருவாறு துணிந்து குழறிக்கொண்டே, ''நீங்கள் வேட்டையாடித் துஷ்ட மிருகங்களைக் கொன்று ஜனங்களைக் காப்பாற்றும் மகாவீரராதலினால் இந்தப் புலியையும் கொல்லவேண்டுமென்று விண்ணப்பித்துக் கொண்டேன். வறுமையைப் புலியாக உருவகப்படுத்தி, தமிழருமையறிந்த துரையவர்கள் சந்தோஷிக்கச் சமற்காரமாகச் சொன்னேனே யொழிய யாவருக்கும் அச்சமுண்டாக வேண்டுமென்பது என் கருத்தன்று. இவ்வாறு உருவகம் செய்து கூறுதல் முன்னோருடைய வழக்கம். அப்படி ஏதாவது நான் செய்தது பிழையாகத் தோற்றினால் அதனைப் பொறுத்தருள வேண்டும்'' என்றார்.

ஜமீன்தார், ''செய்ததைச் செய்துவிட்டுப் பொறுத்தருள வேண்டுமென்றால் முடியுமா? திடீரென்று புலி துரத்துகின்றதென்றால் எல்லோரும் என்ன நினைப்பார்கள்? உமக்குச் சிறிதேனும் சமய சந்தர்ப்பம் தெரியவில்லையே. நமது சமூகத்தில் இன்னபடி பேச வேண்டுமென்பது தெரியாதா?'' என்று கடுமையான குரலில் கூறிவிட்டு அருகில் நின்ற ஒருவரிடம், ''இந்த மனுஷருடைய மேல் துணியைப் பிடுங்கி என் எதிரே வை!'' என்றார். பல தையல்களோடும் முடிப்புக்களோடும் அழுக்கோடும் புலவருடைய வறுமை நிலையைப் புலப்படுத்திக்கொண்டிருந்த அந்தத் துணியை வாங்கிச் சுருட்டி எதிரே இருந்த ஒரு மேஜையின்மேல் வைத்தார் அவர். ஜமீன்தார் மருந்திட்டு வைத்திருந்த துப்பாக்கி யொன்றைக் கையிலெடுத்துக் கொண்டார். ''அந்த மனுஷரை இப்படி நேரே கொண்டு வந்து நிறுத்துங்கள்!'' என்றார். புலவர் தமக்கு இனி ஆயுள் முடிந்துவிட்டதென்றே நிச்சயித்துக்கொண்டார். பெற்றோர்களையும் இளைய மனைவி மக்களையும் பிற உறவினர்களையும் நினைத்துக் கண்ணீர் வடித்தார்.

துப்பாக்கியுடன் இருந்த ஜமீன்தார், ''ஓய்! உம்மைப் புலியா துரத்துகிறது? அந்தப் புலியை இதோ சுட்டுக் கொன்றுவிடுகிறேன், பாரும்!'' என்று சொல்லிக்கொண்டே, தம் எதிரில் இருந்த கந்தைத் துணியை நோக்கிச் சுட்டார். படீரென்று சத்தம் கேட்டது; அந்தக் கந்தைத் துணியில் குண்டு பாய்ந்து அதனை எரித்துவிட்டது. உடனே புலவர் ஒன்றும் தோற்றாமல் சிறிது நேரம் மயக்கத்தில் ஆழ்ந்தார்.

ஜமீன்தார் புலவர் அருகிற் சென்று அவர் முதுகைத் தட்டிக் கொடுத்து, ''இதோ உம்மைத் துரத்திய புலி இறந்துவிட்டது. இனி

அந்தப் புலி உம்மைத் துன்புறுத்தாது'' என்று சொல்லி, ஓர் ஆசனத்தில் இருக்கச் செய்து நல்ல ஆடைகளை வருவித்து அணிந்துகொள்ளச் செய்தார். பின்பு அவருடைய உள்ளம் பூரிக்கும்படி உயர்ந்த உபசாரங்களையெல்லாம் செய்தார்.

வறுமைப் புலியின் அச்சம் நீங்கிய புலவர் சிலகாலம் அங்கேயிருந்து புதிய புதிய செய்யுட்களைப் பாடி ஜமீன்தாரை உவப்பித்தும் பலவகை உபசாரங்களைப் பெற்று உவந்தும் வந்தார். பின்னர்த் தம் ஊரிலுள்ள உறவினர்கள் தம் நிலையையறியாமல் வருந்துவார்களென்பதைக் கூறி ஜமீன்தாரிடம் விடைபெற்றுப் பல மாதங்களுக்கு வேண்டிய உணவுப் பொருள்களும் தக்க ஸம்மானங்களும் வழங்கப் பெற்றுத் தம்மூர் வந்து சேர்ந்து கவலையின்றி வாழ்ந்து வருவாராயினர். அக்காலத்துக்குப் பின்பும் அடிக்கடி ஜமீன்தாரிடம் சென்று அளவளாவி இருந்து விட்டு வருதல் அவரது வழக்கமாக இருந்தது.

இந்தச் சரிதத்தையும் பாடலையும் சொன்னவர் ஏறக்குறைய நாற்பது வருடங்களுக்குமுன் ஊற்றுமலை ஜமீன்தாராக விளங்கிய ஹிருதயாலய மருதப்பதேவருடைய ஆஸ்தான வித்வான் நால்வருள் ஒருவராகிய புளியங்குடி முத்துப் புலவர் என்பவர்.

—ஜூலை, 1932

# காஞ்சி

'காஞ்சி' என்று சொல்லுக்கு நிலையாமை என்று பொருள். இத்தகைய ஓசையுடைய சொல் நிலையாமையை உணர்த்துகிறது என எந்த மொழியிலும் கேட்டதில்லை. 'காஞ்சி' என்ற சொல் ஒன்றுமே தமிழர் பெருமையை உணர்த்துவதாகும். ஒரு புலவர் பாண்டியனிடம் சென்று 'நினது பொருள்கள்-யாக்கை இன்பம், புகழ் முதலியன யாவும் நிலையற்றன' என்பதாகக் கூறும் பாடலுக்கு 'மதுரைக் காஞ்சி' என்று பெயர் கொடுத்திருக்கிறார். இப்பாடலில் நிலையாமையின் நுட்பமனைத்தும், தன்மையும், விளைவுகளும் மிக அழகாகக் கூறப்பட்டிருக்கின்றன. நிலையற்றவைகளில் துக்கமென்பதும் ஒன்று எனத் தெரிந்து கூறிய புலவர்கள் ஒரு சிலரே.

நிலையாமையின் தன்மையைச் செந்நாப்புலவர் ஒருவர் மிக அழகாகக் கூறி யிருக்கிறார்:

'உலகின் கண்ணுள்ள எல்லா ஊர்களும் எமது ஊரே; உலக மாந்தர்கள் யாவரும் எமது சுற்றத்தார்கள். தீமையும், நன்மையும் பிறரால் நமக்கு அளிக்கப்படுவன வல்ல. நோய் வருதலும், நோய் தீர்தலும் எம்மையே பொறுத்தனவாகும். இறப்பு என்பதில் புதுமை என்ன இருக்கின்றது? வாழ்வது மிக இனிமையானது என்று ஒரு நாளும் மகிழ்ந்ததில்லை. இறுதிக்காலத்தில் துன்பம் வருமென்பதையும் யாம் நம்பமாட்டோம்.' இப்புலவர் பெருந்தகையின் உள்ளக் கருத்தைச் சிறிது ஓர்மின். ''யாதும் ஊரே, யாவரும் கேளிர்'' என்று கூறுவதன் மூலம் இப்புலவரின் விசால நோக்கும், இப்புலவர் கூற வந்த நிலையாமையின் தன்மையும் எவ்வளவு அழகாக விளங்குகின்றன! தனக்கு வரும் பெருமை, இன்பம், துன்பம் யாவும் தன்னாலே ஏற்படுகின்றன என்பதைப் புலவர் எத்துணை அழகுடன் இயம்புகிறார்!

ரா. இராகவையங்கார்

# வேதாந்தமும் உன்மத்தமும்

சக்கரவர்த்தி இராஜகோபாலாசாரியார்

குற்றாலத்தில் ஒரு சந்நியாசியைக் கண்டோம். மலையாளத்தவர்; ஆனால் தமிழ் படித்தவர். திண்ணையில் வந்துட்கார்ந்து கொஞ்ச நேரம் மௌனமாக இருந்தார். பிறகு பேச ஆரம்பித்தார்: 'நான் யார்?' 'உலகமென்பதென்ன? சக்தி, சிவம், ஜடம், ஸத், அஸத், மனஸ், புத்தி' முதலிய விஷயங்களைப்பற்றிச் சரமாரியாக ஸம்ஸ்க்ருத மேற்கோள்களையும் தமிழ்ப் பாடல்களையும் பொழிந்தார். மிக நல்ல பாஷை; ஆனால் அர்த்தமில்லை, கோவையில்லை. இவ்வாறு கொஞ்ச நேரம் பிரசங்கம் செய்த பிறகு தம் மனத்தில் உற்பவமாகும் எண்ணங்களோடு பேச ஆரம்பித்தார்! அவை ஒவ்வொன்றும் அவருக்கு ஒரு தனி மனிதனாகத் தோன்றிற்று! அவர் முழுப் பைத்தியம் என்பது வியக்தமாயிற்று. முகத்தில் அதிக வித்தியாசம் ஏற்படவில்லை. உடுப்புகள் மிகவும் சுத்தமாகவிருந்தன. புதுப் பைத்தியம் என்று நிச்சயித்தோம். வருந்தினோம் என்று சொல்ல வேண்டியதில்லை. அவரை மெள்ள அனுப்பிவிட்டு, அதைப்பற்றிச் சிறிது நேரம் பேச்சு நடத்தினோம்.

சரியான பக்குவம் அடையாதவர்கள் வேதாந்த ஆராய்ச்சி செய்யக்கூடாது என்று தீர்மானித்தோம். நல்ல மூளையைப் படைத்து அதைப் பயிற்சி செய்து, வாழ்க்கையில் ஒழுக்கமும் நியமமும் அமைதியும் அடைந்து பக்குவப்பட்டவர்கள்தான் பகவத்கிருபை இருப்பின் சரியான குரு சிக்ஷைக்கடங்கி, வேதாந்தம் படிக்கலாம். அவ்வாறல்லாமல் தகாதவர்கள் மூர்க்கமாகத் தாமாகவே இச்சோதனைகளில் புகுந்தால் மூளைக் கோளாறுதான் உண்டாகும்.

உடல், மூளை இரண்டும் சூக்ஷ்மமான யந்திரங்கள். இரண்டும் தம் வேலையைத் தாம் செய்துகொண்டே போகும். அவற்றைப் பற்றி நாம் கவலை செலுத்தாமலிருப்பதே க்ஷேமம். வெகுநாளைக்கு முன் எனக்கு ஒரு மோட்டார் கார் விற்றபோது, அந்தக் கம்பெனித் தலைவர் சொன்னது ஞாபகம் வருகிறது: "உங்கள் மோட்டார் ஓட்டுகிறவன் ரிப்பேர் செய்யத் தெரியாதவனாக விருக்கட்டும்; அப்போதுதான் எஞ்சினுக்குள் கை வைக்காமலிருப்பான்; தானாகச் சரியாகப் போகும்; கார் கெடாது" என்றார். உடலிலுள்ள அவயவங்களைப் பற்றியும் இயற்கை உணர்ச்சிகளைப் பற்றியும் கொஞ்சம் தெரிந்து வைத்துக்கொண்டு, தம்மைத் தாமே ஆராய்ச்சி செய்து, இரண்டையும் கெடுத்துக்கொள்வது இக்காலத்தில் அநேகர் வழக்கமாகிவிட்டது. ஏற்கனவே வேலையில்லாத் திண்டாட்டம், படிக்காதவர்களுக்கு உணவுக்

குறை நோய்களையும் படித்தவர்களுக்கு மூளைக்கோளாறுகளையும் உண்டாக்கி வருகிறது. இதன் மத்தியில் வேதாந்த ஆராய்ச்சியும் உடலமைப்பு ஆராய்ச்சியும் கூடச் சேர்ந்தால் கேட்பானேன்?

"என் 'ஹார்ட்டு' (heart) சரியாயில்லைபோல் தோன்றுகிறது. கொஞ்சம் நடந்தால், 'டக்', 'டக்', என்று அடித்துக் கொள்ளுகிறது. "எல்லாருக்கும் அப்படியுண்டு" என்றால், "இல்லை, இல்லை, உமக்குத் தெரியாது; அளவுக்கு மிஞ்சி அடிக்கிறது" என்பான். படித்தவர்களுள் அநேகர், "ஏனோ என் லிவர் (liver) டல்லாக (dull) விருக்கிறது", "என் ஸ்ப்லீன் (spleen)" சரியாக வேலை செய்கிறதோ இல்லையோ சந்தேகமாகவிருக்கிறது", சாப்பிட்டவுடன் ஏதோ மாதிரியிருக்கிறது, ஒருவேளை அபெண்டிக்ஸ் (appendix) வீங்கியிருக்கலாம்", "நேற்று இடது பக்கமே இரவு முழுதும் தூங்கிவிட்டேன்; ஆதலால் இன்று ஏதோ சரியாக இல்லை" என்றிவ்வாறெல்லாம் உடலைப்பற்றிக் கவலைப்பட்டுக் கொண்டு ஆரோக்கியத்தைக் கெடுத்துக்கொள்வதைப் பார்க்கிறோம். வைத்தியர்களுக்கும் மீறிய நோய்கள் வரவரப் பெருகிக் கொண்டு வருகின்றன.

உடலமைப்பைவிட மனத்தின் அமைப்பு மிகவும் சூட்சுமமானது. ஓரளவுக்குமேல் அதன் ரகசியங்கள் பெரிய அறிவாளிகளின் சோதனைக்குங்கூட அடங்குவதில்லை. சோதனை செய்யப்படும் பொருளும் சோதனைக் கருவியும் சோதனை செய்பவனும் மூன்றும் ஒன்றேயாகின்றபடியால் சோதனைக்குப் பல தடைகள் ஏற்படுகின்றன. ஆராய்ச்சி முடிவதற்குமுன் எல்லாருடைய ஆராய்ச்சியின் பயனைக் கருவியே கெட்டுப் போகிறது. அப்போது சோதனை செய்யப்படும் தகுதியிழந்து விடுகிறார். சோதனை பயனற்றதாய்விடுகிறது.

மனத்தில் உலகம் தன் பிம்பத்தைப் போடுகிறதா அல்லது உலகமே மனத்தின் பிம்பமா என்பதைச் சொல்லமுடியாது. ஆராய்ந்தால் பொருள்களைப்பற்றி மனத்திலுண்டாகும் உணர்ச்சிகளைத் தவிர வெளிப் பதார்த்தங்கள் உண்டென்று கொள்ள வேறு ஆதாரம் கிடையாது. வெளி யுலகம் இருப்பதற்கு மனத்திலுண்டாகும் உணர்ச்சிகளைத் தவிர வேறு சாக்ஷியமில்லை. கண்ணாடியில் காணப்படும் பிம்பம் எவ்வாறு உண்மை வியக்தியில்லையோ, அவ்வாறே உலகம் முழுவதும் வெறும் தோற்றமாக விருக்கலாம். அவ்வாறாயின் மனஸ் ஒன்றே தனிப்பட்ட உண்மையாக நிற்கிறது.

இந்த மனஸ் என்பதுதான் என்ன? ஒவ்வொரு விநாடியிலும் மனத்தில் தோன்றும் உணர்ச்சிகளும் எண்ணங்களும் மாறிமாறி நிற்கின்றன. ஒரு சந்தைக் கூட்டத்தில் பலர் வருகிறார்கள், பலர் போகிறார்கள்; நிற்பதுபோலத் தோன்றும் கூட்டத்திற்குச் சந்தை என்று பெயர். ஆனால் அந்தச் சந்தை என்பது ஒரு நிலையுள்ள கூட்டமல்ல. அவ்வாறேதான் "மனஸ்" என்பதும். வந்துபோகும் பல உணர்ச்சிகள் சேர்ந்து ஓர் அமைப்பாகத் தோன்றுகின்றன. நினைவு என்ற ஸினிமாத் திரையின்மேல் விழும் படங்களையே 'நான்' என்று பெயரிட்டுக் கொண்டு அதைப்பற்றி அலைந்து கவலைப்பட்டு வாழ்கிறோம். உண்மையில் "நான்", என்பது ஒரு சந்தைக்கூட்டம். இப்போதிருந்தவாறு மறு விநாடியிலில்லை. நேற்றிருந்தவை இன்றைக்கில்லை. "நான்", "நீ", வந்தேன்", "இருக்கிறேன்", "போனேன்" —இவை உண்மையில் நிச்சயப் பொருள்களோ, செயல்களோ அல்ல; வெறும் கற்பனை.

மேற்கண்டவாறு அடிப்படையான விஷயங்களை யெடுத்து ஆராய்ச்சி செய்தால் நம்முடைய வாழ்க்கைக்கு அஸ்திவாரமாக நிற்கும் உண்மைகள் வெறும் தோற்றமாகவும் கற்பனைகளாகவும் முடியும். உண்மைகளை ஆராய்வது அறிவுடையோர் காரியம் என்பதில்

ஐயமில்லை. மனஸ் உண்மையா, உலகத் தோற்றம் உண்மையா, இரண்டும் பொய்யா? 'நான்', 'நீ', என்றால் என்ன? இவைகளெல்லாம் சோதித்து ஆழமறிய வேண்டிய விஷயங்களே. ஆயினும் இத்தகைய ஆராய்ச்சி மூளைப் பலமில்லாதவர்களைப் பைத்தியக்காரர்களாக்கிவிடுகிறது.

கடிகாரத்தை வைத்துக்கொண்டு மணி தெரிந்து கொள்ள வேண்டியதற்குப் பதிலாக நாம் கடிகாரத்தைப் பிரித்துப் பிரித்து ஆராய்ச்சி செய்தால், கடிகாரம் கெட்டுப் போய், அதை இழக்கத் தயாராயிருக்க வேண்டும். ''நான்'' என்பதை மூளையிலிருந்து வெளியில் எடுத்து மேஜைமேல் வைத்துப் பிரித்து வேடிக்கையாகச் சோதிக்க ஆரம்பித்தால், மறுபடி அதைக் கூட்டி, மூளைக்குள் வைக்க முடியாமலே போகும்.

'நான்' என்பது சாதாரண வாழ்க்கைக்குப் பிரயாணச் சீட்டு ஆகும். டிக்கெட்டைக் கெட்டுப்போக்கி விட்டால் ரெயிலில் போக முடியாது. அதைப்பற்றி வேடிக்கையும் விளையாட்டும் செய்வது அபாயம். நான் காலேஜில் இருக்கையில் ஒரு நண்பர் சொன்ன கதை நினைவுக்கு வருகிறது.

டாக்டர் ஸேதுராமையருக்கு 'பிராக்டிஸ்' அதிகமில்லை; ஆனால் ஹாஸ்யப் பிரியர். இவர் ஒரு நாள் ரெயிலில் போய்க்கொண்டிருந்தார். கையிலிருந்த சிறு தோல்பையைத் தவிர வேறு மூட்டையில்லை. தம்மை யாரும் அறியாத ஒரு ஜங்ஷன் ஸ்டேஷனில் இறங்கி உலாத்திக்கொண்டிருந்தார். டிக்கெட்டுச் சோதனை உத்தியோகஸ்தர் ஒருவர் வந்து டிக்கெட்டு கேட்டார். ஒரு சின்ன ஹாஸ்யத்திற்கு நல்ல சமயம் வந்ததென்று ஸேதுராமையர் தீர்மானித்தார். தம் சொக்காய் ஜேப்புக்குள் கைபோட்டுத் தேடிப் பார்ப்பதுபோல் துழாவி டிக்கெட்டைக் காணாதபடியால் கவலைப்படுவதுபோல் முகபாவனை காட்டினார். கொஞ்சநேரம் பொறுத்து ரெயில் உத்தியோகஸ்தர் மறுபடி ''டிக்கெட்டு எடும்'' என்றார். திருட்டுப் பாவனை காட்டி ஸேதுராமையர் மெதுவாக நகர்ந்தார். உத்தியோகஸ்தர் பின் தொடர்ந்தார். ஸேதுராமையர் ஓடினார். டிக்கெட்டில்லாமல் பிரயாணம் செய்து தப்பியோடப் பார்க்கிறான் என்று எண்ணி ரெயில் உத்தியோகஸ்தர், ''பிடி பிடி'' என்று கூப்பிட்டுக்கொண்டு தொடர்ந்து ஓடினார். ஸேதுராமையர் வேகமாக ஓட உத்தியோகஸ்தரும் வேகமாக ஓடி மூச்சு வாங்க, பிறகு கொஞ்சநேரம் கழித்து வேடிக்கை போதும் என்று ஸேதுராமையர் நின்றார். உத்தியோகஸ்தர், ''திருடா!'' என்று கெட்டிப் பிடியாகப் பிடித்துக்கொண்டார்.

''என்ன வேண்டும்?'' என்றார் டாக்டர் ஸேதுராமையர்.

''என்ன வேண்டுமா?'' எடு டிக்கெட்டு! போலீஸ்!'' என்று உத்தியோகஸ்தர் சத்தம் போட்டார்.

''டிக்கெட்டுத் தானே? இதற்கென்ன?'' என்றார். டிக்கெட்டை எடுத்துக் காட்டிச் சிரிக்கலாம் என்றெண்ணி மெதுவாக ஷர்ட்டு ஜேப்பில் கைபோட்டு டிக்கெட்டை எடுக்கப் போனார்.

உண்மையில் டிக்கெட்டு இல்லை! எங்கேயோ நழுவிப் போயிருந்தது. பார்க்கவேண்டும் அப்பொழுது ஸேதுராமையர் முகத்தை! முன் பாவனை காட்டிய கவலை வேறு, இப்போது உண்டான உண்மைக் குழப்பம் வேறு. இவர் ஓடிப் பிடிபட்டதும், டிக்கெட்டு இல்லாததும், எல்லாமாகச் சேர்ந்து உண்மையில் திருடனாகவே ஆனார்.

''எங்கேயோ விழுந்துவிட்டது போலிருக்கிறது'' என்றார்.

யாரும் நம்பவில்லை. "ஏன் ஓடினாய்?" என்றார்கள். "வேடிக்கை செய்யப் பார்த்தேன்" என்றார். "திருடன்" என்று சொல்லி நகைத்தார்கள்.

இரட்டிப்புப் பணம் கொடுத்துவிட்டுப் போலீஸாரிடம் ஒப்பு விக்கப்படாமல் தப்பியதே பெரிய பிரயத்தனமாய் முடிந்தது.

வாழ்க்கை என்பது ரெயில் தொடர்வண்டி. அதில் பிரயாணம் செய்வதற்கு அகங்கார உணர்ச்சியே டிக்கெட்டு. டிக்கெட்டை இழப்பது என்றால் "நான்" என்ற அகங்கார உணர்ச்சி சிதறிப் போவதுதான். 'அகங்காரம்', 'மமகாரம்' என்பவை அதிகப்படியாகப் போனால் துர்க்குணங்களாகும். ஆனால் 'நான்' என்ற அகங்கார உள்ளுணர்ச்சியானது வாழ்க்கைக்கு இன்றியமையாத அஸ்திவாரம். பிரித்துச் சோதித்தால் வெறும் ஆகாசமாய் முடியவேண்டிய இந்த உணர்ச்சி, மகா சக்திகொண்ட பெரும் ரகஸியமான பிருகிருதி அமைப்பு. இது வின்றி ஜீவனில்லை, மதியில்லை, தொழிலில்லை.

மனிதனுடைய சகல மனோவேகங்களும் 'நான்' என்ற அந்த மூல உணர்ச்சியைத் தெற்றித் தொங்குகின்றன. சகல எண்ணங்களும், ஆசைகளும், சங்கற்பங்களும், காரியங்களும் அதிலிருந்துதான் உற்பவமாய், வேரினின்று கிளையும் இலையும் ரஸங்கொண்டு தழைப்பது போல், விஸ்தாரமடைகின்றன. அந்த அடிப்படையான உணர்ச்சி எக்காரணத்தினாலாவது சிதறிப் போனால், உடலும் சேதனமும் சேர்ந்து உண்டாகும் நிலை சிதறிப் போகும். உடல் மட்டும் நின்று, அதற்கு இன்றியமையாத காப்பாகிய அகங்கார உணர்ச்சி கலைந்துபோய் விட்டால், மனிதன் 'உடல் உன்மத்த' நிலை அடைகிறான்.

வேதாந்த மார்க்கத்தில் 'நான்' என்பது முறையாகக் கரைந்தால் மோக்ஷம். அதற்குப் பக்குவமும், ஒழுக்கமும், சாதனமும் நல்ல குருவும் வேண்டும். அவ்வாறில்லாமல் வெறும் கெட்டிக்காரத் தனமும் பாண்டித்யமும் காட்டிக் கொள்வது மீமாம்ஸா மகிழ்ச்சியைத் தனக்குள் அநுபவிப்பது. மனோதத்துவங்களை ஆராய்ச்சி செய்து, தம் உள்ளத்தில் இயற்கையாகத் தோன்றும் உணர்ச்சிகளைப் பலாத்காரமாகக் குழப்பத்திலிட்டுப் பரீக்ஷை செய்வது, டிக்கெட்டு இல்லையென்று டாக்டர் ஸேதுராமையர் வேடிக்கை வேஷம் போட்டது போலாகும்.

இக்காலத்தில் ஏற்பட்ட வேலையில்லாத் திண்டாட்டத்தின் மத்தியில் அத்துவைத வேதாந்த சூக்ஷ்ம ஆராய்ச்சிகளில் புகுந்தால், பக்குவமும் உறுதியுமில்லாத சில மூளைகள் பெரும் குழப்பமடைந்து ஆராய்ச்சி வரம்பு தாண்டிப் போய், உண்மையில் இயற்கை அமைப்பை இழந்துவிடும். வேடிக்கையாய் ஆரம்பித்தது உண்மையாகவே முடிந்து, டிக்கெட்டு இல்லாமல் ரெயில் வண்டியில் பிரயாணம் செய்து அகப்பட்டுக்கொண்டு தடுமாறிய ஸேதுராமையர் கதைபோல் முடியும். மருந்தில்லா மூளை வியாதிகள் வந்து சேரும்.

—ஏப்ரல், 1936

# தமிழ்மொழியும் எழுத்தும்

ராவ்சாஹெப் எஸ். வையாபுரிப் பிள்ளை

ஒரு வீடு கட்டவேண்டுமானால் செங்கற்களை அடுக்கி, சுவர்களை முறைப்பட எழுப்பி, அதை இயற்றிவிடுகிறோம். இது போலவே, எழுத்துக்களை அடுக்கிச் சொற்களை முறைப்பட நிறுத்தி வாக்கியங்கள் அமைக்கிறோம். வீட்டிற்குச் செங்கல் எப்படியோ, அப்படியே வாக்கியத்திற்கு எழுத்துக்கள். ஆனால் இரண்டிற்கும் ஒரு வித்தியாசம் உண்டு. சுவர்களை இடித்துச் செங்கற்களை முதல் முதலில் நாம் அமைத்துக் கொள்ளவில்லை. இதற்கு மாறாக, வாக்கியங்களைத் துண்டித்து, சொற்களைத் தனித்தனி கண்டு, பின் ஒலிகளை நிர்ணயித்து, பின் எழுத்துக்களை முதன் முதலில் அமைத்திக்கிறோம். இதுவே வரலாற்று முறை. பகுப்பு நெறி (analysis), தொகுப்பு நெறி (synthesis) என்று நெறிகள் இரண்டு. 'எழுத்துக்களால் ஆகியது சொல்; சொற்களால் ஆகியது வாக்கியம்' என்ற முறையை மாற்றி நீண்ட காலமாக நாம் மனப் பயிற்சிபெற்று வந்திருப்பதால் உண்மை வரலாற்றை உணர்ந்து கொள்வதுகூட நமக்கு அருமையாய்ப் போய்விட்டது.

இதைப் போலவே வேறோர் உண்மையும் நம் மனத்தை விட்டு நழுவிவிட்டது. ஒவ்வோர் எழுத்தும் ஓர் ஒலியின் பிரதிநிதியே என்பது தான் இவ்வுண்மை. இதனை மறந்துவிட்டதனால், பிற மொழிகளைப் போலத் தமிழ் மொழியையும் முற்றும் ஆட்சி கொள்ளும் ஒலியிலக்கணத்தை யுணராது, தமிழின் ஜீவிய சரிதத்தையும், அதன் வளர்ச்சி நெறியையும், அதன் ரூபாந்தரங்களையும், அதன் கிளை மொழிகள் தோன்றிய வரலாற்றையும் தெரிந்துகொள்ளாமல் இன்றும் இருக்கிறோம். ஒலியானது ஆளுக்கு ஆள், இனத்திற்கு இனம், பிரதேசத்திற்குப் பிரதேசம், காலத்திற்குக் காலம் மாறிவருவது. மாறிக்கொண்டே செல்வதுதான் அதன் வாழ்க்கை நெறி. நிரந்தரமாக ஓடிக்கொண்டே இருக்கும் ஜீவநதிக்கு ஒப்பாக அதனைக் கூறலாம். எழுத்து அங்ஙனமன்று. இது ஒலியை நோக்க நிலையாயுள்ளது. இக்காரணத்தால் அக்ஷரம் (அழிவில்லாதது) என்று அதற்குப் பெயர் வந்தது. எளிதில் எடுத்துச் செல்லத் தகுவது. இதனால் கால தேச நியதியின்றிப் பரந்து வழங்கும் தன்மை பெற்றுள்ளது. கண்ணுற் பார்க்கத் தகுவது. இதனாற் பேசுவோனின்றியும் கருத்துக்களை யுணர்த்தும் தன்மையது. நமது அறிவு வளர்வதற்கு இவ்வெழுத்தே காரணமாகயுள்ளது. 'எழுத்தறிவித்தவன் இறைவனாகும்' என்பது மிக ஆழ்ந்ததோர் உண்மை.

தமிழ் மொழியிலுள்ள எழுத்துக்கள், அதிலுள்ள ஒலிகளனைத்தையும் முற்ற உணர்த்துவனவல்ல. மக்களது கண்டத்தினின்றும் தோன்றக்கூடிய தனியொலிகள் கணக்கிட்டு முடியா. வீணை முதலிய வாத்தியங்களில் எதனுலும் அத்தனை ஒலிகளையும் உண்டுபண்ண இயலாது. இத் தனியொலிகளில் சிலவே மொழிக்கு உரியனவாகும். இவ்வொலிகளின் எண் மொழிதோறும் வேறுபடும். அதிகமாகப் போனல் அறுபது தனியொலிகளுக்கு மேல் ஒரு மொழியிலும் இல்லை;

இம் மொழியொலிகளைக் கூடத் தனித்தனி உணர்த்துவதற்கு எழுத்துக்கள் அமைதல் இல்லை. ஆகவே ஒவ்வொரு மொழியிலும் அதிலுள்ள எழுத்துக்களைக் காட்டிலும், அதன் ஒலிகள் மிகுதியாகவே காணப்படும். தமிழ் மொழியிலும் இவ்வாறே. உதாரணமாக, 'ஏன்' என்ற சொல்லை எடுத்துக்கொள்ளுவோம்; இதன் முதலாவதாகிய ஏகார ஒலியை 'man' என்ற ஆங்கிலச் சொல்லிலுள்ள உயிரொலியைப் போன்று நம்மிற் பலரும் உச்சரிக்கிறோம். இவ்வொலியை உணர்த்துவதற்குத் தமிழில் எழுத்தே இல்லை. மகன் என்ற சொல்லை 'மஹன்' என்றே பலரும் சொல்லுகிறார்கள். இடையிலுள்ள மெய்யொலிக்குத் தமிழில் எழுத்தே இல்லை. இங்ஙனம் பல.

இக் குறைபாடுகளை நீக்குவதற்கு மூன்று உபாயங்கள் கையாளப்பட்டன. முதலாவது நெருங்கிய தொடர்புடைய பிற ஒலிகளின் எழுத்துக்களைக் கொண்டு, இடவாற்றலால் சில ஒலிகள் உணர்த்தப்பட்டன. உதாரணமாக, பங்கு, பஞ்சு, பண்டு, பந்து, பண்பு என்பவற்றைக் காட்டலாம். இச் சொற்களிலுள்ள பகரத்தைக் காட்டிலும், இவற்றிலுள்ள கு, சு, டு, து, பு என்பன மெலிந்து உச்சரிக்கப்படுதல் காண்க. தமிழறிஞர் வகுத்துள்ள மெல்லினங்களை நோக்க, இந்தக் கு, சு, டு, து, பு வல்லினமாதல் எளிதில் அறியலாம். இதனுல் 'king' என்ற ஆங்கிலச் சொல்லினும், காவ்யம் என்ற வடசொல்லினும் காணப்படும் ககர ஒலியே முற்காலத்தில் இருந்ததெனல் தவருகும். இரண்டாவது மொழியிலுள்ள சில ஒலிகள், அவற்றிற்கு இனமான தமிழொலிகளாக மாற்றி உணர்த்தப்பட்டன. உதாரணமாக, வேஷம்-வேடம் என்பதைக் காண்க. மூன்ருவதாக, வடமொழி ஒலிகள் அம்மொழிக்கு உரிய எழுத்துக்களையே கையாண்டு உணர்த்தப்பட்டன. உதாரணமாக, 'வேஷம்' என்ற வட சொல்லை 'வேஷம்' என்றே தமிழில் ஷகரமிட்டு எழுதுதல் காணலாம். இம்முறைதான் இப்பொழுது பெருவழக்காக உள்ளது. எனினும் மணிப்பிரவாள நடை தோன்றிய ஒன்பதாம் நூற்றுண்டு முதலே, இம் முறையும் கொள்ளப்பட்டதெனக் கூறலாம். இக்குறைபாடுகளேயன்றி, சில ஒலிகளைக் குறித்தற்கு இரண்டு குறியீடுகள் வழங்கவும் இடம் இருந்தது. உதாரணமாக ஐகாரம், அகரமும் யகரமும் இட்டு எழுதலாம்.

ஒவ்வொரு மொழியைப் பேசிவரும் ஒவ்வோர் இனத்தவரும் தனிப்பட்ட இயல்புகளையுடைய ஒலிக் கணத்தையே வழங்குவர். ஆரிய மக்கள் ஒலிக் கணம் வேறு; தமிழ் மக்கள் ஒலிக் கணம் வேறு; ஜெர்மானியர் ஒலிக் கணம் வேறு; பிரெஞ்சுக்காரர் ஒலிக் கணம் வேறு; ஆங்கில மக்கள் ஒலிக் கணம் வேறு; இக்கணத்தின் இயல்பு சொற்களில் ஒலி தொடர்ந்துவரும் முறையில் நன்கு புலப்படும். ஹார்ஸ் (horse) என்ற ஆங்கிலச் சொல்லின் ஒலிக் கணம் தமிழில் வருதலில்லை. இங்ஙனமே 'குதிரை' என்று பொருள்படும் ப்வெர்ட் (pferd) என்ற ஜெர்மானியச் சொல்லின் ஒலிக் கணம் ஆங்கிலம், பிரெஞ்ச் முதலிய மொழிகளிற்கூட வருதலில்லை. ஒலிக் கணத்தின் இயல்பு இவ்வுதாரணங்களால் தெளிவாய் விளங்கும். தமிழிலுள்ள ஒலிக் கணத்தின் இயல்பு நமது மூதாதையரின் பேச்சு வழக்கத்தைப் (Speech habit) பொறுத்துள்ளது. இங்ஙனமே பிற மொழிகளின் ஒலிக் கணங்களின் இயல்பு,

அவ்வம்மொழிக்கு உரியாரின் பேச்சு வழக்கங்களைப் பொறுத்ததாம். இவ் வழக்கங்களை நுட்பமாய் ஆராய்ந்து, இன்ன இன்ன ஒலிகள் சொற்களைத் தொடங்குவன, இன்ன இன்ன ஒலிகள் இறுதியில் வருவன, இன்ன ஒலிக்குப் பின் இன்ன ஒலிதான் வரும் என்ற நியதியை அறிந்து இலக்கணம் வகுத்த பெருமை முற்காலத்து ஆசிரியர்களுள் தொல்காப்பியனார் ஒருவருக்கே உரியது. மொழி மரபு முதலிய இயல்களில் இவ் விஷயம் கூறப்படுகிறது. இலக்கண உலகில் சக்கரவர்த்தி என்று கூறத் தகும் பாணினியாசிரியர்கூட இங்ஙனம் ஆராய்ந்தாரில்லை.

தமிழெழுத்துக்கள் தாமும் அவை தோன்றிய காலந்தொட்டு ஒரே வடிவில் வழங்கி வந்துள்ளன அல்ல. இக்காலத்துத் தானும் ஈகாரத்தை இருவகையாக (இ, ஈ) எழுதல் காணலாம். அச்சிலுங்கூட இரு வகையும் காணப்படுகிறது. ஏகாரத்தையும் ஓகாரத்தையும் நாம் எழுதும் முறை வேறு. முன்பு எகர ஒகரங்களே நெடில்களாகக் கருதப்பட்டன. அவற்றின் மேல் புள்ளியிட்டுக் குறில்களை உணர்த்தி வந்தனர். குற்றியலுகரம் முதலிய சில ஒலிகளையும் புள்ளியிட்டே எழுதி வந்தனர். அவை யெல்லாம் இப்பொழுது மறைந்துவிட்டன. கி. பி. 5-ஆம் நூற்றாண்டிலிருந்து கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன. அவற்றைக் கால முறையில் வரிசைப்படுத்தி நோக்கினால், தற்காலத்து வழங்கும் எழுத்துக்களின் மூதாதைகளைத் தெளிவாய் அறிந்து கொள்ளலாம். எழுத்தின் வடிவங்களைக் கொண்டே இன்ன காலத்து இக் கல்வெட்டுத் தோன்றியிருத்தல் வேண்டுமென்று அறுதியிடுதல் கூடும். நாம் வழங்கும் எழுத்துக்களினின்றும் பெரிதும் வேறுபட்டுக் காணுவது 'வட்டெழுத்து' எனப்படுவதாம்.

ஆனால் இவ்வெழுத்துக்களெல்லாம் அசோகன் லிபியை அடிப்படையாகக் கொண்டு பிறந்தன என்பர் ஆராய்ச்சியாளர். வடமொழியில் கேள்வி மூலமாக நெடுங்காலம் நூல்கள் வழங்கின. நூல்கள் எழுதப் பெறத் தொடங்கிய காலம் கி. மு. 5-ஆம் நூற்றாண்டு என்பர் வக்டானல் ஆசிரியர். தமிழிலும் ஏறத்தாழ இக் காலத்திலேயே நூல்கள் எழிதப் பெறத் தொடங்கி யிருக்கலாம். இப் பொழுதுள்ள தமிழிலக்கியங்களிற் பழமையானவை கி. பி. 2-ஆம் நூற்றாண்டில் தோன்றின. இவைகளெல்லாம் எழுத்து வழக்குத் தமிழ் நாட்டிற் புகுந்த பின்னர் இயற்றப்பட்டனவே. இவற்றிற் காணும் தமிழ்ச் சுவை முற்றிக் கனிந்த தமிழ்ப் பாடல்களும் இனிமையும் அழகும் நிரம்பியுள்ளன. எனவே பல நூற்றாண்டுகளாகப் பயின்று வந்த கவித்துவ முயற்சினாலே இம் முதிர்வும் கனிவும் ஏற்பட்டிருத்தல் வேண்டும். இம்முயற்சி ஐந்து நூற்றாண்டுகளேனும் நிகழ்ந்திருக்க வேண்டும். ஆதலால் செய்யுட்கள் எழுத்தில் எழுதப் பெற்ற காலம் கி. மு. 4 அல்லது 5-ஆம் நூற்றாண்டாக இருக்கலாம்.

தமிழ் எழுத்துக்கள் உயிர் 12-உம், மெய் 18-உம், ஆய்தம், குற்றியலிகரம், குற்றியலுகரம் என்ற சார்பெழுத்துக்கள் மூன்றும் ஆக 33 எழுத்துக்கள் தொல்காப்பியர் காலத்தில் இருந்தன. இவற்றுள் குற்றியலிகரமும் குற்றியலுகரமும் தற்காலத்து எழுத்து வழக்கில் இல்லை. ஆய்தமும் பண்டிதர் வழக்கில் மட்டும் காணப்படுகிறது. விரைவில் மறைந்து வருகிறதென்றே சொல்லலாம். ஆகவே முப்பது எழுத்துக்கள் தாம் உள்ளன. ஆனால் உயிர் மெய் 216 எழுத்துக்கள் உள்ளன. இவையே நமது எழுத்து மாலையைக் கடினமாக்குகின்றன. அச்சுக் கோப்பதற்கும், டைப் அடிப்பதற்கும் வடிவங்கள் எளியனவாயும், நேரியனவாயும், எழுத்துக்கள் சிவுங்கியனவாயும் இருத்தல் வேண்டும். இதற்கு ஏற்ற முறைகளைக் கையாள வேண்டியது அவசியம். ஓர் உயிருக்கு ஓர் அடையாளமே இருத்தல் வேண்டும். இப்பொழுது உகரத்திற்கு மூன்று அடையாளங்கள் உள்ளன. உதாரண

மாக, க, ச, ண என்றவற்றோடு உகரம் சேர்ந்த எழுத்துக்களைக் காண்க. இக் குறைபாடுகளும் ஒழிதல் வேண்டும்.

தமிழ் எழுத்துமாலையில் தமிழுக்கே சிறப்பாக உள்ளவை என்று கருதப்படும் சில எழுத்துக்கள் இருக்கின்றன. இவை ற, ன, ழ, எ, ஒ என்பனவாம். வடமொழியிலுள்ள அக்ஷரத் தொகுதியை எடுத்துக் கொண்டு, அவற்றில் காணப்பெறுமையால் இவற்றைச் சிறப்பெழுத்து என்பர். எ, ஒ என்ற இரண்டு உயிர்களும் பிராகிருத மொழிகளில் உள்ளன. குறிலின்றி நெடில் மாத்திரம் வடமொழியில் காணப் படுவது ஒரு வியப்பே. பிராகிருதத் தோடொப்ப, தமிழில் எ, ஒ காணப்படுவதால் இத் தமிழ்மொழி இயற்கையோடு ஒட்டியது என்பது புலனும். இவற்றைப் புள்ளியிட்டு எழுதுதல் முற்கால வழக்கமென முன்பு கூறப்பட்டது. இது வடமொழி அக்ஷரங்களை யொட்டித் தமிழில் ஏ, ஒ எழுத்துக்களை அமைத்துப் பின்னர் அவற்றின் குறில்களை உணர்த்தப் புள்ளியிட்டனர் என்பதைத் தெளிவாய்ப் புலப்படுத்துகிறது.

சிறப்பெழுத்தாகிய ழகரம் வடமொழியில் ஷகர, டகரங்களுக்குப் பதில் வருவது கூர்ந்து கவனிக்கத்தக்கது. சீர்ஷக் என்பது சிகழிகை எனவும், கலுஷி என்பது கலுழி எனவும், விஷமம் என்பது விழுமம் எனவும், ஸேஷம் என்பது சேழம், சேளம் எனவும், மிருகசீர்ஷம்—மார்கழி எனவும வருதல் இதனை விளக்கும். மலையாளத்திலும் இத்திரிபு காணப்படுகிறது. இங்ஙனம் திரிதல் காரணமாக 'ழகரம்' ஒரு சொல்லில் வருமாயின், அது வட சொல் அல்லது பிற சொல்லென்பது நிச்சயம் என்று ஒரு சாரார் கூறுவர். ஆனுல் ஒலி நூல் நியமங்களை அனுசரித்து இக்கருத்து இன்னுந் துணியப்படவில்லை. ழகரத்தையும் ளகரத்தையும் பேதமின்றி உச்சரிப்பது வழக்கம். புதுக் கன்னடத்தில் ழகரம் மறைந்துவிட்டது. தமிழிலும் பிற்காலத்தில் இது மறைந்து விடலாம். னகாரமாகிய சிறப்பெழுத்து றன்னகரமென்று சாதாரண மாகக் கூறப்படும். ஒலியில் பெரிதும் வேற்றுமை இல்லாத தந்நகர மொன்றும் தமிழில் உண்டு. இரண்டிற்குமுரிய வேற்றுமையை நாம் கவனிப்பதில்லை; ஆனுல் மலையாள மக்கள் போற்றிவருகிறுர்கள். எழுத் திலுங்கூட நாம் இவ்வேற்றுமையைப் பல இடங்களில் கொள்வதில்லை. அந்நம் என்ற வட சொல்லை 'அன்னம்' என்று றன்னகரம் இட்டு எழுது கிறேம். இவ்வாறே 'அநந்த' என்ற வட சொல்லை அனந்தன் என்று எழுதுவது வழக்கம். என்றுலும் சந்தி முதலியவற்றை நோக்கும்போது இரு வகை எழுத்தும் அவசியமென்றே தோன்றுகிறது. ஒலியி லும் றன்னகரமும், தகரமும் இழைந்து செல்வதில்லை. தந்நகரமிட்ட 'முந்நால்' என்பதற்கும், றன்னகரமிட்ட 'முன்னுல்' என்பதற்கும் பொருளில் வேறுபாடு உண்டு. முன்னது மூன்றினுல் பெருக்கிய நான்கு என்றும், பின்னது முற்பட்டு என்றும் பொருள்படும்: சந்தியைச் சீர்திருத்தம் செய்தாலன்றி, இதுபோன்ற மயக்கங்களை நீக்குதல் முடியாது.

கடைசியாக வல்லின றகரமாகிய சிறப்பெழுத்தை நோக்கு வோம். இடையின ரகரமொன்றும் தமிழில் உண்டு. இரண்டிற்கும் ஒலியிலும் சிறிது வேற்றுமை உண்டு. வல்லினத்தை அழுத்தி உச்சரிக்க வேண்டும்? அவ்வளவே. முற்காலத்தில் வட மொழி ரகரத்தை வல்லின றகரமாகத் தமிழில் எழுதிவந்தனர். 'பர்வதம்' என்பதைப் 'பறுவதம்' என்றும், கர்வம் என்பதைக் கறுவம் என்றும் எழுதினர். இவ்வழக்கம் இப்போது நின்றுபோய்விட்டது. வல்லின றகரமும் சந்தி முதலியவற் றின் பொருட்டு அவசியமாகலாம். 'கர்ப்பம்' என்பதற்கும் 'கற்பம்' என்பதற்கும் வேறுபாடு உண்டு. இங்ஙனமே செரு என்பதற்கும், செறு என்பதற்கும், மரு என்பதற்கும் மறு என்பதற்கும், பரி என்பதற்கும்

ப்றி என்பதற்கும், எழுத்துச் சுருக்கம் பேணி முற்போக்கில் தமிழ் மக்கள் ஈடுபட்டாலன்றி, மேற்காட்டிய குறைபாடுகளை நீக்குதல் சிறிதும் ஏலாது. ஆங்கில எழுத்துக்களைக் (ரோமன் லிபி) கைக்கொண்டால் பல குறைபாடுகளும் நீங்கிவிடலாம்; ஆனல் புதுக் குறைபாடுகள் ஏற்படலாம்; நமது மனப்பான்மையும் இடந்தரமாட்டாது- அக்ஷர மாலை (Alphabet) களிற் பெரும்பாலன முன்னையோர் மரபு என்ற ஒன்றைத் தவிர, வேறொரு காரணமுமின்றி, ஏதாவதொரு முறையில் அமைந்துள்ளன; உதாரணமாக, ஆங்கில நெடுங் கணக்கை எடுத்துக்கொள்வோம். இதில் உயிரெழுத்துக்களும் மெய்யெழுத்துக்களும் ஒரு நெறியுமின்றி விரவிக் கிடக்கின்றன. மெய்யெழுத்துக்களுள் ஓரினத்தையே சார்ந்தவை பல இடங்களில் சிதறிக் கிடக்கின்றன. C ஓர் இடத்திலும் G வேறோர் இடத்திலும் உள்ளன. B ஓரிடத்திலும், P பிறிதோர் இடத்திலும் வைக்கப்பட்டுள்ளன. D ஓர் இடத்திலும், T மற்றோர் இடத்திலும் அமைந்துள்ளன. தமிழ் நெடுங் கணக்கு அங்ஙனமன்று. ஒரு நெறிப்பட்டு அமைந்துள்ளது. ஆனல் அது வட மொழி அக்ஷர மாலையை ஒத்திருத்தல் காணலாம். வடமொழி அக்ஷரமாலையை அடிப்படையாகக் கொண்டே தமிழ் நெடுங் கணக்கு முறைப்படுத்தப்பட்டது என்பது மறுக்கமுடியாத ஓருண்மையாம்.

சில அக்ஷரமாலைகளில் ஒவ்வோர் எழுத்திற்கும் தனித் தனிப் பெயர் உண்டு. க்ரேக்க மொழியில் alpha beta gamma முதலியவற்றால் இதை அறியலாம். ஆங்கில அட்சரமாலையே ப்ரெஞ்சு மொழிக்கும் உரியது. ஆனல் பெயர்கள் வேறு. b என்பது bay என்றும், h என்பது ash என்றும், y என்பது eegrek என்றும் இம்மொழியில் வழங்குவர். உருது மொழியில் அலிப் முதலியவாகப் பெயர்கள் சொல்லுவர். தமிழில் ஓர் எழுத்தைக் குறிக்கவேண்டும். பொழுது, அவ்வெழுத்தைத் தனித்தே கூறலாம். 'அ, இ, உ அம்மூன்றுஞ் சுட்டு' என்பது உதாரணம். 'எகர, ஒகரத் தியற்கையுமற்றே' என்பதில் கரம் என்ற ஒரு சாரியை சேர்க்கப்படுகிறது; காரம், கரன் என்ற வேறிரண்டு சாரியைகளும் உண்டு; எழுத்திற்குப் பெயர் என்பது கிடையாது; ஆனல் எல்லா மொழிகளிலும் காணப்படுவதுபோல், சில எழுத்துக்களைத் தொகுத்து இவை வல்லினம், இவை மெல்லினம் என்று பெயரிடுதல் தமிழிலும் உள்ளதே.

ஆங்கிலம் முதலிய மேல்நாட்டு மொழிகளுக்குரிய எழுத்துக்களுக்கு மாத்திரை கற்பிக்கும் வழக்குக் கிடையாது. தமிழ் மொழியில் அங்ஙனமன்று. குறிலுக்கு ஒரு மாத்திரை என்றும் நெடிலுக்கு இரண்டு மாத்திரைகளென்றும், மெய்க்கு அரை மாத்திரை என்றும், இங்ஙனமாகக் கணக்கிட்டுரைப்பர். ஆனல் இது வட மொழியினின்றும் கொள்ளப்பட்டது. செய்யுளியற்றுவதற்குப் பயன்படலாம். ஆதலால் இம்மாத்திரை தமிழ் மொழிக்கு வேண்டாததாம். ஒலியியல் நூல்கள் எழுதப் பெறும்போது இது பயன்படுவதாகலாம்.

இங்குக் கூறிய எழுத்து முதலியன சுமார் 1700 ஆண்டுகளுக்கு முன் தோன்றிய இலக்கண சூத்திரங்களில் உள்ளன. தற்காலத்துத் தமிழை அறிதற்கு அவை போதிய அல்ல. நம்மில் ஒவ்வொருவருக்கும் இன்றியமையாது வேண்டப்படுவது தற்காலத் தமிழ். அதனையே முற்பட நாம் கற்றல் வேண்டும். அதற்குரிய எழுத்திலக்கணம் முதலியன இயற்றுவதற்கு நாம் முயலுதல் வேண்டும். அதனை விளக்கும் எழுத்து, சொல் முதலிய இலக்கணப் பகுதிகளைக் கற்பிக்கும் முறையும் முற்றும் மாற வேண்டும். அப்பொழுதுதான் நம் மாணவர்கள் சுவையோடு தமிழைக் கற்பார்கள்.

—அக்டோபர், 1946.

# தமிழ்த்தாயின் முதற்புதல்வர்

**பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார்**

மஹாமஹோபாத்தியாய தாக்ஷிணாத்ய கலாநிதி டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்களுக்கு எண்பதாம் ஆண்டு நிறைவுறுதல் குறித்து அந்நாளில் தமிழன்பர்கள் விழாக் கொண்டாட ஏற்பாடு செய்துவருதலை யறிந்து பெரிதும் மகிழ்ச்சியடைகின்றேன். ஸ்ரீமாந் ஐயரவர்கள் ஆண்டினும் அறிவினும் முதிர்ந்து இக்காலத்துத் தமிழ்ப் புலவருள் தலைமணியாக விளங்குகின்றவர்கள். துறைசை யாதீனத்துக் கவிச்சக்ரவர்த்தியாக விளங்கிய மீனாட்சிசுந்தரம்பிள்ளை யவர்கள்பால் முறையாகத் தமிழ் பயின்று, அரசினர் கலாசாலைகளிற் பல்லாண்டுகளாகச் சிறந்த தமிழாசிரியராக வீற்றிருந்து பன்னூயிரம் மாணவர்களுக்குத் தமிழுணவளித்தவர்கள்.

தமிழ்ப் புவவர்கள் வாழ்ந்த பல ஊர்களுக்குச் சென்று பல அரிய தமிழ் நூற்சுவடிகளையெல்லாந் தொகுத்துச் செவ்வியமுறையின் ஆராய்ந்து பலவகைக் குறிப்புக்களுடன் மேலைத் தேசத்து நூல் வெளியீடுகளுக்கு எவ்வகையினுந்தாழாது சிறந்த முறையில் அந்நூல்களை வெளியிட்டு வருகின்றவர்கள். இத்துறையில் இவர்களையொப்பார் இதுகாறும் யாரும் இல்லையென்பது யாவரும் உணர்வர்.

இக்காலத்துத் தமிழறிஞர் சங்கநூல் முதலிய பழைய தமிழ் நூல்களை எளிதிற் பெற்று இன்புறுதற்கு இவர்கள் பேருதவியே சிறந்த கருவியாகும். தம் வாழ்நாள் முழுதும் இடைப் பிறவரலின்றித் தமிழ்த் தொண்டொன்றையே மேற்கொண்டு உழைத்த பெருமை ஸ்ரீமாந் ஐயரவர்கள் ஒருவருக்கே உரியதென்பது மிகையாகாது. இவர்கள் பெருமைக்கு அரசினரும் சர்வகலாசாலையாரும் மடாதிபதிகளும் பிற சங்கங்களும் இவர்களுக்கு அளித்த சிறந்த பட்டங்களே சான்றாகத் திகழ்கின்றன.

உலகவாழ்க்கையில் கல்வியறிவினாலுண்டாம் இன்பமே விழுமியதெனக்கொண்டு வாழ்க்கையை நலம்பெற நடத்திவருகின்ற நம் ஐயரவர்களின் வரலாறு பின்வரும் புலவர் சந்ததிகளுக்கு மிகவும் உபகாரமாக விளங்குமென்பதொருதலை. இவர்களோடு யான் பழகுங்காலமெல்லாம் எனக்குத் தமிழிற் புதிய புதிய ஆர்வமுண்டாதல் இயல்பு. இவர்கள் பக்கலிலிருந்து கழித்த காலமெல்லாம் பயனுடையவனாகவே சென்றன வென்பது என் அநுபவமாகும்.

பழைய புலவர்களின் வரலாற்றுக் குறிப்புக்களும் புலவர்களை ஆதரித்து வந்த செல்வர்களின் செயல்களும் பிறவும் வியக்கத்தக்க முறையில் இவர்கள் எடுத்துக் கூறுவதுண்டு. கல்லூரி முதலிய நிலயங்

களில் தமிழாசிரியர்களுக்கு ஒதுக்கிடம் அளித்துப் புறக்கணிக்கப்பட்டு வரும் இக்காலத்தில் இவர்கள் ஆங்கிலப் பேராசிரியர்களை விடச் சிறந்த வீறு பெற்று விளங்கிவரும் நிலை தமிழுலகுக்கே நன்மதிப்பைத் தருவ தொன்றாகும். இவர்கள் குணங்களுட் சிறந்தது பகைவர் மாட்டும் இனியராக நடந்து கொள்வது. யாது காரணத்தாலேனும் தம்மை ஒருவர் வெறுத்துப் பேசினாலும் அவற்றைப் பொருட்படுத்தாமல் தம் கடமையைத் தளராது செய்துவரும் இயல்பு நம் ஐயரவர்கள்பாலன்றி வேறு யாரிடத்தும் காண்டற்கு இயலாத தொன்று.

ஓர் அவைக்களத்து இவர்கள் தலைவராக இருக்குங்கால், ஒருவர் நெறிபிழந்து பேசுவாராயின் அப்பிறழ்ச்சியை அறிஞர் உணர்ந்து கொள்ளவும் அவ்வுபன்யாசகர் மனம் வருந்தாமல் தம்மைப் பாராட்டுவதாக நினைக்கும் வண்ணமும் இவர்கள் முடிவுரை கூறுவது வியப்பைத் தருவதாகும்.

புதுக்கோட்டை ஆட்சியுட்பட்ட மேலைச் சிவபுரிச் சன்மார்க்கச் சபையில் மூன்று முறை ஸ்ரீமாந் ஐயரவர்கள் தலைவராக வீற்றிருந்து சபையை அலங்கரித்ததுண்டு. அங்ஙனம் மும்முறை இவர்கள் நல்வரவு அச்சபைக்கு நேர்ந்ததற்குக் காரணம் இவர்கள் தமிழ்ப்பணிப் பெருமையும் அச்சபையினிடத்தும் என்பாலும் வைத்த பேரன்புமேயாகும். அந்நாட்களில் எம் நகரத்துத் தனவணிக மக்கள் எய்திய இன்பம் சிறந்ததே; பன்மீன் நடுவட் பான்மதி விளங்கிய விண்ணிடம்போல அச்சபை பல புலவர் புடைசூழ்ந்திருப்ப இவர்களைத் தலைவராகப் பெற்றுத் திகழ்ந்த காட்சி இன்னும் என் உள்ளத்தை இன்புறுத்துகின்றது.

தமிழ்மொழிக்குப் புத்துயிரளித்த புலவர் சிகாமணியாகிய ஸ்ரீமாந் ஐயரவர்களின் பெருமை எத்துணை விரிப்பினும் அடங்குவதன்று; ''மண்டேய்த்த புகழினான்'' என்பது இவர்களுக்குப் பொருந்துவதாகும். இவர்கள் மாண்பு வளரவளரத் தமிழ்ப் புலவர்களின் பெருமை வளர்வதாயிற்று. வேற்றுமொழிப் பயிற்சி ஒரு சிறிதும் வரவாது தமிழ் ஒன்றே பயின்று, பலமொழிகளிலும் வல்ல நிபுணர்களினுஞ் சிறக்கப் பீடு பெரிதுடையராக இவர்கள் விளங் குதல் தனித்தமிழ்ப் புலவர்களுக்கெல்லாம் மிக்க பெருமை. பெரும் பேராசிரியராகிய ஸ்ரீமாந் ஐயரவர்களின் சதாபிஷேகவிழாக் கொண்டா டும்படி நேர்ந்தது தமிழ்நிலத்தாரின் பாக்கியமேயாகும்.

தமிழ்த்தாயின் முதற்புதல்வராகிய இவர்கள் இன்னும் பல் லாண்டு நிலவுலகவாழ்க்கை பெற்றுத் தம் அன்னைக்குரிய திருப்பணிகளை மேன்மேலுஞ் சிறக்கப் புரிந்து வாழும் வண்ணம் சொற்பொருள் வடிவி னராகிய நம் உமாநாதன் திருவருள் பாலிப்பாராக.

— மார்ச், 1935.

# உயிரை உண்டாக்கலாம்

டாக்டர் நீ. ரா. ஸ்ரீநிவாஸன்

உலகில் பல்லாயிரக் கணக்கான ஆண்டுகளாக உயிர் வாழ்ந்து வருகிறது. செடி கொடிகளாகவும், புழு பூச்சி விலங்குகளாகவும், மனிதனாகவும் உயிர் தோன்றித் தழைத்து வருகிறது. உலகில் உயிரைத் தோற்றுவித்ததும் காப்பதும் அழிப்பதும் கடவுள் என்று நாம் இன்றுவரை நினைத்து வந்தோம். சமீப காலத்தில் உயிரற்ற பொருள்களைச் சேர்த்து உயிரை உண்டாக்க முடியும் என்ற மகத்தான சாதனையை மனிதன் செய்துள்ளான். இந்தப் பெருமை, இந்தியாவில் பிறந்து, அமெரிக்கராக வாழும், டாக்டர் ஹர்கோபிந்த் கொரானாவைச் சாரும். உலகம் உள்ளளவும் இவர் பெயர் நிலைக்கும். மனித உருவில் தோன்றிய பிரம்மா என்று இவரை மக்கள் வாழ்த்துவர். ஆராய்ச்சியில் சிறு உயிரை இவர் தோற்றுவித்திருக்கிறார்.

உலகம் இனிது! நாம் வாழும் இவ்வுலகம் கோடானுகோடி வருஷங்களாகத் திகழ்ந்து வருகிறது. 'இதனைப் படைத்தது யார்? இது எவ்வாறு இயங்குகிறது?' என்ற கேள்விகளைக் கேட்டு மனிதன் தன்னை மறந்த பரவச நிலையில், 'இவ்வுலகனைத்தும் ஈசன் திருவிளையாடல்; அன்னவர்க்கே சரண்' என்று கொண்டான். பின்பு தனக்கும் கடவுளுக்கும் இடையேயுள்ள ஆத்மதத்துவ விசாரத்தில் இறங்கினான். ஞானத்தை விருத்தி செய்தான். உலகின் பல பாகங்களிலும் மனித சமூகம் தழைக்கத் தொடங்கியது. விதம் விதமான பயிர் பச்சைகளும் ஜீவராசிகளும் தத்தம் சூழ்நிலைகளுக்கேற்ப வாழ்ந்தும் வளர்ந்தும் வரலாயின.

உயிர் உள்ள ஒவ்வொன்றுக்கும் தன் இனம் விருத்தியடைய வேண்டும் என்பது இயற்கையின் நியதி. மனிதனோ, மிருகமோ, புல் பூண்டோ, புழுவோ, செடியோ கொடியோ எதற்கும் இனவிருத்தி வேண்டும்; நடைபெற்றும் வருகிறது. வாழையடி வாழையாக வம்ச விருத்தி நடைபெறுகிறது. இதில் விந்தை என்னவென்றால், 'தாயைப் போல் சேய், நூலைப் போல் சேலை' என்றபடி இனவிருத்தியில் ஒன்றைப் போன்ற மற்றோர் உயிர் உண்டாகிறது.

குதிரை மான்குட்டி ஈனாது; புலி பூனைக்குட்டி போடாது. மனித ஜாதியிலும் பல நூறு வகைகள் உள்ளன. ஆயினும் இயற்கையின் விதிப்படி மனிதனுக்குப் பிறப்பது குழந்தை.

இனத்தைப் பெருக்குவது உயிர்; உயிரற்ற ஒன்று பலவாகாது. இயற்கையின் மர்மம் என்ன? ஓர் இனம் தன் குணங்களைக் கொண்ட

தன்னைப் போன்ற ஒரு சந்ததியை எப்படித் தோற்றுவிக்கிறது? பல நூற்றாண்டுகளாகக் கேட்டு வந்த இந்தக் கேள்விக்கு இன்று நாம் பதிலளிக்கும் நிலையில் இருக்கிறோம்.

உலகில் உயிரைப் படைத்தவன் பிரம்மா என்ற கடவுள் என நினைத்தது பல காலம், உயிரற்ற பொருள்களைச் சேர்த்துச் செயற்கை யாக உயிரை உண்டாக்க முடியும் என்று காட்டிவிட்டது, விஞ்ஞானம். இந்த மகத்தான சாதனையைச் செய்து காட்டியவர், 1968-இல் நோபல் பரிசு பெற்றவரும், 'நவீனப் பிரம்மா' என்று போற்றப் பெறுபவருமான டாக்டர் ஹர்கோபிந்த் கோராணு ஆவர்.

உயிரைத் தோற்றுவிக்கும் மாபெரும் சாதனையைப் பற்றிக் கூறுமுன், உயிர் எவ்வாறு ஆகியது, எவ்வாறு வாழ்ந்து வளர்கிறது என்பதைக் கொஞ்சம் கவனிக்க வேண்டும். ஒரு கட்டிடத்தைப் பாருங்கள். செங்கல்லும் சுண்ணாம்பும் சேர்ந்து அது உருப்பெறுகிறது. எப்படிக் கட்டிடத்துக்குச் செங்கல் அடிப்படையோ அப்படி உயிர் வாழ்வன யாவுக்கும், அது தாவர இனமோ அல்லது ஊர்வனவோ, அடிப்படையான கட்டிடக் கல் உயிர்க் கட்டம் (Call) எனப்படும். விருத்தியடையாத எளிய உயிரினத்தில் ஓர் உயிர்க் கட்டத்துடனேயே உயிர் ஆரம்பமாகி வாழ்ந்து விருத்தியும் செய்கிறது. பல உயிர்க் கட்டங்கள் ஒன்று சேர்ந்து பரிணமித்து இயங்கித் தாவரங்களாகவும் ஜீவராசிகளாகவும் வாழ்ந்து வளர்கின்றன.

உயிர் கட்டங்கள் பலதரப்பட்டவை. உதாரணமாக, ஒரு ஜீவராசியில் பலவித உயிர்க் கட்டங்கள் ஒன்று சேர்ந்து, நகமாகவும் சதையாகவும் நரம்பாகவும் ரத்தமாகவும் மற்றும் பலவாகவும் பரிண மிக்கின்றன. பல்லாயிரக் கணக்கான - ஏன், லட்சக்கணக்கான பலவித உயிர்க் கட்டங்கள் முறையாக ஒன்று சேர்ந்து இயங்கித் தோற்று விக்கும் முடிவான உருவமே மனித ஜீவன். இதேபோல் உயிர் வாழ்வன எல்லாமே உயிர்க் கட்டங்களைக் கொண்டு கட்டிய பலவேறு கட்டிடங்களே.

ஓர் உயிர்க் கட்டத்தைப்பற்றி மிகவும் எளிய முறையில் விளக்கினால், அது வட்ட வடிவான ஒரு கட்டிடம் போன்றது; மிகமிக மென்மை யானது. அதில் நடுநாயகமாக விளங்குவது ஊசிமுனை போன்ற உயிரணு (Nucleus). கண்ணுக்குப் புலனாகாத உயிரணு, முறைப்படி, இனவிருத்தியில் ஈடுபட்டுப் பல உயிர்க் கட்டங்களைச் சேர்த்துக் கொண்டு உயிரினமாகத் தோன்றுகிறது. உயிரணுவைச் சுற்றி இருக்கும் நீர்க் குழம்புக்கு ஸைடோபிளாஸம் (Cytoplasm) என்று பெயர். உயிரணுவை உற்று நோக்கினால், அது நூல் பந்து போல் தோன்றுகிறது. பல கயிறுகளைச் சேர்த்துப் பிணைத்தது போன்ற தோற்றம். இந்தக் கயிறுகளை உயிரணுக் கதிர்கள் (Chromosomes) என்று கூறுகின்றனர். இந்த உயிரணுக்கதிர்களே உயிர் வாழ்வன வற்றின் இனத்தைப் பெருக்கும் தன்மையைப் பெற்றிருக்கின்றன. நீண்ட நாள் ஆராய்ச்சிக்குப் பின் உயிரணுக் கதிரில் இனப்பெருக்கிகள் (Genes) இருக்கின்றன என்று கண்டுபிடித்தனர். தாய் தந்தையரின் உடலில் காணப்படும் விசேஷ அம்சங்களான நிறம், பருமன், உருவம், கண் வாய் மூக்கு ஆகிய அவயவங்களின் தனிக்கூறுகள், மூளை முதலிய வற்றைக் குழந்தைக்கு அளிப்பவை ஜீன்களாகிய இனப் பெருக்கிகளே.

ஆகவே வம்ச விருத்தியின் அடிப்படை ஜீன் என்ற இனப் பெருக்கி என்று தெரிந்தும், அது எவ்வாறு ஆனது, அது எப்படி இயங்கி இனத்தைப் பெருக்குகிறது என்று கண்டறிய முடியவில்லை. 1944-ஆம் ஆண்டில், நியூயார்க்கிலுள்ள ராக்பெல்லர் ஆராய்ச்சி நிலையத்தில் ஏவெரி, மக்ளியாட், மக்கார்டி என்ற மூன்று விஞ்ஞானிகள், 'இனப்

பெருக்கி, ஒரு ரசாயனக் கூட்டுப் பொருள்' என்று கண்டுபிடித்தனர்: அதன் பெயரைச் சுருக்கமாக 'டிஎன்ஏ' (DNA) என்று அழைப்பர். இந்த விஞ்ஞானிகளின் ஆராய்ச்சித் திறனால் இனப் பெருக்கியின் இரண்டு முக்கிய குணங்கள் அறியப்பட்டன. அவையாவன: ஒன்று, இனப் பெருக்கி தன்னைப்போன்ற அமைப்பும் குணாதிசயங்களும் கொண்ட மற்றோர் இனப் பெருக்கியை உண்டாக்குகிறது. இரண்டாவது, இன விருத்திக்கு அவசியமான பிசிதப் பொருள்களில் எது தேவை என்று கண்டு பிடித்துப் பயன்படுத்துகிறது. இன விருத்தியில் முக்கியப் பங்கெடுத்துக் கொள்வன ரசாயனக் கூட்டுப் பொருளாகிய பிசிதப் பொருள்களே. பிசிதங்கள் (Proteins) இல்லையேல் இனவிருத்தியும் இல்லை.

நமது உணவில் பருப்பு, பால், இறைச்சி, முட்டை போன்ற பொருள்கள் உள்ளன. பிசிதங்கள் உடலின் பல பாகங்களிலும் இருக்கின்றன. உதாரணமாக, நகம், மயிர், தோல் முதலியனவற்றில் உள்ள பிசிதம் ஒரு வகை- அதன் வேலை முக்கியமாக அவயவங்களை மூடிக் காப்பதாகும். நம் இரத்தத்திலுள்ள சிவப்புப் பொருளாகிய 'ஹேமோக்ளோபின்' மற்றொரு வகைப் பிசிதத்தால் ஆனது. அது காற்றிலுள்ள பிராணவாயுவை எடுத்து உடலுக்குக் கொடுத்து உயிரைக் காப்பாற்றுகிறது. மற்றும் சில பிசிதங்கள், உடலில் நோய்க் கிருமிகள் நுழைந்தால் அவற்றுடன் சண்டையிட்டு அவற்றை வென்று உடலைக் காக்கின்றன- இன்னும் சில பிசிதங்கள் 'என்ஜைம்'களாக (Enzymes) வேலை செய்து, ரசாயனப் பொருள்கள் கூடிச் சேர்வதற்கு உதவுகின்றன. கலிபோர்னியாவைச் சேர்ந்த பீடிலும் டாடமும் (Beadle and Tatum), 'ஒரு ஜீவனுக்கு ஓர் என்ஜைம்' என்ற சித்தாந்தத்தைக் கண்டுபிடித்தனர். அதற்காக அவர்களுக்கு 1958-இல் நோபல் பரிசு வழங்கப்பட்டது. எப்படி மனித வாழ்வில் 'ஒருவனுக்கு ஒருத்தி' என்ற நியமம் உண்டோ, அதே போல் ஒரு ஜீன் (இனப் பெருக்கி), வம்சவிருத்திக்குத் தேவையான ஒரு பிசிதப் பொருளைத் தானே தேர்ந்தெடுத்துக்கொள்ளும். பல நூறு பிசிதப் பொருள்கள் இருப்பினும் தனக்குத் தேவையான துணைப் பிசிதத்தை இனப்பெருக்கி தானே தேர்ந்தெடுத்துக்கொள்ளும் திறன் பெற்றது. இனப் பெருக்கியும் பிசிதமாகிற என்ஜைமும் எப்போதும் ஜோடியாகச் சேர்ந்து இனப்பெருக்கில் ஈடுபடுகின்றன. பிசிதப் பொருள்கள் இனவிருத்தியில் இன்றியமையாதவை என்று தெரிந்தது.

உயிரின் தத்துவத்தையும் இனப் பெருக்கியின் மர்மத்தையும் ஆராய முற்பட்ட மனிதன் பிசிதப் பொருள்களின் விசேஷத் தன்மையினாலும் சக்தியினாலும் கவரப்பட்டு அவற்றை அலசத் தொடங்கினான். பரந்த உடலைக் கடந்து (மனிதனோ வேறு உயிரினமோ) தக்க கருவிகளின் உதவியுடன் உள்நோக்கினால், முதலில் விளங்குவது உயிர்க் கட்டம். அதில் நடுநாயகமாகக் கொலுவிருப்பது உயிரணுக் கதிர் என்னும் 'இனப் பெருக்கி-என்ஜைம்' ஜோடி. இனப் பெருக்கி, என்ஜைம் ஆகிய இரண்டுமே பிசிதப் பொருள்களால் ஆனவை. ஆகவே பிசிதமே உயிர் வளர, இனம் பெருக்க உதவுகிறது என்ற 'பிரம்ம வித்தை'யைக் கண்டுபிடித்தனர். பிசிதமே இன விருத்தியின் நடுநாயகம் என்று கண்டதும் பிசிதத்தின் மர்மத்தை ஆராய முற்பட்டனர்.

உடலில் ஓர் உயிர்க் கட்டம் எவ்வளவு சிறியது! விளக்கு வைத்துத்தான் தேடவேண்டும்! ஆனால் இவ்வளவு சிறிய ஒன்றின் உள்ளமைப்பு எவ்வளவு சிக்கலானது! ஒன்றுக்குள் ஒன்று: அதில் பிசிதம். பிசிதப் பொருள்கள் மிகவும் சிக்கலான ரசாயனக் கூட்டுப் பொருள்களால் ஆனவை. இவ்வளவு சிக்கலான கூட்டையும் உடல் வெகு எளிதில் உண்டாக்கித் தனக்குத் தேவையான பொருள்களை உண்டுபண்ணி, இன விருத்தியையும் மற்றும் பல வேலைகளையும் செய்

வதைச் சிந்தித்தால் விந்தையெனவே தோன்றும். பிசிதப் பொருள்கள் எவ்வளவு சிக்கலானவை என்பதை ஓர் உதாரணத்தால் விளக்கலாம்.

தண்ணீர் ஒரு கூட்டுப் பொருள். அதில் பிராணவாயு, நீரக வாயு என்று இரண்டு தனிப் பொருள்களே உள்ளன. ஒரு பிராணவாயு அணுவும் இரண்டு நீரக வாயு அணுக்களும் எளிய முறையில் சேர்ந்து உண்டானதே நீர். ($H_2O$.) ஆனால் ஒரு பிசிதத்தில் பல ரசாயனப் பொருள்கள் சிக்கலான முறையில் சேர்ந்து பரிணமிக்கின்றன. 'அமினோ ஆஸிட்' என்ற கூட்டுப் பொருள்கள் நீண்ட சங்கிலிபோல் ஒன்றோடொன்று இணைந்து பிசிதத்தை உண்டாக்குகின்றன. அமினோ ஆஸிட்கள் இருபது வகைப்பட்டவை என்று கண்டறிந்தனர். இவை விதம் விதமாகச் சேர்ந்து, பலதரப்பட்ட பிசிதங்களை உருவாக்குகின்றன. முன்கூறிய 'டிஎன்ஏ'யின் முக்கிய வேலை என்னவெனில், அமினோ ஆஸிட்களைப் பல முறைகளில் சேர்த்துப் பலதரப்பட்ட பிசிதங்களையும் அதனால் பல இனப்பெருக்கிகளையும் உண்டாக்குவதேயாகும். 'டி.என்ஏ' எப்படித் தன்னைப் போன்ற குட்டிகளை உண்டாக்குகிறது என்பதே உயிர் தோன்றுவதன் அடிப்படையான புதிர் என்று கண்டார்கள். கேள்வி கிடைத்துவிட்டது; ஆனால் விடை?

இங்கிலாந்திலுள்ள கேம்பிரிட்ஜ் சர்வகலாசாலையில் செய்த ஆராய்ச்சியின் விளைவால் வாட்ஸன் என்பாரும், கிரிக் என்பாரும் ''இரண்டு 'டிஎன்ஏ'க்கள், பல ரசாயனப் பொருள்கள் தொடுக்கப்பட்ட மாலைகளைப்போல் விளங்கி, பாம்பு பின்னுவது போல் ஒன்றோடொன்று பின்னிக்கொண்டிருக்கின்றன'' என்றனர். 'டிஎன்ஏ' மாலையை ஒரு கதம்பத்துக்கு ஒப்பிடலாம்.

'நியூக்ளியோடைட்' (Nucleotide) என்பது ஒரு பிசிதப் பொருள்; அதில் கரி, நீரகப் பிராணவாயுக்கள், நைட்ரஜன், பாஸ்பரஸ் முதலிய மூலப் பொருள்கள் சேர்ந்திருக்கின்றன. நான்கு வகை நியூக்ளியோடைட்கள் உள்ளன. இவற்றைக் கதம்பத்தின் தனி மலர்களுக்கு ஒப்பிடலாம். கதம்பத்தில் பல மலர்களைப் பல வரிசையில் கவர்ச்சியாகக் கட்டுவார்கள் அல்லவா? இதேமாதிரி 'டிஎன்ஏ' மாலையிலும் அமைப்பு முறைகள் உண்டு. நியூக்ளியோடைட் என்பவை மொத்தம் நான்கு வகைப்பட்டவை. அவற்றுக்கு A, G, C, T என்று விசேஷப் பெயரிட்டனர். அவை எவ்வாறு பரிணமிக்கின்றன என்று ஊடுருவிப் பார்த்தபோது, 'டிஎன்ஏ' மாலையில் Aக்கு எதிராக மற்றொரு மாலையில் Tயும், Cக்கு எதிராக Gயும் இருப்பதைக் கண்டனர். இரண்டு பாம்புகள் பின்னிக்கொண்டு தொங்குவதுபோல் இரண்டு 'டிஎன்ஏ' மாலைகளில் தனிப்பட்ட நியூக்ளியோடைட்கள் ஒன்றுக்கொன்று எதிரும் புதிருமாக இருக்க வேண்டும். அப்பொழுது பாம்புகளுக்குக் 'குட்டி' பிறப்பது போல், இருபது அமினோ ஆஸிட் மூலம் டிஎன்ஏ குட்டிகள் பிறக்கும். எந்தச் சேர்க்கையில் எவ்விதமான அமினோ ஆஸிட் தோன்றுகிறது என்று தெரிந்துகொள்ளுவது மிகவும் அவசியம்.

டாக்டர் கொரானா இதில்தான் தம் கைத்திறனைக் காட்டினார்: பூக்காரிகள் தம் விருப்பப்படி கதம்ப மாலைகளைக் கட்டுவது போல், டாக்டர் கொரானா மூல ரசாயனப் பொருள்களைக் கொண்டு நியூக்ளியோடைட்களை விரும்பும் எவ்விதத்திலும் சேர்த்து 'டிஎன்ஏ' மாலைகளை உருவாக்க முடியும் என்று காட்டினார். நான்கு நியூக்ளியோடைட்களும் இருபது அமினோ ஆஸிட்களும் விதம் விதமாகச் சேர்க்கப்பட்டால் அறுபத்துநான்கு விதக் கூட்டுக்கள் சாத்தியமாகும். டாக்டர் கொரானா இவற்றில் மூலப் பொருள்களிலிருந்து செயற்கை ரசாயனம் வழியாக, 61 விதக் கூட்டுக்களை உருவாக்கினார்.

இந்த மகத்தான சாதனைக்கு மேதையும் பொறுமையும் உற்ற துணையாயின: நியூக்ளியோடைட்களைக் கொண்டு, தனித் தனியான

சரங்களைக் கட்டி, அவற்றைச் சேர்த்தால் நிகழ்ந்தது விந்தையிலும் விந்தை! தனிச் சரங்களில் உள்ள நியூக்ளியோடைட்கள், இயற்கையில் தோன்றுவன போலவே, AT, GC என்று எதிரும் புதிருமாகத் தோன்றி இரண்டு 'டிஎன்ஏ' கூட்டுக்களாகப் பரிணமித்தன. சேர்க்கப்பட்ட 'டிஎன்ஏ'க்கள் உயிரற்ற ரசாயனப் பொருள்கள் எனினும் அவை இயற்கையில் தோன்றும் உயிருள்ள பொருள்களில் காணும் அமைப்பைத் தாமாகத் தேடிக்கொண்டு உருவாயின! நிரன்பர்க் (Nirenberg) என்பவரும் இந்த ஆராய்ச்சியின் வேறு கூறுகளில் செயலாற்றிப் புகழ் பெற்றார். 1968 - இல் கொரானாவுடன் இவருக்கும் நோபெல் பரிசு பகிர்ந்து வழங்கப்பட்டது.

ஜீன் என்ற இனப் பெருக்கியே உயிரின் அடித்தளம் என்று கண்டோம். ஓர் இனப் பெருக்கியில் 'டிஎன்ஏ' மாலைகளுடன் 'ஆர்என்ஏ' (RNA) என்ற பகுதியும் உள்ளது. இவை இரண்டும் சேர்ந்ததே ஜீன்: கோரானா முதல் முதலில் மிகவும் சின்னதாகவும் அதிகச் சிக்கலற்றதுமான ஒரு முழு ஜீனை தோற்றுவிக்கும் முயற்சியில் ஈடுபட்டார்.

இது சாதாரண வேலை என்று எண்ணவேண்டாம். ஜீன் என்னும் இனப்ருெக்கி கண்ணுக்குப் புலனாகாத மிகச் சிறு புள்ளியைப் போல இருப்பினும், அதன் சேர்க்கையில் பல நூறு ரசாயனப் பொருள்கள் அடங்கி யிருக்கின்றன. எல்லா ரசாயனப் பொருள்களும் நன்றாக இருந்து, ஒன்றாகக் கூடி நினைத்தபடி பரிணமித்தால்தான் செயற்கை ஜீனைத் தோற்றுவிக்க முடியும். டாக்டர் கொரானா பல பல ரசாயனப் பொருள்களை மூலமாகக் கொண்டு, கூட்டுச் சேர்த்து, 'டிஎன்ஏ' மாலைகள் கட்டிப் பின்பு 'ஆர்என்ஏ' கூட்டுப் பொருள்களைச் சேர்த்துச் செயற்கை ஜீனை உண்டாக்கினார். என்ன ஆச்சரியம்! இந்த ஜீன் உயிருள்ள பொருளைப் போல் தன்னைப் போன்ற குட்டியையும் ஈன்றது. உலகில் மனிதன் முதல்முதலில், உயிரற்ற பொருள்களிலிருந்து, தன் சக்தியையும் திறனையும் கொண்டு, உயிர் உண்டாகும் சூழ்நிலைகளை உருவாக்கி ஒரு செயற்கை உயிரை உண்டாக்கியது மகத்தான சாதனை. மனிதன் மகிழ்ந்தான். ஆனால் இதிலும் ஒரு குறை தெரிந்தது. இயற்கையில் ஜீன்கள் பெருககின்றன; அத்துடன் எப்போது பெருகவேண்டும், எங்கு நிறுத்த வேண்டும் என்று 'தெரிந்து' கொண்டிருக்கின்றன. ஆனால் செயற்கையாக மனிதன் உண்டாக்கியுள்ள இனப்பெருக்கிக்கு இந்தச் சக்தி இல்லை. பெருகிக்கொண்டே இருக்கும். நாமாகச் சூழ்நிலையை மாற்றினால்தான் உற்பத்தி நிற்கும். ஆகவே விஞ்ஞானிகள் இயற்கை ஜீனிலுள்ள 'வண்டியோட்டி' யார் என்று இப்போது தேடிக்கொண்டிருக்கின்றனர். வண்டியோட்டியையும் கண்டுபிடித்து, 'அவனை'யும் வேண்டியபடி ஆட்டிப் படைப்பைப் பெருக்கும் சக்தியையும் பெறமுடியுமா?

சுமார் முப்பது வருஷங்களுக்கு முன்புதான் மனிதன் தன் அறிவாற்றலால் அணுவைப் பிளந்தான். அணுவில் அடங்கியிருக்கும் சக்தியை வெளிப்படுத்தி, முதலில் அழிவு வேலையில் ஏவி, நாகசாகியை நாசமாக்கினான். பின்னர் அணுசக்தியை ஆக்க வேலைகளில் பயன்படுத்தி மின்சார உற்பத்தி, மருத்துவ உதவி முதலியவற்றில் மனித சமுதாயத்துக்குச் சேவை செய்தான்.

இன்று விஞ்ஞானி, ஆராய்ச்சிக்கூடத்தில், உயிரின் அடிப்படைத் தத்துவத்தையும் தன்மையையும் ஆராய்ந்து, செயற்கை 'உயிரை'த் தோற்றுவித்திருக்கிறான். ஜீன் என்பது இனத்தைப் பெருக்குவதோடல்லாமல், சந்ததியின் தனிப் பண்புகளையும் மகவுக்கு வழங்குகிறது. இன்று சிறிய ஜீனையே உண்டாக்கிய மனிதன் பிற்காலத்தில் பெரும் ஜீனையும், மனித விலங்குகளின் இனப் பெருக்கி

களையும் 'சிருஷ்டி'க்கலாம்! மனிதனின் தனிச் சிறப்புக்கள் கொண்ட அம்சங்களைப் பிரித்தெடுத்துப் பிட்டு வைக்கலாம்; அவற்றை வேண்டும் வண்ணம் ஒட்டவைக்கலாம். உதாரணமாகச் சிலருக்கு மூத்திர நோய் உண்டு; மற்றும் சிலருக்கு இருதயக் கோளாறு இருக்கும். இப்படிப் பலவிதம். செயற்கையாக மனித ஜீன்களை உண்டாக்கினுல், மூத்திர நோய்க்குக் காரணமான தன்மையை 'வெட்டி' எறிந்துவிடலாம். நோய் வராமல் தடுக்கும் 'இன்ஸுலின்' உற்பத்தி செய்யும் தன்மையுடைய ஜீன்களை மனித உடலில், தக்க நிலையில் புகுத்தலாம். அதனுல் மனிதன் மூத்திர நோய் உபத்திரவம் இல்லாமல் வாழலாம். இதுபோலப் பல நோய்களையும் வென்று மனிதன் நோயற்ற வாழ்வு வாழலாம்.

மேலும், பயில்வான்களுக்கே உரிய உடற்கட்டும் வலிமையும் பொருந்திய தேகவாகைத் தோற்றுவிக்கும் ஜீன்களை உண்டாக்கினுல் பயில்வான்கள் கொண்ட சமூகத்தை உண்டாக்கலாம். எனினும் இயற்கையில் காணப்படும் தாரதம்மியத்தையும் கவனிக்க வேண்டும். பெரிய பயில்வான் உடல் வளர்ச்சியில் மேம்பட்டுக் காணப்படுவதைப் போல் மூளையிலும் சிறந்தவனுகத் திகழ்வதில்லை. கணிதமேதை மூளையில் 'பெருத்து' உடலில் சிறுத்துக் காணப்படுகிருர். மயிலின் அழகுக்கு ஈடு உண்டோ? ஆனுல் அதன் குரல் கேட்கச் சகிக்குமோ? குயில் கறுப்புத்தான்; ஆனுல் அதன் குரலினிமையை என்னென்று சொல்வது! இப்படியே அடுக்கிக் கொண்டு போகலாம். எனவே இயற்கையின் விளையாட்டை நோக்குங்கால் ஓரிடத்தில் ஏற்றமும் மற்ருேரிடத்தில் தாழ்வும் காண்கின்றன. ஏற்றத் தாழ்வுகளுக்கு மனிதனும் மற்ற எல்லா உயிரினங்களும் ஈடுகொடுத்து உயிர் வாழ்ந்து வளர்ந்து வருகின்றன. பொதுவாக நோக்கினுல் இயற்கையில் ஒரு நியதி, கட்டுப்பாடு, கட்டுக்கோப்பு, எல்லாவற்றுக்கும் மேலாக அமைதி காணப்படுகிறது. செயற்கையாகச் செய்யும் மாறுதல்களினுல் மனிதன் அமைதி காண்பானு? இயற்கையின் அமைதி குலைக்கப்படாதா? கடலின் நடுவே அணுகுண்டுச் சோதனைகள் நிகழ்த்துவதன் விளைவாக நீர்வாழ் உயிரினங்கள் கோடிக் கணக்கில் மடிகின்றன. வானத்தில் தவழும் மேகங்கள் விரட்டி அடிக்கப்பட்டு மழை பெய்வது நின்று விடுகிறது. அணுக்கதிர்கள் உயிர் வாழ்வன எல்லாவற்றையும் பாதிக்கின்றன. செயற்கையாக மனிதன் செய்யப் புகும் சாதனைகளுக்கும் ஒரு வரையறை வேண்டும் என்பதை இந்தச் சோதனைகள் நிரூபிக்கின்றன.

இன்று மனிதன் விஞ்ஞான ஏணியின் மேல் தட்டில் நின்று 'உயிரைப் படைத்து விட்டேன்!' என்று மார் தட்டிக்கொள்ளலாம். ஒரு சிறிய உயிரைக் கண்ணுடிக் குழாயில் தோற்றுவித்ததற்கே இவ்வளவு ஆடம்பரம் என்ருல் பெரிய உயிரைச் செய்து சமுதாயத்தை ஓரளவுக்கு மாற்ற முயன்ருல் அப்போது ஆணவத்துக்கு அளவில்லாமல் போய்விடலாமே! செயற்கை ஜீனை உற்பத்தி செய்தது விஞ்ஞானக் கண்ணேட்டத்தில் மகத்தான சாதனை என்பதில் ஐயமில்லை. ஆனுல் பல்லாயிரக்கணக்கான உயிர் வாழ்வனவற்றையும் அவற்றுக்கும் மேலாக அண்டசராசரங்களையும் படைத்துக் காத்து வருவது என்பது மனிதனின் சிந்தனைக்கு அப்பாற்பட்டது. அந்த மகாசக்தியே கடவுள் என்று கொண்டு அடக்கம் காணவேண்டும். அடக்கத்துடன் மனிதன் செயலாற்றினுல் பல புதிய சாதனைகளைச் செய்யலாம். அவற்றில் தூய்மையும் நிம்மதியும் பெருமையும் காணலாம்; உலகில் அமைதி உண்டாகும்; மனித வாழ்வு மேம்படும்.

பிப்ரவரி, 1972

# அறிதுயில்

மு. வரதராசன்

தொலைபேசி (Telephone) வாயிலாக எங்கிருந்தோ ஒருவர் பேசுகிறார். நமக்கு அவர் பேசுவது கேட்கிறது. நாமும் பேசுகிறோம்; அவருக்கும் கேட்கிறது. அந்தக் கருவியை உற்றுப் பார்த்து, எவ்வாறு பேச்சுக் கேட்கிறது என்று எண்ணிப் பார்த்தால், ஒன்றும் விளங்குவதில்லை. விஞ்ஞான பாடத்தை நன்கு கற்றவர்களுக்கு ஒருவாறு விளங்கலாம்; ஆயினும் அவர்களுக்கும் அது வியக்கத் தக்க ஒரு கருவியாகவே உள்ளது. வானொலிப் பெட்டியைப் பார்க்கிறோம்; வியப்படைகிறோம். ஏழரை மணிக்கு டில்லியில் பேசும் ஒருவரின் குரல் அதே நேரத்தில் சென்னையில் உள்ளவருக்கு எப்படிக் கேட்கிறது என்று எண்ணிப் பார்க்கும்போது ஒன்றும் விளங்குவதில்லை. விஞ்ஞான பாடம் சில சொற்களையும் வாய்பாடுகளையும் கொண்டு ஓரளவு விளக்கலாம். ஆயினும் ஒரு சில விஞ்ஞானிகள் பெற்றிருந்த அவ்வளவு அறிவை நாம் பெற்றுத் தெளிய முடிவதில்லை.

அறிவை எட்டிப் பிடிக்க முடியவில்லை; ஆயினும் அந்தக் கருவிகளின் முழுப் பயனையும் பெற முடிகிறது; கற்றவர்களும் பெற முடிகிறது; கல்லாதவர்களும் பெற முடிகிறது. சுவரில் உள்ள இன்ன குமிழைத் தட்டினால் இன்ன விளக்கு எரியும் என்று சிறிது அறிந்தால் போதும்; மின்சாரத்தின் பயனைப் பெற முடிகிறது. வானொலிப் பெட்டியின் இன்ன திருகை இந்த அளவுக்குத் திருப்பினால் இன்னது கேட்கும் என்று அறியும் அறிவு இருந்தால் போதும்; வானொலியின் பயனைப் பெற முடிகிறது. தொலைபேசியில் இன்ன எண்ணை வைத்துத் திருப்பினால் இந்த இடத்திலுள்ளவர்களுடன் பேசலாம் என்னும் அளவுக்கு அறிவு இருந்தால் போதும்; தொலைபேசியின் முழுப் பயனையும் பெற முடிகிறது. பாரடே, மார்க்கோனி முதலான விஞ்ஞானிகள் பெற்றிருந்த அவ்வளவு அறிவு நமக்குத் தேவை இல்லை; சிறிது அறிவைக் கொண்டே கருவிகளின் முழுப் பயனையும் எளிதில் பெற முடிகிறது. இது அறிவியல் துறை.

கலைத்துறையில் நேர்மாறான நிலை உள்ளது. ஒரு சிறந்த பாட்டை எடுத்துப் படித்தவுடன் எழுத்து, சொல், பொருள் எல்லாம் நமக்குத் தெரிந்தனவாகவே உள்ளன.

வேனில்வேள் மலர்க்கணைக்கும் வெண்ணகைச்செவ் வாய்கரிய
பானிலார் கண்ணியர்க்கும் பதைத்துருகும் பாழ்நெஞ்சே
ஊனெலாம் நின்றுருகப் புகுந்தாண்டான் இன்றுபோய்
வானுளான் காணாய்நீ மாளாவாழ் கின்றாயே

என்ற பழைய பாட்டைப் படிக்கும்போது, நமக்கு விளங்காதது ஒன்றும் இல்லை. சொல்லெல்லாம் பொருள் விளங்க நிற்பதைக் காண்கிறோம். தொலைபேசியையோ வானொலிப் பெட்டியையோ உற்றுப் பார்த்து எண்ணியபோது ஏற்பட்ட வியப்பும் திகைப்பும் இந்தப் பாட்டைப் படிக்கும்போது ஏற்படுவதில்லை. ஆனால் இதைப் பாடியவர் பெற்ற பயனை நாம் பெற முடிகிறதா? அவர் உணர்ந்த அவ்வளவு உணர்வும் நாம் உணர முடிகிறதா? 'பதைத்து உருகும் பாழ்நெஞ்சே' என்ற தொடரை அவர் பாடியபோது என்ன என்ன உணர்ந்திருப்பார்? அவ்வளவும் நாம் உணர்கிறோமா? உணர முடிகிறதா? உருகவேண்டிய ஒருவனுடைய அருளை நினைந்து பதைத்து உருகவில்லையே என்று எண்ணிப் 'பாழ்நெஞ்சே' என்று அவர் பழித்தாரே, அவ்வாறு உணர்ந்து ரமிக்க நம்மால் முடிகிறதா? ஓரளவு முடியலாம்; முழு உணர்வும் பெறுவதாகக் கூற முடியாது. எல்லாம் தெரிந்த சொற்களே, தெரிந்த பொருளே என்று அறிவு கூறுகிறது; ஆனால் பாட்டின் பயனோ எட்டாத அநுபவமாக உள்ளது.

விஞ்ஞானத் துறையில் ஒன்றும் விளங்காதது போல் தோன்றிய போதிலும், முழுப்பயனையும் எளிதில் பெற முடிகிறது. கலைத்துறையில் எல்லாம் விளங்குதல்போல் தோன்றியபோதிலும், ஓரளவு பயன் பெறுதலும் அரிதாக உள்ளது.

ஒருவனுடைய உயரத்தை அளந்து கூறக் கருவி உண்டு; இத்தனை அடி இத்தனை அங்குலம் என்று கூறிவிட அந்தக் கருவி உதவும். அவனுடைய எடையையும் நிறுத்துக் கூறக் கருவி உண்டு. ஆனால் அவனுடைய அழகைப் பற்றி எவ்வாறு அளந்து கூறுவது?

பேசும்போது என்ன செய்கிறோம்? அவனுடைய உயரத்தைக் கணக்கிட்டுக் கூற முயல்வது குறைவு; எடையை நிறுத்துப் பார்த்துக் கணக்கிட்டுக் கூறுவதிலும் அக்கறை குறைவு; ஆனால் அவனுடைய அழகை ஆராய்ந்து தெளிந்துவிட்டதுபோல், நம் மதிப்புரையைத் தயங்காமல் கூறிவிடுகிறோம்.

காரணம் என்ன? மனிதனுடைய மனம் கருவிகளைவிடத் தன் அநுபவத்தையே பெரிதாகப் போற்றுகிறது. கருவிகள் கொண்டு தெளிவதைவிடத் தன் அநுபவத்தைக் கொண்டு தெளிவதில் முந்திக் கொள்கிறது.

உயரம், எடை முதலியவை விஞ்ஞானத் துறையைச் சார்ந்தவை; கருவிகள் கொண்டு அளந்தறியத் தக்கவை. அழகு என்பது கலைத் துறையைச் சார்ந்தது. அநுபவத்தைக் கொண்டு அளந்தறியத் தக்கது.

அநுபவம் எல்லாருக்கும் உண்டு. அழகானது, அழகற்றது, இன்பமானது, துன்பமானது என்று உணர்ந்த அநுபவம் ஒவ்வொருவருக்கும் ஓரளவு உண்டு. ஆகவே தம் சிறு அநுபவத்தைக் கொண்டே பெரிய பெரிய அநுபவங்களை எல்லாம் அளந்து உணரமுடியும் என்ற தன்னம்பிக்கை கொள்கின்றனர். இந்தத் தன்னம்பிக்கை வளர்ச்சிக்கும் காரணமாக உள்ளது; ஏமாற்றத்துக்கும் காரணமாக உள்ளது.

விஞ்ஞானப் பொருட்காட்சி ஒன்று நடக்கிறது. மக்கள் திரள் திரளாகக் காணச் செல்கின்றனர். கண்டு திரும்பும் மக்களில் பெரும்பாலோர் ஒன்றும் அறியவில்லை, அறியமுடியவில்லை என்ற எண்ணத்தோடு திரும்புகின்றனர். ஆனால் ஓவியப் பொருட்காட்சி ஒன்று நடைபெறுவதாக வைத்துக்கொள்வோம். அதைக் காணச் செல்லும் மக்கள் பலரும் எல்லாம் கண்டு அறிந்துவிட்டதாக எண்ணிக்கொண்டே திரும்புவர்; ஐந்து வயசு உள்ள சிறுவர்களும் ஓவியங்களைக் கண்டு அறிந்ததாக எண்ணுகின்றனர். உயர்நிலைப் பள்ளி மாணவரும் பார்த்து

அறிந்துவிட்டதாக எண்ணுகின்றனர். கல்லூரி மாணவரும் அவ்வாறே எண்ணுகின்றனர்; மதிப்புரை கூற வல்லவராக உணர்ந்து பேசுகின்றனர்; இளையர் முதியர் என்ற வேறுபாடு இல்லாமல் எல்லாருக்கும் இத்தகைய தன்னம்பிக்கை உள்ளது. தன்னம்பிக்கை யாருக்காவது குறைவாக இருக்கும் என்றால் அது ஓவியக் கலையை முயன்று கற்ற கலைஞர்க்கே என்று கூறலாம். அந்தச் சிறுபான்மையோர் மட்டுமே ஓவியங்களைத் திரும்பத் திரும்பக் கண்டு வியக்கின்றனர்; முற்றும் விளங்காதவர்போல் திகைக்கின்றனர்; சிந்தனை முகத்தில் தேங்கத் திரும்புகின்றனர். ஓவியக் கலை அறிந்த அவர்களிடமே அறியாமை உள்ளதுபோல் தோன்றுகிறது. மற்றவர்கள் எல்லாம் அறிந்து விட்டவர்கள் போல் தோன்றுகின்றனர். அதற்குக் காரணம் அழகுணர்ச்சியைப்பற்றி அவர்களுக்கு உள்ள சிறு அநுபவமே. அந்தச் சிறிய அநுபவம் கொண்டு ஓவியக் கலைஞர்களின் படைப்பில் உள்ள பெரிய அநுபவங்களை உணர்ந்துவிட்டதாக நம்பிக்கை கொள்கின்றனர்.

இந்த நம்பிக்கை எப்போது வளர்ச்சிக்கு உறுதுணை செய்கிறது? எப்போது ஏமாற்றம் விளைக்கிறது? கலையநுபவம் என்ற அளவில் நிற்கும்போது வளர்ச்சிக்குத் துணை செய்கிறது. கலையாராய்ச்சி என்ற எல்லையில் நுழையும்போது ஏமாற்றம் விளைக்கிறது.

இந்த நம்பிக்கை இல்லையானால் ஓவியக் காட்சிக்கு மக்கள் பலர் செல்ல முடியாமற் போகும். 'ஓவியக் கலையா, அது நமக்கு எட்டாதது' என்ற எண்ணத்தோடு தயங்கி நின்றுவிடுவார்கள். ஆகவே, எல்லாரும் ஆராய்ந்து மதிப்பிடக்கூடியது என்கிற எண்ணம் வருமானால், அவர்கள் உண்மை உணராமல் ஏமாற நேரும்.

ஓவியக் கலை போலவே, நாடகக் கலை, இசைக் கலை, இலக்கியக் கலை முதலிய கலைகள் பலவற்றுக்கும் இந்த உண்மை பொருந்துவதாகும்.

இசைக் கலையைப் பலரும் அநுபவிக்க முடியும். ஆடுமாடுகளும் அநுபவிக்க முடிகிறது. அநுபவத் திறன்தான் வேறுபடும். நாடகத்தைப் பலரும் கண்டு அநுபவிக்க முடியும். அநுபவத்தில் முதல் படியும் உண்டு. நூறும் படியும் உண்டு. முதல் படியிலிருந்து நூறும் படிக்கு ஏறுவதற்குத் துணையும் உண்டு. ஆனால் முதல் படியில் உள்ளவர்கள் முற்றும் உணர்ந்துவிட்டதாக எண்ணுவார்களேயானால், அப்போதுதான் நம்பிக்கை ஏமாற்றத்தை விளைவிப்பதாகும்.

முன்னம் அவனுடைய நாமம் கேட்டாள்

என்ற திருநாவுக்கரசரின் பாட்டில்

தன்னை மறந்தாள் தன் நாமம் கெட்டாள்
தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே

என்ற ஓரடியைப் பத்து வயசிலும் படித்துப் பொருள் உணரமுடியும்; இருபது வயசிலும் பொருள் உணர முடியும். இருவகை நிலையில் உணர்ந்த பொருளுக்கும் வேறுபாடு உண்டு. நாற்பதாம் வயசிலும் அந்த ஓரடியைப் பாடி உணரலாம்; எண்பதாம் வயசிலும் பாடி உணரலாம். உணர்வு நிலைகளில் வேறுபாடு உண்டு. ஒருவருடைய வாழ்நாளில் இவ்வளவு அநுபவ வேறுபாடு காணப்படுவது போலவே, பலநிற மனநிலை படைத்தவர்களிடையேயும் அநுபவ வேறுபாடு காணப்படும். அந்த ஓரடியைப் பாடிய அளவில் உள்ளம் உருகாமல் அமைதியாய் நிற்பவரும் உண்டு; அதைப் பாடக் கேட்ட அளவில் உள்ளம் நெக்குருகி நிற்பவர்களும் உண்டு; கண்ணீரும் கம்பலையுமாய்க் கசிந்து உணர்பவர்களும் உண்டு.

இந்த அநுபவ வேறுபாட்டுக்கு வயசும் வாழ்க்கையநுபவமும் மட்டும் காரணம் என்று கூறமுடியாது. அவைகளும் காரணமே. அவற்றோடு, உள்ளப் பண்பாடும் ஒரு காரணம் என்று கொள்ள வேண்டும். உருக்கமான துன்பக் காட்சிகளை உடைய ஒரு நாடகத்தைக் காணும் மக்களில் ஒரே வயசு உள்ளவர்கள் பலர் உள்ளனர். நாற்பது வயசு உடைய ஆண்மக்கள் பலர் அந்த உருக்கமான காட்சிகளைக் காண்கின்றனர் என்றால், அவர்களில் சிலர் ஒரு சிறு மாறுதலும் உறாமல் கல்லுப் பிள்ளையார்போல் அமர்ந்திருக்கக் காணலாம்; சிலர் உள்ளம் மட்டும் உருகிக் குழைந்திருப்பதைக் காணலாம்; சிலர் கண் கலங்கியிருப்பதையும் காணலாம்; சிலர் பெருமூச்சு விட்டு விம்முவதையும் காணலாம். காணப்படும் காட்சிகள் ஒரே வகையானவை; காண்பவரும் ஒத்த வயசு உடையவர்கள்; ஆனாலும் உள்ளப் பண்பாட்டுக்கு ஏற்ப அநுபவம் வேறுபடுவதைக் காணலாம். உயர்ந்த பாட்டைப் பாடி உணர்கின்றவர்களின் அநுபவமும் அவ்வாறே வேறுபடுவதாகும்.

இவ்வாறு வேறுபட்ட அநுபவம் உடையவர்களில், ஆராய்ச்சி செய்து மதிப்புரை கூறவல்லவர் யார்? முதல் படியில் நின்று திரும்பியவரா? நூறும் படிவரையில் ஏறி நின்று திரும்பியவரா?

முதல் படியில் நின்றவர் கலையநுபவம் பெறத் தகுதியுள்ளவர். ஆராய்ச்சி செய்யத் தகுதியுடையவர் அல்லர். அவருடைய அநுபவத்தைத் தடை செய்ய எவருக்கும் உரிமை இல்லை; ஆனால் ஆராய்ச்சி செய்யத் தகுதியுடையவர் அல்லர். அவருடைய அநுபவத்தைத் தடை செய்ய எவருக்கும் உரிமை இல்லை. ஆராய்ச்சி செய்ய அவர் தயங்கிவிட்டார்.

கலையநுபவம், நாம் வாழும் உலகத்திலிருந்து வேறோர் உலகத்துக்கு—கற்பனையுலகத்துக்கு— நம்மை ஈர்த்துச் செல்வது; கற்பனை வானத்தில் நம்மைப் பறக்கச் செய்வது. கவிதை முதலிய கலைகளை அநுபவிப்பவர் சிலர், கோழி, வாத்து முதலிய பறவைகளைப் போல் சிறகடித்து உயர்ந்து சிறிதளவு பறக்கக் கற்கின்றனர். உடனுக்குடன் மண்ணில் கால்வைத்து நிற்கின்றனர்; சிலர் காக்கை குருவிபோல் மரங்களைவிட உயர்ந்து பறந்து திரிகின்றனர்; மண்ணை அடிக்கடி நாடி இறங்கி வருகின்றனர்; வேறு சிலர் நாரை கொக்கு முதலியன போல் இன்னும் உயர்ந்து பறந்து செல்கின்றனர்; உணவுக்காக மட்டுமே மண்ணை நாடி இறங்குகின்றனர். இன்னும் சிலர் வானம்பாடி போல் கண்ணுக்கு எட்டாமல் பறந்து திரிந்து வானத்தையே பாடி அதையே நம்பி வாழ்கின்றனர். இவர்களுள் கோழி, வாத்து முதலியன போல், கலையுலகத்தை நாடிச் சிறகடித்துவிட்டுத் திரும்புவோர் ஆராய்ச்சி செய்து முடிவு கூறுவதற்குத் தகுதியே இல்லாதவர்கள், காக்கை போல் ஓரளவேனும் உயர்ந்து பறந்துவிட்டுத் திரும்ப வல்லவரே ஆராய்சிக்குத் சிறிது தகுதியுள்ளவர் ஆவர். கலையுலகத்து வானம்பாடிகளைப்பற்றிக் கூற வேண்டியதே இல்லை. அந்த வானம்பாடிகளின் ஆராய்ச்சி முடிவுகள் நமக்குக் கிடைத்தால் போதும். அவர்களின் வாழ்வே கலையாகத் திகழ்வதாகும்.

தன்னை மறந்தாள் தன் நாமம் கெட்டாள்
தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே

என்ற பாட்டின் அடியைப் பாடியபோது, பதவுரையையும் இலக்கணக் குறிப்பும் மட்டும் கண்டவர் கலையுலகத்தில் அடியெடுத்தே வைக்காதவர். இந்த அடியைப் பாடக் கேட்டபோது, உயர்ந்த காதலி ஒருத்தியின் அநுபவத்தையேனும் உணர வல்லவர்—தம் கற்பனைக் கண்ணின் முன்னே அத்தகைய காதலி ஒருத்தியின் பித்துப் பிடித்த நிலையையாவது காண வல்லவர்—கலையுலகத்தில் சிறகடித்துச் சிறிதள

வேணும் உயர வல்லவர் எல்லாம். அந்த அடியைப் பாடிய சான்றோர் தம் உள்ளத்தே கற்பனை செய்து கண்ட 'நங்கை'யார் என்று உணர்ந்து உருக வல்லவர். அவர்களே அத்தகைய பாட்டுக்களைப்பற்றி ஆராய்ச்சி நிகழ்த்த வல்லவர்.

கணவனை இழந்த கண்ணகியைச் சிலப்பதிகாரத்தில் காண்கிறோம். மதுரையை விட்டு வெளியே செல்லும் கண்ணகி மேற்கு வாயிலை அடையும்போது, அதே போன்ற கிழக்கு வாயிலை முந்திய நாள் கண்டது நினைவுக்கு வருகின்றது.

கீழ்த்திசை வாயில் கணவனொடு புகுந்தேன்
மேற்றிசை வாயில் வறியேன் பெயர்கு

என்று உருகி நிற்கிறாள். இந்த இரண்டு அடிகளைப் படிக்கும்போது, நாம் நம் வீட்டையும் அறையையும் எதிரே உள்ள மேசையையும் மேசைமேல் உள்ள புத்தகத்தையும் அதில் உள்ள எழுத்துக்களையும் சொற்களையும் சொற்களின் பொருளையும் சிறிது நேரமேனும் மறந்து, கற்பனையுலகில் பறந்து மதுரை நகரத்தின் மேற்கு வாயிலைக் கண்டு கிழக்கு வாயிலை நினைக்க வேண்டும்; கண்ணகியாய் உருக்கொண்டு கோவலனோடு கிழக்கு வாயில் வழியாகப் புக வேண்டும்; உடனே மேற்கு வாயிலில் கணவனை இழந்த கண்ணகியாய் நின்று நைந்துருக வேண்டும்; இவ்வாறு உணரவல்லவர்க்கே, கண்ணகியின் அடுத்த நிலை விளங்கும்.

அவல என்னாள் அவலித்து இழிதலின்
மிசைய என்னாள் மிசைவைத்து ஏறலின்

என்ற அடிகளைப் படிக்கும்போது நாம் மறைந்துவிட வேண்டும். மேடு பள்ளம் அறியாமல் தன்னை மறந்து துயருருவாய் நடந்து செல்லும் நங்கையைக் காண வேண்டும். செல்லும் வழியில் சிந்தை இல்லாமல், மேட்டிலும் பள்ளத்திலும் கால் வைத்துத் தடுமாறிச் செல்லும் அந்தத் துயரத்தின் உருவைக் கற்பனையில் காணும் திறன் பெற்றால்தான், இளங்கோவடிகளின் அந்த இரண்டு அடிகளைப் படித்து அந்தத் துயரத்தை அநுபவித்த பிறகு வேண்டுமானால், புத்தகங்களில் உள்ள சொற்களும் எழுத்துக்களும் ஏடுகளும் மேசையும் அறையும் வீடும் நினைவுக்கு வரலாம்.

கவிதை முதலான எந்தக் கலையை அநுபவிக்க வேண்டுமானாலும் இவ்வாறு கற்பனையுலகத்தைப் படைக்கவும் காக்கவும் திறன் வேண்டும். இது ஓரளவு பயிற்சியாலும் வரும்; ஓரளவு உள்ளப் பண்பட்டாலும் வரும். பயிற்சியும் பண்பாடும் வளர வளர நனவுலகத்தை விட்டு அந்தக் கற்பனை யுலகத்துக்குச் சென்று மீளும் திறன் வளரும். கற்பனை யுலகத்தில் வாழும்போது நம்மை மறந்து துயில்வது போன்ற அநுபவம் ஏற்படும். ஆனால் நனவுலகம் மறந்து போவதில்லை; நனவுலகத்து இன்ப துன்ப உணர்வு கொண்டே அந்தக் கற்பனை யுலகத்தைக் கண்டு அநுபவிக்கிறோம். ஆகையால் இது ஆழ்ந்த உறக்கம் போன்றது அன்று. சுற்றிலும் நடப்பவற்றை அறிந்துகொண்டே மெல்ல உறங்கிக் கிடக்கும் அறிதுயில் போன்றது ஆகும். இத்தகைய அறிதுயில் கொண்டு கற்பனை யுலகத்தைப் படைத்துக் காக்க வல்ல கலைஞரே கலைபற்றிய ஆராய்ச்சி முடிவுகள் வழங்கவல்ல அறிஞராவர்.

அக்டோபர், 1949

# தமிழ்ச் சிறுகதைகளும் பெண்களும்

'ஸவிதா'

'இன்று தமிழ் இலக்கியம் என்ன நிலையில் இருக்கிறது? எவ்வாறு வளர்ச்சி அடைந்திருக்கிறது?' என்று கேட்டால் என்ன சொல்வது? கடந்த அறுபது எழுபது ஆண்டுகளில் தமிழ் இலக்கியம் அடைந்துள்ள வளர்ச்சியைக் குறித்து உண்மையில் நாம் பெருமையே கொள்ளவேண்டும். எழுத்துத் துறையில் முதல் முதலாகக் கதாசிரியர்களாகத் திகழ்ந்தவர்கள் வேதநாயகம்பிள்ளை, ராஜம் ஐயர், மாதவையா, பண்டித நடேச சாஸ்திரி ஆகியவர்களைக் குறிப்பிட்ட பிறகே பிறரைச் சொல்ல முடியும். எழுத்துத் துறையில் அவர்கள் என்றும் நிலைத்திருப்பார்கள் என்பதில் சந்தேகமில்லை.

இன்று எழுதுவதில் எல்லாருக்கும் ஏற்பட்டிருக்கும் ஆர்வம் இவ்வளவு அவ்வளவு என்று சொல்ல முடியாது. அநேகமாய் ஒவ்வொருவருக்கும், 'நாம் எழுதவேண்டும்! நாம் எழுதுவது பத்திரிகைகளில் வரவேண்டும்' என்ற அவா நிறைய இருக்கிறது. நாட்டில் கணக்கில்லாத பத்திரிகைகள் தோன்றி அந்த ஆர்வத்தை மேலும் வளர்ப்பதையும் பார்க்கிறோம். இன்று தமிழில் எழுத்தாளர்களுக்குக் குறைவில்லை. அவர்கள் எழுதும் நாவல்களும் கதைகளும் தினம் தினம் அச்சாகி வெளிவருவதையும் காண்கிறோம். பத்திரிகைகள் எல்லாமே சிறுகதைகள் மயமாகவே காட்சியளிக்கின்றன. ஆயினும் பெற்றதெல்லாம் பிள்ளையாகுமா என்பது போல் எழுதிய அவை யாவும் வெறும் காதற்கதைகளாக இருப்பதையே காண்கிறோம். கருத்தும் இல்லை; மொழிவளமும் இல்லை.

ஓர் இளைஞனும் ஒரு யுவதியும் சந்தித்துக் காதல் கொள்வது, அக்காதலுக்கு இடையூறுகள் நேர்ந்து அவர்கள் கஷ்டப்படுவது, முடிவில் அந்த இன்னல்கள் நீங்கி அவர்கள் மணமாகி இன்புறுவது-இவ்வாறுதான் பெரும்பான்மையான கதைகளின் போக்கு அமைந்திருக்கும்; அல்லது சாதாரணக் குடும்பக் கதையாக இருக்கும். கல்யாணமாகாத பெண்களுக்கு வரன் தேடும் கஷ்டம்; வரதட்சிணைக் கொடுமை இவற்றைச் சொல்லும் கதைகளையே திரும்பத் திரும்பப் பல கோணங்களில் படிப்பதென்றால் வாசகர்களுக்கு அலுப்புத் தட்டாமல் என்ன செய்யும்?

துப்பறியும் நாவல்கள், மர்மக்கதை போன்றவற்றை உருவாக்கும் கற்பனையில் மேல் நாட்டினர் அடைந்திருக்கும் தேர்ச்சி இங்கு எழுத்தாளர்களிடையே அந்த அளவு இல்லை. இதிலிருந்து, இதுகாறும் தமிழில் வெளிவந்துள்ள நாவல்கள், கதைகள் யாவற்றையுமே

குறைத்துப் பேசிவிட்டதாகக் கொள்ளக்கூடாது. உலகில் மிகச் சிறந்த கதைகள் என்று புகழ் பெற்றவற்றோடு சமமாகச் சொல்லக்கூடிய கதைகள் தமிழில் நிச்சயமாக இருக்கின்றன. ஆனால் அவை எண்ணிக்கையில் மிகக் குறைவானவை என்பதே உண்மை. விக்டர் ஹியூகோ, டிக்கன்ஸ் போன்ற பிரபல மேல்நாட்டு ஆசிரியர்களைப் பார்ப்போம். அவர்கள் எழுதிய நாவல்கள் வெறும் பொழுதுபோக்காக எழுதியவையா? சமூகத்தில் உள்ள ஊழல்களையும் அவற்றால் ஏழை மக்கள் படும் சிறுமைகளையும் துன்பங்களையும் கண்டு மனமிரங்கி அவற்றை அகற்றும் முயற்சியில் உருவானவை அல்லவா?

இது பத்திரிகை யுகம். வாரப் பத்திரிகைகளும் மாதப் பத்திரிகைகளும் கணக்கில்லாமல் தோன்றிக்கொண்டே இருக்கின்றன. அதற்கேற்ப எழுத்தாளர்களும் மலிந்துவிட்டார்கள். ரசமான விஷயங்களைத் தேர்ந்தெடுத்துப் பிரசுரிக்க வேண்டிய பெரும் பொறுப்பு அந்தப் பத்திரிகைகளை நடத்தும் ஆசிரியர்களுடையது. வாரப் பத்திரிகைகளில் வாரம் வாரம் தவறாமல் கதைகள் வரவேண்டும். காதல், சமூகம், குடும்பம் இவற்றில் உள்ள பிரச்னைகளை நன்கு ஆராய்ந்து எழுதப்படும் கதைகள் வாசகர்கள் விரும்பிப் படிப்பவை. இன்று நாட்டில் தீவிரப் பிரச்னையாக விளங்குவது வரதட்சிணை. அதைப் பற்றியும் ஏராளமான கதைகள் வந்திருக்கின்றன. ஆனால் அவை அத்தீமையை ஒழிப்பதற்கு வேண்டிய எழுத்தும் வேகமும் அழுத்தமும் படிப்பவர் மனம் நெகிழும்படியான உருக்கமும் அமைந்திருப்பனவாய்க் கூறமுடியுமா?

''சிறுகதை என்பது சிறு ஜன்னல் வழியாய் நாம் உலகத்தைக் காண்பது'' என்று சொல்வதுண்டு. அதிலிருந்து நம் மனத்தில் பதிந்த உண்மைகளைச் சுவையாக எடுத்துச் சொல்ல நமக்கு ஏற்ற சக்தி இருந்தால் சிறந்த சிறுகதைகளைப் படைத்துவிடலாம். இப்போதெல்லாம் ஆரம்பமும் முடிவும் இன்றியே கதைகள் எழுதப்படுகின்றன. அவற்றைப் பத்திரிகைகள் அப்படியே பிரசுரிக்கவும் செய்கின்றன. ஆனால் இத்தகைய கதைகளைப் படிப்பதால் நமக்கு மனநிறைவு எவ்வாறு கிட்டும்? இப்போது பெரும்பாலும் ஆண் பெண் உறவு சம்பந்தமான கதைகளையே பத்திரிகைகள் வரவேற்கின்றன. சிறிதும் கூச்சமோ தயக்கமோ இன்றி எவ்வளவு வெளிப்படையாய் வர்ணித்து எழுதலாமோ அவ்வாறு வெளிப்படையாய்க் கதைகள் எழுதப் பெறுகின்றன. தனிமையில் படிக்கும்பொழுதுகூட ஒரு பெண் முற்றும் சங்கோசமின்றி அவற்றைப் படிக்க இயலுமா என்பது சந்தேகம்.

மனிதன் இருவித இயல்புகளுடன் படைக்கப்பட்டவன். ஒன்று உயர்ந்தது; மற்றொன்று தாழ்ந்தது. இந்த இரண்டு இயல்புகளுக்குமிடையே அவனுக்கு எப்போதும் பெரும் போராட்டந்தான் என்பதை அறிவோம். ஆனால் தன் முயற்சியினால் தாழ்ந்த இயல்பை வென்று உயர்ந்த நிலையை அடைந்து தெய்வாம்சத்தை வளர்க்கும் லட்சியத்தைத் துறந்து கீழ்த்தரமான உணர்ச்சிகளை வளர்த்து அவற்றில் உழல்வது எத்தனை பரிதாபகரமானது! அப்புறம் மனிதனுக்கும் மிருகத்துக்கும் என்ன வித்தியாசம்?

இவ்வாறு வாய்விட்டு வெளியிடத் தயங்கும் அந்தரங்கமான அற்ப உணர்ச்சிகளைப் பகிரங்கமாக்கி அவற்றை மேலும் தூண்டிவிடும் வகையில் எழுதுவதனால் விளையும் பயன் என்ன?

இன்று பத்திரிகைகளை நடத்துவோர் பெரும்பாலும் ஆண்களாகவே இருக்கின்றனர்; ஆனால் பத்திரிகை படிப்போர் ஆண் பெண் இருபாலாரும் அல்லவா? அவ்விருவருடைய ருசியும் ஒன்றாகவே இருக்குமா?' உடலமைப்பில் வேற்றுமை இருப்பதுபோல் இருவர் மன இயல்பிலும் வேற்றுமை இருப்பது நியாயமே அல்லவா? ஒரு பெண்

ணின் மனநிலையில் இருந்துகொண்டு பார்த்தால்தான் அவள் உள்ளத்துக்கு மகிழ்வையோ வருத்தத்தையோ அளிக்கும் எவ்வளவோ நுட்பமான விஷயங்கள் ஆண்பிள்ளையின் கற்பனைக்கு எட்டக் கூடியனவாக இருக்கும். ஆனால் அது அவ்வளவு சுலபமானதல்ல. ஆகவே பெண்களே தங்கள் குற்றங் குறைகளை ஆராய்ந்து எழுதினால் அது நிச்சயம் எவ்வளவோ ரசமாகவும் பயனுள்ளதாயும் அமையும். இப்போது பெரும்பாலும் ஆண்கள் எழுதும் ரீதியை அனுசரித்தே பெண்களும் சாதாரணக் காதற்கதைகள் எழுதுவதோடு திருப்தி அடைந்து விடுகிறார்கள். இது தவறு என்று அவர்கள் தெரிந்து கொள்ள வேண்டும். எந்தத் துறையிலும் ஆடவர்களுக்குத் தாங்கள் கொஞ்சமும் சளைத்தவர்கள் அல்ல என்பதை நிரூபிக்கும் ஆவலுள்ள பெண்கள் தாங்களே பத்திரிகை ஆசிரியர்களாயிருந்து நடத்துவதில் மட்டும் அவ்வளவு சிரத்தை இல்லாமல் இருப்பது பெரும் குறையாகவே எனக்குத் தோன்றுகிறது. பெண்களுக்குப் பிரத்யேகமாயும் அவர்கள் படித்துப் பயன் பெறக்கூடியவையாயுமுள்ள விஷயங்களை அவர்களைக் கொண்டே இன்னும் அதிகமாய் எழுதும்படி செய்யலாம். நாம் இப்போது இரண்டும் கெட்ட நிலைமையில் இருக்கிறோம். புது நாகரிகமானது சமூகத்தை இன்னும் முற்றும் ஆட்கொண்டு விடவில்லை. நம் புராணக் கொள்கைகள், சம்பிரதாயங்கள் யாவற்றையும் கைவிடாமல் மக்கள் இன்றும் சிரத்தையோடுதான் போற்றி வருகிறார்கள். பெண்கள்தாம் ஆண்களைக் காட்டிலும் நமது பண்பாட்டை முற்றும் நசித்துப் போகாமல் காக்கிறார்கள். இல்லாவிட்டால் அந்த உறுதியான அஸ்திவாரமானது தளர்ந்து பிறகு சமூகம் முழுவதுமே ஆட்டம் கண்டுவிடும்.

இது பெண்கள் வீட்டுக்குள் அடைந்து கிடக்கும் காலம் அல்ல. அவர்கள் வெளியில் சகஜமாய்ப் பல பணிகளைக் கவனிப்பவர்களாக இருக்கிறார்கள். ஆண்களுக்குச் சரியாய் அவர்களுடன் கூடவே உட்கார்ந்து அலுவலகங்களில் வேலை செய்கிறார்கள். ஆண்களும் பெண்களும் இவ்வாறு சேர்ந்து சகஜமாகப் பழகும் நிலைமை இப்போது வெகு சாதாரணமாகிவிட்டது. இது நம் பெண்களின் இயல்புக்கும் பண்பாட்டுக்கும் எவ்வளவு தூரம் ஏற்றதாயிருக்கும் என்பதை நாம் கவனிக்க வேண்டும். மேல்நாட்டு நாகரிகத்துக்கு இது மிகவும் ஏற்றதாயிருக்கிறது. குழந்தைப் பருவம் முதற்கொண்டே ஆண்பெண் இருபாலாருமே வித்தியாசம் இல்லாமல் பழகுவதால் விதவிதமான உணர்ச்சிகளுக்கு அங்கே அதிக இடம் இல்லை. ஆனால் இங்கே நாம் அவ்வாறு னதரியமாய்க் கூறமுடியுமா? புதிதாய் மணமான தம்பதிகளுக்குள் இதன் மூலம் அநாவசியமான மனஸ்தாபங்களும் சச்சரவுகளும் நேரக்கூடும். ஆயினும் ஆண்களோடு சம உரிமையையும் சம அந்தஸ்தையும் நிலைநாட்டிய பெண்கள் முன்போல் சாதாரணக் குடும்ப வாழ்க்கை நடத்துவதோடு திருப்தி அடைந்துவிடுவார்களா? காலத்துக்கேற்ப எல்லாம் மாறித்தானே ஆகவேண்டும்? இருப்பினும் நம் பண்புக்கும் நம் இயல்புக்கும் ஏற்றவாறு இந்தப் பழக்கங்களுக்கு ஒரு வரம்பு ஏற்படுத்திக் கொண்டால்தான் முடிவில் நன்மை உண்டாகும். இவ்விஷயங்களைப்பற்றியெல்லாம் சிந்தித்துச் சிறந்த கதைகள் எழுதினால் சமூகத்துக்கு உண்மையான தொண்டு செய்ததாகும்.

இலக்கியத்தின் சீரிய நோக்கம் என்ன? மனிதன் தன் தாழ்ந்த இயல்பை வென்று தெய்வாம்சம் பொருந்திய உயரிய இயல்பைப் பெறுவதற்குத் துணை செய்வதே அல்லவா? அதை விட்டுக் கீழ்த்தரமான உணர்ச்சிகளுக்குத் தூண்டுகோலாகி அவனை மேலும் கீழிறங்கச் செய்வது எவ்வளவு தவறானது.

புது நாகரிகத்தின் விளைவாக நமக்கு இம்மாதிரி பிரச்னைகள் ஏற்படுகின்றன. இவ்வாறு ஆண்களும் பெண்களும் சங்கோசமின்றிப்

பழகுவதால் சில சமயம் கணவன் மனைவிக்குள் எழும் சாதாரணப் பூசல்கள் முற்றிப் போய்ச் சட்டத்தின் மூலம் கோர்ட்டுக்குப் போய் விவாகரத்தைக் கோரும் நிலையை அடைந்து விடுகின்றன. புனிதமான தாம்பத்திய உறவை அசட்டை செய்து சட்டத்தின் மூலம் கணவனைப் பிரிந்து வாழ்வது அல்லது துணிந்துவேறு மணமே புரிந்துகொள்வது இப்போது சாதாரண சம்பவங்களாகவே ஆகிவிட்டன. சுதந்தரத்தைப் போற்றும் பெண்கள் ஜாதிக் கட்டுப்பாட்டை மீறி வேறு மதத்தினரைக் காதல் மணம் புரிந்துகொள்வதும் இப்போது சாதாரணச் சம்பவந்தான். இவற்றினால் விளையும் பிரச்னைகளையும் தீமைகளையும் பற்றி நன்கு ஆராய்ந்து எழுதப் பெறும் கதைகள் சிறந்தவையாக அமையும்.

முற்காலத்தில் வெளியே உத்தியோகம் தேடிச் சென்று சம்பாதிப்பவன் ஆண், வீட்டுக்குள் இருந்து குடும்ப நிர்வாகம் செய்வது பெண் என்ற திட்டம் இருந்தது. ஆனால் ஆணுக்கும் பெண்ணுக்கும் வித்தியாசம் இல்லை என்ற கொள்கையை நிலைநாட்டும் புது நாகரிக மானது அத்திட்டத்தை மாற்றியமைத்து விட்டது. தற்காலம் மத்திய வகுப்பைச் சேர்ந்த சாதாரணக் குடும்பங்களில் புருஷனுடைய சம்பாத்தியம் ஒன்றினால் மட்டும் குடும்ப நிர்வாகம் நடைபெறுவது என்பது சாத்தியம் அல்ல. மக்களின் வாழ்க்கைச் செலவும் தரமும் உயர்ந்து விட்டன. செலவுக்குப் பணம் போதவில்லை. இந்த நிலையில் மனைவி படித்தவளாயிருந்தால் அவளும் ஏதேனும் ஒரு வேலையில் அமர்ந்து சம்பாதித்தால்தானே குடும்பம் கவலையில்லாமல் நடக்கும்? அப்பொழுது குழந்தைகளின் பராமரிப்பு, வீட்டுப் பராமரிப்பு ஆகியவற்றோடு உத்தியோகம் செய்யும் பொறுப்பும் மனைவியின் தலையில் சுமந்துவிடுகிறது. தாய் தந்தையர் இருவரும் வேலைக்குப் போய் விட்டால், குழந்தைகளை யார் கவனித்துக்கொள்வார்கள்? தக்க சூழ் நிலையில் வளர வேண்டிய இளம் பருவத்தில் பெற்றோரின் அன்பும் ஆதரவும் இன்றிக் குழந்தைகள் வளர வேண்டியதாகிறது. அதனால் குழந்தைகளின் வருங்கால நல்வாழ்வே பாதிக்கப்பட்டுவிடுகிறது.

இத்தகைய பிரச்னைகளின் விளைவாக அந்நியோந்நியமாயிருந்த குடும்பம் ஒற்றுமை குலைந்து வீணாகும் பரிதாபத்தை வாசகர்களின் மனத்தில் பதியுமாறு எழுதியுள்ள கதைகளே இன்னும் அதிகமாக வரவேண்டும். இவற்றையெல்லாம் விட்டு மனிதனின் தாழ்ந்த இயல்பையும், சமூகத்தில் ஏற்படும் விபரீத மாறுதல்களையும், ஆண் பெண் உறவுபற்றிய விரசமான படங்கள் வர்ணனைகளுடன் அப்படியே சித்திரிப்பதாகப் பெருமையுடன் எழுதியுள்ள கதைகளையும் படிக்கும் இளம் வயதினர் உள்ளங்கள் சில்லறைச் சம்பவங்களுக்கும் கீழ்த்தரமான உணர்ச்சிகளுக்கும் ஆளாகாமல் இருக்க முடியுமா? பிற்காலம் நாட்டின் நலத்துக்கும் முன்னேற்றத்துக்கும் அவர்களன்றோ ஆதாரமாயுள்ளவர்கள்?

வாழ்க்கையின் உன்னத லட்சியங்களும், பண்பும் அழியாமல் இருக்கவேண்டுமானால் இலக்கியத்தின் தரம் கெடாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். அது பெரும்பாலும் ஆசிரியர்கள், எழுத்தாளர்கள் இவர்கள் கையில்தான் இருக்கிறது. ஆகவே, இது அவர்கள் இன்றியமையாத கடமையும் பொறுப்புமாகும்.

மே, 1980

# இளங்கோ செய்த உருவகம்

அ. ச. ஞானசம்பந்தன்

பெருங்காப்பியங்கள் செய்த கவிஞர்கள் அனைவரும் உவமை, உருவகம் என்பவற்றைச் சிறந்த முறையில் கையாண்டுள்ளனர். அப்புலவர்களின் திறமைக்கு ஏற்ப அவர்கள் கண்ட உவமைகளும் உருவகங்களும் சிறப்படைந்தன என்று கூறுவதில் தவறு ஒன்றும் இல்லை. சாதாரண உவமை, உருவகம் என்பவற்றைக் காட்டிலும் குறியீட்டு உருவகம் (symbolism) என்பதை ஒரு சில கவிஞர்களே கையாண்டுள்ளனர். அவ்வாறு கையாளுவதிலும் இரண்டு வழிகளை மேற்கொண்டனர். தம் காப்பியத்தில் இடம் பெற்றுள்ள நாட்டை வருணிக்கும் முறையிலேயே அக் காப்பியத்தின் உட்கோள் யாது என்பதைக் குறிப்பாகக் காட்டிச் சென்றனர்.

கம்பநாடன் காப்பியம், தசரதகுமாரனும் தசரதனும் ஆட்சி செய்த நாட்டை வருணிக்கும் முறையிலேயே இராமகாதையின் உட்கோளை விளக்க முற்பட்டது. இராமாயணத்தின் உட்கோள் அதிகாரத்தில் இருக்கும் ஒருவன் தவறான காமம் கொண்டதையும் அதனால் விளைந்த பயனையும் கூறுவதேயாகும். இராமன் ஆட்சி செய்த நாட்டில் நடைபெறாத இது இராவணன் நாட்டில் நடைபெற முடிந்தது. எனவே கவிஞன் இவ்விரண்டையும் குறிப்பாலும் நேர்முகமாகவும் விளக்க ஓர் உத்தியைக் கையாண்டான். கோசலத்தில் இத் தவறு நிகழ முடியாது என்பதை முதற் காண்டத்தின் முதற் படலத்தில் கோசல நாட்டு மாதர்களின் கண் என்றும் நெறி தவறிச் செல்வதில்லை என்பதை, 'கண் எனும், பூசல் அம்பும் நெறியின் புறம்செலாக் கோசலம் புனை ஆற்று அணி கூறுவாம்' (பால. 1-1) என்று கூறுகிறான்.

ஆனால் அந்தக் கவிஞன் நாட்டின் வளம் கூற வந்து முழுவதுமாக நாட்டை வருணிக்கத் தொடங்குகிறான். நால்வகை நிலமும் உடைய கோசலத்தில் மருதத்தை மட்டும் அரசனாக உருவகம் செய்கிறான்.

> 'தண்டலை மயில்கள் ஆடத் தாமரை விளக்கம் தாங்க
> வண்டுகள் இனிது பாட மருதம்வீற் றிருக்கும் மாதோ!''
> (பால. 2-4)

என்ற பாடலில் மருத நிலம் ஓர் அரசனாக உருவகஞ் செய்யப்பெற்றுள்ளமை அறியலாம். 'மருதம் வீற்றிருக்கும்' என்று கூறியவுடன் மருதத்திணை நினைவுக்கு வரவும் மருதத் திணை என்பது வரம்பு மீறிய காமம் என்பது நினைவுக்கு வரவும் கவிஞன் ஓர் உத்தியைக் கையாள்கிறான். தொடக்கத்திலேயே காப்பியத்தின் உட்கோளை நாம் அறிந்து கொள்ளுமாறு உருவகஞ் செய்தல் காப்பியப் புலவர்கள் கையாளும் நெறி.

இம் முறையில் சிலப்பதிகாரக் காப்பியம் இயற்றிய இளங்கோவும் பற்பல உருவங்களைக் கையாண்டுள்ளார். ஆனால் எடுத்த எடுப்பில் மங்கல வாழ்த்துப் பாடல் என்ற தலைப்பிலேயே காப்பிய மாந்தர் மூவரையும் நாம் அறியுமாறு செய்து விடுகிறார். குறியீட்டு உருவகத்தில் (symbolism) கவிஞர் இம்முறையைக் கையாண்டுள்ளது இதற்கு முன்னும் பின்னும் எந்தத் தமிழ்க் கவிஞரும் செய்யாத ஒரு சிறப்பாகும். சிலம்பின் தலைமாந்தர் மூவர் என்பதும், கற்புக் கடம்பூண்ட கண்ணகியும், அவள் தலைவன் கோவலனும், அவன் சிறப்பு வெளிப்படக் காரணமாயிருந்த மாதவியும் ஆகிய மூவருமே அவர்கள் என்பதும் அறியப் பட்டனவே யாகும்.

காப்பியத்தின் முழுப் பகுதியிலும் இடம் பெறும் கண்ணகியும் இடைப் பகுதிவரை இடம் பெறும் கோவலனையும் முற்பகுதியில் மட்டும் இடம் பெறும் மாதவியையும் யாரே மறத்தல் கூடும்? இவர்கள் வாழ்க்கை முழுவதையும் எடுத்துக்கொண்டு இவர்களின் பண்பு நலன்களை ஆராய்ந்து காண்டல் கூடும். அவ்வாறு ஆராய்ந்து கண்டால் என்ன விடை கிடைக்குமோ அதனை மங்கல வாழ்த்தின் முதல் மூன்று பாடல்களில் விளக்க வைக்கிறார் கவிஞர்:

'திங்களைப் போற்றுதும் திங்களைப் போற்றுதும்!
கொங்குஅலர் தார்ச்சென்னி குளிர்வெண் குடைபோன்று, இவ்
அம்கண் உலகு அளித்தலான்.'

'ஞாயிறு போற்றுதும்! ஞாயிறு போற்றுதும்!
காவிரிநாடன் திகிரிபோல், பொன் கோட்டு
மேரு வலந் திரிதலான்.'

'மாமழை போற்றுதும்! மாமழை போற்றுதும்!
நாமநீர் வேலி உலகிற்கு, அவன் அளிபோல்,
மேல்நின்று தான்சுரத்தலான்!'

சந்திரனை வணங்குவோமாக. குளிர்ந்த மாலையணிந்த சோழனின் வெண்கொற்றக்குடை போல் இவ் வுலகிற்குக் குளிர்ந்த கிரணங்களைப் பொழிதலால். சூரியனை வணங்குவோமாக! காவிரிநாடனாகிய சோழனின் ஆஜ்ஞா சக்கரம் போல் மேரு மலையைச் சுற்றி வருதலால். மழையை வணங்குவோமாக, சோழனின் அருளைப் போல இவ்வுலகினை மழை பொழிந்து காத்தலால்.

மேலாகப் பார்க்கும்போது பழைய மரபு பற்றி, திங்கள், ஞாயிறு, மழை என்பவை போற்றப்பட்டதாக நினைத்துவிடுவோம். ஆனால் இவை மூன்றும் குறியீட்டு உருவகங்களாகப் (symbolic use) பயன்படுத்தப் பெற்றுள்ளன என்பதை ஆழ்ந்து நோக்குவார் அறிதல் கூடும். முதலாவதாக உள்ள திங்களை எடுத்துக் கொள்வோம். திங்கள் தனக்கென ஒளி இல்லாதது; ஞாயிற்றிடம் வாங்கிய ஒளியைப் பிரதிபலிப்பது; அதுவும் அந்த ஞாயிறு இல்லாத நேரத்தில் மட்டுமே ஒளி தரக்கூடியது. ஒவ்வொரு பட்சத்திலும் தேய்வதும் வளர்வதும் தன்னியல்பாக் கொண்டது. தான் வளர்வதாலும் தேய்வதாலும் தன்னைக் கண்ட பிறர் மகிழ்ச்சியும் துயரமும் அடைவதன்றித் தனக்கென மகிழ்ச்சியோ துயரமோ இல்லாதது திங்கள்.

இப் பண்புகள் அனைத்தையும் ஒட்டு மொத்தமாகக் காண்பார் காப்பியத் தலைவியாகிய கண்ணகியை நினையாமல் இருத்தல் இயலாது. கண்ணகி தன் கணவனாகிய கோவலனிடம் பெற்ற ஒளி கொண்டே சிறப்படைந்தாள். கதிரவன் கொடிய கிரணம் திங்களிடம் ஒளி உண்டாக்குவது போலக் கோவலனுடைய 'போற்றா ஒழுக்கம்' கண்ணகியின் கற்பு வெளிப்படக் காரணமாயிற்று. பூர்ணிமை அன்றுகூடக் கதிரவன் மறைந்து விட்ட பின்னரே திங்கள் ஒளி விடுதல் போல

கோவலன் கொலையுண்ட பின்னரே கண்ணகி தன் ஒளியைக் காட்ட முனைந்தாள். கோவலன் உடன் இருந்தபொழுது பெருமகிழ்ச்சியுடன் கண்ணகி இருந்ததாகவும், அவனை விட்டுப் பிரிந்திருந்த காலத்துப் பெரு வருத்தம் அடைந்ததாகவும் கவிஞர் கூறவில்லை; அவளுடைய இன்பமும் துன்பமும் அவனுடைய இன்ப துன்பங்களை ஒட்டியே இருந்தன. இதனாலேயே கவுந்தி அடிகள் அவளைப் பற்றிக் கூறும்போது, 'கணவற் குற்ற கடுந்துயர் அல்லது தன்துயர்காணாத் தகைசால் பூங்கொடி' எனக் கூறினார். அவள்அதுபற்றிக் கவலைப்படவில்லையாயினும் உற்றார், உறவினர், ஊரார் அனைவரும் அவளுக்காக வருந்தினர். இத்துணைப் பொதுத் தன்மைகளாலும் திங்கள் கண்ணகியின் குறியீடாக நிற்றலைக் காணலாம்.

அடுத்துக் காண வேண்டியது ஞாயிறு ஆகும். பல்லாற்றானும் சிறப்புடைய ஞாயிறு தன் ஒளியால் உலகிலுள்ள பல்வேறு உயிர்களை வாழ வைப்பது உண்மையேயாயினும் அதன் வெப்பத்தால் சில உயிர்களையும் சில தாவரங்களையும் வாட வைப்பதும் மறத்தற்கில்லை. மேலும், ஞாயிற்றின் தன்மையை அதனை நேரிடையாகக் கண்டு உணர்தல் முடியாததாகும். அதே போலக் கோவலன் தன் தலையளியால் மாதவியை வாழ வைத்தானாயினும் கண்ணகியும் அவன் உறவினர்களும் அதனால் வாட நேர்ந்ததை யாரும் மறத்தற்கில்லை. ஒரு சில உயிர்களையும் தாவரங்களையும் ஞாயிறு வாட வைத்தமையால் ஞாயிற்றைக் கொடியவன் என்று யாரும் கூறார். அதே போலத் தன்பால் நெருங்கிய காரணத்தால் கண்ணகி, பெற்றோர் என்போரை வாட விட்டானாயினும், எங்கிருந்தோ வந்த கிழட்டு அந்தணனையும், பார்ப்பனியையும், சுற்றத்தார் என்பவரையும் வாழ வைத்த பண்புடையான் கோவலன் என்பதையும் மறத்தற்கில்லை. கதிரவன் பண்பை அறிய முடியாதவாறு போலக் கோவலன் பண்பையும் ஓரிரு செயல்களை மட்டும் கொண்டு முடிவு செய்தல் இயலாத காரியம். மாங்காட்டு மறையோரும் கோவலனை நோக்கி 'கருணை மறவன்,' 'இல்லோர் செம்மல்', செல்லாச் செல்வன்' என்றெல்லாம் புகழ்வதுடன், 'இம்மைச் செய்தன யான் அறி நல்வினை' (சிலம்பு. 15-91) என்றும் புகழ்கிறான். அவன் வரலாறு கூறும் இளங்கோவும் அவனை ஒரு கடிய சொல்கூடக் கூறாமலே கதையை நடத்திச் செல்கிறார்.

எனவே கதிரவனுடைய இந்தச் சிறப்புத் தன்மைகள் கோவலனை நினைவூட்டி நிற்றல் ஆழ்ந்து அறியத் தக்கதாகும்.

இனி மூன்றாவதாக உள்ளது மழை. மழை இனிமையுடையது. தக்கார், தகவிலார் என்ற வேறுபாடற்று யாவற்றையும் வாழ வைப்பது. எனினும் மழை எவ்வாறு எங்கே உண்டாகிறது? பயன்படாத உப்புநீர் நிறைந்த கடலில்தானே மழை பிறக்கிறது? அது கதிரவன் கூட்டுறவால்தானே உப்புநீர் ஆவியாக மாறி மழையாகப் பொழிகிறது? 'நூலோராயினும் மேலோராயினும், பால்வகை தெரிந்த பகுதியோர் ஆயினும் பிணி எனக் கொண்டு பிறக்கிட்டு ஒழியும்' கணிகையர் குலத்தில் தோன்றினவள்தானே மாதவி? எனவே அக்குலம் உப்புநீர் போன்றது என்பதில் தடை என்ன? ஆனால் அந்த உப்புநீர் கதிரவன் தொடர்பைப் பெறுவதால் ஆவியாகி இனிய மழைநீர் ஆவது போல, அக்குலத்தில் தோன்றிய மாதவி, கதிரவனாகிய கோவலன் தொடர்பால் இனிய மழைநீராகிறாள்; பலரும் போற்றும் கற்புக்கரசியாக மாறுகிறாள். கண்ணகியோடு ஒப்ப வைத்து எண்ணத் தகுந்த பெருமை அடைகிறாள். எனவே கடலின் உவர்நீர் கணிகையர் குலத்தையும், கதிரவன் கோவலனையும், மழை மாதவியையும் குறிப்பிட்டு நிற்றல் சாலப் பொருத்தமானதே.

—அக்டோபர், 1973

# அதிமாஸமும் க்ஷயமாஸமும்

ஏ. குப்புஸ்வாமி ஐயர்

ராமு: தாத்தா, காலையில் ராம சாஸ்திரிகள் உங்களுடன் பேசிக் கொண்டிருந்தார்: நான் கிட்டே உட்கார்ந்து கேட்டுக் கொண்டிருந்தேன். பேசும்போது அடிக்கடி 'அதிமாஸம், க்ஷயமாஸம்' என்று சொல்லிக்கொண்டே இருந்தீர்களே. அதிமாஸம், க்ஷயமாஸம் என்றால் என்ன? நான் புரோகிதரைக் கேட்டேன். ''அட பயலே! நீ அதிகப் பிரசங்கி; உனக்கு இப்போது அதெல்லாம் சொன்னால் தெரியாது, போ'' என்று சொன்னார். திரும்பவும் வணக்கத்துடன் கேட்டேன். ''அற்ப விஷயத்தை அடிக்கடி கேட்கிறாய். ஒரு மாஸத்தில் 32-தேதிகள் வந்தால் அது அதிமாஸம். 29-தேதிகள் வந்தால் அது க்ஷயமாஸம்'' என்று சொன்னார். இது சரியென்று எனக்குத் தோன்றவில்லை.

தாத்தா: (சிரித்துக்கொண்டே) ராமு! அவர் போகட்டும். நான் சொல்கிறேன் கேள். அதிமாஸம் என்றால் அதிகமாஸம்; க்ஷய மாஸம் என்பது குறைந்துபோன அல்லது காணமற்போன மாஸம்.

ராமு: அப்படியா! இது என்ன வேடிக்கை! ஒரு வருஷத்துக்கு எப்போதும் 12- மாஸங்கள் திட்டமாக உண்டு. அதிகமாஸமாவது! ஆனால் 13-மாஸங்கள் உண்டா? க்ஷயமாஸம் என்றால் 11-மாஸங்களே வருமா?

தாத்தா: இரண்டு கேள்விகளும் சரியே. நீ நினைக்கிறபடியே 13-மாஸங்களும் வரும்; 11-மாஸங்களும் வரும். ஆனால் இவை சந்திரனின் மாஸங்கள். ஒரு வருஷத்தில் சூரிய மாஸங்கள் 12 என்பது திட்டம். இதற்குக் கூடுதல் குறைவு இல்லை. இந்த 12-சூரிய மாஸங்களுக்குள் அடிக்கடி 13-சந்திர மாஸங்களும், எப்போதாவது 11-சந்திர மாஸங்களும் நேரிடும்.

ராமு: அதெப்படி, தாத்தா?

தாத்தா: எப்படியா, உனக்குப் புரியும்படி சொல்கிறேன், கேள். சித்திரை மாஸத் தொடக்கத்தில் சூரிய வருஷம் தொடங்குகிறது. மறுபடி சித்திரை முதல் தேதிக்குமுன் முடிகிறது. சந்திர வருஷம் வேறு விதமாகத் தொடங்குகிறது. சித்திரை முதல் தேதிக்கு முன் நிகழ்ந்த அமாவாஸைக்குப் பிறகு சுக்ல ப்ரதமையில் சந்திர வருஷாரம்பம். இதையே ஸம்வத்ஸராதி என்கிறோம். ஆகவே சூரிய வருஷத்துக்கு முன்னேயே சந்திர வருஷம் தொடங்குகிறது. அதில் முதல் மாஸம் சைத்ரம்; பிறகு முறையே வைசாகம், ஜ்யேஷ்டம், ஆஷாடம், ச்ராவணம், பாத்ரபதம், ஆச்வினம், கார்த்திகம்,

மார்க்கசிரம், பௌஷம், மாகம் 'பால்குனம் என்று 12-சந்திர மாஸங்கள் ஒரு சந்திர வருஷம்.

ராமு: 12-மாஸங்கள் தாமே, 13-ஆவது மாஸம் எங்கே? மேலும் இந்த மாஸங்களுக்குச் சைத்ரம், வைசாகம் முதலிய பெயர் வரக் காரணம் என்ன?

தாத்தா: சித்திரை நட்சத்திரத்தில் பூர்ணிமை வருவதால் சைத்ரம், விசாகத்தில் பூர்ணிமை நிகழ்வதால் வைசாகம், கேட்டையில் ஜ்யேஷ்டம்; பூரத்தில் (பல்குனி) பூர்ணிமை வருவதால் பால்குனம் என்று பெயரிட்டார்கள். இப்படி 12-மாஸங்கள் ஒரு சந்திர வருஷமாகும்.

ராமு: ஆகட்டும். சித்திரைக்குப் பிறகு ஸ்வாதி, விசாகத்துக்குப் பிறகு அனுஷம், கேட்டையின் பின் மூலம், பூரத்தையடுத்து உத்தரம் இவைகளைக் காணோமே, இவைகளில் பூர்ணிமை வராதா.

தாத்தா: வரும். நட்சத்திரங்கள் 27; மாஸங்கள் 12. எந்த நட்சத்திரத்திலும் பூர்ணிமை வரக்கூடும். ஆனால் மாஸத்தில் ஒரு தரந்தான் முழுமதியைப் பார்க்கிறோம். முந்திய இந்திய ஜோதிடர் வெகு காலத்துக்குமுன்னே சொன்னதைத் தெரிந்துகொள். உன் சந்தேகம் தீரும்.

| | | | |
|---|---|---|---|
| சித்திரை-ஸ்வாதியில் | பூரணை | வந்தால் | |
| | | சைத்ரம் | 1 |
| விசாகம்-அனுஷத்தில் | ,, | வைசாகம் | 2 |
| கேட்டை-மூலத்தில் | ,, | ஜ்யேஷ்டம் | 3 |
| பூராடம்-உத்தராடத்தில் | ,, | ஆஷாடம் | 4 |
| சிரவணம்-அவிட்டத்தில் | ,, | ச்ராவணம் | 5 |
| சதயம், பூரட்-உத்தரட்டாதி | ,, | பாத்ரபதம் | 6 |
| ரேவதி, அசு-பரணியில் | ,, | ஆச்வினம் | 7 |
| கார்த்திகை-ரோகிணியில் | ,, | கார்த்திகம் | 8 |
| மிருகசீர்ஷம்-திருவாதிரை | ,, | மார்க்கசிரம் | 9 |
| புனர்பூசம்-பூசத்தில் | ,, | பௌஷம் | 10 |
| ஆயில்யம்-மகத்தில் | ,, | மாகம் | 11 |
| பூரம், உத்தரம்-ஹஸ்தத்தில் | ,, | பால்குனம் | 12 |

இப்படி 27 நட்சத்திரங்களுக்குள் எதில் பௌர்ணமி வந்தாலும் மாஸங்களின் பெயரைத் திட்டம் செய்திருக்கிறார்கள். இதுவே சந்திர வருஷத்தின் கதை.

ராமு: சூரிய வருஷத்தின் கதையென்ன? அதில் அடங்கிய மாஸங்களும் சித்திரை, வைகாசி, மாசி, பங்குனி என்று சந்திர மாஸங்களைப் போலவே இருக்கின்றன. இவைகளில் எவை முந்தி, எவை பிந்தி வந்தன?

தாத்தா: சந்திரன் வளர்ந்து தேய்ந்து, காணமற்போய் மறுபடியும் தோன்றி வளருவதையே நம் முன்னோர் முதலில் கவனித்தார்கள். நட்சத்திரங்களின் பெயர்கள் அவர்களுக்குத் தெரிந்திருந்தன. சுலபமாக, சந்திர மாஸங்களின் பெயரைத் திட்டம் செய்தார்கள். பௌர்ணமாஸி என்றால் மாஸம் முடிந்தது என்பது பொருள். ஆனால் இப்போது பெரும்பாலும் அமாவாஸ்யையே சந்திர மாஸ முடிவாகவும், மறுநாள் சுக்ல ப்ரதமையை அடுத்த மாஸ ஆரம்பமாகவும் வழங்குகிறோம்.

சந்திர மாஸத்தில் ஒவ்வொரு நாளுக்கும் திதி என்று பெயர். சூரிய மாஸ நாட்களைத் தேதி என்கிறோம். சந்திர வருஷத்தில் முதல் மாஸம் சைத்ரம். இந்த மாஸத்தில் மேஷரவி வரும். உடனே சூரிய

வருஷம் தொடங்கும். அதில் முதல் மாஸம் சித்திரை; வைசாகத்தில் ரிஷப ரவி; வைகாசி. இவ்விதமாகவே,

| | சந்திர மாஸம் | ஸங்கிரமம் | சூரிய மாஸம் |
|---|---|---|---|
| 1 | சைத்ரத்தில் | மேஷ ரவி | சித்திரை |
| 2 | வைசாகத்தில் | ரிஷப ரவி | வைகாசி |
| 3 | ஜ்யேஷ்டத்தில் | மிதுன ரவி | ஆனி |
| 4 | ஆஷாடத்தில் | கடக ரவி | ஆடி |
| 5 | ச்ராவணத்தில் | ஸிம்ம ரவி | ஆவணி |
| 6 | பாத்ரபதத்தில் | கன்யா ரவி | புரட்டாசி |
| 7 | ஆச்வினத்தில் | துலா ரவி | ஐப்பசி |
| 8 | கார்த்திகத்தில் | விருச்சிக ரவி | கார்த்திகை |
| 9 | மார்க்கசிரத்தில் | தனுஸ் ரவி | மார்கழி |
| 10 | பௌஷத்தில் | மகர ரவி | தை |
| 11 | மாகத்தில் | கும்ப ரவி | மாசி |
| 12 | பால்குனத்தில் | மீன ரவி | பங்குனி |

ராமு: சரி, சரி! நான் ஒன்று கேட்டேன், நீர் வேறொன்று சொல்லிக்கொண்டிருக்கிறீர். 13-மாஸங்கள் எப்படி வரும்? இதற்கு வழி சொல்லும்.

தாத்தா: நான் இதுவரை சொன்னது உனக்குத் தெரிந்ததா? சுருக்கமாகச் சொல்கிறேன். ஒரு சந்திர மாஸம் முடிவதற்குள், அதவது சுக்லப்ரதமை ஆரம்பம் முதல் மறு அமாவாசை முடிவதற்குள் ஒரு சூர்ய ஸங்கிரமம் நிகழவேண்டும்; இரண்டு ஸங்கிரமங்களுக்கு இடையே இரண்டு அமாவாசை வரக்கூடாது. அமாவாசை, ஸங்கிரமம், அமாவாசை, ஸங்கிரமம்—இப்படியே வரவேண்டும். அப்படி வந்தால்தான் சந்திர மாஸமும் சூர்ய மாஸமும் ஸமமாக வரும். சந்திர மாஸத்தின் பெயரே சூரிய மாஸத்துக்கு இணங்கும்.

ராமு: உம், தெரிந்தது; பிறகு?

தாத்தா: எல்லா விதிக்கும் ஒரு விலக்கு உண்டல்லவா? ஒரு சந்திர மாஸத்தில் சில வேளை ஸங்கிரமம் நிகழாமல் இருக்கக் காரணத்தைச் சொல்லுகிறேன்; கேள். சூர்ய வருஷம் சந்திர வருஷத்தைக் காட்டிலும் 11-திதிகளின் அளவு பெரிது. 32½ அல்லது 33-சூர்ய மாஸங்கள், அதாவது 2¾-சூர்ய வருஷங்களில் தோராயமாக 30 திதிகள் அதிகமாக வரும். இது ஒரு ஸந்திர மாஸமல்லவா? இந்த மாஸத்தில் ஸ்ங்கிரமம் நிகழாது; இதுவே அதிக மாஸம். இதற்குப் பிறகு ஸங்கிரமம் நிகழும். இந்தச் சந்திர மாஸத்துக்கும் முந்திய மாஸத்துக்கும் ஒரே பெயர். முந்தியது அதிமாஸம்; பிந்தியது நிஜமாஸம். ஓர் உதாரணம் சொல்லுகிறேன். இதோ பார், 1942-43 சித்திரபானு பஞ்சாங்கம்.

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 1942 | ஏப்ரல் | 15 | புதன் | சைத்ர * | 35·8 | நாழிகை |
| | மே | 14 | வியாழன் | ரிஷபரவி | 27·9 | ,, |
| | மே | 15 | வெள்ளி | வைசாக * | 13·4 | ,, |
| | ஜூன் | 13 | சனி | அதிக ஜ்யேஷ்ட * | 51·6 | ,, |
| | ஜூன் | 14 | ஞாயிறு | மிதுனரவி | 44·4 | ,, |
| | ஜூலை | 13 | திங்கள் | நிஜ ஜ்யேஷ்ட | 29·0 | ,, |

இப்போது பார். ரிஷபரவிக்கும் மிதுனரவிக்கும் இடையே இரண்டு அமாவாசைகள் நிகழ்ந்தன. இது பொது விதிக்கு விலக்கு. ஜ்யேஷ்ட அமாவாசை மிதுன ரவிக்குப் பிறகு வரவேண்டும்; அதாவது, ஜ்யேஷ்டத்தில் ஸங்கிரமம் இல்லையாதலால், ஜ்யேஷ்டம் அதிமாஸமாயிற்று. மிதுனரவி நிஜ ஜ்யேஷ்டத்தில் நிகழ்ந்தது. ஆகவே இந்தச்

சந்திர வருஷத்தில் 13-அமாவாசைகள்; ஆகையால் 13 சந்திர மாஸங்கள் வந்தன.

ராமு: சரி; ஆனால் அதிமாஸம் அடிக்கடி வரும்; அதாவது, 32½ அல்லது 33-சூர்ய மாஸங்களுக்குப் பிறகு வந்தே தீரும். சுருக்கமாக அல்லது விளக்கமாக இரண்டு ஸங்கிரமங்களுக்கு இடையே இரண்டு அமாவாசைகள் வந்தால் அதிமாஸம், சரிதானா?

தாத்தா: மிகவும் சரி; இனி நீ இதை மறக்கவேமாட்டாய்.

ராமு: சரி, க்ஷயமாஸம் வந்தால் 11-மாஸங்கள்தாம் என்று சொன்னீர். அவை சந்திர மாஸங்கள் என்பதில் சந்தேகமும் இல்லை. க்ஷயமாஸம் நிகழ்கிற வழியைச் சொல்லும்.

தாத்தா: 13-சந்திர மாஸங்கள் வந்தால் இரண்டு மாஸங்களைச் சேர்த்து ஒரு மாஸம் என்கிறோம்; இரண்டு மாஸங்களுக்கும் ஒரே பெயர் அல்லவா? அந்த முறையைத் தழுவி 11-மாஸங்கள் வந்தால் ஒரு சந்திர மாஸத்துக்கு இரண்டு பெயர் கொடுத்து வழங்கவேண்டும். ஒரு சந்திர மாஸத்தில் உள்ள 30-திதிகளை 60-திதிகள் என்று கொள்ள வேண்டும். ஒவ்வொரு திதியின் முற்பாதி ஒரு மாஸத்தைச் சேர்ந்தது. இதனால் 11-மாஸங்கள் 12-மாஸங்கள் ஆகிவிடும் அல்லவா?

ராமு: விதி சரிதான்; யுக்திக்கு இணங்கியே காண்கிறது. இரண்டு அமாவாசைகள் அடுத்தடுத்து வந்தால் அதிமாஸம் என்று எளிதில் அறியலாம். க்ஷயமாஸத்தைத் தெரிந்துகொள்வது எப்படி?

தாத்தா: இரண்டு ஸங்கிரமங்கள் அடுத்தடுத்து வந்தால் க்ஷயமாஸம் என்று சுளுவாக அறியலாம்; இரண்டு ஸங்கிரமங்களுக்கு இடையே அமாவாசை நிகழாது. ஆகையால் ஒரு சந்திர மாஸம் க்ஷயமடைந்து காணாமற் போகும். மற்றொரு விசேஷம் உண்டு; க்ஷய மாஸத்துக்கு முன்னும் பின்னும் ஒவ்வோர் அதிமாஸம் வந்தே தீரும்.

ராமு: உதாரணம் சொல்ல முடியுமா?

தாத்தா: அது மிகவும் கஷ்டமான வேலை. ஏனென்றால் க்ஷயமாஸம் பெரும்பாலும் 141-வருஷங்களுக்கு ஒரு முறையே வரும்; சில வேளை 9-வருஷங்களுக்குப் பிறகும் வரக்கூடும். 974, 1115, 1256, 1378-இந்தச் சக வருஷங்களில் க்ஷயமாஸம் நேர்ந்ததாகச் சொல்லுகிறார்கள். அது போகட்டும். எனக்கு இப்போது வயசு 60. நான் க்ஷயமாசம் நிகழ்ந்ததை அறியேன்.

ராமு: வேண்டாம்; இனிச் சமீபத்தில் க்ஷயமாஸம் நிகழ வழியுண்டா?

தாத்தா: உண்டு. கடைசியாக 1744-சக வருஷத்தில் நிகழ்ந்தது. ஆகையால் 1885-சக வருஷத்தில் க்ஷயமாஸம் நிகழும்.

ராமு: சக வருஷம் என்றால் எனக்குத் தெரியவில்லை. நாம் தற்போது கி. பி. வருஷங்களை வழங்குகிறோம். ஆகையால் அந்த முறையில் எந்த வருஷம் என்று சொன்னால் எனக்குப் புரியும்.

தாத்தா: சரி, இதில் என்ன கஷ்டம்? சக வருஷத்துடன் 78-வருஷங்களைச் சேர்த்தால் உனக்கு வேண்டிய இங்கிலீஷ் வருஷம் வந்துவிடும்; இதுவே பொது விதி. 1885 சகம் என்பது 1963 கி. பி.

ராமு: அட ராமா! இப்போதுதானே 1843. இன்னும் 20 வருஷங்கள் செல்லவேண்டுமே! இதற்குப் பஞ்சாங்கம் ஏது இப்போது?

தாத்தா: இதில் என்ன கஷ்டம்? பஞ்சாங்க கணிதத்தைச் சரிவரக் கற்றுக்கொண்டால் எந்த வருஷத்துக்குத் தேவையானாலும்

தெரிந்துகொள்ளலாம். 1963 கி. பி. யில் க்ஷயமாஸ நிகழ்ச்சியைப் பார்ப்போம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| அக்டோபர் | 17 வி. | துலாரவி | நாழிகை | 25.3 | |
| ,, | ,, ,, | ஆச்வின* | ,, | 32.1 | } 1 |
| நவம்பர் | 16 சனி | கார்த்திக* | ,, | 17:7 | |
| ,, | ,, ,, | விருச்சிக ரவி | ,, | 23.9 | } 2 |
| டிஸம்பர் | 15 ஞா: | தனுஸ் ரவி | ,, | 59.4 | |
| ,, | 16 திங்: | மார்க்கசிர | ,, | 5.4 | |

1. துலா சங்கிரமத்துக்கும் தனுஸ் ஸங்கிரமத்துக்கும் நடுவே இரண்டு அமாவாசைகள் வருகின்றன. ஆகையால் கார்த்திகம் அதிமாஸம் ஆயிற்று. நிஜகார்த்திக அமாவாசை காணப்படவில்லை. தனுஸ் ஸங்கிரமம் வந்துவிட்டது. 2. இரண்டு அமாவாசைகளுக்கு இடையே இரண்டு ஸங்கிரமங்கள் வந்தன; நிஜ கார்த்திகம் க்ஷயமாஸம் ஆகிவிட்டது. இந்நிலைமையில் ஒரு கார்த்திகத்தையே அதிகமென்றும் நிஜமாஸம் என்றும் கொள்ளவேண்டும். பிறகு,

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1964 மார்ச்சு | 13 வெ | மீனரவி | நாழிகை | 51.2 | |
| ,, | 14 சனி | பால்குன* | | 1·3 | } |
| ஏப்ரல் | 12 ஞா | சைத்ர* | | 26·0 | |
| ,, | 13 திங் | மேஷரவி | | 13·8 | |

இங்கே திரும்பவும் மீனமேஷ ஸங்கிரமங்களுக்கு இடையே இரண்டு அமாவாசைகள் வருவதால் சைத்ரம் அதிக மாஸம்; க்ஷய மாஸத்திற்கு முன்னும் பின்னும் அதிமாஸம் நேர்ந்தது. இம்மாதிரி ஒரே மாஸம் (கார்த்திகம்) அதிகமாகவும் க்ஷயமாகவும் நிகழ்வது விந்தை; வெகு துர்லபம்.

ராமு: கணக்குச் சரிதான், தெரிந்து கொண்டேன். இதன் பிறகு க்ஷயமாஸம் எப்போது வரும்? 141-வருஷங்கள் செல்லவேண்டுமா?

தாத்தா: வேண்டாம், 19-வருஷங்கள் கழிந்ததுமேல் மீண்டும் க்ஷயமாஸம் நிகழும். 1963+19=1982. இந்த வருஷத்தில் க்ஷயமாஸம் வருமா என்று ஆராய்ந்து பார்ப்போம்,

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1982 ஆகஸ்டு | 16 திங் | ஸிம்மரவி | நாழிகை | 49.0 | |
| ,, | 20 வெ | ச்ராவண* | ,, | 38.9 | |
| செப்ட். | 16 வி | கன்யாரவி | ,, | 47.3 | |
| ,, | 17 வெ | பாத்ரபத* | ,, | 22.8 | |
| அக்டோ. | 16 சனி | (அதி) ஆச்வின | ,, | 58.2 | |
| அக்டோ. | 17 ஞா | துலாரவி | ,, | 17.5 | |
| நவம்பர் | 15 திங் | (நிஜ) ஆச்வின | ,, | 37.8 | |
| ,, | 16 செ | விருச்சிக | ,, | 16.0 | |
| டிஸ. | 15 பு | கார்த்திக* | ,, | 22.2 | |
| ,, | ,, | தனுஷ்ரவி | ,, | 51.6 | |
| 1983 ஜன | 14 வெ | மார்க்கசிர | ,, | 10.9 | |
| ,, | 14 வெ | மகா ரவி | | 17.7 | } பௌ. க்ஷய |
| செப் | 12 சனி | கும்பரவி | | 50.3 | |
| ,, | சனி | மாக* | | 5.4 | பால்குண அதிகம் |

மார்ச்சு 14 திங் பால்குன *41.6
,, 14 திங் மீன ரவி 52.3
ஏப்ரில் 13 புத நிஜ பால்குண 22.6
,, 14 வி மேஷ ரவி 6.5

1. ஆச்வினம் அதிக மாஸம். 2. மார்க்கசிர அமைப்புக்குப் பிறகு மகர கும்ப ஸங்கிரமங்கள் இரண்டும் வந்தன. மகர ஸங்கிரமங்களுக்குப் பிறகு பௌஷ அமாவாசையைக் காணோம். ஆகையால் பௌஷம் க்ஷய மாஸமாயிற்று. 3. மேஷரவிக்கு முன்னே இரண்டு அமாவாசைகள் நேர்ந்திருப்பதால் சைத்ரம் அதிமாஸமாகி வந்தது.

குறிப்பு: 1982 டிஸ. 15 கார்த்திக அமாவாசையில் சூர்ய க்ரஹணம் அமையும். இது கங்கணக்ரஹணம்; இந்தியாவில் எங்கும் பார்சுவ க்ரஹணமாகத் தோன்றும். க்ரஹண அளவு 100-இல் 43, காலே மூன்று வீசம். இதையடுத்து வருகிற டிஸ. 30 பூர்ணிமையில் பூர்ண சந்திர க்ரஹணமும் நிகழும். பரிமாணம் 1.2. இது இந்தியாவில் தோன்றுது.

ராமு: 19-வருஷ வட்டத்தில் க்ஷயமாஸம் வந்துவிட்டதே— இதன் பிறகு மறுபடியும் 141 - வருஷங்கள் சென்றவுடன் வருமா?

தாத்தா: ஆம், நீ நினைப்பது சரிதான். 1982+141=2123 A.D. இந்த வருஷத்தில் வரும்.

ராமு: சரி. இந்த உதாரணங்களால் அதிமாஸ க்ஷய மாஸங்கள் நிகழ்வதை நன்றாய்த் தெரிந்து கொண்டேன். இனி எனக்குச் சந்தேகம் தோன்றுது.

தாத்தா: இதில் நீ ஒரு விசேஷத்தைக் கவனிக்கவில்லை. கார்த்திகம், மார்க்கசிரம், பௌஷம் ஆகிய இந்த 3-மாஸங்களில் ஒன்றே க்ஷயமஸமாகி வரும். எஞ்சிய மாஸங்களில் எதுவும் க்ஷயமாகாது; அதிமாஸமாக வரலாம். மாகம் என்ற ஒரு மாஸம் அதிமாஸமாகவோ க்ஷயமாஸமாகவோ வருவதேயில்லை.

ராமு: அப்படியா! நான் கவனிக்கவே இல்லையே. இவைகளுக்கெல்லாம் என்ன காரணம் தாத்தா?

தாத்தா: சூர்ய சந்ரர்களின் கதியில் உண்டாகிற கூடுதல் குறைவுதான் காரணமாகும். வெகு திட்டமாகக் கணக்குப் போட்டு அந்தத் தினகதிகளையும் அமாவாசைகள் ஸங்கிரமங்கள் இவைகளையும் கண்டாலல்லது சரி வராது.

ராமு: நமக்கு முந்திய இந்தியவான நூலார் எவ்வளவு கெட்டிக்காரர்களாக இருந்திருக்கிறார்கள். இது மிகவும் ஆச்சரியம்!

டிசம்பர், 1943

# மிளகு விளைத்த வினை

**எம். எஸ். சுப்பிரமணிய ஐயர்**

"சுக்கு அறியாத கஷாயம் உண்டா? மிளகு அறியாத மருந்து உண்டா? திப்பிலி அறியாத செட்டி உண்டா?'' என்பர். சுக்கு, மிளகு, திப்பிலி மூன்றும் முக்கியமான மருந்துச் சரக்குகள். மூன்றையும் திரிகடுகம் என்பர். பதினெண் கீழ்க்கணக்கிலே 'திரிகடுகம்' என்னும் நூலொன்று உண்டு.

வாழைக்கு அதன் தாறே தீம்பு. கவரி மானுக்கோ அதன் வால்; வனிதைக்கோ அவள் வனப்பு. அங்ஙனமே, ஒரு நாட்டினுக்கு அதன் வளமையாம். ஆதியிலே, நம் தமிழகத்தின் வளமைக்கும் செல்வத்துக்கும் முதல் காரணம் மிளகு. அம்மிளகு விளைத்த வினையோ ஒரு கதையாக இருக்கும்.

கிறிஸ்தவ சகாப்தத்துக்கு முன்னும் சரி, பின்னும் சரி, மிளகினுக்குத் தாயகம் தமிழகமே. தமிழகத்தில் மலையாள பிராந்தியமாம்; அந்நாளில், வேறெங்கும் மிளகு விளையவில்லை. மிளகு ஏற்றுமதி இங்கிருந்துதான் எங்கும். உலகெல்லாம் தமிழகத்தை நோக்கியே நின்றது மிளகினுக்கு.

கிறிஸ்தவ சகாப்தத்தின் துவக்கத்திலே ஐரோப்பியரில் ரோமரே வல்லரசு கொண்டிருந்தனர். பெருவாழ்வும் போகமும் துய்த்து நின்றனர். அப்போது ஆங்கிலேயரும் ஏனைய ஐரோப்பியரும் அவரது காலடியில் கிடந்தனர். ரோம நாகரிகமே ஐரோப்பாவில் தலை சிறந்திருந்தது. அதனால், இன்றும் ரோமாபுரியிடம் ஐரோப்பியருக்கு விசுவாசம் உண்டு.

அத்தகைய ரோமருக்கு அந்நாளில் மிளகு வெல்லம் பட்ட பாடு பட்டது. உணவினுக்கும் மருந்தினுக்கும் அவர்களுக்கு மிளகு இல்லாமல் முடியாது. மிளகு என்றால், அவர்கள் பொன்னை அள்ளிக் கொடுப்பர்; பொருளைக் கொட்டிக் கொடுப்பர். அங்கே ஒரு ராத்தல் (பதினைந்து பலம்) மிளகு விலை ரூபாய் ஏழு! இந்தியாவிலோ ரூபாய் இரண்டே.

அந்நிலையில் தமிழகத்தின் மிளகு வியாபாரத்துக்குக் கேட்க வேண்டுமா? கப்பல் கப்பலாக மேல்நாட்டுக்குச் செல்லும் நூற்றுக் கணக்கான கப்பல்கள் மிளகை ஏற்றிக்கொண்டு, அரேபியாவிலுள்ள செங்கடல் சேரும். அங்கிருந்து அச்சரக்கு, எகிப்து தேசத்திலுள்ள அலெக்ஸாண்டிரியாவும் ரோமாபுரியும் போகும்.

அந்நாளிலே வாசனைத் திரவியங்களும், பூம்பருத்தியாடைகளும், யானைத் தந்தமும், மயிலும் இங்கிருந்து ஏராளமாகப் போயின என்பது உண்மைதான். ஆயினும் ஏற்றுமதிச் சரக்குகளில் முக்கால்வாசிக்குமேல் சென்றது மிளகே. அக்காலத்தே நாம் அங்கிருந்து எதையும் அவ்வளவாக இறக்குமதி செய்யவில்லை. ஆதலின், மிளகினுக்குப் பதிலாக ரோமாபுரியிலிருந்து இங்கே பொன்னும் மணியும் வந்து குவிந்தன.

அது கண்டு, அந்தத் தேச அர்த்தசாஸ்திரி-பிளினி என்பான்-மனம் பொறுக்கவில்லை. ''என்ன ஆச்சரியம்! மிளகுப் பொடிக்கு இவ்வளவு மோகமா? அதன் குணமும் மணமும் காரமும் கண்டு, பலரும் சொக்குகின்றனரே! பழங்களைவிட மிளகு சிறந்ததா என்ன? இந்தியாவிலிருந்து ஏராளமான மிளகை இறக்குமதி செய்கிறோமே. உணவினுக்கு மிளகு அவசியமென முதலில் கண்டவன் யாவன்? நாக்கு நீண்டுபோய் எல்லாரும் அதனை நாடுகின்றனரே!'' என்று கண்டித்திருக்கிறான் அவன்.

கண்டித்தும் என்ன? இங்கே ஏற்றுமதியும் அங்கே இறக்குமதியும் இம்மியும் குறையவில்லை. ''பருப்பு இல்லாத கல்யாணமா, பரமான்னம் இல்லாத சாப்பாடா?'' என்பர் நம்மவர். ரோமாபுரி வாசிகளோ, ''மிளகில்லாத சமையலா, மிளகு ரசம் இல்லாத விருந்தா?'' என்பார்கள். மிளகு ரஸம் அங்கே வெள்ளி அல்லது தங்கப் பாத்திரத்தில்தான் கொண்டுவந்து பரிமாறப்படும்.

ரோமாபுரியிலும் ஏனைய இடங்களிலும் மிளகைப் பொடி பண்ணும் யந்திரங்கள் ஏற்பட்டன. வீடுகளிலே மிளகை இடிக்க உரலும் உலக்கையும் தோன்றின. கடைகளிலும் சந்தைகளிலும் மிளகுப் பொடி பொட்டணங்கள் மலிந்தன. கடைகண்ணிக்குச் சென்றால், மிளகுப் பொடி வாங்கிவராதார் இல்லை. இம்மட்டோ மிளகின் பிரபாவம்! இன்னும் பாருங்கள்!

ரோமாபுரியை (கி. பி. 478-இல்) ஒரு பகைவன் முற்றுகை போட்டான். முற்றுகையை மக்களால் சமாளிக்கமுடியவில்லை. பணிந்து விடுவதாகச் சொல்லினர். அப்படியானால், முதல் முதலாக மூவாயிரம் ராத்தல் மிளகு உடனே கொடுத்தாகவேண்டும் என்றான், அப்பகைவன். சரி என்றனர் ரோமாபுரிவாசிகள்.

அன்று கிறிஸ்தவ ஆலயங்களுக்கோ, கிறிஸ்தவப் பாதிரிமாரின் மடங்களுக்கோ சீமான்கள் ஆஸ்தி எழுதி எழுதிவைப்பதுண்டு. அந்த ஆஸ்தி அல்லது சொத்து, முதலாவதாக இவ்வளவு ராத்தல் மிளகு என்று இருக்கும். நண்பருக்கும் விருந்தினருக்கும் பரிமாறுவதில், மிளகே முதல் இடம் பெறும். துறைமுக நகரங்களிலே மிளகு மூட்டைகளை அடுக்கி வைக்க ஏராளமான பண்டசாலைகள் எழுந்தன.

மிளகு வர்த்தகம் ஓங்கி நின்ற காலத்திலே, தமிழகத்தில் அமோகமாக மிளகு விளைந்த தேசங்கள் இரண்டு. அவற்றில் ஒன்று, வட மலையாளப் பிரதேசம். மற்றொன்று ஆலப்புழைக்கும் கோயிலாண்டிக்கும் இடையேயுள்ள பிரதேசமாம். மிகவும் பிரபலமான துறைமுகமோ முசிறி எனப்படும்.

அக்காலத்திலே கேரள நாட்டின் தலைநகரம் முசிறியே. அது ஆலப்புழையாற்றின்-அதாவது பெரியாற்றின்-முகத்துவாரத்தில் இருந்தது. ஆதலின், உள்நாட்டிலிருந்து ஆற்றின் வழியே வல்லங்களின் மூலம் மிளகு ஏராளமாக வந்து சேரும்.

முசிறியின் துறைமுகத்திலே, ஒரு பக்கம் கப்பல்கள் நிரம்பி நிற்கும். ஒரு பக்கம் வல்லங்களும் படகுகளும் மொய்த்துக் கிடக்கும். துறைமுக மேடைகளிலே மிளகுப் பொதிகள் குன்றுபோல் குவிந்திருக்

கும்; ஒரு பக்கத்திலே பண்டசாலைகள் வரிசை வரிசையாக இருக்கும். எங்கும் ஜனக் கூட்டம். ஒரே இரைச்சல். ஒரே சந்தடி. பண்டசாலைகளுக்குப் பின்னே வானை முட்டும் மாளிகைகள்; மேகத்தை எட்டும் ஆலயங்கள்.

மிளகு ஏற்றுமதி ஒருபுறம் இருக்க, யானைத் தந்தமும் முத்தும் பவழமும் மலிந்து ஏற்றுமதிக்குக் காத்துக் கிடக்கும். மேல்நாட்டு வர்த்தகரில் ரோமரைப் பார்க்கலாம்; யூதரை நோக்கலாம்; அரேபியரையும் காணலாம். பண்டசாலைகளை ரோமாபுரி வீரர் கம்பீரமாகக் காத்து நிற்பதும் தென்படும். நகர வீதியின் நானாவித மக்களைக் காணுங்கால், 'தமிழக நகரமா இது? நானா தேச மக்கள் கொண்ட நகரமே' என்று எண்ண நேரும்.

முசிறியில் வதிந்த தமிழ்ப் பெருமக்களின் மாளிகைகளில் ஒரு விசேஷம். வாசலிலே ரோம வீரர் காவல் புரிந்து நிற்பர்; மாளிகையினுள்ளே ரோமப் (யவனப்) பணிப் பெண்கள் பற்பல ஊழியம் புரிவர். நடுநாயகமான கூட்டத்திலே, யவன சங்கீத நாரீமணிகள் கானஞ் செய்வர். அந்தப்புரத்திலோ அதியழகு வாய்ந்த ரோம மாதர் கிளி போல் பேசுவர்; மயில்போல் உலவுவர்; மான்போல் விழிப்பர்.

அங்கே அன்று கண்ணகி கோயில் இருந்தது. ரோமரின் தேவாலயம் விளங்கியது. யூதரின் தொழுகை ஸ்தலம் இருந்தது. அரேபியரின் பூஜையிடமும் இருந்தது. ஏசுநாதரின் தூதரான தாமஸ், தோமாசு என்பார் முசிறிக்கு அருகேதான் (கி. பி. 50-இல்) வந்திறங்கினர், சில சீடருடன். மலையன்கரை என்னும் அவ்விடத்தை ஸிரியன் கிறிஸ்தவர் இன்றும் புண்ணியத் தலமாகக் கொள்வர்.

ரோம ராஜ்யம் சாய்ந்தபின்னர், முசிறியும் மறைந்தது. ஆனல், மிளகு வியாபாரம் குன்றவில்லை. மிகவும் பெருத்தது. எப்படி? சரித்திர மத்திய காலத்திலே, ஐரோப்பிய தேசங்கள் அவ்வளவு செழிப்பாக இல்லை. அம்மக்களுக்கோ இறைச்சியே முக்கிய ஆகாரம்; கோடையில் வேட்டையாடி, மிருகங்களை வதைத்து, இறைச்சி சேகரிப்பர்.

மாரிக் காலத்திலே வேட்டையாட இயலாது. எனவே இறைச்சியும் கிட்டாது. கோடையில் சேகரித்த இறைச்சியை மாரி முழுதும் சேமித்து வைக்கவேண்டும். சேமித்து வைக்க 'மசாலை' தேவை. மசாலையிலே முக்கிய சரக்கு மிளகுப் பொடியே. ஆதலின், மிளகினுக்கு அங்கே அபாரமான கிராக்கி.

ரோமர் சாய்ந்ததும், அரேபியர் இங்கே அம்மிளகு வர்த்தகத்தைக் கைக்கொண்டனர். அரேபியரின் காலத்தில் மிளகு வர்த்தகத்தினுக்கு முக்கியத் துறைமுகம் கள்ளிக்கோட்டை. அரேபியரை அடுத்து ஸிரியன் கிறிஸ்தவருக்கு வர்த்தக ஏற்றுமதி ஸ்தலம் கோயிலாண்டி. அந்த இரு துறைமுகங்களிலும் நடந்த மிளகு ஏற்றுமதி இவ்வளவு அவ்வளவு அன்று.

அச்சமயம் ஐரோப்பாவிலே மிளகு வர்த்தகத்தின் நடுநாயகமான நகரங்கள் வேனிஸ், ஜினேவா ஆகிய இரண்டுமே. கள்ளிக்கோட்டையில் இருந்த அரேபியரும், கோயிலாண்டியில் இருந்த ஸிரியன் கிறிஸ்தவருமே அந்த நகரங்களுக்கு மிளகை அனுப்பிவந்தனர். சீனவும் கப்பல் கப்பலாக மிளகை ஏற்றிச் சென்றது.

பதினெட்டாம் நூற்றுண்டு வரையில் இந்தியாவிலிருந்து ஐரோப்பாவுக்குச் சென்ற முக்கியமான சரக்கு மிளகே. லண்டன் வர்த்தகர் தங்கள் அரசருக்குக் கிறிஸ்துமஸ் பண்டிகைக் காலத்திலும், ஈஸ்டர் பண்டிகைக் காலத்திலும் பத்து ராத்தல் மிளகைக் காணிக்கை

யாகச் செலுத்தவர். மிளகின் மீதிருந்த மோகமோ சொல்லிமுடியாது. விலையும் மிக மிக அதிகமாம்.

மிளகினுக்கு இருந்த விலை என்ன? வேனிஸ், ஜினோவா நகரங்கள் அவ்வர்த்தகத்தில் பொருள் தேடிக் குவித்ததென்ன! இந்த இரண்டையும் கண்டே ஐரோப்பிய தேசங்களுக்கு நாக்கில் ஜலம் ஊறியது. ஊறவே, இந்தியாவுக்கு வரும் கடல் மார்க்கம் காண அத் தேசங்கள் முனையலாயின. இத்தகைய நகரங்களின் வர்த்தக ஏக போகத்தை முறிக்கவும் கங்கணம் பூண்டன.

மிளகினுக்கு ஆசைப்பட்டு இந்தியாவுக்குப் புறப்பட்ட கொலம்பஸ் என்பான், வழிதப்பி அமெரிக்கா சேர்ந்து அதனைக் கண்டு பிடித்தான். 1498-ஆம் ஆண்டிலோ வாஸ்கோடி காமா என்பான் கள்ளிக் கோட்டை வந்து சேர்ந்தான். உடனே கள்ளிக்கோட்டை ஜாமோரின் என்ற அரசனைக் கண்டு, மண்டியிட்டுச் சலாம் செய்தான்; மிளகு வர்த்தகத்தினுக்கு வந்திருப்பதாக விளம்பி உதவி நாடினன்.

நாடியதும், போர்த்துகல் தேசவாசிகள் அவ்வர்த்தகம் கருதியே இங்கு வந்தனர்; ஏராளமான பணம் சேர்த்தனர்; கோவா, தையு, தாமன் என்னும் நகரங்களையும் பிடித்துக்கொண்டனர். அவர்களைப் பின்பற்றி, ஹாலண்டு தேசத்தாரான டச்சுக்காரரும் வந்தனர். ஆறு வருஷகாலம் வர்த்தகத்தை ஏகபோகமாக அநுபவித்தனர்; பெரு நிதியம் சேர்த்தனர்.

சேர்க்குங்கால், அரேபியரின் போட்டி மூண்டது. ஜாமோரினிடமும் பிணக்கு நேர்ந்தது. நேரவே சுமத்ரா, ஜாவாத் தீவுகளிலே மிளகைப் பயிர் பண்ணினர்; ஏனைய வாசனைத் திரவியங்களையும் பயிராக்கினர். பயிராக்கி, மிளகு வர்த்தகத் தனியுரிமையை இந்தியாவிடமிருந்து பறிக்கலாயினர்.

மிளகு வியாபாரம் டச்சுக்காரரின் கைக்கு வந்துவிடவே, அவர்கள் அதன் விலையை மிகவும் உயர்த்தினர். கொள்ளை லாபமும் அடைந்தனர். அது கண்டு லண்டன் வர்த்தகர் மனம் பொறுக்கவில்லை. உடனே லண்டன் வணிகர் ஒன்று கூடி, 'ஈஸ்ட் இந்தியா கம்பெனி' என்னும் கம்பெனி கண்டனர். இதற்கு எலிஸபெத் ராணியின் அநுமதியும் அடைந்தனர். 1600-ஆம் வருஷவாக்கில் லண்டனிலிருந்து ஆங்கில வர்த்தகர் இங்கு வந்ததற்கு மிளகே காரணம். 'மெள்ள மெள்ள வந்தான்; மிளகு சுக்கு என்றான்' என்னும் வசனத்துக்கு இணங்க, மிளகு வர்த்தகத்துக்கு வந்த ஆங்கிலேயர் நாளடைவில் இங்கே மண்ணும் கொண்டனர்; ஏகாதிபத்தியமும் சமைத்தனர்.

ஆங்கிலேயருக்கு முன்னதாகப் பிரெஞ்சு வர்த்தகரும் மிளகு கருதியே இங்கு வந்து, மண்கொள்ள மறுகினர். ஆங்கிலேயருக்கும் பிரெஞ்சுக்காரருக்கும் வர்த்தகப் போட்டியும், அப்பால் நாடுகொள்ளும் போட்டியும் மூண்டன. முடிவில் ஆங்கிலேயரே வென்றனர்.

இதற்கிடையில், ஐரோப்பாவிலே மிளகினுக்கு இருந்த மோகம் குறைந்தது. மாரியிலே இறைச்சி கிடைக்கவும் வழிபிறந்தது. பிறக்கவே, மிளகு வர்த்தகம் குன்றியது.

ஏப்ரல், 1947

# சங்கீதத்தின் தத்துவம்

ஸர் ஸி. வி. ராமன்

இவ்வுலகிலே நம்மைப் பெரிதும் திகைக்கச் செய்யும் விஷயங்கள் எத்தனையோ இருக்கின்றன. இவற்றில் முக்கியமாகக் குறிப்பிடவேண்டியவற்றில் சங்கீதத்தின் வசிய சக்தியும் ஒன்று. முதலில் என் மனத்தைக் கவர்ந்தது ஒலி நூலென்று சிலர் எண்ணுகின்றனர். அது சரியன்று; ஒலி ஒளி என்ற இரண்டைப்பற்றிய சாஸ்திரங்களிலும் எனக்குக் கவர்ச்சி ஏற்பட்டிருந்தது. உலக வாழ்க்கை பொதுவாக ருசியற்றதாயினும் இயற்கையன்னையால் நமக்குச் சில ரஸங்கள் அளிக்கப்பட்டுள்ளன. நிறமும் கானமுமே அவற்றில் முக்கியமானவை.

உயிருள்ள வஸ்துக்கள் நிறத்தின் மூலம் தம் செழிப்பை வெளியிட்டிருக்கின்றன என்பதை இயற்கையின் தன்மையைக் கவனிக்கும் மாணவன் அறிவான். மலர்களிலும், மரங்களிலும், வண்ணாத்திப் பூச்சிகளிலும், காந்திமிக்க நீல நிறத்தோடு கூடிய பறவைகளிலும், மங்கல் நிறங்கொண்ட மனிதனுட்பட்ட பிராணிகளிலும் நிறத்தின் செழிப்பைப் பார்க்கலாம். இயற்கையன்னையானவள் யாதானுமொரு பெரிய காரியத்தை முடிக்கக் கருதும்பொழுதுதான் அவள் தன்னுடைய நிறசோபையை முற்றிலும் வெளிக்காட்டுகிறாள். உயிர் வாழ்க்கையின் ஏற்றத்தாழ்ச்சி மாறுபாடுகளைக் காட்டுவதற்குக் கானத்தையும் தன்னுடைய வழிகளில் ஒன்றாகவே கொண்டிருக்கிறாள்,

பங்களூரில் ஆயிரக்கணக்கான பறவைகள் வாழ்க்கைக் குதூகலத்தால் பாடும் தொனிகளைக் கேட்டுக்கொண்டே நான் பிரதி தினமும் படுக்கையைவிட்டு எழுகிறேன். சூரியோதயத்தில் பறவைகள் களித்து ஆரவாரித்துச் சூரியனை வரவேற்கின்றன. அவை பாடும் உல்லாசப் பாட்டானது தூங்கும் விஞ்ஞான சாஸ்திரியைத் துயிலெழுப்புகின்றது.

பறவைகள் தாம் பாடுவதை நிறுத்த இயலாது; அதேபோல மானிடராகிய நாமும் கானத்தின் உற்சாக வேகத்தைத் தடுக்க முடியாது. அதை நம் வாழ்வினின்றும் பிரிக்க வொண்ணாது. ஆனால் அவைகளுக்கும் நமக்கும் ஒரு முக்கியமான பேதமுண்டு. மனவெழுச்சிகளை எல்லாம் ஒழுங்கற்ற நிலையிலே வரவிடாமல் முறைப்படுத்தி வெளியிடுவதே உயர்ந்த ஆனந்தத்தைத் தரத்தக்க கலைகளின் வழி. இதுவும் வாழ்க்கையின் முக்கியமான விதியென்று நான் நினைக்கிறேன். ஐந்தாறு வண்ணங்களைத் தாறுமாறாக ஒரு துணியில் தடவினால் அது ஓர் ஓவியமாகாது. அப்படிச்

செய்வதுங்கூட ஓர் ஓவியக் கலைதான் என்று கருதும் ஒரு சாரார் இருக்கின்றனராம். ஆனால் நம்மில் பெரும்பாலோர் கலைகளில் ஒழுங்கு வேண்டுமென்றே நினைக்கிறோம். ஓர் உயர்ந்த கலைச் சிருஷ்டியை அமைப்பதற்கு முறைப்பாட்டுடன் கூடிய கற்பனைசக்தியின் முயற்சி வேண்டும்; மேதாவிலாஸத்தின் முயற்சி வேண்டுமென்றுகூடச் சொல்லலாம். கானமும் அத்தகைய உயர் கலையே. உரத்த குரலில் முறையற்ற பல தொனிகளை எழுப்பி நமது மகிழ்ச்சியை வெளியிட்டால் அது பாட்டாகாது. அது நாம் பலமுறை கேள்விப்பட்டிருக்கும் கூப்பாடே. ஒரு கலையின் உருவத்தில் ஒழுங்கோடு வெளியிட முயல்வதே கானமாகும். ஆனந்தம், கற்பனை, முறை, மேதாவிலாஸம் என்ற இவைகள் பொருந்தியதே கலை.

விஞ்ஞான சாஸ்திரி என்ற தன்மையில் ஒன்றைச் சொல்லி விடுகிறேன். மானிடராகிய நம்மை வசியப்படுத்தும் சக்தி கானத்திலே எவ்வாறு அமைந்திருக்கிறது என்பதைப் பற்றி விஞ்ஞான சாஸ்திரம் ஒன்றுமே விளக்கவில்லை. நமது உயிர் நிலைக்குள் புகுந்து கானம் எவ்வாறு நம்மைப் புளகாங்கிதம் அடையச் செய்கின்றதென்று சாஸ்திரத்தால் கூறமுடியவில்லை. வாழ்க்கையின் மர்மங்களில் இதுவும் ஒன்று. ஆனால் இம்மர்மத்தின் சில அம்சங்களைச் சாஸ்திரம் விளக்க முயல்கின்றது. புகழ்பெற்ற பல விஞ்ஞான சாஸ்திரிகளின் மனத்தைக் கவர்ந்து ஆராய்ச்சியில் ஊக்கியவை நிறமும் ஒலியுமென்பது கவனிக்கத்தக்க விஷயம். சாஸ்திரமும் ஆராய்ச்சியும் கேவலம் ஒருவனுடைய புத்தியினின்றே உதித்தனவென்று கொள்வது தவறு. கலைஞன், விஞ்ஞானி என்னும் இருவர்களுடைய மனத்தைத் தூண்டும் நிகழ்ச்சிகளை வேறு வேறாகப் பாகுபடுத்திப் பிரித்துக் கூற இயலாது. நிறத்திலும் கானத்திலும் விஞ்ஞான சாஸ்திரி வைத்த பிரேமையே பல முக்கியமான சாஸ்திரப் பிரச்னைகளுக்குக் காரணமாயிருந்திருக்கிறது.

ஹெமென் வான் ஹேல்ம்ஹோல்ஷ் என்பவரைப்பற்றி உங்களில் பலர் கேள்வியுற்றிருக்கலாம். அவர் சென்ற நூற்றாண்டிலிருந்த ஒரு பெரிய அறிஞர். 'பார்வையின் தத்துவம்,' 'ஒலியின் உணர்ச்சி' என்ற இரு பெரும் நூல்களை எழுதியுள்ளார். அவை பிரமாண நூல்களாகவும் அச்சிறந்த அறிஞரின் புகழுக்கு அறிகுறிகளாகவும் இன்றளவும் விளங்கிக் கொண்டிருக்கின்றன. கானத்தின் பொதுவான விதிகளை அறிந்து அவைகளை உடற்கூறு சாஸ்திரத்துக்குப் பொருந்தும்படி விளக்க அவர் முயன்றிருக்கிறார். ஹெல்ம்-ஹோல்ஷ், ரேலி பிரபு முதலியோருக்குப் பிறகு சிறிது காலம் ஒலி சாஸ்திரம் வளர்ச்சியுறவில்லை. பௌதிக சாஸ்திரத்தின் மூல தத்துவங்களான எலக்டிரான் (Electron), பரமாணு (Atom), அணு (Molecule) என்பனவற்றின் ஆராய்ச்சி சற்று ஒதுக்கி வைக்கப்பட்டது. 1921-இல் இவ்வாறே நானும் ஒலியை ஆராய்வதை விட்டுவிட்டு அதைக் காட்டிலும் முக்கியமெனத் தோன்றிய வேலையை மேற்கொண்டேன். ஆனால் சென்ற பத்து வருடங்களாகக் கான ஆராய்ச்சியில் விஞ்ஞானிகள் மறுபடியும் பெரிதும் ஊக்கங்கொண்டுவிட்டனர். முரண்பாடுபோலத் தோன்றினும், யுத்த காலத்தில் நேர்ந்த ஓர் அவசியத்தாலேயே இவ்வூக்கம் பிறந்தது. துப்பாக்கிச் சப்தத்தை ஆராயும்படி பௌதிக சாஸ்திரிகளுக்கு ஓர் அவசியம் ஏற்பட்டது. இதிலிருந்து ஒலியாராய்ச்சி மறுபடியும் தொடங்கிற்று. மேலும் ரேடியோ (Radio), கம்பியில்லாத் தந்தி (Wireless) என்பனவற்றில் பிறந்த புதுமோகம் அதிக ஆராய்ச்சிக்குக் காரணமாயிற்று. நம் நாட்டில் இல்லாவிடினும், மற்ற நாடுகளில் ரேடியோ சங்கீதத்துக்கு ஜனங்களிடம் நல்ல செல்வாக்குண்டு. ஆகவே ஒலி சாஸ்திர ஆராய்ச்சி மேன்மேலும் விருத்தியடைந்திருக்கிறது. சிறந்த ஒலிக் குணங்கொண்ட சபாமண்டபங்களை

அமைக்கவேண்டியிருந்தது. அந்தக் கட்டடத் தொழிலில் உபயோகப்படுவதால் ஒலி சாஸ்திரத்துக்கு ஒரு முக்கியம் ஏற்பட்டிருக்கிறது. பலர் திட்டினுலும் வெறுத்தாலும் கிராமபோன் செல்வாக்குடையதாகவே இருக்கிறது. ஸங்கீத சபைகளும், ஆசிரியர்களும் அருகே இல்லாமல் இருப்பவர்களுக்குக் கானத்தின் பயனில் ஒரு சிறிதாவது இக்கருவியால் கிடைக்கிறது. ஆனுல் ஸ்வயமான ஸங்கீதத்திற்குக் கிராமபோன் ஸங்கீதம் எவ்விதத்திலும் ஈடாகாது. சப்த சாஸ்திரத்தில் இப்பொழுது புதிய அக்கறை பிறந்திருக்கிறது. உடற்கூறு சாஸ்திரம், மனுேபாவ சாஸ்திரம் முதலிய துறைகளின் வழியாகச் சப்த சாஸ்திரத்தை ஆராய்ந்து அறிய இப்பொழுது தொடங்கியுள்ளனர்.

இந்துக்களாகிய நாம் கடவுளை நாதப்பிரம்மம் என்று கூறுகிறேம். கானக் கலைக்கு ஒரு தெய்விகத் தன்மை அளிக்கிறேம். இதன் நியாயத்தை நான் ஆராயவேண்டிய அவசியம் இல்லை. வாயுவில் தோன்றும் அலைகள் நம்மை அடைந்து செவிப்புலன் மூலமாக நரம்புகளைத் தூண்டுகின்றனவென்று கூறுகின்றேம். ஆனுல் அத்தகைய தூண்டுதல்கள் யாவும் நமக்கு இன்பமாயிருப்பதில்லை. இவ்விஷயம் மிகவும் நுட்பமான அறிய ஒண்ணுத மர்மமாயிருக்கிறது. ஹெல்ம்ஹோல்ஷும் வேறு சிலரும் செவிக்கருவிக்கு மனக்கருவியைவிட அதிகச் சக்தியுள்ளதென்று கூறுகின்றனர். இரண்டு அல்லது மூன்று வர்ணங்களை ஒன்று சேர்த்தால் சிலரால் அக்கலவையிலுள்ள நிறங்கள் இன்னவென்று தனித்தனியாகப் பிரித்தறிந்து கூறமுடியாது. ஆனுல் ஒன்ருகச் சப்திக்கும் பல தொனிகளை வெவ்வேருகப் பிரித்துத் தனித்தனியாக உணரக்கூடிய சக்தி செவிக்கு உண்டு.

பழக்கமுள்ள ஒரு கான ரஸிகன் ஒரு தொனியைப் பன்னிரண்டு அல்லது அதற்கதிகமான உடனிசைத் தொனிகளாகத் (Harmonic Components) தன் செவிப்புலனுல் வகைசெய்து உணரக்கூடும். உட்செவியிலே ஒலியைப் பிரதிபலிக்கக்கூடிய பல நார்கள் இருக்கின்றன. இந்தக் கருவியின் மேல் தொனி அலையானது விழுந்த பிறகு அங்கே அதற்கப்புறம் என்ன நடக்கிறது? இத் தூண்டுதல் எவ்வாறு அனுப்பப்படுகின்றது? மத்திய நரம்புத் தொகுதிக்கு இது எவ்வாறு போய்ச் சேருகின்றது? ஆனந்த உணர்ச்சியை எவ்வாறு நாம் அடைகிறேம்? கேட்போராகிய நாம் எப்பொழுது எப்படி ஒலியைக் கவனிக்கத் தொடங்குகிறேம்? இத்தகைய பல கேள்விகள் இவ்விடத்தில் எழுகின்றன. சாதாரண உடற்கருவிகளின் துடிப்புக்கும், கானத்தால் ஏற்படும் ஆழ்ந்த மனவெழுச்சிகளுக்கும் பெரிதும் வேறுபாடுள்ளது. தேகமும் மனமும் சம்மந்தப்பட்ட ஒரு பெரிய நிகழ்ச்சியை நாம் விளக்கவேண்டி யிருக்கிறது. சென்ற சில வருஷங்களாக அதிநுட்பமான ஹார்மோன் என்னும் ஜீவிய சத்துக்களை (Physiological Harmones) ஆராயத் தொடங்கினர். இதற்காக ஒரு புதியவழியை உண்டாக்கி யுள்ளனர்.

செவிப்புலனின் தன்மையை முற்றிலும் அறியும் காலம் ஒருவேளை வெகு தூரம் இல்லாமலிருக்கலாம். ஆயினும் கானத்தால் தோன்றும் மனவெழுச்சி, தேகத் துடிப்பு, அநுபவம் முதலியவற்றின் காரணங்கள் முழுவதும் இந்நூற்றுண்டின் இறுதிக்குள் அறியப்படப் போவதில்லை; அல்லது ஒருவேளை வரும் நூற்றுண்டுவரை அறியப்படாமல் இருந்தாலும் இருக்கலாம்.

விஞ்ஞான சாஸ்திரிகள் கானத்தின் மர்மங்களைச் சுக்குச் சுக்காகப் பிய்த்து அறிந்துகொண்ட காலத்திலுங்கூட நாம் இப்பொழுது கானத்தை ரஸித்துவருவதைப் போல அனுபவித்து வருவோ

மென்று நம்புவோம். ஒரு பாமரனுக்குக் கானத்தால் ஏற்படும் ஆனந்தானுபவமே முக்கியம். விஞ்ஞானிகள் வகை செய்வதைப் பற்றி அவனுக்கு அக்கறையில்லை. ஹெல்ம்ஹோல்ஷ் தம் நூலின் முடிவில் இதை நன்கு விளக்கியுள்ளார். மிகப் பெரிய அறிஞரான அவர் தாம் மேற்கொண்ட ஆராய்ச்சியானது மிகவும் குறுகிய ஒரு விஷயத்தைத் தழுவியது என்பதை உணர்ந்திருந்தார். இவ்வாராய்ச் சிக்கு வழிகாட்டியவர்களில் அவரே முதன்மையானவர். இப்பெரிய பிரச்னையின் ஒரு சிறிய அம்சத்தையே தாம் ஆராய்ந்திருப்பது அவருக்கு நன்ருகத் தெரியும். இப்பொழுது சொல்லப் போகும் விஷயம் கவனிக்கத்தக்கது. உயர்ந்த கலைகளின் சிருஷ்டிகளெல்லாம் மேதாவிலாஸம் பெற்ற அறிவாளிகளால் ஆக்கப் பெற்றவையே. ஒரு கிராமபோன் யந்திரத்தின் கைப்பிடியைத் திருப்பிஞல் அதிலிருந்து ஒரு தியாகராஜர் குதிக்கமாட்டார்; அப்படி ஒரு தியாகராஜரை உற்பத்தி செய்யமுடியாது; அப்படிச் செய்யும் வல்லமை மனிதனுக்கு இன்றுவரை இல்லை. மேதாவிலாஸமானது எத்துறையில் காணப்பட்ட போதிலும் அதற்குக் காரணங்கூற முடியாது. மேதாவிலாஸம் நிரம்பிய ஒருவன் எவ்விடத்தில் பிறப்பானென்றும் சொல்ல இயலாது.

ஸங்கீத வித்துவானுக்கு அவ்வளவு முக்கியமல்லாத் துறையில் பல வருஷங்களாக என் கவனம் சென்றிருந்தது. வாத்தியங்களின் ஆராய்ச்சியில் எனக்கு மிகவும் விருப்பம் உண்டு. பௌதிக சாஸ்திரப் பொருள் விளக்க அகராதியில் (Encylopaedia of physics) ஒரு கட்டுரை எழுதும் கௌரவத்தை அளிக்கப் பெற்றிருக்கிறேன். இந்திய வாத்தியங் களின் சாஸ்த்ரீகமான மேன்மைகளை அதில் எடுத்துக் காட்டியிருக் கிறேன். இவ்வாறு சொல்ல முடிந்தது என் விசேஷ பாக்கியமே.

உதாரணமாக மிருதங்கததைக் கவனிப்போம். அதன் அமைப்பு அற்புதமானது. வீணை அல்லது புல்லாங்குழலில் ஒரு தொனி ஒலிக்கின்றது; அப்பொழுதே அதனேடு ஒத்துவரும் உடனிசைத் தொனிகளும் ஒலிக்கின்றன. ஆனல் வட்டமான தோலில் ஒவ்வாத உடனிசைத் தொனிகள்தாம் தோன்றுகின்றன. இவைகளை ஒத்திசைக் கும் தொனிகளாக்குவது இயலாத காரியமென்றுதான் சொல்லத் தோன்றும். ஆனல் மிருதங்கத்தின் அற்புத அமைப்பானது இக் காரியத்தை முடிக்கின்றது; வீணை அல்லது குழலைப் போலவே இதிலும், ஒத்துவரும் வரிசையான உடனிசைத் தொனிகள் தோன்றுகின்றன. இம் மூன்றும் உயர்ந்த வாத்தியங்களின் பகுப்பில் சேர்க்கப்பட் டிருக்கின்றன. ஒவ்வாத தொனிகளையே உண்டு பண்ணும் வட்டப்பரப் புடைய மிருதங்கத்தில் ஒத்திசைக்கும் தொனிகளை உண்டாகும்படி செய்ததுதான் விசேஷம்.

பாடகனையும் விஞ்ஞானியையும் ஆராய்ந்தால் அவர்கள் இருவருக்கும் சில ஒற்றுமைகள் இருப்பது தெரியவரும். கலைஞர் களெல்லாரும் தம் கலைகளில் லயித்துவிடுகின்றனர். பாடகர்கள் விசேஷமாக லயிக்கின்றனர்; அதாவது அவர்கள் அனைவரும் பரவச மடைந்தவர்களாய் அதில் அழுந்திவிடுகின்றனர். கலைச் சிருஷ்டியில் தோன்றும் மகிழ்ச்சியை அநுபவித்து உணராத கலைஞன் கலைஞனாகான். ஒரு விஞ்ஞான சாஸ்திரியும் அத்தன்மையனே. மற்றவருக்கு அல்ப மாகத் தோன்றும் ஒரு விஷயத்திற்கூட, அது தனக்கு முக்கியமாகத் தோன்றுமேயானல், அதில் எத்துணை காலத்தையும் உழைப்பையும் செலவிட்டாலும் அவனுக்கு அது பெரிதாகத் தோன்ருது. ஒரு கலைஞனுக்கும் இந்தத் தன்மையும் உற்சாகமும் வேண்டும்.

இந்தியாவில்—முக்கியமாகத் தென்னிந்தியாவில்—ஸங்கீதக் கலையில் ஈடுபட்டிருந்தோருடைய பெருமை மெச்சத் தகுந்தது, ஸங்கீதத்

தையும் அதில் வல்லோரையும் பல வருடங்களாக ஜன சமூகம் பெருமைப்படுத்தவில்லை. ஸங்கீத ரஸிகர்களையும் வித்துவான்களையும் கூட ஏனையோர் மிகத் தாழ்ந்தோராகவே கருதினர்; அதனால் கௌரவமாக வாழவேண்டுமென்று விரும்பிய எவரும் அக்கலையில் உழைக்க முன்வரவில்லை. நல்லகாலமாக இப்போது தென்னிந்தியாவில் சிறிது நன்னிலைமை ஏற்பட்டிருக்கிறது. கானக்கலையில் சிறந்து விளங்கிய மகாவைத்தியநாதையர், சரபசாஸ்திரி முதலியோரைப் போன்ற வித்துவான்களுடைய ஆர்வமும் முயற்சியுமே அநேகமாக இந்நிலைமைக்குக் காரணமெனலாம். சென்னை ஸங்கீத சபை வேறொன்றும் செய்யவேண்டியதில்லை; பாடகர்களையும் பாட்டையும் முற்காலத்திற்போல் ஜனசமூகம் கௌரவிக்கும் நிலைமைக்குக் கொண்டுவர முயற்சி செய்வது ஒன்றே போதுமானது. மானிட வாழ்க்கையில் ஸங்கீதம் ஒரு ஜீவசக்தியென்பதை இந்தியர்கள் அறியவேண்டும்; அது வாழ்க்கையைச் சீர்படுத்தவல்லதென்றும், இருதயத்தில் அன்பைத் தளிர்க்கச் செய்யக்கூடியதென்றும், அத்தகைய அன்பே நமது வாழ்க்கையின் சலிப்பைமாற்றிக் கடவுளை அணுகச் செய்யுமென்றும் நாம் உணரவேண்டும். அன்றுதான் ஸங்கீதம் அதனுடைய தகுதிக்கேற்ற நன்னிலையை அடையும். கானத்தை நாம் மதிக்க வேண்டும். பாடகர்களை மதித்து அவர்களை ஆதரிப்பது நம் கடனென உணரவேண்டும்.

இந்திய கானத்தைத் தவிர, ருஷிய இத்தாலிய ஐரோப்பிய ஸங்கீதங்களையும் அறிந்து அநுபவித்து இன்பம் அடையக் கற்றுக் கொண்டிருக்கிறேன். ஆயினும் கர்நாடக ஸங்கீதத்தினிடத்திலே எனக்குள்ள லயிப்பை இவைகளில் எதுவும் பெறவில்லை. எனினும் வேறுபாடே வாழ்க்கையின் ரஸம். ஒவ்வொரு தேசத்தாரும் ஒவ்வொருவித நாகரிகத்தையும் அறிவையும் பெற்றுள்ளனர் என்பதை நாம் உணரவேண்டும். மற்றவர்களுடைய நாகரிகத்தை நாம் மதியாவிட்டால் அவர்களும் நம் நாகரிகத்தின் பெருமைகளை மதியார்கள். ஐரோப்பிய ஸங்கீதத்தின் குணங்களை நாம் அறிந்து மதியாவிடில், இந்திய ஸங்கீதம் வெறும் அர்த்தமற்ற கூக்குரல் என்று அவர்கள் கூறும்போது நாம் மனம் புழுங்குவதில் பயனில்லை. நேர்மையான மனமும் அயலாருடைய நற்குணங்களை மதிக்கும் தன்மையும் நமக்கு வேண்டுமென்பது என் கருத்து.

பண்டைக் காலத்தில் நாம் பெருமை அடைந்திருந்தோம். இக்காலத்தில் வழங்கும் பல ஸங்கீதக் கருவிகள் கீழ்நாடுகளிலேயே தோன்றின. ஆயினும் பதினாறும் நூற்றாண்டில் இத்தாலியிலிருந்து வந்த பிடிலையும் நம் வாத்தியங்களுடன் சேர்த்துக்கொள்ள நாம் தயங்கவில்லை. பெரிய ஐரோப்பிய ஸங்கீத வித்வான்கள் மிகவும் அருமையாகப் பிடில் வாசிக்கிறார்கள். நம் முன்னோர்கள் அறிந்திருப்பவைகளை அஸ்திவாரமாகக் கொண்டு மேலும் மேலும் புதிய விஷயங்களை அறிய முயலவேண்டும். மேன்மேலும் முன்னேற்றமடைவதே மானிட இயற்கையின் தத்துவம். காலத்தை அனுசரித்து முன்னேற்றமடையாவிடில் முற்காலத்தில் நாம் பெற்றவை தங்காமல் ஒழிந்துவிடும்; நம்முடைய நாகரிகத்தையும் அதன் மேன்மையையும் காப்பாற்றிக்கொள்ள இயலாது.

—ஏப்ரல், 1934

# காதல் உணர்வு

## பேராசிரியர் டாக்டர் பி. ராமமூர்த்தி

'பத்தும் பசி வந்திடப் பறந்துபோம்' என்பது ஒரு வெண்பாவின் ஈற்றடி. பசி ஏற்பட்டால், மானம், குலம். கல்வி, வன்மை, அறிவுடைமை, தானம், தவம், முயற்சி, தாளான்மை, காமம் ஆகிய பத்துவித உணர்வுகளும் இருக்கும் இடம் தெரியாமல் மறைந்து போகும் என்கிறது அந்தப் பாட்டு. ஆனால் அந்தப் பசி உணர்வை விடக் காம உணர்ச்சிதான் மிக்க சக்தி வாய்ந்ததென்று சொல்ல வேண்டும். அரைகுறையாக வயிறு நிறைந்தாலும், இந்த உணர்வு அதிகமாகத் தலைகாட்டும்; ஏழைமையும் கல்வியறிவின்மையும் நிறைந்துள்ள இந்தியாவில் மக்கள் தொகைப் பெருக்கத்துக்கே இந்த உணர்வின் மகோன்னத சக்தியே காரணம்; பசி வந்து காது அடைத்து எழுந்திருக்கக்கூட முடியாமல் இருந்தால் இந்த அப்போது உணர்வு தலை தூக்குவது கடினம் என்று சொல்லலாம்.

இயற்கையிலேயே இந்தக் காமக் கிளர்ச்சி அல்லது உந்துதல் (Sex drive) மனிதர்களிடம் மட்டும் அல்ல, எல்லா ஜீவராசிகளிடத்தும் அமைந்திருக்கிறது. இந்த உணர்வு தான் இனப் பெருக்கத்துக்கு முக்கியக் காரணமாக அமைந்துள்ளது! அதனால் இந்த உணர்வு மிகச் சக்தி வாய்ந்ததாக இயற்கையில் அமைந்திருக்கிறது. இதுமட்டும் அல்ல. 'ஸால்மன்' என்ற மீன் வகையிலும் சில ஜந்துக்களிலும், சில பறவை இனங்களிலும் ஆண் இனம் ஒரு முறை பெண்ணினத்துடன் கூடிவிட்டால், உடனே இறந்துவிடுகின்றன. வாழ்விலே ஒரே ஒரு முறைதான் இவை காம சுகத்தை அநுபவிக்கின்றன. அப்படியும் அதன் இனம் மறையாமல் வாழ்ந்துகொண்டிருக்க வேண்டும் என்றால் காம உணர்வு அல்லது கிளர்ச்சி மிகவும் சக்தி வாய்ந்ததாக அமைந்திருக்க வேண்டும் அல்லவா?

காம உணர்வு உந்துதலுக்கும் மூளையே காரணம். அந்த உணர்வைக் கட்டுப்படுத்துவதோ, அதிகமாக வெளிப்படுத்துவதோ மூளையின் தன்மையைப் பொறுத்தது; மூளை என்பதைவிட அதனுள் பாதுகாப்பாக அமைந்திருக்கும் ஒரு சிறிய பாகத்தைக் குறிப்பிடலாம்; அதுதான். அவரவர்கள் கட்டைவிரல் நகத்தளவே இருக்கும் ஹைபோதாலமஸ் (Hypothalamus) என்ற பாகம். கட்டை விரல் நகத்தளவு இது இருந்தாலும், இதனால் கட்டுப்படுத்தப்படும் உணர்வுகள் மிக முக்கியமானவை; சக்தி வாய்ந்தவை. ஏழு உணர்வுகளை இது கட்டுப்படுத்துகிறது என்பதுவரை இப்போது ஆராய்ச்சியில் நிரூபணமாகியிருக்கிறது. சிருஷ்டியின் விநோதத்தையும் இரகசியத்தை

யும் முழுதும் அறிந்துகொள்ளும் மனிதத் திறன் இந்தக் காலச் சூழ் நிலையில் உயரவில்லை.

ஹைப்போதாலமஸ் என்ற இந்த பாகம் நெற்றிப் புருவத்துக்கு நேராக உள்ளே மேல் மூளைக்கு அடியில் பாதுகாப்பாக அமைந்திருக் கிறது. தாகம், பசி, காம உணர்வு, தேக வெப்பதட்ப நிலை, கோப தாபம், உத்வேகம், (உந்துதல்) உடல் வளர்ச்சி முதலிய உணர்வுகளைக் கட்டை விரல் நகத்தளவு உள்ள இந்தப் பாகம் அடக்கியாள்கிறது. அதனுள் இந்த உணர்வுகளை எல்லாம் கட்டுப்படுத்தி ஆளும் பாகங்கள் தனித்தனியாக அமைந்துள்ளன.

காம உணர்ச்சியை ஆளும் பாகத்துக்கு அடியில், அரை அங்குல நீளத்துக்கு ஓர் இணைப்பு, பிட்யூட்டரிச் சுரப்பியை இதனுடன் இணைக்கிறது; இந்தச் சுரப்பி தலையின் நடுப்பாகத்தில் அமைந்திருக் கிறது. ஹைப்போதாலமஸிலுள்ள காம உணர்ச்சிப் பாகத்தையும் பிட்யூட்டரிச் சுரப்பியையும் இணைக்கும் அரை அங்குல இணைப்பை 'டைம்கிளாக் மெக்கானிஸம்' என்று அழைப்பார்கள். அலாரம் கடிகாரம் போல் இந்த இணைப்பு ஒரு முக்கியப் பணியைச் செய்கிறது. இந்த இணைப்பில் பலவித ஹார்மோன்கள் ஹைப்போதாலமஸுக்கும் பிட்யூட்டரிச்சுரப்பிக்கும் இடையே சுற்றிச் சுற்றி வருகின்றன. இந்த ஹார்மோன்களின் தீவிரச் சுழற்சியே, மிக அதிகக் காம உணர்ச்சிக்குக் காரணமாகின்றது.

பிட்யூட்டரிச் சுரப்பியிலிருந்து இரத்த ஓட்டத்தின் வழியாக, விந் தணுவுக்கும் (Testicles) அல்லது சினைப்பைக்கும் (Ovary) இணைப்பு இருக் கிறது. காமஉணர்வு ஏற்படுவதற்கு ஹைப்போதாலமஸ், டைம்கிளாக் மெக்கானிஸம், பிட்யூட்டரிச் சுரப்பி, விந்தணுப்பை, சினைப்பை ஆகிய இந்த ஐந்து பாகங்களுமே காரணம். ஹைப்போதாலமஸிலுள்ள காம உணர்ச்சிப் பாகத்தில் தோன்றும் உணர்வு, கடலலையைப் போல் அடித்து மோதிக் கொண்டு விந்தணுப்பையைச் செயல்படுத்தி விந்தணுக்களைத் தயாரிக்கச் செய்கிறது. பெண்களாக இருந்தாலும் இதே நிலைதான். இதை நான் அதிகமாக விவரிக்க வேண்டாம் என்று நினைக்கிறேன். பலருக்கு இந்த உணர்வின் தீவிரம் அநுபவத்தில் தெரிந்திருக்கும்.

இனத்தை உற்பத்தி செய்யும் எல்லாப் பிராணிகளிடத்திலும் இந்தச் சுரப்பிகளும் உறுப்புக்களும் உள்ளன. மனித இனத்துக்கும் இந்த உறுப்புக்கள் உள்ளன. ஆனால் மனிதனுக்கும் பிற இனங்களுக்கும் முக்கிய வித்தியாசம் ஒன்று இருக்கிறது. மற்றப் பிராணிகளுக்கு அதன் ஆயுட்காலத்தைப் பொறுத்து இந்த உணர்வு தலைகாட்டத் தொடங்கு கிறது. அத்துடன், எப்போதுமே இந்தக் காம உணர்ச்சி அவற்றிடம் காணப்படுவதில்லை. சில சில பருவத்தில்தான் இந்த உணர்ச்சி ஏற்படுகிறது. அதை ஆங்கிலத்தில் ஹீட் (Heat) என்பார்கள்.

உதாரணத்துக்கு எலி இருக்கிறது. அதன் ஆயுட்காலம் கிட்டத் தட்ட ஓர் ஆண்டுதான். அதனால் இந்த உணர்வு உந்துதல் பிறந்த இரண்டே மாதத்தில் எலிகளுக்கு ஏற்பட்டுவிடுகிறது. யானை இருக் கிறது. சுமார் நூறு ஆண்டுகள் அதன் ஆயுட்காலம். அதனால் மிகவும் தாமதமாகத்தான் இந்த உந்துதல் அதனிடம் உண்டாகிறது. இயற்கை யிலேயே இந்த உணர்வு உந்துதல் ஏற்பட ஒரு பருவக் கணக்கு இருக்கிறது என்பதை ஆராய்ந்து கண்டிருக்கிறார்கள்.

பெண் இனப் பிராணிகள் சூல் தரித்துவிட்டால் அவற்றுக்கு இந்த உணர்வே உண்டாகாது. குட்டி போட்டுச் சில மாதங்கள் சென்ற பிறகே மீண்டும் ஏற்படும். ஆனால், ஆண் பிராணிகளுக்கு

எப்போதுமே இந்த உணர்வு தோன்றிவிடுகிறது. இதற்கு 'டைம் கிளாக் மெக்கானிஸ ஹார்மோன்'களின் பெருக்கமே காரணம்.

பெண்கள் பருவத்துக்கு வருகிறார்கள் என்று சொல்கிறோம் அல்லவா? அதற்கு இந்த 'டைம் கிளாக் மெக்கானிஸம்' என்ற இணைப்புப் பாகந்தான் காரணம். அவரவர்கள் வம்ச வழி காரணமாகவும், ஊட்ட உணவு காரணமாகவும் இந்த 'டைம் கிளாக்' அவர்களைப் பூப்பு எய்தச் செய்கிறது. சில குடும்பத்தில் பதினாறு, பதினெட்டு வயதிலும் சில குடும்பத்தில் பன்னிரண்டு வயதிலும், பூப்பு எய்த இதுவே காரணம். அலாரம் கடிகாரம்போல் இந்த இணைப்புப் பாகம் செயல்படுகிறது. அதனால்தான் அந்தப் பாகத்துக்கே இந்தப் பெயர் அமைந்திருக்கிறதோ என்னவோ? இந்தப் பாகம் ஆண்களுக்கும் சரி, பெண்களுக்கும் சரி, உரிய வயதில் உணர்வுகளைத் தூண்டிவிடுகிறது.

இந்தப் பாகத்தில் அடிபட்டாலோ, ஏதாவது கட்டி உண்டாகி இறுக்கம் அதிகமானாலோ, காம உணர்ச்சியே இராது. ஹைப்போதாலமஸிலுள்ள பாகத்தில் இவ்விதக் குறைகள் ஏற்பட்டாலும் உணர்வு இருக்காது. இவ்விதக் குறைகளை இந்தக் காலத்தில் எளிதாக அறுவைச் சிகிச்சை மூலம் குணமாக்கிவிடலாம்.

பருவம் அடைந்ததிலிருந்து, பெண்களுக்கு ஒவ்வொரு மாதமும் மாதவிலக்குத் தொடங்கும். அப்படித் தொடங்கிய நாளிலிருந்து ஒரு பத்து நாட்கள் இந்த உணர்வு அதிகமாக இருக்கும். பிறகு கொஞ்சம் குறையும். இப்படியே மாதந்தோறும் உணர்வு மிகுந்து குறைந்து காணப்படும். மாதவிலக்கு நின்ற பிறகுங்கூடப் பெண்களுக்கு இந்த உணர்வு இருக்காது என்று சொல்லமுடியாது. நிச்சயமாக இருக்கும். பிள்ளைப்பேறுதான் உண்டாகாது. ஆனால் குடும்பப் பொறுப்புக்களும் வாழ்க்கைப் போராட்டங்களும் இறையுணர்வும் பெண்களை அதிகம் பாதிப்பதால் இந்த உணர்வு தலைகாட்ட எங்கே நேரம் இருக்கும்? ஆண்களைப்பற்றிச் சொல்லவே வேண்டாம்! அவர்களுக்கு இந்த உணர்வு சிரஞ்சீவியாய் நிலவிவரும்.

கண்ணால் மனிதன் பார்க்கிறான். உடனே இந்த உணர்வு தலைதூக்குகிறது. மிருகங்களுக்கு மோப்பச் சக்தியினால் இந்த உணர்வு உண்டாகிறது. இயற்கையிலேயே ஆண் பெண் இனத்தில் வித்தியாசங்கள் அமைந்திருக்கின்றன. இந்த உணர்வு உந்துதலைத் தூண்ட வேண்டும் என்பதற்காகவே பெண்களைக் கவர்ச்சியாக இயற்கை படைத்திருக்கிறது.

பெண் இனந்தான் இயற்கைக்கு முக்கியம். அவர்களால்தான் இனவிருத்தி நடக்க முடியும். இந்த உணர்வு குறையாமல் இருந்தால்தான் வாழ்க்கையில் ஒரு பிடிப்பும் இன்பமும் உண்டாகும். அதனால்தான் மனித இனம் உள்பட பல பெண் இனங்களுக்கும் மாதம் ஒரு சினைதான் உண்டாகிறது. அது கருவாக மாறும் வாய்ப்பு உண்டானால் போயிற்று. இல்லாவிட்டால் அடுத்த மாதம், அதற்கும் அடுத்த மாதம் என்று தள்ளிப் போகிறது. இனவிருத்தி தொடர்ந்து நடைபெறவேண்டும் என்பதற்காகவே இயற்கை இப்படிச் சிருஷ்டித்திருக்கிறது

பன்றி, நாய் போன்ற பிராணிகளுக்கு ஒன்றுக்கு மேற்பட்ட சினைகள் உருவாகின்றன. அவை ஒரே சமயத்தில் நாலைந்து குட்டிகள் போடுகின்றன, அல்லவா? இப்படிச் சில விலக்குகளும் உள்ளன.

ஆனால் இந்த இயற்கையிலும் சில மாறுதல்கள் காணப்படுகின்றன. ஆண் சிங்கந்தான் பிடரியுடன் அழகாக இருக்கிறது. பெண்

சிங்கம் பெரிய பூனைபோல் விளங்குகிறது. ஆண்மயில் தான் தோகை விரித்து ஆடிப் பெண்ணைக் கவர்கிறது.

காதல் உணர்வு என்கிறோம்; ஆணும் பெண்ணும் காதலிக்கிறார்கள் என்றால் அதற்குப் இந்த உணர்வுக் கிளர்ச்சி தான் அடிப்படைக் காரணம். ஆனால் காதல் உணர்வை அன்பு என்று பொதுவாகக் கூற முடியாது. அன்பு என்பது தியாகத்தின் மூலம் அடையும் பேரானந்தம். காதலனுக்காகக் காதலியோ, காதலிக்காகக் காதலனோ உயிரைக்கூடத் தியாகம் செய்யத் துணிகிறார்களே, அந்த நிலையில் தான் இந்த உணர்வை அன்பு என்ற உணர்வுடன் ஒப்பிடலாம்.

எதையும் எதிர்பார்க்காமல், தியாகம் செய்யும் தாயன்புதான் மிகச் சிறந்தது. அதைவிட உயர்ந்தது, உலக மக்களைத் தன் சகோதரச் சகோதரிகளாக எண்ணி அன்பு காட்டுவது. 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' (ஸர்வே ஜனோ; சுகினோபவந்து) என்ற அன்பு மலர் உள்ளத்தில் பூக்க, எத்தனையோ தியாகங்கள் செய்து புலன்களை அடக்கி, தவத்தின் மூலம் மனத்தை ஒருமைப்படுத்திக் கட்டுப்படுத்தும் பக்குவம் ஏற்பட வேண்டும்.

மனத்தைக் கட்டுப்படுத்தும் நிலை வர வேண்டுமானால், இந்தக் காம எழுச்சியை வெல்லவேண்டும். இந்த எழுச்சியைத் தீர்த்துக் கொள்வதால் உண்டாகும் சக்தி இழப்பை, புலனை வென்று காப்பாற்றிக் கொள்ள முடியும் என்கின்றன நம் சாஸ்திரங்கள். இந்த உணர்வைக் கட்டுப்படுத்திய யோகிகளும் இருந்திருக்கிறார்கள்.

பிரம்மசரியத்தை நியமத்துடன் காப்பாற்றினால் பலவிதச் சிறப்புகள் உண்டாகின்றன. 'யதிச் சந்தோ ப்ரஹ்மசர்யஞ் க்ரந்தி, தத்தே பதம் ஸங்க்ரஹேண ப்ரவக்ஷ்யே' என்று கீதையில் பகவான் கிருஷ்ணன் கூறுகிறார்.

'..புத்தி தாஞ்செய மோன மழியாத சித்தியுண்டாம் விந்து வற்றிலே' என்று திருமூலர் சொல்கிறார்.

'புலனின்பம் என்ற கனியை மனமானது அறிவு என்னும் கிளையில் ஏறி உண்ணுகிறது. அந்த மனத்தை வெல்ல வேண்டும்' என்று கூறுகிறார் தாயுமானவர்.

இப்படிப் பல ஞானியர்கள் கூறினாலும் இந்த உணர்வைக் கட்டுப்படுத்துவது மிகவும் சிரமம். அதுவும் பிற பிராணிகளைப் போல் இல்லாமல் மனித இனத்துக்கு எப்போதுமே இந்த உணர்வு இருந்துகொண்டிருக்கிறது. சிந்திக்கும் திறனும் நினைவுத் திறனும் மனிதனுக்கு இருப்பதால், முக்கிய உணர்வான இது அவன் எண்ணத்தில் என்றும் வாழ்ந்துகொண்டிருக்கிறது. துன்பம் அதிகமானால் கூட இந்த உணர்வு தலைத்தூக்கி, அத்துன்பத்துக்கு ஒரு வடிகாலாக அமைந்து விடுவது உண்டு. இந்த உணர்வு இயற்கையாகவே சக்தி வாய்ந்ததாக அமைந்திருக்கிறது. விசுவாமித்திரர் மேனகை கதை நமக்குத் தெரியும். பயங்கரமான புலியைச் சர்க்கஸ் கூடாரத்துள் அடக்கிச் சாகசங்கள் செய்யும் வீரன்கூட, இந்த உணர்வின் தாக்குதலுக்கு இரையாகி விடுகிறான். இந்த உணர்வு எழுச்சி ஆண் பெண் இருபாலாருக்கும் ஒரே அளவில்தான் அமைந்திருக்கிறது. சூழ்நிலைக் காரணமாகச் சிறிதளவு வித்தியாசம் இருக்கலாமே தவிர, இயற்கையில் வித்தியாசம் எதுவும் இல்லை.

காம உணர்ச்சிக்கு இரையான ஆண் பெண்களைப் பற்றிப் புராணத்திலும் சரித்திரத்திலும் எத்தனையோ படித்திருக்கிறோம். இயற்கையான இந்த உணர்வை நெறி தவறாமல் மேற்கொள்வதில் தவறே இல்லை. இந்த உணர்வை அடக்கியாளுவதாக எண்ணி,

தவறான பாதையில் செல்வதைவிட, இயற்கையின் போக்கில் செல்வது தான் புத்திசாலித்தனம். செயற்கையாக மேற்கொண்ட கட்டுப்பாடு களினால் இதை அடக்கி ஆள முனைந்தால், அப்படிச் செய்வது சாத்தியமான செயல் அல்ல என்பது ஒரு நிலையில் புரிந்துவிடும்;

இங்கே இன்னும் ஒன்றையும் சொல்லவேண்டும். மிக அதிகமாக எதில் ஈடுபட்டாலும் துன்பம் உண்டாகும் என்பது நமக்குத் தெரியும். அமுதத்தையும் அளவோடு உண்ணவேண்டும் என்பார்கள். காம விளையாட்டில் அதிகமாக ஈடுபட்டால் நரம்புத் தளர்ச்சியும் மனோ பலக் குறைவும் ஏற்படும். அதாவது இயற்கைக்குப் புறம்பாகப் போனாலும் தவறுதான்; செயற்கையாக அதிக ஈடுபாடும் அல்லல்தான்.

எல்லாருமே பகவான் ரமண மகரிஷிகளைப் போலவும் பகவத் பாதர்களையும் போலவும் விளங்க முடியுமா?

மனித இனம் வளர்ந்து கொண்டே இருக்கவேண்டும் என்பதற்காகவே இந்த உணர்வு, சிருஷ்டியில், தலையிலிருந்து இடுப்புவரை மிக அற்புதமான இணைப்புகளுடன் அமைக்கப்பட்டிருக்கிறது இந்த உணர்வு காரணமாக உண்டாகும் உறவுகளினால் அன்பும் பாசமும் பிணைப்பும் ஏற்பட வாய்ப்பும் இதனால்தான் உண்டாகிறது.

பெற்ற குழந்தையை, அன்புடன், பாசத்துடன் வளர்ப்பது மனித இனத்துக்கு மட்டும் சொந்தமான உணர்வு அல்ல; பிராணிகளிடத்தும் அது காணப்படுகிறது. சிங்கம், யானை, சில விதப் பறவை இனம் ஆகியவற்றில் ஆணும் பெண்ணும் சேர்ந்தே குட்டிகளைக் காப்பாற்றும். ஆனால் நாய் போன்ற சில பிராணிகளிடம் இந்த உணர்வு காணப்படுவதில்லை. பெற்ற பெண் நாய்தான் குட்டிக்குப் பால் கொடுத்துப் காப்பாற்றுகிறது. ஆண் இனம் குட்டிகளைப் பற்றிக் கவலைப்படுவதே இல்லை.

இயற்கையின் விநோதத்தை ஆராய்ந்து கொண்டே போனால், அதற்கு முடிவே இருக்காது. அதன் இரகசியத்தை அறிய, முன்காலத் தவசிரேஷ்டர்களைப் போல் வாழவேண்டும். தியானத்தின் மூலம் மூளையைப் பலப்படுத்த வேண்டும். ஒரு நாளிலோ, ஓர் ஆண்டிலோ புரியக்கூடிய சாதனை அல்ல இது. ஆண்டுக் கணக்கில் செய்ய வேண்டிய சாதனை. அப்படிச் சாதித்த மகான்களும் இருக்கிறார்கள். ஆனால் இன்றைய அவசர யுகத்தில் இதெல்லாம் சாத்தியம் இல்லை தான். ஆனால் எதிலும் அளவோடு இருப்பது எந்தக் காலத்திலும் சாத்தியமான செயல். இயற்கையாக அமைந்துள்ள விவேகத்தை வளர்த்துக் கொண்டால் பண்பு வளரும். பண்பட்ட செயலிலும் பேச்சிலும் ஒரு நிதானம் இயற்கையாகவே அமைந்து விடும்.

—மே, 1981

# தாண்டவமூர்த்தி

தி. நா. சுப்பிரமணியன்

மாலை நேரம் எல்லா ஜீவராசிகளையும் மனோரம்மியமாக்கிப் பரவசப் படுத்தும் சக்தி வாய்ந்தது. ஊருக்கு வெளியே மேய் காலுக்குப் போயிருந்த மாடு வீடு திரும்புகிறது. அதுகாறும் தாயைப் பிரிந்திருந்த கன்று தன் தாயைப் பார்த்தவுடனே ஆனந்தங்கொண்டு நாலுகால் பாய்ச்சலில் துள்ளிக் குதித்து அதனிடம் ஓடுகிறது.

ஆற்றோரம் சலசலவென்று அரித்து ஓடும் நீரிலும், பக்கத்து மணல் மேட்டிலும் சிறுவர்கள் கொம்மாளம் போட்டு விளையாடு கிறார்கள். அந்த விளையாட்டையும் அவர் குதித்து ஆடுவதையும் பார்க்கும்போது நமக்கும் ஒரு பரவச உணர்ச்சி உண்டாகிறது.

ஆற்றோரம் விளையாடும் அதே குழந்தை வீட்டிலே தனக்குப் பக்ஷணம் கிடைக்கவில்லை என்று கோபம் கொண்டு 'தொம். தொம்' என்று குதிக்கிறது.

இவ்விதம் உயிர்வாழும் பிராணிகள் எல்லாம் தங்கள் உள்ளத்தே தோன்றும் உணர்ச்சிகளை வெளியிடக் கூத்தாடுகின்றன. அந்தக் கூத்தைப் பார்த்தாலே அது ஆனந்தக் கூத்தா அல்லது கோபக்குதியா என்பது எளிதில் விளங்கிவிடும்.

எவ்விதமாயினும் அத்தகைய கூத்துக்கள் எல்லாவற்றிலும் ஒரு விதமான ஒற்றுமையைக் காண்கிறோம். அதுவே நாட்டிய சாஸ் திரத்தின் வித்து.

மற்றப் பிறவிகளை விட்டு, மானிடப் பிறவி அடைந்தவர்களை மட்டுமே கவனித்தாலும், உலகத்து மக்கள் எல்லாரிடையேயும் நாட்டியம் அவர்கள் வாழ்க்கையிலே ஒரு முக்கியமான அம்சமாக விளங்குகிறது. இந்த விஷயத்திலே நாகரிகம் வாய்ந்தவர்களுக்கும், காட்டுமிராண்டிகள் எனப்படும் பூர்விகக் குடிகளுக்கும் வேற்றுமை இல்லை.

எந்த நாட்டினராயினும் அவர்களுள் ஒவ்வொரு ஜாதியினரும் ஒரோரு வகை நடனத்தைப் பயின்றுவருகின்றனர். அதுதான் வேறுபாடு. ஆனால் நாட்டியத்துக்கு ஒரு முக்கிய ஸ்தானம் கொடுக்காத சமூக வாழ்க்கை எந்த ஜாதியினரிடமும் இல்லை.

மேலெழுந்த வாரியாகப் பார்த்தால், அந்த நடன வகைகள் ஒன்றுக்கொன்று சம்பந்தமில்லாமல் தனித்தனியாகத் தோன்றும். ஆனால்

ஊன்றிக் கவனித்தால் அவை அடிப்படையான ஒரே தத்துவத்தைப் பெற்றிருப்பதைக் காணலாம்.

மனித சமூக வாழ்க்கை வரலாற்றை ஆராயும் ஆசிரியர்கள் மக்களின் வாழ்க்கைக்கும் அவர்கள் பயிலும் நடனத்துக்கும் நெருங்கிய தொடர்பு இருப்பதைக் கவனித்திருக்கிறார்கள். அது மட்டுமன்று. ஒரு சமூகத்தினர் பயிலும் நடனத்தின் சிறப்பைக் கொண்டே அந்தச் சமூகத்தின் சால்பு மேம்பாட்டை நிர்ணயிக்கிறார்கள்.

பூர்விகக் குடிகளுள் மனிதனைப் பிறந்தவனுக்குப் பிறந்தது முதல் இறக்கும் வரையில் அவன் வாழ்க்கையில் ஏற்படும் சம்பவம் ஒவ்வொன்றையும் நாட்டியமாடியே கொண்டாடுவர். அவனுடைய பிறப்பு, சமூக வாழ்க்கையில் அவனும் ஓர் அங்கம் வகிக்க முற்படுவதைக் குறிக்கும் ரகசிய உபதேசம்.

நடனம் ஆடும் ஒருவன் அந்தச் சமயத்தில் தன்னை மறந்து உணர்ச்சி வசப்பட்டு உன்னத நிலையை அடைகிறான் என்பதை யாவரும் அறிவர். இதை அநுபவத்தால் அறிந்த பண்டை மக்கள் அந்த அந்த வகை உணர்ச்சியை அடைய ஒரு குறிப்பிட்ட நடனத்தை ஆடி வந்தனர்.

ஆப்பிரிக்கா, ஆஸ்திரேலியா முதலிய தேசங்களில் வசிக்கும் பூர்விகக் குடிகள் போருக்கோ வேட்டைக்கோ புறப்படுவதற்கு முதல் நாள் முழுவதையும் நாட்டியம் ஆடியே கழிப்பர். கல்யாண காலங்களில் ஆடும் நடனத்தினின்றும் அது வேறானது; கண்டோர் கதிகலங்கும்படி வீரரஸம் ததும்பும். அதிலே ஈடுபடுவோர் தங்களை மறந்து வீரத்தைப் பெறுகிறார்கள் என்பதே அவர்கள் நம்பிக்கை.

இந்த விதமாகக் காலக்கிரமத்தில் நடன வகைகளுக்குச் சக்தியும் கற்பிக்கப்பட்டது.

உலகத்து மக்களில் மிகப் புராதனமான நாகரிகம் படைத்து, அது இன்றைக்கும் பெருமை பெற்றுத் தலைநிமிர்ந்து நிற்கும்படியாகப் பாதுகாத்துவரும் நம் மக்களிடையேயும் நடனம் பூர்ண அபிவிருத்தி பெற்று விளங்குகிறது; நம் முன்னோர்கள் நாட்டியத்தையே ஒரு கலையாகச் செப்பனிட்டு வளர்த்து வந்திருக்கிறார்கள்.

எந்த வாழ்க்கைச் சம்பவத்தை விளக்க நடனத்தை உருவகப் படுத்தினார்களோ அந்தச் சம்பவத்தை நாம் மறந்துவிட்டோம்; ஆனால் உருவகத்தை மட்டில் இன்றைக்கும் காண்கிறோம். எனினும் நாம் மறந்த சம்பவங்களை நினைவு மூட்டக்கூடிய ஆதாரங்கள் முற்றும் மறந்துவிடவில்லை.

வாழ்க்கையின் தத்துவத்தை நமக்கு அறிவுறுத்த முன்னோர்கள் தெய்வத்தையும் மனித உருவிலேயே அமைத்து வாழ்க்கை வேறுபாட்டையும் விசித்திரங்களையும் பாவங்களையும் விளக்கிக் காட்டினார்கள். அதனால் மானிட வாழ்க்கையை அடிப்படையாகக் கொண்டு எழுந்த தேவ வாழ்க்கையிலும் நடனம் முக்கியமான அம்சமாக அமைந்தது.

இவ்விதம் ஏற்பட்டதே தாண்டவமூர்த்தியின் உருவம். இதிலே பலவகைகள் உண்டு. ஒவ்வொன்றும் ஒவ்வாரு பாவத்தை விளக்கிக் காட்டுவது.

தென்னாட்டிலே கிடைக்கும் தாண்டவமூர்த்திகளுள் சர்வ சாதாரணமானது நடராஜ உருவம். அந்த நடனத்தைப் பொதுவாக ஆனந்த தாண்டவம் என்று சொல்லுவார்கள். நாட்டிய சாஸ்திரப்படி அது புஜங்க த்ராஸம் எனப்படும்.

இத்தகைய உருவம் கல்லிலே செதுக்கப்பட்டிருப்பது மிகவும் அரிது; பெரும்பாலும் உலோகத்தால் வார்க்கப்பட்டு இருக்கும். கண்டோரைப் பரவசப்படுத்துவதாகவும் இவ்வளவு லாகவமாகவும் கல்லில் செதுக்க முடியாததே காரணம் போலும்!

திடீரென்று காலடியில் பாம்பைக் கண்ட ஒருவன் தன் காலைத் தூக்கி மற்றொரு காலால் நிற்க முடியாமல் தத்தளிக்கும் நிலையைக் காட்டி நடனம் புரிவதையே நாட்டிய சாஸ்திரத்தில் புஜங்க த்ராஸம் என்பர்; நடராஜ விக்கிரமும் நான்கு கைகளோடு நீறு பூசிய மேனியுடன் அந்த நிலையிலே நிற்கக் காண்கிறோம்.

குப்புறக் கிடக்கும் முயலகன் என்னும் அபஸ்மார புருஷனை மிதித்து அவன் இடுப்பில் ஒரு காலை ஊன்றி மற்றொரு காலைத் தூக்கி நின்று ஆடுகிறார் அவர். காலடியிலே முயலகனுக்குப் பக்கத்தில் ஒரு பாம்பு படம் எடுத்துக் கிடப்பதைக் காணலாம். சில சமயங்களில் முயலகன் அந்தப் பாம்போடு விளையாடுவதேபோல அமைத்திருப்பான் சிற்பி.

ஒரு காலால் நிற்பவன் தன்னைச் சமாளித்துக்கொண்டு நிலை நிற்கத் தன் கையையும் உபயோகித்துக்கொள்வான். அதே போல நடராஜரும் இடது முன் கையை உடலின் குறுக்காக வலது புறம் நீட்டி அநாயசமாகத் தொங்கவிட்டிருக்கிறார். இதைக் கஜஹஸ்தம் என்றும் தண்ட ஹஸ்தம் என்றும் சொல்லுவார்கள். அந்தக் கை நடு விரலின் நுனி, தூக்கி நிற்கும் பாதத்தைச் சுட்டிக் காட்டுவதாக அமைந்திருக்கிறது. இடது பின் கையிலே அக்கினியை ஏந்தி நிற்கிறார் அவர்.

'பயப்படாதே' என்று பக்தனுக்கு அபயம் கொடுக்கும் அறிகுறியாக வலது முன் கையை அபய ஹஸ்தம் என்று குறிக்கப் பெறும் முத்திரையில் வைத்திருக்கிறார். வலது பின்கையினால் உடுக்கையை ஒலித்துக்கொண்டிருக்கிறார்.

அந்த நிலையிலே அவர் 'தட்டாமாலை' சுற்றுவதுபோலத் தம்மையே சுற்றி ஆடுவதால் விரித்த செஞ்சடையும் உத்தரீயமும் காற்றிலே பறந்து நிற்கக் காண்கிறோம்! மேல் வேஷ்டியை இடுப்பில் கட்டி ஒரு தோளிலே போட்டிருந்தாலும் அது ஆட்டத்தால் அலையுண்டு பறந்து கிடக்கிறது.

எம்பெருமானும் ஊழிக் கூத்துக்குத் தம்மை அலங்கரித்துக் கொண்டு வந்திருக்கிறார். கை கால்களில் நடு (பாம்பு) விரலைத் தவிர மற்ற விரல்களில் மோதிரம் அணிந்திருக்கிறார். தலையிலே ஜடா மகுடத்தில் மயிலிறகு செருகி அழகு செய்து கொண்டிருக்கிறார். கையிலும் கழுத்திலும் உள்ள பல வேறு ஆபரணங்களோடு சிறு பாம்புகளும் ஒன்றாகச் சுற்றி அவர் உடலில் தவழ்ந்து செல்கின்றன.

முக்கண்; புன்முறுவல் பூத்த முகம்; ஜடாபாரத்தில் சந்திரனும் கங்கையும்-இவ்விதத் திருக்கோலத்துடன் விளங்கும் நடராஜ உருவத்தின் லாகவத்தைக் கண்டு வியக்காதவரே இல்லை.

நாதாந்த நடனம் எனப்படும் இதன் தத்துவத்தைப் பக்தர்கள் பலவிதமாக அநுபவித்துப் பாடியிருக்கிறார்கள்.

இந்தக் கூத்தை ஸந்தியா தாண்டவம் என்றும் சொல்வர்; எம்பெருமான் தினந்தோறும் சாயங்காலம் மற்ற எல்லாத் தேவர்களும் கண்டு களிக்கத் திரு நடனம் புரிகிறார் என்று கூறுகிறார்கள். அவர் நடனத்தைக் கண்டு எல்லா ஜீவராசிகளும் கூத்தாடுகின்றனவாம்.

ஆக்கல், அளித்தல், அழித்தல் ஆகிய முத்தொழிலையும் தன்னுள் அடக்கிய பிரளய தாண்டவமாகவே இதைச் சொல்லுவர். அவர் திருநடனம் நின்றுவிட்டால் உலக இயக்கமே நின்றுவிடும் என்றும் எண்ணுகிறார்கள். வாழ்க்கையின் அநித்தியத்தை உருவகப்படுத்தும் சந்தியா காலத்திலே' அழித்தல் தொழிலையே பிரதானமாகக் கொண்டுள்ள ருத்திரன் ஆடும் தாண்டவத்தை ஊழிக்கூத்து என்று சொல்வது பொருத்தமானதே ஆகும்.

பல விதமாக விரித்துக் கூறக்கூடிய தத்துவார்த்தங்களை எடுத்துக் காட்டும் நடராஜர் உருவம் தமிழ் நாட்டுக்கே சிறப்பான தனி உரிமை பூண்டது. இத்தகைய உருவம் வேறு இடங்களில் இல்லை: சோழ மன்னர்கள் நமக்கு அளித்துச் சென்ற செல்வம்.

இதன் நிர்மாணம் மிகவும் சிரமமானது என்றே சிற்பிகள் சொல்வர். பரந்த மேற்பாகத்தையுடைய இந்த விக்கிரகத்தை எந்தப் பக்கமும் சாயாமல் ஒற்றைக் காலிலே நிறுத்த வேண்டும் அன்றோ? அதற்காகவே விக்கிரகத்தைச் சுற்றியுள்ள பிரபா மண்டலத்திலே பின் கைகள் இரண்டையும் விரித்த சடைகளையும் உத்தரீயத்தையும் பொருத்திவைத்திருக்கிறார்கள் போலும்!

விக்கிரகத்தையும் பிரம்மாண்டமான திருவாசியையும் தனித் தனியாகப் பிரித்து எடுத்துவிடக் கூடிய முறையில் வார்க்கப்பட்ட உருவங்களும் உண்டு. அத்தகைய விக்கிரகங்களுக்கு மேற்பாகம் பரந்து காணப்படாது. விரித்த சடையும் உத்தரீயமும் இரா கட்டு சடை எனப்படும் ஜடா மகுடம் பூண்டே காணப்படும் அந்த விக்கிரகம். கால் கைகள் மத்திய ரேகையை விட்டு அதிக தூரம் விலகி இரா:

ராமேசுவரத்தில் உள்ள விக்கிரகம் இவ்வாறே அமைக்கப் பட்டுள்ளது. இத்தகைய உருவங்களில், ஆனந்த தாண்டவமூர்த்தி யுருவத்தில் உள்ள இயற்கையான வேகத்தைக் காண முடியாது.

நடராஜ உருவங்களுக்குச் சில சமயங்களில் நான்கு கைகளுக்குப் பதிலாக எட்டுக் கைகளும் பதினறு கைகளும் இருப்பதும் உண்டு. மற்றும் சில உருவங்களில் நெற்றிக் கண் இல்லாமல் இரண்டு கண்களே இருக்கும்.

ஆகமங்களிலே தாண்டவமூர்த்தி நூற்றெட்டு வகைப்படும் என்று கூறப்பட்டுள்ளது. நாட்டிய சாஸ்திரப்படியும் நடனத்திலே நூற்றெட்டு வகை உண்டு. தாண்டவமூர்த்தி ஆடுவதாகச் சித்திரிக்கப் பட்ட நடன வகைகள் பெரும்பாலும் நாட்டிய சாஸ்திரத்தில் கூறப் பட்டிருக்கும் வகைகளையே பின்பற்றியிருக்கக் காணலாம்.

இடது காலை ஸ்திரமாக ஊன்றி, வலது காலை உயரத் தூக்கி, முகத்துக்குச் சமமாகக் கொண்டு ஆடும் உருவத்தைத் தமிழ்நாட்டுக் கோயில்களில் சில சமயங்களில் காணலாம். ஊர்த்துவ தாண்டவம் என்று அதைச் சொல்லுவார்கள். சக்தியுடன் வாது நடனம் புரிந்த எம்பெருமான் அவளை வெல்லும் வகையறியாமல், இந்த நடன முறையை மேற்கொண்டாராம். பெண்ணனதால் இந்த அபிநயத்தைப் பிடிக்க முடியாமல் சக்தி வெட்கித் தலைகுனிந்து தன் தோல்வியை ஒப்புக்கொண்டாளாம். இவ்விதம் கூறுகிறது ஒரு கதை. நாட்டிய சாஸ்திரத்தில் இவ்வகை நடனத்தை லலாட திலகம் என்பர்.

தஞ்சை ஜில்லா நல்லூர்க் கோவிலில் சதுரம் என்னும் நாட்டிய முறையில் நடனம் செய்யும் எம்பெருமான் உருவம் ஒன்று இருக்கிறது. அது உலோகத்தால் ஆனது. எட்டுக் கைகளுடன் கூடிய அந்த விக்கிரகம் மிக்க அழகாக இருக்கிறது: இதே வகை நடனமூர்த்தி யின் திருவுருவம் கல்லில் செதுக்கப்பட்டு வாதாபிக் குடைவரைக்

கோயிலில் காணப்படுகின்றது? அது பதினறு கைகளுடன் விளங்குவதாகும். வலது காலை ஸ்திரமாக ஊன்றி, இடது காலைப் பூமியில் விரல் நுனியால் தாக்கிக் குதிகாலைத் தட்டித் தாளம் போடுவது போல அமைந்துள்ள இவ்வகை உருவம் பார்வைக்குக் கவர்ச்சியுள்ளதாகத் தோன்றுகிறது; நடனத்தின் உத்வேகம் மிகுந்து எம்பெருமான் தம்மை மறந்து நாட்டியமாடுவதுபோலவே காட்சியளிக்கிறார். வாதாபியில் உள்ள அர்த்த சித்திரத்திலே தாண்டவமூர்த்தியின் பக்கத்தில் பிள்ளையாரும் ஆடிக் களிப்பதைப் பார்க்கலாம்.

எல்லோராக் குடைவரைக் கோயிலில் கடிசமம், லலிதம் என்னும் நடன வகைகளை விளக்கும் அர்த்த சித்திரங்கள் உள்ளன.

சாதாரணமாக நின்றுகொண்டு பேசும்போது ஒரு காலைப் பூமியில் நன்றாக ஊன்றி மற்றொரு காலை லேசாக வளைத்து நிற்பது போன்ற நிலையில், இடையின் ஒரு பக்கம் உயர்ந்தும் மற்றொரு பக்கம் தாழ்ந்தும், இரு கால்களையும் ஒன்று சேர்க்காமல் ஒன்றையொன்று குறுக்கிடும்படியாகக் காணப்படும் விக்கிரகமே கடிசம நிலையில் உள்ளது.

மிகுந்த உத்வேகத்தோடு தாண்டவமாடும்போது எம்பெருமான் தம் இடுப்புக்கு மேற்பட்ட உடலைப் பின்னால் தள்ளி ஒருபுறம் நன்றாகச் சாய்ந்து இடையே இடது பக்கம் நன்றாக உயர்த்தி வலது குதிகாலால் தாண்டவத்துக்கு ஏற்பத் தாளம் போடும் நிலையில் இருப்பதைக் காட்டும் உருவமே லலிதம் என்ற வகையைக் குறிக்கிறது.

காஞ்சீபுரம் கைலாசநாதர் கோயிலிலே ஒரு காலை நன்றாக உயரத் தூக்கி, ஓங்கித் தாளம் போட்டுத் தாண்டவமாடும் நிலையில் தலஸ்ஸ்போடிதம் என்னும் வகை நடனத்தை ஆடும் உருவம் இருக்கிறது. அதே கோயிலில், மற்றொரு விக்கிரகமும் உள்ளது. தாண்டவமாடி வரும்போது திடீரென்று உட்கார்ந்து வலது காலை வளைத்துப் பூமியில் பாதத்தை ஊன்றுவதோடு இடது காலைப் பின்புறமாக வளைத்து முழங்காலைப் பூமியில் ஊன்றி நாட்டியமாடும் நிலையில் காணப்படும் அந்த உருவம், நாட்டிய சாஸ்திரத்திலே எந்த வகையைக் குறிக்கிறது என்பதை நிர்ணயிக்க முடியவில்லை.

இவைபோன்ற இன்னும் வேறு வகைத் தாண்டவமூர்த்தி உருவங்கள் அங்கங்கே காணப்படுகின்றன. ஆனால் இவ்வகை உருவங்கள் எல்லாம் கல்லிலேதான் அதிகமாகச் செதுக்கப்பட்டுள்ளவை; அன்றி, சோழர் ஆதிக்கம் ஓங்கி அவர்கள் மகோன்னத நிலையில் விளங்கிய காலத்துக்கு முற்பட்டவை. சோழர்கள் ஆனந்த தாண்டவத்தை விளக்கும் நடராஜ உருவத்தைச் சிருஷ்டித்துப் பிராபல்யமாக்கியவுடன், மற்ற வகைகள் சிறிது சிறிதாக வழக்கொழிந்து மறையலாயின.

செப்டம்பர், 1944

# வேதச் செய்யுள்

வித்துவான் நா. கனகராஜையர்

பூர்வார்ஜிதமாக நாம் பெற்றிருக்கும் செல்வங்கள் வேதங்கள் ஆகும். வேதவாக்கியங்கள் எக்காலத்தில் இயன்றன, யார் இயற்றினர் என்ற ஆராய்ச்சியெல்லாம் பெரியோர்க்குரிய பணியாம். வேதவாக்கியங்கள் மறைகள் என்று பல்லாயிர ஆண்டுகளாகக் காக்கப் பட்டு வருகின்றன. பொது மக்கள் பயின்று பயன் பெறத்தக்க பொருள்கள் பல வேதங்களில் இருப்பினும், குரு பரம்பரையின் அருள் பெற்று அறியவேண்டும் என்ற எண்ணம் நம் நாட்டில் உள்ளது.

வேதங்களில் உபநிடதம் என்ற பகுதி ஞானநெறியை விளக்குவதாகும். உபநிடதங்கள் நூற்றெட்டு என்று சொல்வதுண்டு. பத்து அல்லது பன்னிரண்டு உபநிடதங்களே குருபரம்பரையாய் விளக்கம் பெற்றவையாம். இந்த உபநிடதங்களைப் பாஷியங்களோடும் விரிவுரைகளோடும் ஸம்ஸ்கிருத வித்வான்களிற் சிலர் முறையே பயில்கிறார்கள். ஸம்ஸ்கிருத பாஷையில் தர்க்கம், வியாகரணம், அலங்காரம், மீமாம்ஸை, வேதாந்தம் என்ற ஒவ்வொரு சாஸ்திரமும் பெரிய சமுத்திரமாக இருந்திருப்பதால் ஒரு சாஸ்திரம் பயின்றவர் மற்றொன்றையும் பயின்றிருப்பார் என்ற நியதியில்லை. அபூர்வமாகச் சில பெரியோர்கள் இரண்டு மூன்று நான்கு சாஸ்திரங்களில் வல்லவர்களாயிருக்கிறார்கள். வேதாந்த சாஸ்திரத்திற் பூரண பாண்டித்தியம் பெற்றவர் மிகச் சிலரே.

இப்படிப் பல வருஷங்கள் உழைத்து அரிய பொருள்களை உணர்ந்திருக்கும் பெரியோர்களை அடுத்து வேதாந்த விஷயம் தெரிந்து கொள்ளவேண்டும் என்று ஸம்ஸ்கிருத பாஷையில் நல்ல பயிற்சியில்லாதவர்கள் முயல்வது அபூர்வமே. அப்படியே இவர்கள் போனாலும் அந்த வித்துவான்கள் எளிதிலே போதிப்பார்கள் என்று துணிந்து கூற இயலாது. இதனால் நம் முன்னோர் ஈட்டிவைத்த அருஞ்செல்வத்தின் பெருமையையும் அருமையையும் நாம் சிறுதேனும் அறியாமல் வாழ்ந்து மடிய நேரிடுகின்றது.

நாலாயிர திவ்வியப் பிரபந்தத்துக்கு விரிவான உரைகள் உண்டு. தேவாரத்துக்கு உரை விரிக்க யாரும் துணியவில்லை. இந்த அருட் பாக்களிலே உபநிடதக் கருத்துக்கள் ஆங்காங்கு வந்து விளக்கம் பெறுகின்றன என்பதை நுண்ணுணர்வு உள்ள பெரியோர்கள் கூறக் கேட்கிறோம். பக்திப் பெருவெள்ளத்திலே திளைத்த மகான்கள் எடுத்தாளும் கருத்துக்களைப் பொதிந்து வைத்திருக்கும் உபநிடதங்களை அறிஞர் பலரும் பயின்று உய்த்துணர்தல், தமிழில் உள்ள பல அருள்

நூல்களின் உண்மைப் பொருளைத் தெரிந்துகொள்ளச் சிறந்த வழியாகும்.

மனவாக்குக்களுக்கு எட்டாத பொருளைப் பலபடியாக விளக்கி ஒரு முகமாக உய்த்துணரவைக்கும் உபநிடதங்களில் பொதுமக்கள் அறிந்து இன்புறத்தக்க செய்யுட் சுவை பல பகுதிகளில் உண்டு. உவமை, உருவகம் முதலிய அணிகள் காவியங்களில் அமைவது போலவே அழகாய்ப் பொருந்தியுள்ளன. இந்த அணிகள் அங்கே கருதிய பொருளை விளக்குவதற்கு உதவிகளாகவே அமைந்துள்ளன. இங்ஙனம் அமைந்த பகுதிகள் பின்னே சில எடுத்துக் காட்டப்படும்.

எல்லாரும் அறியத்தக்க பொதுவான பொருள்களே உபநிடத வாக்கியங்களில் உவமைகளாக வருகின்றன. தேர், தேர்ச்சக்கரம், சக்கரத்துள்ள ஆர்கள், குதிரை, தீப்பொறி முதலியவை அடிக்கடி வரும் உவமைகளாம். உடம்பினுள் ஆன்மா அமைந்த இயல்பை விளக்க வந்த இடத்தில் ஒரு மந்திரம்,

"ஊர்வோன் ஆன்மா ஊர்தி உடலே
அறிவுகோல் கொள்வோன் அவன்கைப் படூஉம்
கலனையே மனமெனக் கண்டுணர்ந் திடுதியே"

(கடவல்லி)

என்று கூறுகிறது. இங்கு ஆன்மா=ஊர்வோன், உடல்=ஊர்தி, அறிவு=சாரதி, கலனை=மனம் என்ற உருவகம் அமைந்த அழகு சிந்திக்கத் தக்கது.

பிரமவஸ்துவின் தன்மையை விளக்க வரும் உவமைகள் பல உண்டு. இங்கு ஓர் உருவகம் காட்டப்படும்:

"உம்பரில் வேரும் இம்பரிற் கிளைகளும்
பரவிய பழமை யரச மரமிது." (கடவல்லி)

இதைக் காட்டிலும் தெளிவாகப் பிரமப்பொருளை விளக்கல் இயலுமோ? கடலிலே கலக்கும் ஆறுகள் தம் தனித்தன்மையை இழந்து கடலாகவே மாறும் நிலைமை சில இடங்களில் உவமையாக வருவது உண்டு. பிரசினோபநிடதத்தில் ஓர் உபதேசம் வரும். அதன்கண் அமைந்த உவமை, பொருளைத் தெளிவாக விளக்குகிறது. அது வருமாறு:—

"தேருருட் குடத்துச் சேரும் ஆரென
எவன்பாற் கலைகள் யாவும் இருக்குமோ
அறியத் தக்க அவனைப் புருடனை
அறிக மரணத் தவல முருதே."

பிரமப் பொருளிலிருந்தே எல்லாம் தோன்றின என்ற உண்மையை விளக்கச் சில உவமைகள் வரும்; அவையும் எளிதில் எவர்க்கும் பொருளை விளக்கும்.

"சிலம்பி தானே சிறுநூல் படைத்துத்
தனக்குளே யடக்குந் தன்மைபோல், நிலத்திற்
பூண்டுகள் தோன்றுவ போல், மனி தன்பால்
மயிர்கள் முளைத்து வளர்வுறும் செயல்போல்
அக்கரத் திருந்தே யகிலமும் தோன்றுமே."

(முண்டகம்)

இங்கு மூன்று உவமைகள் ஒரு பொருளை விளக்கத் துணை நிற்கின்றன.

பிரமானுபவத்துக்கு உரிய நெறியை உபநிடத வாக்கியங்களைப் போல நன்றாய் உணர்த்துவன வேறு இல்லை. இந்த உயர்ந்த கருத்துக்கு உருவகமும் உவமையும் உதவியாய் நிற்கும் அழகைப் பலவிடங்

களிற் பார்க்கலாம். பிரமம் இலக்கு ஆகும், அந்த இலக்கை எய்து பெறும் அம்பு சீவ ஆன்மாவாகும், பிரணவ மந்திரம் அதற்குரிய வில்லாகும் என்று ஒரு மந்திரம் கூறுகிறது. அது வருவாறு:—

"பிரணவம் வில்லாம் சரமே ஆன்மா
பிரமம் இலக்கெனப் பேசப் படுமே
குறியினே டொன்றிய நெறியுறு மம்புபோல்
ஒருமை யுணர்வினஃ துணரத் தக்கதே."

(முண்டகம்)

சீவான்மாவுக்கும் பரமான்மாவுக்கும் உள்ள பேதத்தை உலகத்தார் எத்தனையோ வகையாக வாதிடுகின்றனர். உபநிடத வாக்கியம் சில பகுதிகளில் ஒற்றுமை கூறும். சில பகுதிகளில் வேற்றுமை கூறும். வேற்றுமை கூறும் இம்மந்திரம் அறிஞர் நினைவுக்கு உரியதாம்.

"ஒன்றொடொன் றிணங்கி நன்றமை நட்புடன்
சிறகரால் அழகிய பறவைகள் இரண்டுதாம்
ஒருமர மதனிடை மருவிவாழ் கின்றன;
இனிமைசால் அம்மரக் கனியினை ஒன்று
தின்னும் மற்றது தின்னாது காணுமே." (முண்டகம்)

இங்கே சீவான்மாவும் பரமான்மாவும் இரண்டு பறவைகள் எனப் பெற்றன. ஸம்ஸாரம் என்ற மரத்தில் இரண்டும் சேர்ந்துள்ளன. அம்மரக்கனியைச் சீவான்வா அநுபவிக்கிறது, பரமான்மா சாக்ஷி மாத்திரமாக விளங்குகிறது என்ற உண்மை நயமுற விளக்கப் பெற்றுள்ளது ஜீவ பரமாத்ம ஐக்கியத்துக்கு விரோதமாக வாதிப்போர்க்கு இம்மந்திரம் ஓர் உதவியாகும்.

ஐக்கியத்தை விளக்கும் மந்திரங்கள் உபநிடதங்களில் மிகுதியாய் உண்டு. அவற்றுள் ஒன்று இங்கே தரப்படும்;

"கடலிடை யொழுகுறு நெடுநீ ராறுகள்
தம்முடை உருப்பெயர் தவிர்வன வாகி
அடங்குறும் அமைவுபோல், அறிவுடைப் பெரியோன்
பெயரும் உருவமும் பிரிவுறப் பெறுபு
திப்பிய மாகிய மெய்ப்பொருள் தன்னைப்
பெரிதினிற் பெரிய புருடனை எய்துமே."

(முண்டகம்)

இங்கும் அழகிய உவமை ஒன்று வந்துள்ளது.

பிரமவஸ்துவின் பெருமையை விளக்கும் வாக்கியம் பல உண்டு: அவை பயில்வார் அறிவின் நிலைக்கு ஏற்ப விளக்கம் தருபவையாகும்: அவற்றுள் ஒன்று வருமாறு:

"எய்தப் பெறுதே யெங்கிருந் துளனொடு
மொழிமீண் டிறுமம் முறைபெறு பிரமத்
தானந்த உருவம் அறியப் பெறுவோன்
என்றும் அஞ்சுதல் இலனும் எதற்குமே."

(தைத்திரியம்)

இங்ஙனம் உயர்ந்த கருத்துக்களை எளிதில் விளக்கும் பல அழகுகள் பொருந்திய உபநிடதம் தமிழ்ப் புலவர் பலரும் பயிலத்தக்கப் பெருநூலாகும்; வடமொழியென்று வெறுப்புத் தோன்றாமல் உள்ளம் உருகப் பயில்வார்களாயின் தமிழ் நூல்களின் அருங்கருத்துக்களை நன்கு உணர இப்பயிற்சியே துணையாக இருக்கும்.

செப்டம்பர், 1938.

# காய்கறித் தோட்டம்

ச. கு. கணபதி ஐயர்

இப்பொழுது உணவுப் பொருள்கள் விலை ஏறி நிற்கின்றன; சத்துள்ள காய்கறிகள் கிடைப்பது அருமையாக உள்ளது. நமக்கு ஒரு சாண் நிலம் இருந்தாலும் போதும், அதில் ஏதேனும் ஒன்றைப் பயிர் செய்யலாம். நிறைய இடம் இருக்கிறவர்கள் பல தினுசுகளை விளைக்கலாம். தோட்டம் போடுதல் பிரம்மவித்தை அல்ல. எவரும் அனுசரிக்கத் தக்க எளிய முறைகள் பல இருக்கின்றன.

தோட்டம் போடுவதற்கு முதலில் நிலத்தைச் சரிப்படுத்த வேண்டும். தரையை ஈரமாக்கி நன்றாகக் கொத்தவேண்டும். மண் கட்டிகளை உடைக்க வேண்டும். புல் முதலியவற்றின் வேர்கள் காணப் பட்டால் ஒன்றுவிடாமல் பிடுங்கி எறிந்துவிடல் அவசியம்.

அடுத்தபடி மக்கிய சாண எருவையும் தழை எருவையும் கொத்திய மண்ணோடு சேர்த்து ஒன்றாகும்படி பல தடவை கிளறிவிட வேண்டும்.

பசுஞ்சாணமும் எருமைச் சாணமும் குழியில் ஒரு மாதமாவது மக்கினால் நல்ல எருவாகும். தொழுவத்தில் உள்ள மேல் மண்ணும் உயர்ந்த எருவே. ஆட்டுப்புழுக்கை எல்லா உரங்களிலும் மேலானது. அதனை மக்கச் செய்ய வேண்டிய அவசியம் இல்லை. அப்போதே உபயோகித்துக் கொள்ளலாம். பலவிதமான தழைகளைக் குழியில் போட்டு மூன்று மாதம் மூடிவைத்திருந்தால் அவை மக்கிக் கறுப்பாகி விடும். இந்த மண் தழை உரம் அல்லது மக்கு எனப்படும். இது உயர்ந்த வகை எருவாகும். இந்த எருவகைகளில் ஒன்றையோ பலவற்றையோதான் மண்ணோடு கலக்கவேண்டும்.

காய்கறிச் செடிகள் களிமண் நிலத்தில் நன்றாக வளர்ந்து பலன் தரமாட்டா. களி அதிகமாக இருக்கும் நிலத்தில் தாராளமாக மணலைச் சேர்த்துவிட்டால் மண் சரியாகிவிடும். மணல் பூமியாக இருந்தால் களிமண்ணையேனும் தொழு எரு, மக்கு இவற்றை யேனும் சேர்க்க வேண்டும். அப்பொழுது மண்ணின் வாசி சரியாகி விடும்.

நிலம் தயார் ஆனதும் பாத்தி கட்டவேண்டும். செடிக்குச் செடி இடைவெளி தூரம் எவ்வளவோ, அவ்வளவு அகலம் வைத்து நெடுகப் பாத்தியை அமைக்க வேண்டும். பாத்திக்கு இருபுறமும் மண்ணால் கரை போட்டுவிடுக. இந்தப் பாத்தி ஒரு வரிசை எனப்படும்.

நடவுவிஷயமாக நாம் கவனிக்க வேண்டுவன யாவை என்ருல், சில செடிகள் ஓர் இடத்தில் நாற்று விடப் பெற்றுப் பிறகு பாத்திகளில் நடுவதற்கு யோக்கியமாகும். கத்திரி, தக்காளி, மிளகாய் இவை நட்ட இடத்திலேயே பலன் தருவதில்லை. அதனுல் நாற்று நடவு இவைகளுக்கு இன்றியமையாதது. வெண்டை நாற்றைப் பிடுங்கி வேறிடத்தில் நட்டால் அது வளர்ந்து பலன் தராது. புடல், முள்ளங்கி, வெங்காயம் இவை வெண்டையைப் போன்றவை.

நாற்று விடும் இடம் நல்ல சத்துள்ள மண்ணுக இருக்க வேண்டும். அதில் மணலின் கலப்பு அதிகமாக இல்லையானுல் செடிகள் நன்ருக வளரமாட்டா. வெளியிடங்களில் நாற்று விட்டால் எலி, பறவைகள், புழு, பூச்சிகள் விதைகளையோ முளைகளையோ தின்று விடுவதும் உண்டு. வாய் அகன்றதும் அடியில் ஓட்டைகள் உடையதுமான மரத்தட்டில் மணலையும் எருவையும் போட்டு விதைகளை நடுவது நல்லது. எல்லாருக்கும் மரத்தட்டுகளில் நடுவது சாத்திமன்று. அதனுல் எலி முதலியன தின்னுத இடத்தில் நாற்று விடுதல் வேண்டும். நாற்றுப் பாத்தியில் விதைகளை மிகவும் நெருக்கமாக நடவேண்டும். செடி நன்கு தழை விட்டு வந்ததும் நாற்றுகளைப் பேர்த்தெடுத்து முன்னமே தயாராக உள்ள பாத்திகளுக்கு எடுத்துச் சென்று நட்டுவிடலாம். சிறிது ஜலம் தெளித்துப் பாத்தியை ஈரமாக இருக்கும்படி செய்யவேண்டும். நாற்று நட்டதும் பாத்தியில் வெயில் பட்டால் இளஞ்செடிகள் துவண்டு போகும். அதனுல் மாலை நேரத்தில் நாற்று நடுக. இரண்டு நாள் பாத்திகளுக்கு நிழல் கொடுப்பது மிகவும் நல்லது.

பாத்திகள் தயாரிப்பில் சால் செய்வது ஒரு முறை. கலப்பையால் நிலத்தை உழும்போது பள்ளமும் மேடும் உண்டாகின்றன அல்லவா? இந்தப் பள்ளங்கள் சால் எனப்படும். இவ்வித மேடு பள்ளங்களை நாம் கையினுலோ மண்வெட்டியினுலோ செய்வதே சால் செய்தல் எனப்படும். முள்ளங்கியை இந்தச் சால் மேடுகளில் நட்டால் அதற்கு நீர் அதிகமாகக் கிடைப்பதோடு வேர் நன்ருக உள்ளே செல்ல மண் நெகிழ்ச்சி உடையதாகும். அதனுல் கிழங்கு பெரியதாக வளர்ச்சி அடையும்.

செடிகள் வளரும்போதே அவற்றின் விரோதிகளும் தோன்றி வருவது இயல்பு. களைச் செடிகள், புழு பூச்சிகள், ஆடுமாடுகள், பூஷாணநோய் இவைகளே தாவரங்களின் விரோதிகள். பாத்தியில் நாம் வைத்துள்ள செடி தவிர வேறு எது முளைத்தாலும் அதனை முளையிலேயே களைந்துவிட வேண்டும். சில பூச்சிகள் பாத்தி மண்ணிற் புதைந்திருந்து இரவில் வெளிவந்து செடியை அரித்துவிடுவது உண்டு. நீர் வார்த்தவுடன் பாத்தியைக் கொத்திவிடுவதனுல் மேல் மண் கீழே போயும் கீழ்மண் மேலே வந்தும் பூச்சிகளும் அவற்றின் முட்டைகளும் குஞ்சுகளும் பாத்திகளில் இடம் கொள்ளாமல் மடிந்துவிடும். வாரம் ஒரு முறையேனும் கொத்திவிடுக. கத்திரிக்கு இந்தக் கொத்து மிகவும் அவசியம்; 'கத்திரிக்குக் கொத்து, சுக்கரிக்குப் பந்தல்' என்பது பழமொழி.

சில பூச்சிகள் இலை இடுக்குகளில் மறைந்திருக்கும். அவற்றைக் கையினுல் பொறுக்கிச் சேர்த்து அழித்துவிடுவது நல்லது. பாத்தியிலும் செடியின்மேலும் நுண்மையான சுண்ணும்புத் தூளைத் தெளித்து வைத்தால் பூச்சிகள் அண்டமாட்டா. இரவு நேரங்களில் அதிக நீர் பாத்தியிலும் செடியின் மேலும் பட்டிருக்குமானுல் பூஷாண நோய் வருதல் கூடும். பூஷாணம் பிடித்த செடிகளை உடனுக்குடன் பிடுங்கி எரிந்துவிடுக. பூஷாணம் மிகக் கொடிய ஒட்டு நோய்.

தோட்டம் போடுவதற்கு விதைகளைத் தேடிப் பிடிப்பது முக்கியமாகும். ஒவ்வொரு காயிலும் பல வகை உண்டு. அந்த வகைகளில் ஒவ்வொன்றே சிறந்தது. எந்த ராசி சிறந்ததோ அந்த ராசி விதைகளையே நாம் நட வேண்டும். விதைகளையும் நாற்றுச் செடிகளையும் இக்காலத்தில் பலர் வியாபாரம் செய்கிறார்கள். அவற்றை அவர்களிடம் வாங்குவது நலம். ஒரு முறையாக நாம் தோட்டம் போட்டுவிட்டால் அடுத்த தடவை தோட்டம் போடுவதற்கு விதைகளை நாமே தயாரித்துக்கொள்ள வேண்டும். சிறந்த விதைகளைப் பெறுவதற்கு இந்த முறையே சிறந்தது. நல்ல வளர்ச்சியுள்ள செடியில் முதல் தடவை இரண்டாம் தடவை காய்க்கும் காய்களைப் பறித்த பிறகு மூன்றும் முறையில் தோன்றுவனவற்றில் சிலவற்றைப் பறிக்காமல் செடியிலேயே பழுக்கவிட வேண்டும். பழுத்தபின் அவற்றை விதைப் புக்குப் பயன்படுத்திக் கொள்ளலாம். இளஞ்செடிகளின் விதைகள் விதைப்புக்கு ஏற்றவை அல்ல.

வெண்டை விதைகளைக் காயோடு காயவைத்து அப்படியே சேமித்து வைக்கலாம். கத்திரி, தக்காளி, பாகல், புடல், மிளகாய் விதைகளை எடுத்தவுடன் ஜலம் விட்டு நன்றாக அலம்பி ஈரம் போக வெயிலில் உலர்த்தியபின் துணியில் முடித்தோ டப்பாக்களில் அடைத்தோ ஈரம் படாமல் விதைகளைக் காப்பாற்றி வைக்கவேண்டும். கந்தகத் தூளோடு கலந்து சேமித்து வைத்திருந்தால் விதைகளைச் செடியாக வளரும்போது புழுப் பிடிப்பதில்லை, வேறு நோய்களும் அவற்றை அணுகுவதில்லை.

சில பருவங்களே சில செடிகளுக்கு ஏற்றவையாகும். என்றாலும் அவரை முதலிய இரண்டொரு ஜாதியைத் தவிர மற்றவற்றை எந்த மாதத்திலும் விளைக்கக்கூடும். வெயில் காலத்தில் வளராதவற்றை வெயில் படாமலும் அதிகமாக ஜலம் பாய்ச்சியும் வளர்க்கலாம்.

நமக்கு வருஷம் முழுவதும் காய்கள் கிடைக்கும்படி, பருவம் அறிந்து, அந்த அந்தப் பருவத்தில் வளரக்கூடியவற்றை உற்பத்தி செய்துகொள்வது நல்லது.

ஜனவரி, 1945

# அன்பிலே கனிந்தவர்

மீ. பா. சோமசுந்தரம்

ராஜாஜியினுடைய வாழ்க்கை சீலம் மிகுந்த புனித வாழ்க்கை என்பதோடுகூட, அபூர்வமான மாறுதல்கள் நிரம்பிய அதிசய வாழ்க்கையும் ஆகும். அந்த ஜாதகம் அப்படி! ஜோதிஷத்தில் உங்களுக்கு நம்பிக்கை இருக்கிறதோ இல்லையோ, எனக்குத் தெரியாது. ஆனால் ராஜாஜியின் ஜாதகம், அந்தக் கிரகங்களின் அமைப்பு—அவ்வளவு விசித்திரமானது! அது சிறைச்சாலையிலும் இருக்கும்; அரச மாளிகையிலும் இருக்கும்! கல்வீச்சும் கிடைக்கும்; மறுநாள் மலர் மாலைகளும் அம்பாரம் அம்பாரமாகக் குவியும்! நேற்று அவரை வானளாவப் புகழ்ந்தவர்கள் இன்று வசைமாரி பொழிவார்கள். இன்று வசைமாரி பொழிகிறவர்கள், அதே நாவினால் இந்திரன் சந்திரன் என்று நாளைக்குப் பாராட்டுவார்கள்! 'நீங்கள் வேண்டாம், எங்களை விட்டு இப்போதே நீங்குங்கள்' என்று விரட்டுகிற அதே தலைவர்கள். சில நாள் கழித்து, ''நீங்கள்தாம் எங்களுக்கு வேண்டும், எங்களை இந்த இக்கட்டான நிலையில் கைகொடுத்து ஈடேற்றுங்கள்'' என்று வணங்கிக் கேட்பார்கள்! நேற்றுவரை பகைவர்களாக இருந்தவர்கள் இன்று நண்பர்களாவார்கள்; இன்று நண்பர்களாக இருப்பவர்கள் நாளை எதிரிகள் ஆவார்கள்! இப்படி அரசியல் விசித்திரங்கள் நிரம்பிய அரிய வாழ்க்கை ராஜாஜியின் வாழ்க்கை.

இப்படிப்பட்ட மாறுபாடுகளும் மாற்றங்களும் நிரம்பிய அந்த வாழ்க்கையில் எந்த நாளும் ஒரே சீராக நின்று நிலைத்து விளங்கிய உயர்ந்த பண்பு ஒன்று உண்டு. அதுதான் ராஜாஜிக்குத் தாய் நாட்டிலும் தாய் நாட்டு மக்களிடமும் மாறாது இருந்துவந்த நிரந்தரமான அன்பு தமது சொந்தக் கௌரவம், சம்பிரதாயம் எல்லாவற்றையும் உதறித் தள்ளிவிட்டு எந்த எதிரியையும் நண்பனுக்கிக்கொண்டு, அவர் நாட்டின் முன்னேற்றத்துக்காக, எத்தனையோ பெரிய பொறுப்புக்களையெல்லாம் எத்தனையோ பல நெருக்கடிகளின்போது ஏற்று வகித்து நிகரற்ற ஆற்றலுடன் சேவை புரிந்திருக்கிறார். இந்த மகத்தான சேவை முழுமைக்கும் அடிப்படையாக அமைந்தது அவருடைய தேச பக்தியும் மனிதாபிமானமுமே ஆகும்.

பொது வாழ்வில் அவரை எப்படித் தேச பக்தி இயக்கி வந்ததோ அதுபோலவே, அவருடைய சொந்த வாழ்வில் ஒரு சில நெருங்கிய நண்பர்களிடமும் பாசமும் பிணைப்பும் ஈடற்ற விதத்திலே அவருடைய உள்ளத்தில் இயங்கிவந்தன. மேலெழுந்தவாரியாகப் பார்ப்பவர்களுக்கு அவர் தம்மைக் கடினசித்தம் உடையவராகக் காட்டிக்

கொண்டார். பொது வாழ்விலே ஈடுபடுகிற தலைவர்களைப் பலரும் பல விதத்தில் ஏமாற்றி, ஏதேதோ காரியங்களைச் சாதித்துக்கொள்ளுகிற அந்த இயல்புகளைக் கருதி, அவர் தமது அன்புமயமான உள்ளத்தை இப்படி ஒரு கவசம் பூண்டு பாதுகாத்துவந்தார் என்பது அவரிடம் நன்கு பழகியவர்களுக்கே தெரியும்.

வயதில் அவரைவிட மிகமிகச் சிறியவனான என்னிடம், டி. கே. சி. மூலம் திருநெல்வேலியில் அறிமுகமான இந்தச் சிறுவனிடம், அவருக்கு 1937-ஆம் ஆண்டில் ஏற்பட்ட அன்பு என்னுடைய பூர்வ ஜன்மத்துப் புண்ணியம் என்றே மதிக்கிறேன். 1940-இல் என் திருமணம் திருநெல்வேலியில் நடந்தபோது நெல்லைக் காங்கிரஸ் பொதுக் கூட்டத்தின் தேதி இந்தக் கல்யாணத் தேதிக்கு ஒத்துவருகிற மாதிரி தமது பயணத்தை அமைத்துக்கொண்டார். திருமணத்துக்கு வந்ததோடுகூட என் நெருங்கிய உறவினரான தேவார இசைமணி சுந்தர ஓதுவாமூர்த்திகளைத் திருமண அரங்கிலே எல்லாருடைய முன்னிலையிலும் வாழ்த்துப் பாடலைப் பாடும்படி கூறினார்.

"சங்கீதம் ஒலித்தால் எல்லா உள்ளங்களும் ஒன்று சேர்ந்து விடும். நீங்கள் இந்த அரங்கிலே மணமக்களை இசையின்மூலம் வாழ்த்தியதால் நாங்கள் அனைவரும் சேர்ந்து ஏகோபித்து வாழ்த்தியதாகப் பொருள்" என்று சொன்னார் ராஜாஜி.

ஒரு சமயம் அவரோடு சேர்ந்து பம்பாய்க்கு விமானத்தில் பயணம் செய்ய நேர்ந்தது. (1955-இல்) பயணத்துக்கு முதல் நாள் எங்கள் வீட்டுக்கு வந்தார். "நீ விமானத்தில் செல்வது இதுதான் முதல் தடவையா அல்லது பழக்கந்தானா?" என்று கேட்டார். "இல்லை, இதுதான் முதல் முறை" என்று சொன்னேன். உடனே என் தாயாரையும் மனைவியையும் அழைத்து, "விமானம் நாளைக் காலை ஏழு மணிக்குப் புறப்படுகிறது. ஒரு தோசை மட்டும் சோமுவுக்குக் கொடுங்கள். அதற்குமேல் சாப்பிடவேண்டாம். வயிறு பாதி காலியாக இருந்தால்தான், விமானப் பயணத்தின்போது குமட்டல் வராமல் இருக்கும்" என்று அறிவுரை கூறினார்.

விமானத்தில் ஏறி உட்கார்ந்த பிறகு அவர் எனக்கு ஒரு பாடமே நடத்தினார். அந்தக் காலத்து விமானங்களில் இப்போது உள்ளதுபோல் காற்றழுத்த ஏற்பாடுகள் இல்லை. எனவே விமானம் புறப்படும்போதும் இறங்கும்போதும் திகைமுட்டல் அதிகரிக்காமல் இருக்க, "உமிழ்நீரை விழுங்கிக்கொள்ளவேண்டும்" என்று எனக்குச் சொன்னார். "இனிப்பு தருவது இதற்காகத்தான்!" என்றும் விளக்கினார்.

தம்மைச் சார்ந்தவர்களிடம் ராஜாஜிக்கு இத்தனை அக்கறையும் பரிவும் எப்போதும் உண்டு. விமான யாத்திரையை முதல் முதலாக அவரோடு தொடங்கிய எனக்கு, 1960-இல் இங்கிலாந்து செல்லும் வாய்ப்பு ஏற்பட்டபோது, என்னிடம் சொன்னார்: "இப்போது விமானங்கள் எல்லாம் பலவிதத்திலும் முன்னேறிவிட்டன. ஆகையினால் முன்னைப் போல் அதிக எச்சரிக்கைகள் இப்போது தேவையில்லை. ஆனாலும் நீ போகிற விமானம் போயிங் அல்லவா?" என்று கேட்டார்.

போயிங் என்னும் விரைவு விமானம் இந்தியாவுக்கு முதல் முதலாக வந்த மறுநாளே என் இங்கிலாந்துப் பயணம் அமைந்திருந்தது. மணிக்கு ஐந்நூறு அறுநூறு மைல் வேகத்தில் செல்லக்கூடிய ராக்ஷச விமானம் என்று ஏற்கனவே எல்லாரும் என்னைக் கலவரப்படுத்தியிருந்தார்கள். அதற்கு ஏற்ப அந்தப் பெரிய விமானம் வந்து இறங்கவும் கிளம்பவும் மீனம்பாக்கம் விமான நிலையத்தில் இடவசதி ஏற்படாத காலம் அது. சென்னையிலிருந்து சிறிய விமானத்தில் பம்பாய்க்குச்

சென்று அங்கிருந்து போயிங்கில் பறக்கவேண்டிய நிலை அப்போது. என்னிடம் ராஜாஜி கேட்டார்.

''அநந்தராம தீக்ஷிதரைப் பார்த்தாயா?''

''ஆமாம், ஜயமங்கள ஸ்தோத்திரம் தந்திருக்கிறார். அதோடு எனது நித்திய ஜபங்களுக்கும் புதிதாக ஒரு கல்பம் தந்திருக்கிறார்'' என்றேன்.

''சரி'' என்றார். சற்றுக் கண்களை மூடிச் சிந்தித்தார். பிறகு மறுபடியும் சொன்னார்:

''ஆஞ்சநேய மந்திரங்களை ஜபித்துத் தரும்படி சொல்லு!''

தீக்ஷிதர் அவர்களிடம் வந்து ராஜாஜி கூறியதைச் சொன்னேன்.

''ராஜாஜியா! அந்த மந்திரங்களை ஜபித்துத் தரும்படி சொன்னாரா?'' என்று அவருக்கு ஒரே சந்தோஷமும், ஆச்சரியமும். சிஷ்யர்களை எல்லாம் கூப்பிட்டு உற்சாகத்தோடு இதைச் சொன்னார்.

''வாயு புத்ரனேல்லியோ ஆஞ்ஜநேய பகவான்? விமானப் பயணத்துக்கு அவனுடைய அநுக்ரகம் எவ்வளவு முக்யம்! இதை எத்தனை வாத்சல்யத்தோடு ஞாபகப்படுத்தியிருக்கிறார்! அத்தனை ஞானம் ராஜாஜிக்கு. அதோடு அத்தனை அன்பு'' என்றார் சேங்காலிபுரம் அநந்தராம தீக்ஷிதர்.

கடின இதயம் படைத்த இரும்பு மனிதர் என்று பலரும் நினைக்கிற ராஜாஜி, அன்பு மேலிடும்போது குழந்தையாகிவிடுவார் என்பது இதிலே தெரிகிறது அல்லவா? அதுமட்டும் அல்ல. வெறும் அன்போடு நின்றுவிடமாட்டார். ஜபதபங்களோடு, காரியமான ஏற்பாடுகளும் செயல் முறையிலே செய்து தருவார்.

''லண்டனில் உன் நண்பர்கள் யாராவது இருக்கிறார்களா?'' என்று கேட்டார்.

''இல்லை, இனிமேல்தான் ஏற்படுத்திக்கொள்ளவேண்டும்'' என்றேன்.

''அப்படியா?'' என்று தயங்கினார்.

''பாரத அரசாங்கம் எல்லா ஏற்பாடுகளும் செய்திருக்கிறது. லண்டனிலுள்ள 'பர்சரி' (Bursary)க்காரர்கள் எல்லா வசதிகளும் செய்திருக்கிறார்கள்'' என்று சொல்லி, ராஜாஜியிடம் அது சம்பந்தமான கடிதங்களையெல்லாம் காட்டினேன். நான் புறப்படுவதற்குச் சில வாரங்களுக்கு முன்பு நடந்தது இது.

''யாருக்காவது லண்டனில் அறிமுகக் கடிதம் ராஜாஜி அப்பா கொடுப்பார்கள் என்று நினைக்கிறேன்'' என்று என் மனைவி சொன்னாள். ஆனால் நடந்தது? அறிமுகக் கடிதம் கொடுத்தாரா ராஜாஜி? இல்லை.

புறப்படுவதற்கு முன்தினம் அவரைப் பார்த்து ஆசி பெறுவதற்காகப் போனேன். ஆசீர்வாதம் வழங்கிக் குங்குமத் திலகம் இட்டு வாழ்த்திய பிறகு சிரித்துக்கொண்டே பேசினார்:

''சோமு, இதோ என் கையிலே இருக்கிற பௌண்டன் பென் பார்த்தாயா? லண்டனில் உள்ள இந்திய ஹைகமிஷனில் என் பழைய காரியதரிசி கிருஷ்ணமூர்த்தி (ஐ. ஏ. எஸ்) இருக்கிறார். அவரிடம் சொல்லு, பேனா நன்றாக வேலை செய்கிறது என்று.''

ஹைகமிஷனில் பெரிய பதவிலே அப்போது இருந்த கிருஷ்ணமூர்த்தி, ராஜாஜி கவர்னர் ஜெனரலாக இருந்தபோது அவருக்குக் காரியதரிசியாக இருந்தவர். அவர் மிகுந்த பக்தியோடு ராஜாஜியிடம்

கொடுத்த பேனு அது. இந்த விஷயம் ராஜாஜிக்கும் கிருஷ்ணமூர்த்திக்கும் மட்டுமே தெரிந்த அடையாளம். ராமாயணத்திலே சூடாமணிப் படலந்தான் நினைவுக்கு வந்தது எனக்கு அப்போது!

லண்டனில் நான் கிருஷ்ணமூர்த்தி அவர்களைச் சந்தித்ததும், "உங்கள் பேனு நன்ருக வேலை செய்கிறது என்று ராஜாஜி உங்களிடம் சொல்லச் சொன்னுர்" என்று முதலாவது வாக்கியத்தை ஆரம்பித்தேன்.

எந்த அறிமுகக் கடிதமும், எத்தனை பரிந்துரைகளும் செய்ய முடியாத ஒரு 'மாஜி'க்கை, ஜாலத்தை, அந்த ஒரு வாக்கியம் செய்துவிட்டது!

"பெரியவர் உங்களிடம் இதைச் சொன்னுரா! சொன்னுரா! அப்படியா! அப்படியா!" என்று நாற்காலியிலிருந்து எழுந்து கூத்தாடிவிட்டார் கிருஷ்ணமூர்த்தி. பிறகு கேட்கவேண்டுமா? நான் லண்டனில் இருந்தவரை ராஜாஜி இருந்து என்னைக் கவனித்துக் கொள்வதுபோல் அந்த நண்பர் அடிக்கடி என்னை விசாரித்துக்கொள்வார். ஒவ்வொரு மாதமும் நான் ஹைகமிஷன் கௌண்டருக்குச் சென்று சம்பள விகிதத்தை வாங்கிக்கொள்வதற்கே அவசியமில்லாதபடி லண்டனில் இருந்த என் பாங்க் கணக்கிலேயே அதைச் சேர்த்துவிடும் படியும் வசதி செய்துவிட்டார்.

ஒரு சமயம் ராஜாஜிக்கு அதிர்ச்சி தருகிற தந்தி வந்தது. அது தான் தேவதாஸ் காந்தியின் மரணச் செய்தி. உடனே அதே இரவு விமானத்தில் புறப்பட்டுச் சென்றுவிட்டார். மறுநாள் காலையிலேதான் எனக்குத் தகவல் தெரியும். ஒரு வாரத்தில் அவர் திரும்புவதாக எதிர் பார்த்தோம். இரண்டு நாட்கள் ஆயின. மதுரையில் அப்போது மாவட்ட நீதிபதியாக இருந்த என் நண்பர் ஜஸ்டிஸ் மகராஜன் ஒரு வேலையாகச் சென்னைக்கு வந்தவர் என்னுேடு தங்கியிருந்த சமயம் அது. ராஜாஜியை நேரிலே பார்த்து எப்படி ஆறுதல் சொல்வது என்று நாங்கள் இருவரும் பேசிக்கொண்டிருந்தோம். மாலை ஆறு மணியிருக்கும். திடீரென்று எங்கள் வீட்டு முன்னுல் ராஜாஜியின் கார் வந்து நின்றது.

"சோமு, ராஜாஜியே வருகிருர்!" என்று ஜன்னல் வழியாகப் பார்த்த மகராஜன் கூறினுர்.

ஆமாம்; நாங்கள் சென்று துக்கம் விசாரிக்கிற தயக்கத்தை ராஜாஜியே இப்படி தீர்த்துவைத்துவிட்டார். "பெரிய துயரந்தான். என்ன செய்வது! எல்லாம் இறைவனுடைய லீலை!"

இவ்வாறு அத்தனை துயரத்தையும் அந்த ஒரே வாக்கியத்தில் திணித்துச் சொல்லிவிட்டார் ராஜாஜி.

ஒரே வாக்கியத்தோடு அந்தப் பேச்சு முடிந்தது. பிறகு மணிக் கணக்காக இருந்து வேறு ஏதேதோ இலக்கியம், கலை, தத்துவம் என்று சர்ச்சைகளில் இறங்கினுேம்.

"அன்பு தருவதும் அன்பைப் பெறுவதும் மனித வாழ்வின் பெரும் பேறுகள். எல்லாருக்கும் கொடுத்துவைப்பதில்லை" என்று அடிக்கடி சொல்லுவார் ராஜாஜி.

நட்புக்கு உரியவர்கள் என்று வரித்துக்கொண்டவர்களிடம் வயது, வாழ்க்கை நிலை ஆகியவற்றில் எவ்வித ஏற்றத்தாழ்வுகளும் பார்க்காமல் ஒரே சீரான, ஒரே உறுதியான அன்பைச் செலுத்திய அதிசய புருஷர் ராஜாஜி. அவருடைய திறமைகள் எப்படி அரிய திறமைகளாக இருந்தனவோ அப்படியேதான் அவருடைய அன்பும் ஓர் அரிய அன்பாகத் திகழ்ந்தது.

டிசம்பர், 1978

# பாரதியார் பாடிய மெட்டுகள்

கே. எல். சுந்தரராஜன்

மகாகவி சுப்பிரமணிய பாரதியார், ஆறு மொழிகளில் பாண்டித்தியம் பெற்றவர் என்பது அநேகருக்குத் தெரியாமல் இருந்து வருகிறது. நாலு கட்டை சுருதியில் மேல்பஞ்சமம் வரை எட்டக்கூடிய கம்பீரமான குரல். வார்த்தைகளின் அழுத்தந் திருத்தமான கணீரென்ற உச்சரிப்பு. சுருதி, ராகம், தாளம் தவறாத அபார ஞானம். இதில் ஒரு தனி விசேஷம் என்னவென்றால், எப்படித் தம் கவிதைகளிலும் கட்டுரைகளிலும் புதிய புரட்சிகரமான வழியைக் கடைப்பிடித்தாரோ, அதேமாதிரி, தம் கவிதைகளுக்கு, ராகம் மெட்டு அமைப்பதிலும், அதுவரை புழக்கத்தில் இல்லரத ஒரு புதிய வழியைக் கையாண்டார். அவரது பாடல்களில், ராகத்தின் பெயரும், தாளத்தின் அமைப்பும் கொடுத்திருப்பதைக் காணலாம். எவ்வளவோ பெரிய சங்கீத விற்பன்னர்கள் ஒரே ராகத்தில் பல்வேறு வர்ண மெட்டுகளில் கிருதிகள் அமைத்துக் கொடுத்திருக்கிறார்கள். ஆனால் பாரதியார், தம் பாடலுக்கு எடுத்துக் கொண்ட எந்த ராகத்தின் வர்ணமெட்டாவது இதுநாள் வரை யாராலும் கொடுக்கப்படவில்லை. சங்கீத சாஸ்திர இலக்கணங்களுக்கு உட்பட்டே, இம்மி அளவுகூடப் பிசகாமல், இவரது புரட்சிகரமான ஒவ்வொரு மெட்டும் அமைந்துள்ளது.

உதாரணத்துக்கு ஒரு பாடலை எடுத்துக்கொள்ளலாம். ‘என்று தணியுமிந்த சுதந்தர தாகம்’. இதனுடைய ராகம் கமாஸ், தாளம் ஆதி என்று கொடுக்கப்பட்டிருக்கிறது. மற்றவர்கள் கமாஸ் ராகத்தில் இதைப் பாடுவதற்கும், அதே கமாஸில் பாரதியார் பாடியதற்கும் ஸ்நானப் பிராப்தி கூடக் கிடையாது. கேட்பவர்களுக்கு ஏற்படும் உணர்ச்சிகளும் அதே வித்தியாசத்தைத்தான் காட்டும். அதேமாதிரிதான் நாட்டைக் குறிஞ்சியில் உள்ள, ‘முருகா, முருகா’ பாடல், பிலஹரியில் உள்ள, ‘ஆசை முகம் மறந்து போச்சே” முதலியன.

பாரதியாரின் தேசப் பற்றுக்கும், மொழிப்பற்றுக்கும் ஒப்ப, கர்நாடக இசையிலும் அவரது பற்று மேலோங்கி இருந்தது. பிரபல சங்கீத வித்துவானான சுப்பராம தீக்ஷிதர் அவர்கள் காலமான போது, பாரதியார் இயற்றிய பாக்களில் ஒரு பகுதி இது:

**“கன்னனொடு கொடை போயிற்றுயர் கம்ப**
**நாடனுடன் கவிதை போயிற்**

றுன்னரிய புகழ்பார்த்த ஞெடு வீரமகன்றதென
வுரைப்ப ரான்றோர்;
என்னகநின் றகலாதோன்அருட் சுப்பராம
னெனுமிணையிலாவிற்
பன்ன ஞெடுசுவை மிகுந்த பண்வளனு
மகன்ற தெனப் பகரலாமே."

பாரதியாரின் 'யோகசித்தி'யில் ஓர் அடி;

"............................................சுவை
நண்ணும் பாட்டினொடு தாளம்-மிக
நன்ரு வுளத்தமுந்தல் வேண்டும்-பல
பண்ணிற் கோடிவகை யின்பம்-நான்
பாடத் திறனடைதல் வேண்டும்"

நாதம், தாளம், பண் முதலியன சேதப்பட்டால் அவர் நரகவேதனை அடைவதைக் 'குயிலின்' முதற் கட்டத்திலேயே காணலாம்.

பாரதியார் உயிருடன் இருந்த காலத்தில் அவருடன் நட்புரிமை கொண்டவர்கள் அநேகமாக யாவரும், அவருடைய தேசபக்தியின் வேகத்தினுல் மட்டுமே ஈர்க்கப்பட்டவர்கள். அவரது கவிதைத் திறனெல்லாம் அவர்களுக்கு இரண்டாம் பட்சந்தான். அவரது கவிதைகளை, அவர் வாயிலாகவே ரசித்து அநுபவித்தவர்கள், சுப்பு ரத்தினம் (அதாவது பாரதிதாசன்), வ. வே. சு. ஐயர் போன்ற விரல்விட்டு எண்ணக்கூடிய ஒரு சிலரே. பாரதியாரின் ஆங்கிலப் புலமையை முற்றும் அநுபவித்து உணர்ந்தவர்கள், பாபு அரவிந்தரும் வ. வே. சு. ஐயரும், டாக்டர் நஞ்சுண்டராவுமே மற்றும் சிலர் பட்டும் படாதுமாக இருந்து விட்டனர். ஆனல், அவர் காலத்தில் அவருடன் நெருங்கிப் பழகிய இவர்கள் யாருக்கும், கர்நாடக சங்கீத சாஸ்திரத்தில் கடுகளவும் பரிசயமோ, ரசனையோ கிடையாது. ஆகையினுல்தான் பாரதி பாடல்களின் உண்மையான அசல் மெட்டுக்கள் பிராபல்யம் அடைய வழியில்லாமல் போய்விட்டன.

கவி ரவீந்திரநாத டாகுரின் குரலைப் பதிவு செய்து வைத்திருப்பதுபோல், பாரதியாரின் குரலை அந்த நாளில் பதிவு செய்து வைத்துக் கொள்ளாமல் போய்விட்டோம். அவர் பாடிய வர்ண மெட்டுக்களை யாவது தலைமுறை தலைமுறையாகக் கொண்டு செல்லவேண்டாமா, அதுவும் அவரது மெட்டுகள் அவ்வளவு அற்புதமாய் அமைந்திருக்கும் போது? இல்லாதுபோனுல் இந்த மெட்டுகள் யாவும் காலக்கிரமத்தில் அழிந்துபோய் விடாவா?

இன்றுங் கூடப் பாரதியாரின் ஆங்கிலப் புலமையை அறியாதவர்கள் அநேகர் நாட்டில் இருப்பது ஆச்சரியத்தை விளைவிக்கிறது. அவருடைய ஆங்கிலக் கவிதைகளும், கட்டுரைகளும் புத்தக வடிவில் பாரதி பிரசுராலயத்தார் வெளியிட்டு இன்று நாற்பது ஆண்டுகளுக்கு மேல் ஆகிவிட்டன. இருந்தும் பாரதியார், தமிழைப் போலவே ஆங்கிலத்திலும் எழுதித் தள்ளியிருக்கிருர் என்று சொன்னுல் வாயைப் பிளந்து ஆச்சரியப்படும் ஆங்கிலப் பேராசிரியர்களும், பாரதி சீடர்கள் என்று கூறிக் கொள்பவர்களும் இன்றும் இருக்கத்தான் செய்கிருர்கள். இந்நிலையில், பாரதியார் எப்பொழுதோ வாய்விட்டுப் பாடிய வர்ண மெட்டுகளைப்பற்றி யார் கவலைப்படப் போகிருர்கள்?

பாரதியாரின் கவிதைகளை மாத்திரம் ரசிப்பதுடன் நாம் நின்று விடுவதில்லை. தூண்டித் துருவி அவருடைய ஜீவிய சரித்திரத்தை அறிய ஆவலுள்ளவர்களாக இருக்கிறோமே! அவை பொய் கலந்தவை

யானாலுங்கூட அதைப் பற்றி நாம் கவலை கொள்வதில்லை. அவர் பிறந்த வீட்டை நாட்டின் பொதுச் சொத்தாக ஆக்கியிருக்கிறோம். பிறந்த ஊரிலும், வாழ்ந்த ஊர்களிலும் ஞாபகச் சின்னங்கள் எழுப்புகிறோம். ஆனால், அவர் கவிதைகளை அவர் பாணியிலேயே, அவரது அசல் மெட்டுகளிலேயே பாடக்கூடியவர்களை ஊக்குவிக்காமல், பாராட்டாமல் ஏன் பின்வாங்குகிறோம் என்பதே விளங்கவில்லை.

எவ்வளவு சாரீர சம்பத்து உள்ளவர்களானாலும், சங்கீத ஞானம் படைத்தவர்களானாலும் பாரதி பாடல்களை அவரது பிரத்தியேக மெட்டுகளில் பாடாமல், தங்கள் தங்கள் மனோதர்மத்துக்கு ஏற்பப் பாடுவது என்பது சரியாகப் படவில்லை. தியாகையரின் பஞ்சரத்னக் கிருதிகளில் உள்ள, நாட்டை, கௌள முதலிய ராகங்களை மாற்றி, நீலாம்பரியிலும் அடாணாவிலும் ஒருவர் பாட ஆரம்பித்தால் எப்படி இருக்குமென்பதைக் கொஞ்சம் ஊகித்துப் பார்க்கலாம். அல்லது தீக்ஷிதர் கிருதிகளை அடுத்த தலைமுறையினர், மெல்லிசைச் சினிமா மெட்டுகளில் பாட ஆரம்பித்தாலும் நாம் தடுக்கமுடியாது. ஏனென்றால் ஜனங்களின் ரசனை மாறிவிட்டது என்று கூறிக்கொள்ளலாம்.

பாரதியார் பாடல் ஒவ்வொன்றும், நாதத்தை அடிப்படையாகக் கொண்டுள்ளது. அவருடைய மெட்டு ஒவ்வொன்றும், ராகத்துக்கும் ரசத்துக்கும் உள்ள பொருத்தத்துக்கு எடுத்துக்காட்டாக விளங்கும். அவரது பாடல் மெட்டு ஒவ்வொன்றும் ராகங்களின் மூலமாகத் தேசப் பக்தியையும் தெய்வ பக்தியையும் ஏற்படுத்தும் என்பது உறுதி.

பாரதியார் மாதிரியே, அதே கம்பீரத்துடன், அசைவுகளுடன், தொனியுடன் சிறிது காலம் முன்வரை எட்டயபுரத்திலேயே வசித்து வந்த பாரதியாரின் சொந்தத் தாய்மாமனான சாம்பசிவ ஐயர் பாடிவந்தார். அவர் காலமாகிவிட்டார். பாரதியார் பாணியிலேயே பாடக் கூடியவர்கள் நான்கு பேர் இப்போதும் இருக்கின்றனர். ஒருவர் பாரதியாரின் சகோதரர். 82 வயதைத் தாண்டும் ஸ்ரீ சி. விசுவநாதையர். மற்ற மூவரும் பாரதியாரின் சொந்தப் பேரப் பெண்களான, பானுமதி, லலிதா பாரதி, விஜய பாரதி ஆகியோர். முதல் இருவரும் சென்னையிலேயே வசித்துவருகிறார்கள்; மூன்றாமவர் கானடாவில் இருக்கிறார். இவர்களுக்குக் கர்நாடக சங்கீதத்திலும் அபார ஈடுபாடு உண்டு. பாரதியாரின் மெட்டுக்களை அப்படியே பாடக்கூடியவர்கள்.

பாரதி பக்தர்களை வேண்டிக் கொள்கிறேன். பாரதியார், கர்நாடக இசையைக் கையாளப்படும் விதத்திலும் புரட்சிகரமான ஒரு புதுமையை ஏற்படுத்தி, அநேக ராகங்களுக்கு லயம் பிசகாமல், புதுப்புது மெட்டுக்களை அமைத்துக் கொடுத்திருப்பதை மக்களுக்கு அறிமுகப்படுத்த முன்வரவில்லை என்றால், கூடிய சீக்கிரம், பாரதியார் தம் கவிதைகளைத் தாமே எப்படிப் பாடினார் என்பதை மக்கள் மறந்துவிடுவார்கள். அதோடு இப்படித்தான் பாடினார் என்று உருமாறின பொய் மெட்டுகள் வளர்ந்துவிடலாம். பிரத்தியேக மெட்டுகளில் உள்ள பாடல்களைப் பதிவு செய்து வைத்துக்கொள்ளலாம்.

—செப்டம்பர், 1977

# இரண்டு என இலது

## மு. மு. இஸ்மாயீல்

மனிதனுல் படைக்கப்பட்ட எதுவாயினும் அமரத்துவம் பெற வேண்டுமாயின் அழியாத்தன்மை அதில் இடம் பெற்றிருக்க வேண்டும். அழியாத்தன்மை பரம்பொருள் ஒன்றுக்குத்தான் உண்டு; பிற அனைத்தும் அவனுல் படைக்கப்பட்டவை; எனவே அவனுல் அழிக்கப்படக் கூடியவை. அழியாத தன்மை பரம்பொருளின் தனித் தன்மையாதலின் வேறு எதற்கும் அத்தன்மை இருக்க முடியாது. ஆகையால் பரம்பொருளால் படைக்கப்பட்ட அழியக்கூடிய மனிதன் ஒருவனுடைய இலக்கியப் படைப்பு ஒன்று அவனுடைய அழிவுக்குப் பிறகும் வாழவேண்டுமாயின், அது அவ்வழியாத பரம்பொருளைப் பற்றிப் பேசுவதாகவோ அந்தப் பரம்பொருளின் தன்மையைப் பெற்றவர்களைப்பற்றிப் பேசுவதாகவோதான் இருக்கமுடியும்.

இறவா இலக்கியங்களைப் படைத்தவர்கள் அனைவருமே இத்தகைய தன்மையைக் கொண்ட பரம்பொருளைத் தங்கள் படைப்புக்களில் பாடியவர்கள், போற்றியவர்கள், வணங்கியவர்கள் என்னலாம். இன்னோர், உண்மையில் பரம்பொருளின் நினைவிலேயே தங்கள் அறிவையும் உணர்வையும் ஆழ்த்திவிட்டவர்களாகையினுல் இவர்களுடைய சொல்லிலும் எழுத்திலும் அந்தப் பரம்பொருளின் தன்மை இயற்கையாகவே மிளிர்வதைக் காணலாம்.

நம் நாட்டு மக்களின் வாழ்க்கையிலே இடம் பெற்றுவிட்ட புராணங்களும் இதிகாசங்களும் கடவுள் உணர்ச்சியையும் பக்தியையும் மக்களின் உள்ளத்திலே வளர்ப்பதற்காகவே தோன்றியவை. இவை வளர்க்கின்ற கடவுள் உணர்ச்சியின் அடிப்படை பரம்பொருள் ஒன்றே என்பதாகும். பரம்பொருளின் அவதாரங்கள் அல்லது திருமாலின் அவதாரங்கள்பற்றி எழுந்த புராணங்கள்கூட இதைத்தான் வலியுறுத்துகின்றன.

'திருமாலின் வெவ்வேறு அவதாரங்களைப்பற்றிப் பாடிப் பரவும் புராணங்களில் பரம்பொருளின் ஒருமை இடம் பெற முடியுமா?' என்று சிலருக்கு ஆச்சரியமாகக்கூட இருக்கலாம். ஏனெனில் அவதாரங்கள் என்ற சொல்லிலிருந்தே பல்வேறு அவதாரங்கள் இருக்கின்றன என்பது தெளிவாகிறது; அவை திருமாலின் அவதாரங்கள் என்னும்போது திருமால் பிரமனையும் ருத்திரனையும்விட வேறுபட்டவன் என்பது தொனிக்கிறது; அப்படி இருக்கத் திருமாலின் அவதாரங்களைப்பற்றிய புராணங்களில் பரம்பொருளின் ஒருமைக்கு இடமே

என்ற எண்ணம் எழுவதும் இயல்பே. உண்மை என்னவென்றால் இப்புராணங்களைப் பாடிய கவிஞர்கள் அனைவரும் கவிக் கூற்றாக இந்த ஒருமையை வற்புறுத்துவதோடு, கதாபாத்திரங்களின் வாயிலாகவும் இதை வற்புறுத்துகிறார்கள்; உண்மையில் அந்தத் திருமாலின் அவதாரமாக வந்த பாத்திரங்களையே இதை வற்புறுத்துமாறு கவிஞர்கள் செய்துவிடுகிறார்கள்.

இப்போது மகாபாரதத்தைத் தமிழிலே பாடிய வில்லிபுத்தூரார் சொல்வதொன்றினை எடுத்துக் காட்டாகப் பார்ப்போம்.

அர்ச்சுனனின் புத்திரனான அபிமன்யு பதின்மூன்றாம் நாள் போரில் அநியாயமாகக் கொல்லப்பட்டு மாண்டுவிடுகிறான். அர்ச்சுனனுடைய துக்கமோ எல்லையற்றதாகி விடுகிறது. அபிமன்யுவை யுத்தத்துக்கு அனுப்பிவைத்த தன்னுடைய சகோதரர்களான தருமன் முதலியவர்களிடத்துக்கூடக் கோபம் கொள்கிறான். அடுத்த நாள் சூரிய அஸ்தமனத்துக்குள் அபிமன்யுவைக் கொன்ற ஜயத்திரதனைத் தான் கொல்லாவிட்டால், ''வெந்தழலில் வீழ்வன்; இது வேதமொழி'' என்று சூளுரைக்கிறான்.

பகைஞர்கள் தம்முடைய பெருஞ் சேனையின் உள்ளிடத்திலே ஜயத்திரதனை வைத்துக் காப்பார்களாயின் மறுநாள் சூரிய அஸ்தமனத்துக்குள் அவனைக் கொல்ல அர்ச்சுனனால் முடியுமோ என்று தருமன் ஐயுறுகிறான். கண்ணன் தருமனை நோக்கி மறுநாள் சூரிய அஸ்தமனத்துக்குள் ஜயத்திரதனை யார் காப்பினும் அர்ச்சுனன் அவனைக் கொல்வது நிச்சயம் என்று உறுதி கூறுகிறான். அன்று சூரிய உதயத்துக்குமுன் கயிலையம் பொருப்பனை, அதாவது சிவபெருமானை அர்ச்சுனனோடு சென்று தரிசித்து மீண்டு வருவோம் என்று சொல்லிப் பார்த்தனோடு ஏகுகிறான். அப்படிச் செல்லும் வழியில் அர்ச்சுனன் அயர்ச்சியினால் விழவே கண்ணன் அவனைத் தன் அழகிய கைகளால் அணைத்து மயக்கம் மாற்றி,

> "உண்டிலை; அடிசிலும்; உண்ணும் தீம்புனல்
> கொண்டிலை; பசிக்கனல் கொளுந்தி வீழ்ந்தனை"

என்று கூறி, ''புத்திர பாசத்தினால் உலகத்தின் இயற்கையை நீ உணரத் தவறிவிட்டாய்'' என்று உபதேசித்து,

> "மாங்கனி, வாழையின் கனி, வருக்கைதன்
> தீங்கனி, கன்னலின் செய்ய நீர் உள;
> வேங்கனல் பசியும், நின் விடாயும் ஆறவே
> ஈங்கு இனிது அருந்துதி; ஏந்தல்"

என்கிறான். வருக்கை என்பது மிகவுயர்ந்த பலா வகையைக் குறிக்கும். கன்னல் என்பது கருப்பஞ்சாறு. ஆகவே அயர்வுற்றிருந்த அர்ச்சுனனைப் பார்த்து, ''மாம்பழம், வாழைப்பழம், பலாப்பழம், கருப்பஞ் சாற்றினும் இனிய நீர் ஆகியன இங்கு உள்ளன. எரிகிற நெருப்புப் போன்ற பசியும் உன்னுடைய தாகமும் ஆற நீ இவ்விடத்தில் இனிமையாக உண்பாயாக'' என்று கூறுகிறான்.

நாளும் சிவபூஜை செய்யாமல் உண்பது அர்ச்சுனனுக்கு வழக்கமில்லை. ஆகையால் கண்ணன் இப்படிச் சொன்னவுடன், ''நான் இன்று இதுவரை சிவபூஜை செய்யவில்லையே! எப்படி உண்பேன்?'' என்று கேட்கிறான். இப்படிக் கேட்ட அர்ச்சுனனுக்குக் கண்ணன் ஓர் அற்புதமான பதிலைச் சொல்கிறான்.

"மரு வரு கானக மலரினால் எமைப்
பொரு அரு பூசனை புருதி, ஐய! நீ
இருவரும் ஒருவரே என்பது இன்று போய்
அருவரை அவன்அடி அடைந்து காண்டியே."

(வில்லிபாரதம்-துரோண பருவம்-13-ஆம் சருக்கம், 195)
என்பதுதான் அந்தப் பதில்.

'மரு' என்ற சொல்லுக்கு வாசனை என்பது பொருள். ''மரு வரு கானக மலர்'' என்பது அந்தக் காட்டிலுள்ள மணமிக்க மலர். ''பொரு' என்ற சொல்லுக்கு ஒப்பு என்பது பொருள். ''பொரு அரு பூசனை'' என்றால் ஒப்பற்ற பூசை. 'அருவரை' என்பது அரிய மலையான கயிலையங்கிரி. இப்படிக் கண்ணன் அர்ச்சுனனைப் பார்த்து, ''இந்தக் காட்டிலுள்ள மணமிக்க மலர்களினால் என்னை ஒப்பில்லாத பூசை செய்; பின்னர் இன்று கயிலையங்கிரி சென்று சிவபெருமானுடைய திருவடிகளை அடைந்து நாங்கள் இருவரும் ஒருவரே என்பதைக் காண்பாய்'' என்கிறான். கண்ணனுடைய இந்தப் பேச்சில் இரண்டு பேருண்மைகள் அடங்கியிருக்கின்றன. பேசுகின்ற கண்ணன் திருமால் அல்லன்; திருமாலின் அவதாரமே. ஆகையால் அவனுக்குப் பெற்றோர், உற்றார் இருக்கின்றனர். சிவபெருமானுக்கோ அவதாரமில்லை. ஆகையால்தான் அவனை, 'பிறவா யாக்கைப் பெரியோன்' என்று சிலப்பதிகாரம் சொல்லும். அப்படி இருந்தும் கண்ணனாக அவதாரமெடுத்த தன்னையும் பிறவா யாக்கைப் பெரியோனாகிய சிவபெருமானையும் ஒன்றாக்கிப் பேசுகிறான். இரண்டாவதாக, கண்ணன் திருமாலாகவே பேசுகிறான் என்று கொண்டாலும் திருமாலும் சிவனும் ஒன்று என்று தெளிவுபடுத்துகிறான்.

கண்ணன் இவ்வாறு கூறியவுடன் இருமருங்கிலும் கிடைத்த நன் மலர்களைக் கொண்டு அர்ச்சுனன்,

"மன்றல் அம் துழாய்முடி மாயன் மேல் மனம்
ஒன்றியே, சிவாகம உரையின் சாத்தினான்".

அர்ச்சுனனுடைய இந்தச் செயலில் கூர்ந்து நோக்கத்தக்கன இரண்டு. ஒன்று தன் எதிரிலிருக்கும் கண்ணன்மேல் அவன் அந்த மலர்களால் அர்ச்சனை செய்யும்போது மனம் ஒன்றியே செய்தான்; இந்த மனம் ஒன்றிய செயலுக்கு ஆழமான பொருள் உண்டு. அவன் செய்ய விரும்பியது. செய்யவேண்டுவது, சிவபூஜை. இப்போது தன் எதிரிலே நிற்கும் கண்ணனுக்குப் பூஜை செய்கிறான். இந்தச் செயலில் மனம் ஒன்றுதல் என்பது, தன் எதிரிலிருக்கும் கண்ணனையே சிவனாக மனத்தில் நினைத்துக்கொண்டு பூஜை செய்வது. இரண்டாவது; தன் மனம் ஒன்றியதற்கு ஏற்பச் சிவாகம உரையில்தான் பூஜை செய்தான்; அதாவது சைவ ஆகமங்களில் கூறப்பட்ட முறையின்படியே பூஜை செய்தான். இப்படிப் பூஜையை முடித்த பிறகு பழங்களை உண்டு நீரைப் பருகித் தன் அயர்ச்சியைத் தீர்த்துக்கொண்டான். ''காத்திரம் தேறினன்: கருத்தும் தேறினன்'' என்று வில்லிபுத்தூரார் கூறுவார். காத்திரம்' என்ற சொல்லுக்கு உடல் என்பது பொருள். இங்கு அவன் உடல் தேறினதோடன்றிப் புத்திரபாசத்தினால் சிதைந்திருந்த கருத்தும் தெளிந்தது என்று கவிஞர் கூறுவார்.

இதன் பிறகு கண்ணன் கருடனை நினைக்க, அந்தக் கருடன் தோன்றிக் கண்ணனைத் தன் தோள்களிலும் அர்ச்சுனனைத் தன் கரங்களிலும் ஏற்றிக் கொண்டு கயிலையங்கிரியை அணுகுகிறான். சிவபெருமான், கண்ணன் அங்கு வந்திருப்பதை முன்னமே அறிந்திருந்த போதிலும், நந்தி தேவர் வந்து அவனுடைய வருகையை அறிவிக்க, 'நன்று' என எழுந்து எதிர்கொண்டு சென்று கண்ணனைத் தழுவுகிறான்.

கண்ணனை ஓர் ஆசனத்து இருத்திச் சிவபெருமான் அவனுடைய அவதாரம் முதலியவற்றைப்பற்றி வினவுகிறான். கண்ணன் விவரங்களைச் சொல்லிய பிறகு சிவபெருமான் 'வருக' என்று அர்ச்சுனனை வரவேற்கவும் அவனும் அன்புடன் சிவபெருமானைப் பணிந்து போற்றுகிறான். இந்த நிலையில் அர்ச்சுனன் ஓர் அற்புதத்தைக் காண்கிறான். சற்று முன் கண்ணன்மேல் எந்த மலர்களை அர்ச்சித்துப் பூஜித்தானோ அந்த மலர்கள் சிவபெருமான் மேல் இருக்கக் காண்கிறான். அப்படிக் கண்டதும், ''இரண்டென்று இல்லை; ஒன்றுதான்'' என்று களிப்படைந்து மேனி மயிர்க்கூச்செறிய, சிவபெருமானைத் தோத்திரம் செய்யத் தொடங்குகிறான். இதனை வில்லிபுத்தூரார்.

'கண்ணன் மேல் அணி மலர் அனைத்தும் காய் கனல்
வண்ணன் மேல் காண்டலும், மனம் களிப்புறு
'எண்ணின், மேல் இரண்டு என இலது' என்று அவ்விறல்
அண்ணல் மேனியும் புளகு அரும்பினன் அரோ.'

(வில்லிபாரதம்-துரோண பருவம்-13-ஆம் சருக்கம்: 211)

என்று பாடுவார்.

இதுவரையில் தானும் சிவனும் ஒருவரே என்று திருமாலின் அவதாரமான கண்ணன் சொன்னதையும் அந்த உண்மையை அர்ச்சுனன் உணர்ந்து கொண்டதையும் பார்க்கிறோம். இருவரும் ஒருவர் என்பது இதன் மூலம் நிரூபிக்கப்பட்டு விடுகிறதா என்ற கேள்வி தோன்றக்கூடும். தர்க்கரீதியாகப் பார்த்தால் நிரூபிக்கப்படவில்லை என்றுதான் சொல்ல வேண்டும். இருவரும் ஒருவர் என்று கண்ணன் சொல்லலாம்; சிவபெருமான் அதை உறுதிப்படுத்தாவிட்டால் என்ன ஆகும்? தர்க்கரீதியாக இந்த ஐயம் தோன்றக் கூடும் என்பதை எதிர்பார்த்த கவிஞர் அதனையும் நீக்கிவிடுகிறார். அர்ச்சுனன் தோத்திரம் செய்த பிறகு சிவபெருமான் கண்ணனோடு உவந்து பேசி அவன் அர்ச்சுனனுக்கு உபதேசித்ததைப் பாராட்டி, ''வேண்டுவது என்கொல்?'' என்று கேட்கிறான். ''பகையை அறுக்கும் அம்பு முதலிய படைகளை அளித்திட வேண்டும்'' என்று கண்ணன் வேண்டுகிறான். இப்படிக் கண்ணன் கேட்ட பிறகு சிவபெருமான் என்ன செய்தான், என்ன சொன்னான் என்பதில் நாம் முன் குறிப்பிட்ட உறுதிப்பாட்டினைக் கண்டுவிடுகிறோம்,

"என்றலும் ஈசன் நகைத்து உரை
செய்தனன்: யான் என நீ என வேறு
அன்று; இவை யாவும் அளித்திடுதற்கு
உனை அல்லது வல்லவர் யார்?"

என்கிறான்.

ஒரு சிறிய நிகழ்ச்சியினைச் சொல்வதன் மூலம் கவிஞர் ஓர் உண்மையை விளக்கிவிடுகிறார். இந்த மாபெரும் உண்மையை விளக்க ஆண்ட சொற்களோ மிக மிக எளியவை.

ஜனவரி, 1979